கழக வெளியீடு : ௯௪௪

ஆசிரியர்

தொல்காப்பியர்

இயற்றிய

# தொல்காப்பியம்



கழகப் புலவர்

திரு. சு. பாலசுந்தரம் பிள்ளை அவர்கள்

(இளவழகனார்)

எழுதிய

விளக்கக் குறிப்புக்கள்

முதலியவற்றுடன்



திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்,
திருநெல்வேலி. :: சென்னை-1.

# பதிப்புரை

தொல்காப் பியத்தை ஓதுவமே
ஒல்காப் பெரும்புகழ் எய்துவமே

**தொல்காப்பியம்**, உலகுக்கு ஒரு கதிரவன் போலத் தமிழ்க்கு ஓர் அறிவுஞாயிறாகும். அது தோன்றிய காலத்திலிருந்து தமிழ் மொழிக்கும் அதனால் தமிழ்மக்களின் நாகரிக வாழ்க்கைக்கும் பெருகி வரும் ஒளிவிளக்கமும் நன்மையும் பிற நூல்களால் உண்டாதற்குரியன அல்ல.

## தொல்காப்பியம் ஒரு வாழ்க்கை நூல் :

மக்கள்வாழ்க்கை, நுட்பதிட்பமான நினைவுகளாலும் சொற்களாலும் செயல்களாலும் நாளும் மாட்சிமைப்பட்டு வருகின்றது. உயிர்வகைகள் எல்லாவற்றுள்ளும் உயர்ந்த பிறவி எனப்படும் மக்கட்குச் சிறப்படையாளமாக உள்ளது, ஒருவரோடொருவர் பேசி அளவளாவுதற்குரிய பேச்சமைப்பேயாகும். அது, 'மொழி' என்பதில் அடங்குகின்றது. நினைவு மொழி செயல் என்னும் மூன்றினும், மொழி, நடுவில் நின்று ஏனை இரண்டினையும் மாட்சிமைப்படுத்திவருகின்றது.

தொல்காப்பியம், மொழிக்கு இலக்கணநூல் என்ப. உண்மையில் அந்நூல், மொழிக்கு இலக்கணம் உரைக்கும் வாயிலாக மக்கள் நினைவுக்கும் செயலுக்கும் செய்திருக்குந் தொண்டு, அளப்பரிய தொன்றாய்ச் சாலவும் வியத்தற்குரியதா யிருக்கின்றது. மக்கள்

வாழ்க்கைக்கே இங்ஙனம் இலக்கணம் வகுத்துரைக்கும் புதுமையான இலக்கணநூல், இந்நிலவுலகில் வேறு எம்மொழியினுமே அமையவில்லையென்று அறிந்தோர் கூறுகின்றனர்.

மொழி என்பது வெறும் ஓசையன்று; உள்ளத்தின் அமிழ்தமாகும். அதனால் 'நாமகள்' என்பதைக் 'கலைமகள்' எனவும் ஆன்றோர் வியந்துரைப்பர். 'கலைமகள் வழிபாடு' பல வகையான தொழில் நுட்பங்களின் செய்கைகளுக்கும் நமது நாட்டில் மேற்கொள்ளப்பட்டு வருதலை இங்கே நினைவுகூர்தல் வேண்டும். இதனால், மொழியிலக்கணம் என்னும் ஒரு கலை, நினைவு செயல்களின் மாட்சிமைக்கும் இடனாயிருத்தல் நன்கு தெளியப்படும். நினைவும் நினைவின் வழிப்பட்ட செயல்களுமே மொழிகளாய் வெளிவருதலின், மொழியிலக்கண மென்பது மக்களின் வாழ்க்கையிலக்கணமாகவே முடிவது இயல்பாயிருக்கின்றது.

தொல்காப்பியம் என்னும் செந்தமிழ் இலக்கண நூல், இவ் வியல்பறிந்து இயற்றப்பட்டிருக்கின்றது. தமிழ் மொழியில் இயற்றமிழ் என்பது, ஏனை இசை நாடகத் தமிழ்கள் போலச் செயற்கையும் உடன் கலவாது முற்றும் இயற்கையமைதியே உடையது. ஆதலால், இயற்றமிழ்க்கு இலக்கணம் உரைக்கும் தொல்காப்பியமும் முழுதும் இயற்கை வழியே இயன்று நன்கு சிறந்திருக்கின்றது. சுருங்கக் கூறினால், உலக வியற்கையின் இலக்கணமே, வாழ்க்கையின் இலக்கணமே, தொல்காப்பியமாகும் என்பது மிகவும் பொருந்தும்.

தொல்காப்பிய நூலினை நன்கு பயில்வோர், திருத்தமான மொழியாற்றல் உடையவராய்த், தெளிந்த

நினைவும் சிறந்த செயலும் வாய்ந்து, அழகிய தூய இயற்கைப் பெருவாழ்வும் அருட்பேறும் விளங்க, இனிது வைகுவர்.

## நூலாசிரியர் :

இத்தகைய அரும்பெரு நூலினை இத் தமிழகத்துக்கு அருளோடு இயற்றி வழங்கிய பெரியார், **ஆசிரியர் தொல்காப்பியனா**ராவர். அவர் இயற்றிய தாகலின் நூலும, 'தொல்காப்பியம்' எனப்பட்டது.

ஆசிரியர் தொல்காப்பியனாரது வரலாற்றினை முழுதும் அறிந்துகொள்ளுதற்குத், திட்டமான போதிய சான்றுகள் இல்லை. அவா பெயரும, அவர் இயற்றிய தொல்காப்பிய நூலும், அந் நூலுக்கு ஆசிரியர் பனம்பாரனார் உரைத்த சிறப்புப் பாயிரமும், ஏனை எல்லாவற்றையும்விட முதன்மையான சான்றுகளாயிருக்கின்றன.

'தொல்காப்பியர்' என்னும் பெயரினால், தொன்மையான காப்பியக்குடி என்னும் ஒரு மரபை அவர் சேர்ந்தவர் என்பதை அறியலாம். 'தொல்' என்னும் அடைமொழி 'காப்பியம்' என்னும் ஒரு நூற்பெயரைச் சார்தலினும், 'காப்பியக் குடி' என்னுங் குடிப் பெயரைச் சார்தல் ஆற்றலுடையதாகும். அக் குடியினைச் சேர்ந்தவர் என்பதனால், வழிவழி வந்த சிறந்த கலைப்பயிற்சிக்கும் அவர் இயற்கையே உரியவர் என்பது பெறப்படும்.

தொல்காப்பிய நூல் மிகவும் எளிய நடையில் இனிதாக இயன்றிருக்கின்றது. கருத்துக்கள் நன்கு வரையறுத்துச் சிக்கலின்றித் தெளிவாக விளக்கப்பட்

டிருக்கின்றன. ஒரே சிறந்த நூலாகவும், குறை வின்றி நிறைந்த இலக்கணமாகவும் அஃது அமைந் திருக்கின்றது. இதனால், அவர், மக்கட்கு உறு தொண்டாற்றும் பொதுநல நோக்கமுடையவராய் விளங்கினரென்பது நன்கு போதரும்; அவர் உள்ளம் ஆடியின் நிழலென அதன்கண் தெளிவாக விளங்கித் தெரிகின்றது.

தொல்காப்பிய நூலின் சிறப்புப் பாயிரம், ஆசிரியர் தொல்காப்பியர் ஒரு தவ முனிவர் எனவும், நிலந்தரு திருவிற் பாண்டியன் என்னும் பழைய மன்னனது அவைக்களத்தில் தமது அரும்பெரு நூலை அரங்கேற் றினர் எனவும் விளக்குகின்றது.

## அவர் காலம் :

இதனால், ஆசிரியரது காலமும் அம் மன்னனது காலமே என்பது தெளிவுபடும். நிலந்தரு திருவிற் பாண்டியன், தெற்கே பஃறுளியாறு கடல்கோட் படுவ தற்கு முன்னும் பின்னும் இருந்தவன் என்ப. அது, தலைச்சங்கத்தின் இறுதிக்காலமும் இடைச்சங்கத்தின் முதற்காலமுமாகும். இடைச்சங்கம் நிலைபெற்றிருந்த 'கபாடபுரம்' என்னும் பாண்டியர் தலைநகரம், வான்மீக இராமாயணத்திற் குறிக்கப்பட்டிருத்தலின், பஃறுளி யாறு கடல்வாய்ப்பட்ட காலம், திரேதாயுகத்தின் நிகழ்ச்சி எனப்படும் இராமாயண காலத்திற்கு முற்பட்டதாகல் வேண்டும். உரையாசிரியர் நச்சினார்க் கினியர், தொல்காப்பியப் பொருளதிகாரத்துக் கற்பிய லின் (௬) உரையில் "இவ்வாசிரியர் ஆதியூழியின் அந்தத்தே இந்நூல் செய்தலின்" எனத் தொல்காப் பியர் காலத்தை எடுத்துக் காட்டுதலும் இங்கு நினைவு கூர்தற்குரியது.

தொல்காப்பியம் இவ்வளவு பழமையான காலத்ததாய் இருத்தல், அந்நூலின் வழக்குகள் சிலவற்றைக் கொண்டும் அறியப்படுகின்றது. சொல்லதிகாரத்தில் (வினை, உக) ஆசிரியர் தொல்காப்பியனார், வியங்கோட்கிளவி தன்மை முன்னிலை இடங்களில் நிலைபெறாது என்று கூறுவர். ஆசிரியர் காலத்தில் முதன்மை கொள்ளாத அவ்வழக்கு, சேரமான் பெருஞ்சோற்று **உதியஞ் சேரலாதனை** முரஞ்சியூர் முடிநாகராயர் பாடிய 'மண்டிணிந்த நிலனும்' என்னும் **புறநானூற்றுச்** செய்யுளில் "நடுக்கின்றி நிலீஇயர்" என முன்னிலையிடத்தில் வந்து நிலைபெற்றிருக்கின்றது. உதியஞ்சேரலாதன் துவாபர யுகத்தின் நிகழ்ச்சி என்னும் பாரதப்போரில் இருபடைக்கும் பெருஞ்சோறு வழங்கியவனாதலின், ஆசிரியர் தொல்காப்பியனார் அக்காலத்துக்கு மிக முற்பட்டவர் என்பது போதரும். இவ்வாறு வரும் மிகப் பழைய வழக்குகள் தொல்காப்பியத்திற் பல உண்டு. இவற்றால், தொல்காப்பியத்தின் பழைமை இனிது உணரப்படுகின்றது.

இத்தகைய அரும்பெறல் முழுமுதல் தமிழிலக்கணப் பழைய நூல், இன்றுகாறுஞ் சிதைவு சிறிதுமின்றித் தமிழ் மக்கட்குக் கிடைத்திருப்பது, அந்நூலின் அளப்பில்லா மாண்பினையும் தமிழ்மக்களின் விழுத்தவப் பேற்றினையுமே விளங்கப் புலனாக்குகின்றதென்க.

## நூலின் அமைப்பு :

தொல்காப்பியம் முழுதும் கரு௧0 - நூற்பாக்களால் இயன்றிருக்கின்றது. அதன்கண், எழுத்ததிகாரம், சொல்லதிகாரம், பொருளதிகாரம் என மூன்று அதிகாரங்கள் உள்ளன. ஒவ்வொன்றும் தனித்தனி ஒவ்வொன்பது இயல்கள் உடையன.

எழுத்ததிகாரத்தில் எழுத்தின் இலக்கணங்கள், அவற்றின் இயைபு, புணர்ச்சி முதலியவைகளும்; சொல்லதிகாரத்தில் சொல்லின் இலக்கணங்கள், அவற்றின் வகை, வேற்றுமை முதலியவைகளும்; பொருளதிகாரத்தில் அகம் புறம் என்னும் பொருளின் இலக்கணங்கள், அவற்றின் மரபு, செய்யுள் முதலியவைகளும் விரித்து, நிறுத்துவிளக்கி இனிது தெளிவிக்கப் பட்டிருக்கின்றன.

எழுத்தாயினும், சொல்லாயினும், பொருளாயினும் எல்லாம் உயிர்களின் வாழ்க்கை முறையைப் போலவே, உயிர்த்திறம் விளங்க இயற்றப்பட்டிருக்கின்றன உயிர்மெய் எழுத்தும் அதன் இயக்கமும் என்றால், உண்மையில் உடம்போடு கூடிய ஓர் உயிரைப் போலவும் அதன் இயக்கங்களைப் போலவுமே இலக்கணம் காட்டப்படுகின்றது. பெயர்ச்சொல்லும் அதன் வேற்றுமையும் என்றால், நேரில் மக்களைப் போலவும், அவர்தம் வேறுபாடுகளைப் போலவுமே விளக்கங்கள் தோற்றுவிக்கப்படுகின்றன. பொருளதிகாரத்திற் காணப்படும் அகப்பொருள் புறப்பொருள் இலக்கணங்களேயன்றிச் செய்யுளிலக்கணந்தானும் மக்களின் வாழ்க்கை நிழலே என்னும்படி நுட்பம் விளங்கத் தெளிவுறுத்தப்பட்டிருக்கின்றன. வெண்பா யாப்பு எனின், மக்களுள் உயர்ந்தாரது ஒழுகலாற்றுப் போக்கில், ஓசையும் பொருளும் நடையும் உடைய தாய்த் தொல்காப்பியத்தில் அது பெருங்காட்சியளித்து மகிழ்விக்கின்றது.

## தொல்காப்பியம் ஒரு முழுமுதல் நூல் :

இங்ஙனமெல்லாம் நுட்பதிட்பங்களும் இயற்கையமைதிகளும் பொருந்தத் தன்னிகரின்றி யாக்கப்பட்ட

ஒல்காப் பெரும்புகழ்த் தொல்காப்பியம் என்பது, தனக்கொரு முதனூல் உடையதாகவும் தெரியவில்லை. ஆசிரியர் தொல்காப்பியனார் இதுபற்றி யாதுங் குறிப்பிடவில்லை.

தொல்காப்பியத்துக்குப் பனம்பாரனார் உரைத்த சிறப்புப் பாயிரத்தில்,

"செந்தமி ழியற்கை சிவணிய நிலத்தொடு
முந்துநூல் கண்டு முறைப்பட எண்ணிப்
புலந்தொகுத் தோனே போக்கறு பனுவல்"

என நூல் எழுந்த வகைபற்றி நுவலப்பட்டிருக்கின்றது. 'நிலத்து வழக்கொடு முந்துநூல் கண்டு' என வருதலின், உலகவழக்கொடு தமக்கு முற்பட்டுவழங்கிய நூல் வழக்குங் கண்டு ஆசிரியர் நூலியற்றினாரென்பது மட்டும் பெறப்படுமேயன்றி, இன்ன நூலை முதலாகக் கொண்டு அதற்கு வழிநூலாக இதனை இயற்றினாரென்பது பெறப்படாது. அது பெறுவதாயின், 'முந்துநூல்' என்பதை இன்ன முதல்நூல் என்றே பனம்பாரனார் பெயர் குறித்து எழுதியிருப்பர். அங்ஙனம் எழுதாமையின், 'முந்து நூல்' என்பது, ஆசிரியர் தொல்காப்பியனார்க்கு முற்பட்டு வழங்கிய இலக்கண இலக்கிய நூல் வழக்குகளை உணர்த்துதலே இயல்பாவதாகும். மேலும், ஒரு முதல்நூலைப் பார்த்து வழிநூல் இயற்றுவதாயின், முறைப்பட எண்ணுதலும், புலந் தொகுத்தலும் அத்துணை வேண்டப்படுவனவும் அல்ல. ஆதலால், தொல்காப்பியம் என்பது, தன்னளவில் ஒரு முழுமுதல் தெய்வநூல் என்பதே இனிது பெறப்படுவதாகும்.

## தமிழ்மக்கள் கடமை :

இன்ன பெருமையமைந்த இத்தமிழ்ப் பெருநூலை, மாணாக்கர், எத்துணை முதன்மையாகவும் தம வாழ்விற்கு வைப்பாகவுங் கருதிப் பயின்று பயன்பெறுதல் வேண்டும் !

இக்காலத்திற் சிறிது தொல்காப்பியப் பயிற்சி பெருமையோடு தலையெடுத்திருக்கின்றது என்று மகிழ்ச்சியுண்டாகின்றது. இனி, வரவர இதற்கு வளர்ச்சியுண்டாதலும் ஒருதலையேயாம்.

தொல்காப்பியம் மிகவும் எளிய இனிய நூற்பாக்களால் இயன்றது. பாகுபாடுகளும் கருத்துக்களும் விளக்கமாக உள்ளன. அறியவேண்டிய இலக்கணங்கள் நிறைவாக இருத்தலோடு, மிகப் பழைய இலக்கியங்களை ஆராய்வதற்கும், அவற்றிற்கும் முற்பட்ட வழக்குகளைத் தெளிந்துகொள்ளுதற்கும் இந்நூல் கருவியாக அமைந்துள்ளது. அன்றியும், இன்று காறும் வளர்ந்து வந்துள்ள வழக்குகட்கும் ஏற்ற அமைதிகளுடையதாய் இது முதன்மையுற்றிருக்கின்றது. அங்ஙனமிருந்தும், இதன் பயிற்சி இடையே குறைந்து நின்றதற்கு ஏது, இந்நூலுக்கு அமைந்த உரைகளின் நடைப்போக்கும், நன்னூல் முதலிய பின்னூல்களின் தோற்றமும், தமிழ்மக்களின் கருத்தின்மையும் போல்வன என்று கூறலாம்.

உரைநடை இக்காலத்தில் வரவரத் தெளிவடைந்து வருதலால், தொல்காப்பியம் முழுமைக்கும் மிக எளிய இனிய உரைநடையில், ஆசிரியர், உரையாசிரியர்களின் கருத்தழகுகள் குன்றாமல், தெள்ளிய உரையொன்று வெளிவருதல் இன்றியமையாததேயாகும்.

நன்னூல் முதலிய பின்னூல்கள் பெரும்பாலும் வேற்றுச் சமயத்தார் அவ்வக்காலத்தில் தஞ்சமயத் தவர்க்கு இயற்றி வழங்கிய நூல்களாதலின், அவற் றைத் தமிழ் வளர்ச்சிக் குரியனவாகத் தமிழ் மக்கள் முழுதும் பின்பற்றியது, அம் மக்களின் கருத்தின் மைக்கே காட்டாயிற்று. தொல்காப்பிய நூலின் நுட்பதிட்பத்துக்கும், நிறைவுக்கும், மெய்யுணர்ச்சிக் கும், இயற்கையாற்றலுக்கும் முன், நுனித்து ஆரா யுங்கால், பின் நூல்களில் எந்நூலும் இதற்கு இணை யுடையதன்று என்பது தெளியப்பெறும். எழுத்து, சொல், பொருள், யாப்பு முதலிய எல்லா வகையான இலக்கணங்களுக்கும் ஒரே முழுநூலாய்த் தொல்காப் பியம் மிக எளிய இனிய நூற்பாக்களால் இயன்று, தொன்றுதொட்ட பெருவைப்பாய்த் தங்கையகத்தே விளங்கிக் கிடப்பவும், மக்களிற் பலர் அதன் மதிப்பறி யாது, மறந்து, பின்னூற் பயிற்சிகளிலேயே முழுதுந் தலையிட்டுத் தமிழ்க்குந் தமக்கும் இழுக்கந் தேடிக் கொண்டது, கரும்பிருக்க இரும்பு கடித்து எய்த்தவாறா யிற்று.

செஞ்சுவை மிக்க சங்கநூற் பயிற்சியும் இடையே அருகிப்போதற்கு ஏதுவாயிற்று. அதனால், தமிழ் மக்களின் தொன்றுதொட்ட உண்மை வரலாறுகளும், அன்பு அருள் வீரம் ஆண்மை கலைஞானம் முதலிய உண்மைத்திறங்களும், உயர்ந்த தமிழும், இசை நாடக வழக்குகளும், பிறவும் மக்கள் அறியலாகாதபடி நிலை தாழ நேர்ந்தது.

அன்றியும், பின்னூல்கள் சுருக்கமுடையன என்று கருதி, அவற்றுள் ஒன்றை நெட்டுருச் செய்யப் போய், அது, நிறைந்த இலக்கணமுடைய தல்லாமை

யின், பல நூல்களை நெட்டுருச்செய்யுங் கட்டாயத்துக்கு வந்து, அதனால் ஒன்றையேனும் நன்கு பயிலமாட்டாது, கடைசியில் எல்லா முயற்சியும் அரைகுறையாய் வீணாகி ஏமாற்றமடையவும் இடனாயிற்று. கிடைக்கின்ற தமிழ்ப் பயிற்சியும் ஆழ்ந்தகன்று நுட்பம் பெறாததாய், உயர்வல்லாததாய்ப் பெயருக்குத் தமிழெனநிற்கலாயிற்று. மாணவர்க்கு நூல்களின் சுவை குறைந்து சுமை பெருகிற்று.

இலக்கணம் முழுவதையும் நோக்கின், தொல்காப்பியம் ஒரு சுருக்க நூலேயாகும். இதன் ௧௬௧0 நூற்பாக்களையும், அல்லது அவற்றில் அரைப்பங்கையேனும் மாணவர் நெட்டுருச்செய்து நன்கு பயின்றுவிடுவராயின், இலக்கணத்துக்காக அவர் வேறு நூல்கள் பயிலவேண்டாமலே, உயர்ந்த தமிழறிவும் வாழ்க்கையும் உடையவராய்ச், சங்க நூல்கள் முதல் இக்கால நூல்கள்வரை எல்லாவற்றையும் எளிதின் இனிதின் அறியும் இயலாற்றல் வாய்ந்து தெளிவு திகழ்ந்து ஓங்குவர்.

இப்போது, நாட்டில் வரவர இந் நல்லுணர்ச்சியே மிகுந்து வருதல் பெரிதும் வரவேற்கத்தக்கதாயிருக்கின்றது. பெரியார் ஆறுமுக நாவலரவர்கள், ராவ் பகதூர் சி. வை. தாமோதரம் பிள்ளையவர்கள், பேராசிரியர் உ. வே சாமிநாதையரவர்கள், சிவத்திரு மறைமலையடிகள், தமிழ்த்திரு. பா. வே. மாணிக்க நாயக்கரவர்கள் முதலான பெருமக்கள் பலரது நன் முயற்சியினால் இந் நன்னிலை நமது நாட்டுக்கு இறைவன் அருட்கொடையே எனக் கிடைத்திருக்கின்றது. தமிழ் மக்கள் இதனை மேலுமேலும் பெருகச்செய்து கொண்டு, நிலை ஓங்கி விளங்குதல் கடமையாகும்.

## பதிப்பு முறை:

அதற்குக் கருவியாகவே, கழகமும் சில நற்பணிகளை ஒல்லும் வரை நாளும் முயன்று செய்து வருகின்றது.

தொல்காப்பியம் மூலம் முழுதும் கையடக்கமாக நல்ல பதிப்பில் ஒரே நூலாகக் கிடைப்பது அரிதாயிருக்கின்றது. ஆதலின், இப்போது அத்தகைய பதிப்பொன்று வெளியிடுவது கட்டாயமாயிற்று.

பொதுவாகச், சிறிது தமிழறிவும் பொது அறிவும் உடையோர் தொல்காப்பியத்தை இன்பமாகப் படிக்கலாம்; இவற்றோடு, வேறு மொழிகளிற் புலமையும் பல கலையறிவுகளும் வாய்ந்தோர்க்குத் தொல்காப்பியம் ஒரு பேரின்பத் தமிழ்ப் பூம்பொழிலாகும். சிறந்த அலுவலி விருப்பாரும், மகளிரும், தமிழ்த்துறையிற் புதிது புகுவாருங்கூடத் தொல்காப்பியப் பயிற்சியில் இன்பமாகப் பழகிச் செல்லவேண்டுமென்பது கருத்தாயிருக்கின்றது.

அதற்காக, இத் தொல்காப்பிய மூலப் பதிப்பில், சில இனிய பதிப்பு முறைகள் மேற்கொள்ளப்பட்டிருக்கின்றன. ஒவ்வோர் இயலின் தலைப்புக்கும் விளக்கம், ஒவ்வோர் இயலுக்கும் உட்பிரிவுகள், ஒவ்வொரு நூற்பாவுக்கும் விளக்கமான தனித் தலைப்புக்கள் கொடுத்து, நூற்பாக்களைப் படித்துக்கொண்டு போகும் போதே பொருளுணர்ச்சிக்குத் தடையில்லாதவகையில் நூன்முழுவதற்கும் அவ்வப் பக்கங்களின் அடியில் உரிய உரைக்குறிப்புக்களும் எழுதி, இந்நூல் பதிப்பிடப்பெற்றிருக்கின்றது. மாணவர்க்கேயன்றி, வேறு

எத்திறத்தவர்க்கும் இந்நூல் நன்கு பயன்படுமென்று நம்புகின்ரும்.

இதனை இங்ஙனம் பதிப்புமுறை செய்து உரைக் குறிப்பும் எழுதியோர் கழகப் புலவர் இளவழகனர்.

தமிழ் மக்களும் பள்ளி மாணவர்களும் தொல்காப்பியப் பயிற்சியில் சாலச் சிறந்தோங்குமாறு, அறிஞர்கள் ஆவனசெய்து உதவுவார்களென்று எதிர்பார்க்கின்ரும்.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

# பொருளடக்கம்

## ங. பொருளதிகாரம்





உ

கடவுள் துணை

# தொல்காப்பியம்

## சிறப்புப் பாயிரம்

[பனம்பாரனார் இயற்றியது.]

வடவேங்கடந் தென்குமரி
ஆயிடைத்
தமிழ்கூறு நல்லுலகத்து,
வழக்குஞ் செய்யுளும் ஆயிரு முதலின்
எழுத்துஞ் சொல்லும் பொருளும் நாடிச்
செந்தமிழ் இயற்கை சிவணிய நிலத்தொடு
முந்துநூல் கண்டு, முறைப்பட எண்ணிப்
புலந்தொகுத் தோனே போக்கறு பனுவல்;
நிலந்தரு திருவிற் பாண்டியன் அவையத்து,

1. குமரியென்றது. ஆறு.
4. முதலின் - அடிப்படையின்மேல்.
6. நிலத்தொடு - நிலத்து வழக்கோடு.
8. புலம் - அறிதற்குரிய இலக்கணங்கள். போக்கு - குற்றம்.

*அறங்கரை நாவின் நான்மறை முற்றிய*
**அதங்கோட் டாசாற்** *கரில்தபத் தெரிந்து*
*மயங்கா மரபின் எழுத்துமுறை காட்டி,*
*மல்குநீர் வரைப்பின் ஐந்திரம் நிறைந்த*
**தொல்காப் பிய**னெனத் தன்பெயர் தோற்றிப்
*பல்புகழ் நிறுத்த படிமை யோனே.*

---

11. அரில் தபத் தெரிந்து - குறையறத் தெரிந்து கூறி.

12. எழுத்துமுறை காட்டி - தான் எழுதிய நூலின் முறைமையை விளக்கி அரங்கேற்றி.

15. படிமையோன்-தவக்கோலந் தாங்கியோன். 'படிமை யோன் பனுவலாகப் புலந் தொகுத்தோன்' என்க.

# தொல்காப்பியம்

## க. எழுத்ததிகாரம்



### க. நூன் மரபு

[எழுத்தின் இலக்கணம் என்பது இதன் பொருள்; ஆடைக்கு நூல் உறுப்பாதல்போல மொழிக்கு உறுப்பாகிய எழுத்து இங்கு 'நூல்' எனப்பட்டது.]

#### க. எழுத்துக்களின் வகை

**அவற்றின் பெயர் முதலியன**

1. *எழுத்தெனப் படுப*
*அகரமுதல் னகர இறுவாய்*
*முப்பஃ தென்ப ;*
*சார்ந்துவரல் மரபின் மூன்றலங் கடையே.* க

**சார்பெழுத்துக்கள்**

2. *அவைதாம்,*
*குற்றிய லிகரம், குற்றிய லுகரம்,*

---

*1.* எனப்படுப - எனப்படுவன. இறுவாய் - ஈறாக. முப்பஃது - முப்பது. என்ப - என்பர். சார்ந்து வரல் மரபின் மூன்று - அம் முப்பது எழுத்துக்களாகிய முதலெழுத்துக்களைச் சார்ந்து வருதலாகிய தன்மையையுடைய மூன்று சார்பெழுத்துக்கள். அலங்கடை - அல்லாதவிடத்து. சார்பெழுத்துக்கள் மூன்று நீங்கலாக முதலெழுத்துக்கள் அகர முதல் னகரம் ஈறாக முப்பதென்பது இதன் பொருள்.

ஆய்தம் என்ற
முப்பாற் புள்ளியும் எழுத்தோ ரன்ன. ௨

## ௨. மாத்திரை

### ஒரு மாத்திரை யுடைய குற்றுயிர்

3. அவற்றுள்,
அ இ உ எ ஒ என்னும்
அப்பால் ஐந்தும்
ஓரளபு இசைக்குங் குற்றெழுத் தென்ப. ௩

### இரண்டு மாத்திரை யுடைய நெட்டுயிர்

4. ஆ ஈ ஊ ஏ ஐ ஓ ஔ என்னும்
அப்பால் ஏழும்
ஈரளபு இசைக்கும் நெட்டெழுத் தென்ப. ௪

### ஓரெழுத்தே மூன்று மாத்திரை யாகாமை

5. மூவளபு இசைத்தல் ஓரெழுத் தின்றே. ௫

---

2. அவைதாம் - முற்குறிப்பிட்ட சார்பெழுத்துக்களாவன, முப்பாற் புள்ளியும் - மூன்று வகைப்பட்ட புள்ளியிட்ட எழுத்துக்களும், குறுகிய இகரமும் குறுகிய உகரமும் முன்பு புள்ளியிட்டெழுதப்பட்டமையால், அவையும் புள்ளியெனப்பட்டன. எழுத்து ஓர் அன்ன - எழுத்தோடு ஒரு தன்மைய; அஃதாவது, முன்சொன்ன முதலெழுத்துக்கள் முப்பதோடொப்ப வேறு எண்ணப்படும் இயல்பின.

3. அப்பால் - அப்பகுதிப்பட்ட. அளவு - மாத்திரை; என்றது, எழுத்துக்கள் ஒலிக்குங் காலத்தின் அளவு.

5. தமிழில், ஓர் எழுத்து மூன்று மாத்திரை ஒலித்தல் இல்லை என்றபடி.

### மாத்திரை நீளுமாறு

6 நீட்டம் வேண்டின் அவ்வள புடைய
கூட்டி எழூஉதல் என்மனார் புலவர். ௬

### மாத்திரைக்கு அளவு

7. கண்ணிமை நொடியென அவ்வே மாத்திரை
நுண்ணிதின் உணர்ந்தோர் கண்ட வாறே. ௭

## ௩. எண்

### பன்னீருயிர்

8. ஔகார இறுவாய்ப்
பன்னீ ரெழுத்தும் உயிரென மொழிப. ௮

### பதினெண் மெய்

9. னகார இறுவாய்ப்
பதினெண் எழுத்தும் மெய்யென மொழிப. ௯

### உயிர்மெய்க்கு அளவு

10. மெய்யோ டியையினும் உயிரியல் திரியா. ௧0

6. அவ்வளபு உடைய - அவ் வேண்டிய மாத்திரைகள் ஒலித்தலுடைய எழுத்துக்களை. எழுத்துககளெனறது, அவ்வவற்றின் இனமான குறநெறழுத்துககளை, எழூஉதல் - ஒலி யெழுப்புக, என்மனார் - எனபர்.

7. இமை எனறது, இயல்பாக இமைத்தலை. அவ்வே - அவையே, உணர்ந்தோர் கண்டவாறு மாதநிரை அவையே என்றபடி.

8. வழக்கில் அகரம் முதல் னகரம் ஈருக முப்பதெழுத் துக்கள் எண்ணப்படுதலால், அவற்றுள் ஔகாரம் இறுதி யாகப் பன்னீரெழுத்துககளை உயிரெழுத்தெனறு பிரித்தார்.

10. இயல் என்றது, இங்கு முதன்மையாக மாத்திரை.

### தனிமெய்க்கு அளவு

11. மெய்யின் அளபே அரையென மொழிப. கக

### சார்பெழுத்துக்கு அளவு

12. அவ்வியல் நிலையும் ஏனை மூன்றே. கஉ

### மகரக் குறுக்கம்

13. அரையளபு குறுகல் மகரம் உடைத்தே
இசையிடன் அருகும் தெரியுங் காலை. கங

## ௪. வடிவு

### மகரத்தின் வடிவம்

14. உட்பெறு புள்ளி உருவா கும்மே. கச

### மெய்யெழுத்தின் இயல்பு

15. மெய்யின் இயற்கை புள்ளியொடு நிலையல். க௫

### எகர ஒகாரங்களின் இயல்பு

16. எகர ஒகரத் தியற்கையும் அற்றே. கசு

---

12. அவ்வியல் - மெய்யின் அவ் வரை மாத்திரையளவில். ஏனை மூன்றென்றது, சார்பெழுத்துக்கள் மூன்று.

13. அரையளவு குறுகல் - தன் அரை மாத்திரையிற் குறுகிக் கால் மாத்திரை யாதல். இசையிடன் - னகரம் போன்ற வேறோர் எழுத்தோசையிடத்து. அருகும் - வழக்கிற் சிறுபான்மையாகும். 'இசையிடன் குறுகல் உடைத்து; தெரியுங்காலை அருகும்' என்று கொள்க.

14. உருவாகும் - அக் குறுகிய மகரத்துக்கு உருவாகும்.

16. அற்று - அங்ஙனம் புள்ளியொடு நிலையும் இயல் புடையது.

**உயிர்மெய்யெழுத்தின் இயல்பு**

17. புள்ளி யில்லா எல்லா மெய்யும்
உருவுரு வாகி அகரமோ டுயிர்த்தலும்
ஏனை உயிரோடு உருவுதிரிந் துயிர்த்தலும்
ஆயீ ரியல உயிர்த்த லாறே. கஎ

**உயிர்மெய் ஒலிக்குமாறு**

18. மெய்யின் வழியது உயிர்தோன்று நிலையே. கஅ

**வல்லின மெய்**

19. வல்லெழுத் தென்ப க ச ட த ப ற. கக

**மெல்லின மெய்**

20. மெல்லெழுத் தென்ப ங ஞ ண ந ம ன. உ0

**இடையின மெய்**

21. இடையெழுத் தென்ப ய ர ல வ ழ ள. உக

## ரு. மயக்கம்

**மெய் மயங்குமாறு**

22. அம்மூ வாறும் வழங்கியல் மருங்கின்
மெய்ம்மயக் குடனிலை தெரியுங் காலை. உஉ

---

**17. புள்ளி யில்லா** - உயிரெழுத்துக்களோடு கூடிப் புள்ளியில்லாமற்போன, **உரு உருவாகி** - முன் கூடாதபோ திருந்த வடிவே பின்னும் வடிவாகி, **உயிர்த்தலாறு** - ஒலிக்கும் முறைமை.

**18. மெய்யின் வழியது** - மெய்யொலிகளை அடுத்தது. **உயிர்** - உயிரொலி. இந்நூற்பா இருவகை யெழுத்துங் கூடிய உயிர்மெய் யெழுத்துக்களில் அவை ஒலிக்கு முறைமை கூறிற்று.

**22. வழங்கியல் மருங்கில்** - மொழியாகி வழங்கும் இயல்.

## தனிமெய் பிறமெய்யுடன் மயங்குமாறு

23. ட ற ல ள என்னும் புள்ளி முன்னர்க்
க ச ப என்னும் மூவெழுத் துரிய. உ௩

24. அவற்றுள்,
ல ள ஃகான் முன்னர் ய வ வுந் தோன்றும். உ௪

25. ங ஞ ண ந ம ன வெனும் புள்ளி முன்னர்த்
தத்தம் இசைகள் ஒத்தன நிலையே. உ௫

26. அவற்றுள்,
ண ன ஃகான் முன்னர்க்
க ச ஞ ப ம ய வ வ் ஏழும் உரிய. உ௬

27. ஞ ந ம வ என்னும் புள்ளி முன்னர்
யஃகான் நிற்றல் மெய்பெற் றன்றே. உ௭

28. மஃகான் புள்ளிமுன் வவ்வுந் தோன்றும். உ௮

29. ய ர ழ என்னும் புள்ளி முன்னர்
முதலா கெழுத்து ஙகரமொடு தோன்றும். உ௯

---

பில். மெய்ம்மயக்கு உடன் நிலை - மெய்களின் கூட்டாகிய உடனியையும் நிலை உளதாம், மயக்கு - கூட்டு.

23. புள்ளி முன்னர் - புள்ளியை யடுத்து, உரிய - கூடி இயைதற்குரிய,

25. தத்தம் இசைகள் - தத்தம் இனவெழுத்தொலிகள். ஒத்தன நிலையே - இயைந்து நிற்றல் ஒத்தன.

27. நிற்றல் மெய் பெற்றன்று - இயைந்து நிற்றலாகிய மெய்ம்மையைப் பெற்றது.

29. முதலாகு எழுத்து - மொழிக்கு முதலாகும் எழுத்துக்கள்.

**தனிமெய் தன்மெய்யோடு மயங்குமாறு**

30. மெய்ந்நிலை சுட்டின் எல்லா எழுத்தும்
தம்முன் தாம்வரூஉம் ரழஅலங் கடையே. ௩0

## ௬. எழுத்துக்களின் பிற மரபுகள்

**சுட்டெழுத்துக்கள்**

31. அ இ உ அம் மூன்றும் சுட்டு. ௩௧

**வினாவெழுத்துக்கள்**

32. ஆ எ ஒ அம் மூன்றும் வினா. ௩௨

**இசைநூல் முறையில் எழுத்தொலிகள்**

33. அளபிறந் துயிர்த்தலும் ஒற்றிசை நீடலும்
உளவென மொழிப; இசையொடு சிவணிய
நரம்பின் மறைய என்மனார் புலவர். ௩௩

---

30. மெய்ந்நிலை சுட்டின் - மெய்ம்மையாகிய இயல்பினைக் குறித்தால்.

33. அளபு - முற்கூறிய மாத்திரை; என்றது, அளபெடுத்த நிலையில் அமையும் மாத்திரைகளுமென்க. உயிர்த்தலும் - உயிரெழுத்து ஒலித்தலும். இசையொடு சிவணிய நரம்பின் மறைய - இன்னிசையோடு பொருந்திய யாழ் நூலிடத்தன.

## உ. மொழி மரபு

[மொழிக்கண் நின்ற எழுத்தி னிலக்கணம் உணர்த்துவது.]

### க. சார்பெழுத்துக்கள் மொழிகளிற் பயிலுமாறு

**குற்றியலிகரத்திற்கு இடனும் பற்றுக்கோடும்**

34. குற்றிய லிகரம் நிற்றல் வேண்டும்
யாவென் சினைமிசை உரையசைக் கிளவிக்கு
ஆவயின் வரூஉம் மகரம் ஊர்ந்தே. க

**குற்றியலிகரம் புணர்மொழியுள்ளும் வருதல்**

35. புணரியல் நிலையிடைக் குறுகலும் உரித்தே
உணரக் கூறின் முன்னர்த் தோன்றும். உ

**தனிமொழிக் குற்றியலுகரத்திற்கு இடனும் பற்றுக்கோடும்**

36. நெட்டெழுத் திம்பரும் தொடர்மொழி ஈற்றும்
குற்றிய லுகரம் வல்லா றூர்ந்தே. ங

---

34. சினை என்றது, ஈண்டுச் சொல்லின் உறுப்பாகிய எழுத்து. உரையசைக் கிளவி எனப்பட்டது, 'மியா' என்பது. இது, தனிச்சொல்லில் வரும் குற்றியலிகரம்.

35. புணர் இயல் நிலையிடை – புணர்தல் இயன்ற நிலைமைக்கண். இங்கே 'முன்னர்' என்றது, குற்றியலுகரப் புணரியலில் என்னும் பொருட்டு.

36. இம்பர் - பின்னே. தொடர்மொழி, வல்லெழுத்து முதலிய ஐவகை யெழுத்துக்களைத் தொடர்ந்த வன்றொடர் முதலிய ஐவகை மொழிகள். ஊர்ந்து நிற்றல்வேண்டும் என்று முடித்துக்கொள்ள வேண்டும்.

### புணர்மொழிக் குற்றியலுகரம் தன்மாத்திரையிற் குறுகல்

37. இடைப்படிற் குறுகும் இடனுமா ருண்டே
கடப்பா டறிந்த புணரிய லான. ௪

### ஆய்தம் தனி மொழியுள் வருமாறு

38. குறியதன் முன்னர் ஆய்தப் புள்ளி
உயிரொடு புணர்ந்தவல் லாறன் மிசைத்தே. ௫

### ஆய்தம் புணர்மொழியுள்ளும் வருமாறு

39. ஈறியல் மருங்கினும் இசைமை தோன்றும். ௬

### ஆய்தத்தின் இயல்பு

40. உருவினும் இசையினும் அருகித் தோன்றும்
மொழிக்குறிப் பெல்லாம் எழுத்தின் இயலா
ஆய்தம் அஃகாக் காலை யான. ௭

## ௨. அளபெடை

### அளபெடையின் நிலை

41. குன்றிசை மொழிவயின் நின்றிசை நிறைக்கும்
நெட்டெழுத் திம்பர் ஒத்தகுற் றெழுத்தே. ௮

---

37. இடைப்படின் - தனிமொழியிலன்றிப் புணர்மொழியின் இடையே தோன்றினாலும். இடனுமாருண்டு - இடனுமுண்டு. கடப்பாடு - முறைமை.

38. புள்ளி மிசைத்து என்று முடிக்க

39. இயல் மருங்கினும் - புணர்ந்து நடக்குமிடத்தும். இசைமை - ஆய்தம் ஒலித்தல்.

40. அஃகாக் காலை - மாத்திரை சுருங்காதபோது.

41. குன்றிசை மொழி - இசை குன்றுஞ் சொற்கள், அஃதாவது அளபெடுத்தற்குரிய சொற்கள். ஒத்த - இனமொத்த.

### ஐ ஔ அளபெடை

42. ஐ ஔ என்னும் ஆயீ ரெழுத்திற்கு
இகர உகரம் இசைநிறை வாகும். கூ

## ங. எழுத்துக்கள் தொடர்ந்து, மொழியாதல்

### ஓரெழுத் தொருமொழி

43. நெட்டெழுத் தேழே ஓரெழுத் தொருமொழி. க0

### குற்றெழுத்தின் இயல்பு

44. குற்றெழுத் தைந்தும் மொழிநிறை பிலவே. கக

### மொழியின் பெயர் முறை தொகை

45. ஓரெழுத் தொருமொழி ஈரெழுத் தொருமொழி
இரண்டிறந் திசைக்குந் தொடர்மொழி உளப்பட
மூன்றே மொழிநிலை தோன்றிய நெறியே. கஉ

## ச. எழுத்துக்களின் இயக்கம்

### தனிமெய் இயக்கம்

46. மெய்யின் இயக்கம் அகரமொடு சிவணும். கங

### உயிர்மெய் என்னும் பெயர்

47. தம்மியல் கிளப்பின் எல்லா எழுத்தும்
மெய்ந்நிலை மயக்கம் மான மில்லை. கச

---

42. ஆ - அந்த. ஐகாரத்துக்கு இகரமும் ஔகாரத்துக்கு உகரமும் அளபெடைக் குறியீடுகள்.

44. மொழி நிறைபு இல - மொழியாதற்குரிய பொருள் நிறைதல் இல்லாதன.

45. இறந்து - கடந்து.

46. அகரமொடு சிவணும் - அகரவுயிரோடு பொருந்தி நடக்கும்.

47. தம் இயல் - தனி எழுத்தாகிய தமது தன்மையை. மானம் - குற்றம்.

ஈரொற்றுடனிலை

48\. ய ர ழ என்னும் மூன்றும் [1]ஒற்றக்
க ச த ப ங ஞ ந ம ஈரொற் றாகும். கஅ

குறிற்கீழொற்றாகா மெய்கள்

49\. அவற்றுள்,
ரகார ழகாரம் குற்றொற் றாகா. கக

தொடர்மொழி யியல்பு

50\. குறுமையும் நெடுமையும் அளவிற் கோடலின்
தொடர்மொழி யெல்லாம் நெட்டெழுத் தியல.

செய்யுளில் ஈரொற்றிலக்கணம்

51\. செய்யுள் இறுதிப் [2]போலி மொழிவயின்
னகார மகாரம் ஈரொற் றாகும். கஅ

மகரங் குறுகுமிடம்

52\. னகாரை முன்னர் மகாரம் குறுகும். கக

மொழிக்கண்ணும் மாத்திரை வேறுபடாமை

53\. மொழிப்படுத் திசைப்பினும் தெரிந்துவே
[றிசைப்பினும்

48\. ஒற்ற - ஒற்றாய் நிற்க.

49\. குறறொற றா - குறிற்கீழ் ஒற்று.

50\. தொடர்மொழி - இரண்டு முதலிய எழுத்துக்கள் தொடர்ந்த மொழி.

51\. இறுதி - இறுதிக்கண்.

52\. னகாரை - னகாரம்; குறுகும் - தன் அரைமாத் திரையிற் குறுகும்.

(பா-வே.) 1 'முன் ஒற்ற', இளம். 2. 'போலும்', இளம்.

எழுத்தியல் திரியா என்மனார் புலவர். உ0

## ரு. போலி

### எழுத்துப் போலி

54. [1]அகர இகரம் ஐகார மாகும். உக

55. [2]அகர உகரம் ஔகார மாகும். உஉ

56. [3]அகரத் திம்பர் யகரப் புள்ளியும்
ஐ என் நெடுஞ்சினை மெய்பெறத் தோன்றும். உங

### ஐ ஔ குறுகுதல்

57. ஓரள பாகும் இடனுமா ருண்டே
தேருங் காலை மொழிவயி னான. உச

### போலியில் மற்றொரு வகை

58. இகர யகரம் இறுதி விரவும். உரு

---

53. வேறு இசைப்பினும் - தனி எழுத்தாக ஒலித்தாலும்.

56. சினை - உறுப்பாகிய எழுத்து. மெய் - வடிவு.

57. மொழிவயினான - மொழிக்கண் நிற்கும் ஐகார ஔகார எழுத்துக்கள்.

58. இகர யகரம் - இகரமும் யகரமும், இறுதி - ஒரு மொழியின் இறுதியில்.

---

(பா-வே.) 1 அகர இகரம் எகர மாகும்.

2 அகர உகம் ஒகர மாகும்.

3 இந் நூற்பாவினை யடுத்து.

" அகரத் திம்பர் வகரப் புள்ளியும்
ஔவென் நெடுஞ்சினை மெய்பெறத் தோன்றும் "
என்றொரு நூற்பாவுங் கொள்ப.

## ௬. மொழிமுத லெழுத்துக்கள்

**மொழிமுதலாகும் உயிர்கள்**

59. பன்னீ ருயிரும் மொழிமுத லாகும். ௨௬

**தனிமெய் மொழிமுதலாகாமை**

60. உயிர்மெய் அல்லன மொழிமுத லாகா. ௨௭

**பன்னீருயிருடன் மொழிமுதலாகும் மெய்கள்**

61. க த ந ப ம எனும் ஆவைந் தெழுத்தும்
எல்லா உயிரொடுஞ் செல்லுமார் முதலே. ௨௮

**சகரமெய் ஒன்பதுயிருடன் மொழிமுதலாதல்**

62. சகரக் கிளவியும் அவற்றோ ரற்றே
[1]அ ஐ ஔஎனும் மூன்றலங் கடையே. ௨௯

**வகரமெய் எட்டுயிருடன் மொழிமுதலாதல்**

63. உ ஊ ஒ ஓ என்னும் நான்குயிர்
வ என் எழுத்தொடு வருத லில்லை. ௩0

**ஞகரமெய் மூன்றுயிருடன் மொழிமுதலாதல்**

64. ஆ எ ஒ
என்னும் மூவுயிர் ஞகாரத் துரிய. ௩௧

**யகரம் ஆகாரத்துடனே மொழிமுதலா மெனல்**

65. [2]ஆவோ டல்லது யகர முதலாது. ௩௨

---

60. உயிர்மெய் அல்லன வென்றது, தனி மெய்களை.

61. ஆ - அந்த. செல்லுமார் முதலே - முதலாதற்குச் செல்லும்.

65. முதலாது - முதலாக வராது.

---

(பா-வே.) 1 அவை, ஔவெனும் ஒன்றலங் கடையே.
2 " அ ஆ உ ஊ ஓ ஔ.
ஆறோ டல்லது யகர முதலாது."

**எல்லா வெழுத்தும் முதலாம் இடம்**

66. முதலா ஏன தம்பெயர் முதலும். ௬௩

**குற்றியலுகரம் மொழிமுதலாமாறு**

67. குற்றிய லுகரம் முறைப்பெயா மருங்கின்
ஒற்றிய நகரமிசை நகரமொடு முதலும். ௬௪

**மொழிமுதற் குற்றியலுகரத்தின் இயல்பு**

68. முற்றிய லுகரமொடு பொருள்வேறு படாஅது
அப்பெயர் மருங்கின் நிலையிய லான. ௬௫

## ௭. மொழியிறுதி யெழுத்துக்கள்

**மொழியீறாகும் உயிர்கள்**

69. உயிர் ஒள எஞ்சிய இறுதி ஆகும். ௬௬

**ஒள ஈறாகும் இடம்**

70. கவவோ டியையின் ஒளவு மாகும். ௬௭

**எகரவுயிர் மெய்யோ டீறாகாமை**

71. எ எண வருமுயிர் மெய்யீ றாகாது. ௬௮

**ஒகரம் நகரமெய் ஒன்றுடன் ஈறாதல்**

72. ஒவ்வும் அற்றே நவ்வலங் கடையே. ௬௯

---

66. தம் பெயர் முதலும் - தம் பெயர் கூறுதற்கு முதலாகும்.

67. 'முறைப் பெயர்' என்றது, நுந்தை என்னும் முன்னிலை முறைப்பெயர். ஒற்றிய - ஒறறாய் நின்ற.

68. நிலையியலான - நிறறலியல்பில்.

70. க, வ வோடு இயைதல் - கௌ வெள ஆதல். ஆகும் - ஈறாகும்.

71. மெய் ஈறாகாது - மெய்யோடு கூடி உயிர்மெய்யாகி ஈறாகாது.

ஏ ஓ ஞகரமெய்யுட னீருகாமை

73. ஏ ஓ எனும்உயிர் ஞகாரத் தில்லை. ௭0

உ ஊ நகர வகரங்களுடன் ஈருகாமை

74. உ ஊ காரம் நவவொடு நவிலா. ௭க

சகரவுகரம் இருமொழிக்கு ஈருதல்

75. உச்ச காரம் இருமொழிக் குரித்தே. ௭உ

பகரவுகரம் ஒருமொழிக்கே ஈருதல்

76. உப்ப காரம் ஒன்றென மொழிப
இருவயின் நிலையும் பொருட்டா கும்மே. ௭௩

ஈருகா உயிர்மெய் இன்னவகையில் ஆமெனல்

77. எஞ்சிய வெல்லாம் எஞ்சுதல் இலவே. ௭௪

மொழியீரும் மெய்கள்

78. ஞ ண ந ம ன ய ர ல வ ழ ள என்னும்
அப்பதி னொன்றே புள்ளி யிறுதி. ௭௫

---

73. ஞகாரத்தில்லை - ஞகாரத்தோடு கூடி ஈருதலில்லை.

74. நவிலா - பயிலா; ஈருதல் பயிலா என்றபடி.

75. உச்சகாரம், சு என்னும் எழுத்து; இருமொழியாவன 'உசு', 'முசு'.

76. உப் பகாரம், பு; ஒன்றென - 'தபு' வென்னும் ஒரு மொழிக்கண் ஈருய் வருமென. இருவயின் நிலை - தன்வினை பிறவினை என்னும் இரண்டிடத்து நிலையிலும்.

77. எஞ்சுதல் இல - வாளா விடப்படுவன இல; ஓரோ வழி அஃதாவது தம் பெயர் கூறுங்கால் என்க.

78. புள்ளி யிறுதி - புள்ளி யெழுத்துக்களில் மொழிக்கு இறுதியாவன.

### நகரமெய் இருமொழிக்கு ஈறுதல்

79. உச்ச காரமொடு நகாரஞ் சிவணும். ௪௬

### ஞகரமெய் ஒருமொழிக்கே ஈறுதல்

80. உப்ப காரமொடு ஞகாரையும் அற்றே
அப்பொருள் இரட்டாது இவணை யான. ௪௭

### வகரமெய் நான்மொழிக்கு ஈறுதல்

81. வகரக் கிளவி நான்மொழி ஈற்றது. ௪அ

### அஃறிணைக்கண் னகரவீற்று மொழிகள் ஒன்பது

82. மகரத் தொடர்மொழி மயங்குதல் வரைந்த
னகரத் தொடர்மொழி ஒன்பஃ தென்ப
புகரறக் கிளந்த அஃறிணை மேன. ௪௯

---

79. 'சு' போல நகரமெய்யும் இருமொழிகளில் ஈறாய்ப் பொருந்தும் என்றபடி.

80. அற்றே - ஒருமொழிக்கண் ஈறுவதே. இவணை - இவ்விடத்தில்.

82. மகரத் தொடர்மொழி - மகர ஈற்றுத் தொடர் மொழி. மயங்குதல் வரைந்த - மயங்குதல் பொருந்தாதென்று வரையறுக்கப்பட்ட, புகர் - குற்றம்.

# ௩. பிறப்பியல்

[எழுத்துக்களின் பிறப்பிலக்கணம் உணர்த்துவது.]

## க. எழுத்துக்கள் பொதுவாகப் பிறக்குமாறு

83. உந்தி முதலா முந்துவளி தோன்றித்
தலையினும் மிடற்றினும் நெஞ்சினும் நிலைஇப்
பல்லும் இதழும் நாவும் மூக்கும்
அண்ணமும் உளப்பட எண்முறை நிலையான்
உறுப்புற் றமைய நெறிப்பட நாடி
எல்லா எழுத்தும் சொல்லுங் காலைப்
பிறப்பின் ஆக்கம் வேறுவே றியல
திறப்படத் தெரியுங் காட்சி யான. க

## உ. உயிரெழுத்துக்கள் பிறக்குமாறு

**எல்லா உயிர்களும் பொதுவாகப் பிறக்கும் வகை**

84. அவ்வழிப்,
பன்னீ ருயிரும் தந்நிலை திரியா
மிடற்றுப் பிறந்த வளியின் இசைக்கும். உ

**அ, ஆ பிறக்குமாறு**

85. அவற்றுள்,
அ ஆ ஆயிரண் டங்காந் தியலும். ௩

---

83. **அண்ணம்** - மேல்வாய். **எண்** - எட்டு. **திறப்பட** - கூறுபட. **தெரியுங் காட்சியான்** - ஆராய்ந்தறியும் அறிவினிடத்து; 'காட்சியான் வேறுவேறியல' என்க.

84. **அவ்வழி** - அம்முறைமையில். **தம் நிலை** - தத்தம் மாத்திரை யளவு.

85. **அங்காந்து** - வாய்திறத்தலால். **இயலும்** - தோன்றி வரும்.

**இகர முதலியன பிறக்குமாறு**

86. இ ஈ எ ஏ ஐ என இசைக்கும்
அப்பால் ஐந்தும் அவற்றோ ரன்ன;
அவைதாம்,
அண்பல் முதல்நா விளிம்புறல் உடைய. ச

**உகர முதலியன பிறக்குமாறு**

87. உ ஊ ஒ ஓ ஔ என இசைக்கும்
அப்பால் ஐந்தும் இதழ்குவிந் தியலும். ரு

**உயிர்க்கும் மெய்க்கும் ஒரு பொது விதி**

88. தத்தம் திரிபே சிறிய என்ப. சு

## ௩. மெய்யெழுத்துக்கள் பிறக்குமாறு

**க, ங**

89. ககார ஙகாரம் முதல் நா அண்ணம். எ

**ச, ஞ**

90. சகார ஞகாரம் இடைநா அண்ணம். அ

**ட, ண**

91. டகார ணகாரம் நுனிநா அண்ணம். கூ

**மேலனவற்றிற்கு ஓர் ஐயந் தீர்த்தது**

92. அவ்வா றெழுத்தும் மூவகைப் பிறப்பின. க0

---

86. அப் பால் - அப் பகுதிப்பட்ட. அவற்றோரன்ன - அவற்றோடு ஒரு தன்மையாகப் பிறப்பன என்றபடி. அண் பல்லை முதல் நா விளிம்பு உறல் என்க. முதல் நா - அடி நா.

89. முதல் நா அண்ணம் - அடி நாக்கு அடி மேல்வாயைப் பொருந்துதலாற் பிறக்கும்.

92. மூவகைப் பிறப்பின - இங்ஙனம் மூவகைப் பிறப்பின என்க.

த, ந

93. அண்ணம் நண்ணிய பல்முதல் மருங்கின்
நாநுனி பரந்து மெய்யுற ஒற்றத்
தாம்இனிது பிறக்கும் தகார நகாரம். கக

ற, ன

94. அணரி நுனிநா அண்ணம் ஒற்ற
றஃகான் னஃகான் ஆயிரண்டும் பிறக்கும். கஉ

ர, ழ

95. நுனிநா அணரி அண்ணம் வருட
ரகாரம் ழகாரம் ஆயிரண்டும் பிறக்கும். கங

ல, ள

96. நாவிளிம்பு வீங்கி அண்பல் முதலுற
ஆவயின் அண்ணம் ஒற்றவும் வருடவும்
லகார ளகாரம் ஆயிரண்டும் பிறக்கும். கச

ப, ம

97. இதழியைந்து பிறக்கும் பகார மகாரம். கரு

வகரம்

98. பல்லிதழ் இயைய வகாரம் பிறக்கும். கசா

---

93. அண்ணம் நண்ணிய பல் முதல் மருங்கின் - அண்ணத்தைச் சேர்ந்த பல்லின் அடிப்பக்கத்தில். மெய் உற - தன் வடிவு மிகவும் உறும்படி.

94. அணரி - மேனோக்கிச் சென்று. ஆ - அந்த.

96. ஆவயின் - அவ்விடத்து. ஒற்ற லகாரமும் வருட ளகாரமும் பிறக்கும் என்றபடி.

97. பகார மகாரம் - பகாரமும் மகாரமும்.

98. பல்இதழ் இயைய - மேற்பல் கீழ் இதழோடு பொருந்த.

யகரம்

99 அண்ணம் சேர்ந்த மிடற்றெழு வளியிசை
கண்ணுற் றடைய யகாரம் பிறக்கும். கஎ

மெல்லின மெய்களின் பிறப்புக்கு
ஒரு சிறப்பு விதி

100. மெல்லெழுத் தாறும் பிறப்பின் ஆக்கம்
சொல்லிய பள்ளி நிலையின வாயினும்
மூக்கின் வளியிசை யாப்புறத் தோன்றும். கஅ

## ௪. சார்பெழுத்துக்கள் பிறக்குமாறு

101. சார்ந்துவரி னல்லது தமக்கியல் பிலவெனத்
தேர்ந்துவெளிப் படுத்த ஏனை மூன்றும்
தத்தம் சார்பிற் பிறப்பொடு சிவணி
ஒத்த காட்சியிற் றம்மியல் பியலும். கக

## ரு. எழுத்துக்களின் பிறப்புக்குப் புறனடை

102. எல்லா எழுத்தும் வெளிப்படக் கிளந்து
சொல்லிய பள்ளி எழுதரு வளியின்
பிறப்பொடு விடுவழி உறழ்ச்சி வாரத்
தகத்தெழு வளியிசை அரில்தப நாடி
அளபிற் கோடல் அந்தணர் மறைத்தே

---

99. கண்ணுற்றடைய - அணைந்து செறிய.

100. பள்ளி நிலையின - இடங்களின் நிலைபெற்றன. யாப்புற - நிறைதலுற.

101. ஏனை மூன்றுவன - சார்பெழுத்துக்கள். காட்சி என்றது, இங்கு இடம்; அதாவது, நெஞ்சு.

[1]அஃதிவண் நுவலாதெழுந்துபுறத் திசைக்கும்
மெய்தெரி வளியிசை அளபுநுவன் றிசினே. ௨0

---

102. பிறப்பொடு விடுவழி - பிறப்பினோடு சார்த்திக் கூறுமிடத்து; உறழ்ச்சி வாரத்து - திரிவுறுகின்ற பகுதியில்; அகத்து - மூலாதாரத்து என்பர் நச். அரில் தப - மாறுபாடு கெட; அளபின் - ஏற்ற மாத்திரையோடு. மெய்தெரி - பொருண்மை தெரிகின்ற. நுவன்றிசின் - குறித்துக் கூறினேன்.

(பா-வே.) 1. இளம்பூரணர் இக் கடைசி இரண்டு வரிகளையும் வேறு நூற்பாவாகக் கொள்வர்.

# ௪. புணரியல்

[எழுத்துக்களின் புணர்ச்சியிலக்கணம் உணர்த்துவது]

## க. மொழிகளின் முதலும் ஈறும்

### மொழிக்கு முதலிலும் இறுதியிலும் வரும் எழுத்துக்கள்

103. மூன்றுதலை யிட்ட முப்பதிற் றெழுத்தின்
இரண்டுதலை யிட்ட முதலா கிருபஃது
அறுநான் கீற்றொடு நெறிநின் றியலும்
எல்லா மொழிக்கும் இறுதியும் முதலும்
மெய்யே உயிரென்று ஆயீ ரியல. க

### மொழியிறுதி மெய்கள் புள்ளிபெறுதல்

104. அவற்றுள்,
மெய்யீ றெல்லாம் புள்ளியொடு நிலையல். உ

### குற்றுகரம் ஒற்றெழுத்தொத்தல்

105. குற்றிய லுகரமும் அற்றென மொழிப. ௩

---

103. மூன்று தலையிட்ட முப்பதிற் றெழுத்து - முப்பத்து மூன்று எழுத்து; என்றது, முதல் சார்பெழுத்துக்களை. இரண்டு தலையிட்ட முதலாகு இருபஃது - இருபத்திரண்டு முதலாகும் எழுத்துக்கள். முதலாகும் - மொழிக்கு முதலாகின்ற. நெறி நின்று - இருவகை வழக்கிலும் நின்று. எல்லா மொழிகளும் மெய்யெழுத்து அல்லது உயிரெழுத்துக்களை முதலிலும் இறுதி யிலுமாக அவ்விரு வகையில் உடையன என்பது பின் இரண்டு வரிகளின் பொருள்.

104. நிலையல் - நிற்றற்குரியன.

105. அற்று - அத்தகையதே.

**உயிர்மெய்யீறு உயிரீற்றது**

106. உயிர்மெய் யீறும் உயிரீற் றியற்றே. ௪

**புணர்ச்சிக்குரிய இருமொழிகளின் இயல்பு**

107. உயிரிறு சொல்முன் உயிர்வரு வழியும்
உயிரிறு சொல்முன் மெய்வரு வழியும்
மெய்யிறு சொல்முன் உயிர்வரு வழியும்
மெய்யிறு சொல்முன் மெய்வரு வழியுமென்று
இவ்வென அறியக் கிளக்குங் காலை
நிறுத்த சொல்லே குறித்துவரு கிளவியென்று
ஆயீ ரியல புணர்நிலைச் சுட்டே. ௫

## ௨. புணர்தலின் இயல்பு

**மொழிபுணரியல்பு நான்கு**

108. அவற்றுள்,
நிறுத்த சொல்லின் ஈறா கெழுத்தொடு
குறித்துவரு கிளவி முதலெழுத் தியையப்
பெயரொடு பெயரைப் புணர்க்குங் காலும்
பெயரொடு தொழிலைப் புணர்க்குங் காலும்
தொழிலொடு பெயரைப் புணர்க்குங் காலும்
தொழிலொடு தொழிலைப் புணர்க்குங் காலும்
மூன்றே திரிபிடன் ஒன்றே இயல்பென
ஆங்கந் நான்கே மொழிபுணர் இயல்பே. ௬

---

106. இயற்றே - இயல்பினதே.

107. இவ்வென – இத்தகையன. புணர்நிலைச் சுட்டு - புணரும் இயல்பினையுடைய பொருண்மை.

108. நிறுத்த சொல்லின் - நிலைமொழியின். தொழில் - வினைச்சொல்லை. திரிபு இடன் - திரிபாகிய முறைமை.

### புணர்ச்சியில் மூவகைத் திரிபுகள்

109. அவைதாம்,
மெய்பிறி தாதல், மிகுதல், குன்றலென்று
இவ்வென மொழிப திரியு மாறே. ௭

### அடைமொழிகளோடு புணர்தல்

110. நிறுத்த சொல்லுங் குறித்துவரு கிளவியும்
அடையொடு தோன்றினும் புணர்நிலைக் குரிய.

### மரூஉமொழிப் புணர்ச்சி

111. மருவின் தொகுதி மயங்கியல் மொழியும்
உரியவை உளவே புணர்நிலைச் சுட்டே. ௯

### இருவகைப் புணர்ச்சி

112. வேற்றுமை குறித்த புணர்மொழி நிலையும்
வேற்றுமை யல்வழிப் புணர்மொழி நிலையும்
எழுத்தே சாரியை ஆயிரு பண்பின்
ஒழுக்கல் வலிய புணருங் காலை. ௧௦

## ௫. உருபு புணர்ச்சி

### வேற்றுமை யுருபுகள்

113. ஐ ஒடு கு இன் அது கண் என்னும்
அவ்வா றென்ப வேற்றுமை யுருபே. ௧௧

---

110. அடையொடு - அடைமொழியோடு.

111. மருவின் தொகுதியாகிய மயங்கியல் மொழிகளு மென்க. தொகுதி யென்றார். இலக்கணத்தோடு பொருந்தியும் பொருந்தாதும் மருவுவன பலவுங் கருதி.

112. 'எழுத்து மிகுதலும் சாரியை மிகுதலுமாகிய அவ்விருவகை யியல்பில் நடைபெறுதலைத் தமக்கு வலிமையாக உடையன' என்பது பின் இரண்டு வரிகளின் பொருள்.

**வல்லுருபு புணருநிலை**

114. வல்லெழுத்து முதலிய வேற்றுமை யுருபிற்கு
ஓல்வழி ஒற்றிடை மிகுதல் வேண்டும். கஉ

**அது உருபில் அகரம் கெடுமிடம்**

115. ஆறன் உருபின் அகரக் கிளவி
ஈறு ஆகர முனைக் கெடுதல் வேண்டும். கங

**வேற்றுமை யுருபுகள் நிற்குமிடம்**

116 வேற்றுமை வழிய பெயர்புணர் நிலையே. கச

**பெயர்களின் பெயர், முறை, தொகை**

117. உயர்திணைப் பெயரே அஃறிணைப் பெயரென்
றாயிரண் டென்ப பெயர்நிலைச் சுட்டே. கரு

## ச. சாரியை புணர்ச்சி

**சாரியை வருமிடம்**

118. அவற்றுவழி மருங்கின் சாரியை வருமே. கசு

**சாரியைகளின் பெயரும் முறையும் தொகையும்**

119. அவைதாம்,
இன்னே வற்றே அத்தே அம்மே
ஒன்னே ஆனே அக்கே இக்கே
அன்னென் கிளவி உளப்படப் பிறவும்
அன்ன என்ப சாரியை மொழியே. கஎ

---

114. முதலிய - முதலாக நின்ற. ஓல்வழி - பொருந்திய இடங்களில்.

115. அகர முனை - அகரத்தின் முன்.

118. வழிமருங்கின் - பின்னாகிய இடத்தில்.

119. இன்னே முதலியவற்றில் ஏகாரங்கள் எண்ணுதலின், அவற்றை நீக்கி 'இன' 'வற்று' முதலியவாகச் சாரியைகளின் வடிவுகொள்க.

### இன் சாரியையில் இகரம் கெடுதல்

120. அவற்றுள்,
இன்னின் இகரம் ஆவின் இறுதி
முன்னர்க் கெடுதல் உரித்து மாகும். கஅ

### இன் சாரியை ஈறு திரியுமிடம்

121. அளவாகு மொழிமுதல் நிலைஇய உயிர்மிசை
னஃகான் றஃகா னாகிய நிலைத்தே. க௯

### வற்று முதல் கெடுதல்

122. வஃகான் மெய்கெடச் சுட்டுமுதல் ஐம்முன்
அஃகான் நிற்றல் ஆகிய பண்பே. உ0

### னகர ஈற்றுச் சாரியை ஈறு திரியுமிடம்

123. னஃகான் றஃகான் நான்கனுரு பிற்கு. உக

### பொருட்புணர்ச்சியில் ஆன் ஈறு திரிதல்

124. ஆனின் னகரமும் அதனோ ரற்றே
நாள்முன் வரூஉம் வன்முதல் தொழிற்கே. உஉ

### அத்து முதல் கெடுதல்

125. அத்தின் அகரம் அகரமுனை இல்லை. உ௩

---

121. அளவாகு மொழி - அளவுப்பெயர். மிசை - மேல்.

122. வஃகான் மெய் - வ் என்னும் எழுத்து. சுட்டு முதல் ஐ. அவை இவை முதலியன. அஃகான் - அ என்னும் எழுத்து. இந் நூற்பாவுக்குக் காட்டு அவையற்றை, இவையற்றை முதலியன.

124. நாள் - நாட்பெயர்; அது பரணி முதலியன. வன் முதல் தொழில் - வல்லெழுத்தை முதலாக உடைய வினைச் சொல்.

இக்கு முதல் கெடுதல்

126. இக்கின் இகரம் இகரமுனை அற்றே. உச

127. ஐயின் முன்னரும் அவ்வியல் நிலையும். உரு

அக்கு அகரம் நிற்க ஏனைய கெடுமாறு

128. எப்பெயர் முன்னரும் வல்லெழுத்து வருவழி
அக்கின் இறுதிமெய் மிசையொடுங் கெடுமே
குற்றிய லுகரம் முற்றத் தோன்றாது. உசு

அம் ஈறு திரியுமிடம்

129. அம்மின் இறுதி க ச தக் காலைத்
தன்மெய் திரிந்து ங ஞ ந ஆகும். உஎ

அம் ஈறு கெடுமிடம்

130. மென்மையும் இடைமையும் வரூஉங் காலை
இன்மை வேண்டும் என்மனார் புலவர் உஅ

இன் சாரியை முழுதுங் கெடுமிடம்

131. இன்னென வரூஉம் வேற்றுமை யுருபிற்கு
இன்னென் சாரியை இன்மை வேண்டும். உகூ

புணர்மொழிகளிற் சாரியை வருதல்

132. பெயரும் தொழிலும் பிரிந்தொருங் கிசைப்ப
வேற்றுமை உருபு நிலைபெறு வழியும்
தோற்றம் வேண்டாத் தொகுதிக் கண்ணும்

---

127. அவ்வியல் - அங்ஙனம் அகரம் கெடுதல்.

128. மிசையொடும் - தனக்கு மேல் நின்ற மெய்யெழுத்தோடும். முற்றத் தோன்றாது - முழுதுங் கெடும்.

129. தன் - சாரியையாகிய தனனின்.

130. இன்மை - அம் என்னுஞ் சாரியையின் இறுதியெழுத்தாகிய மகரவொற்று இல்லாமை.

ஒட்டுதற் கொழுகிய வழக்கொடு சிவணிச்
சொற்சிதர் மருங்கின் வழிவந்து விளங்காது
இடைநின் றியலும் சாரியை இயற்கை
உடைமையும் இன்மையும் ஒடுவயின் ஒக்கும்.

**அத்து வற்று வருமிடத்து நிகழும் விகாரம்**

133. அத்தே வற்றே ஆயிரு மொழிமேல்
ஒற்றுமெய் கெடுதல் தெற்றென் றற்றே
அவற்றுமுன் வரூஉம் வல்லெழுத்து மிகுமே.

## ௫. எழுத்துச் சாரியை

**எழுத்துச் சாரியைகளின் பெயர்**

134. காரமும் கரமும் கானொடு சிவணி
நேரத் தோன்றும் எழுத்தின் சாரியை. ௩௨

**நெட்டெழுத்துக்குச் சாரியை**

135. அவற்றுள்,
கரமும் கானும் நெட்டெழுத் திலவே. ௩௩

---

**132.** உருபு நிலைபெறு வழி என்றது, வேற்றுமை விரி; தொகுதி என்றது, வேற்றுமைத் தொகை. சொற்சிதர் மருங்கின் - சொற்களைப் பிரித்துக் காணுமிடத்து. சாரியை இயற்கை - சாரியையின் தன்மை. ஒடுவயின - ஒடு உருபினிடத்து.

**133.** ஒற்று மெய் கெடுதல் - ஒற்று, தன் வடிவு கெடுதல். தெற்றென்றற்று - தெளியப்பட்டது.

**134.** நேரத் தோன்றும் - இசையத் தோன்றியலும்.

### குற்றெழுத்துக்குச் சாரியை

136. வரன்முறை மூன்றும் குற்றெழுத் துடைய. ௫௪

### ஐ ஔவின் சாரியை

137. ஐகார ஔகாரம் கானொடுந் தோன்றும். ௫௫

## ௬. உயிரெழுத்தின் புணர்ச்சியியல்புகள்

### மெய்யீற்றின் முன் உயிர்புணர்தல்

138. புள்ளி ஈற்றுமுன் உயிர்தனித் தியலாது
மெய்யொடும் சிவணும் அவ்வியல் கெடுத்தே.

### உயிர் பிரிந்த மெய்யின் இயல்பு

139. மெய்உயிர் நீங்கின் தன்னுரு வாகும். ௫௭

### உடம்படுமெய் தோன்றும் இடம்

140. எல்லா மொழிக்கும் உயிர்வரு வழியே
உடம்படு மெய்யின் உருவுகொளல் வரையார்.

## ௭. புணர்ச்சியிற் பொருள் வேறுபடுமிடம்

### ஒலி வேற்றுமையாற் பொருள் வேறுபடல்

141. எழுத்தோ ரன்ன பொருள்தெரி புணர்ச்சி
இசையில் திரிதல் நிலைஇய பண்பே. ௫௯

---

136. வரன்முறை - வரலாற்று முறை.

138. அவ்வியல் - தான் தனித்து நின்ற தன்மை.

140. உருவு கொளல் வரையார் - வடிவு கொள்ளுதலை நீக்கார்; கொள்ளுவரென்பது கருத்து.

141. எழுத்து ஓரன்ன பொருள் - எழுத்தின் ஒரு தன்மைப்பட்ட கருதது. இசையில் - எடுத்தல் படுத்தல் முதலிய ஒலி வேறுபாட்டில்.

142. அவைதாம்,
முன்னப் பொருள புணர்ச்சி வாயின்
இன்ன என்னும் எழுத்துக்கடன் இலவே. ௪0

---

142. முன்னப்பொருள - குறிப்பான் உணரும் பொருளன. புணர்ச்சிவாயின் - புணர்ச்சியிடத்து. கடன்-முறை.

௩

# ரு. தொகை மரபு

[எழுத்துப் புணர்ச்சியுள், தொகுத்துக் கூறுதற்குரிய புணர்ச்சி யிலக்கணங்கள் உணர்த்துவது.]

## க. உயிரீறு மெய்யீறுகளின் பொதுப்புணர்ச்சி

### மெல்லினந் தோன்றுமிடம்

143. க ச த ப முதலிய மொழிமேற் றோன்றும்
மெல்லெழுத் தியற்கை சொல்லிய முறையான்
ங ஞ ந ம என்னும் ஒற்றா கும்மே
அன்ன மரபின் மொழிவயி னான. க

### வருமொழி யியல்பாதல்

144 ஞ ந ம ய வ வெனும் முதலாகு மொழியும்
உயிர்முத லாகிய மொழியும் உளப்பட
அன்றி யனைத்தும் எல்லா வழியும்
நின்ற சொல்முன் இயல்பா கும்மே. உ

### மெல்லெழுத் துறழ்ச்சி

145. அவற்றுள்,
மெல்லெழுத் தியற்கை உறழினும் வரையார்
சொல்லிய தொடர்மொழி இறுதி யான. ந

143. அன்ன மரபின மொழிவயின் - அத்தகைய முறைமைக்குரிய சொற்களிடத்து. ஆன் அ, சாரியை.

144. அன்றியனைத்தும் - அவையெல்லாம்.

145. இயற்கை - தன்மை. உறழினும் - இயல்பாதலேயன்றி மிகினும்; வரையார் - நீக்கார். உறழினும் என்றமையால், உறழாது இயல்பாதலே வலியுடைத்தென்க.

**ண ன முன், யாவும் ஞாவும்**

146. ணனவென் புள்ளிமுன் யாவும் ஞாவும்
வினையோ ரனைய என்மனார் புலவர். ௪

**ண ன ஈறு, அல்வழியில் இயல்பாதல்**

147. மொழிமுத லாகும் எல்லா எழுத்தும்
வருவழி நின்ற ஆயிரு புள்ளியும்
வேற்றுமை யல்வழித் திரிபிடன் இலவே. ௫

**அவை வேற்றுமையிலும் இயல்பாதல்**

148. வேற்றுமைக் கண்ணும் வல்லெழுத் தல்வழி
மேற்கூ றியற்கை ஆவயி னான. ௬

**ல ன முன், த ந க்கள் திரிதல்**

149. லனஎன வரூஉம் புள்ளி முன்னர்த்
தநஎனவரிற் றனவா கும்மே. ௭

**ண ள மெய், ட ண வாதல்**

150. ணளவென் புள்ளிமுன் டணவெனத்
[தோன்றும். ௮

---

146. வினை ஓர் அனைய - வினைச்சொல்லின் முதலில் ஒரு தன்மையாய் வரும்; யா வருமிடத்தில் ஞா வருமெனபது.

147. ஆ இரு புள்ளி - ண ன என்னும் அந்த இரண்டு மெய்யெழுத்துக்கள்.

148. மேற கூறு இயற்கை - முன்சொன்ன தன்மை; அஃதாவது இயல்பாதல். ஆவயின் - ண ன என்னும் அவ்விரு புள்ளியிடத்தும்.

149. த ந என்னும் வருமொழி முதலெழுத்துக்கள் ற ன ஆகும் எனறபடி.

150. முன் சொன்ன த ந என்னும் எழுத்துக்கள் ட ண எனத் திரிந்து தோன்றும் என்க.

## ௨. உயிரீறு மெய்யீறுகளின் சிறப்புப் புணர்ச்சி

### முன்னிலை வினைச்சொல் முடியுமாறு

151. உயிரீ றாகிய முன்னிலைக் கிளவியும்
புள்ளி யிறுதி முன்னிலைக் கிளவியும்
இயல்பா குநவும் உறழா குநவுமென்று
ஆயீ ரியல வல்லெழுத்து வரினே. ௯

### அதற்குச் சிறப்புவிதி

152. ஔவென வரூஉம் உயிரிறு சொல்லும்
ஞ ந ம வ என்னும் புள்ளி யிறுதியும்
குற்றிய லுகரத் திறுதியும் உளப்பட
முற்றத் தோன்றா முன்னிலை மொழிக்கே. ௧௦

### உயர்திணைப் பெயர் புணருமாறு

153. உயிரீ றாகிய உயர்திணைப் பெயரும்
புள்ளி யிறுதி உயர்திணைப் பெயரும்
எல்லா வழியும் இயல்பென மொழிப. ௧௧

---

151. முன்னிலைக் கிளவி யென்றது, முன்னிலை வினைச் சொற்களை. இயல்பாகுநவும் என முதலில் வருதலால் இயல் பாதலே சிறப்பாகும். உறழாகுநவென்பது துக்கொற்று, நொகொற்று என்புழிப்போல ஓரெழுத் தொருமொழியாகிய முன்னிலை வினைச்சொற்களுக்குச் சிறப்பெனக.

152. முன்னிலை மொழி யென்றது, ஈண்டும் வினைச்சொல். முற்றத் தோன்றா என்றமையால் உகரம் இறுதியிற் பெற்று வரும் என்பது. கௌ கொற்று என்பது கௌவுக் கொற்று எனவரும் என்றபடி.

### அதற்குச் சிறப்புவிதி

154. அவற்றுள்,
இகர இறுபெயர் திரிபிடன் உடைத்தே கஉ

### விரவுப் பெயருள் இயல்பு

155. அஃறிணை விரவுப்பெயர் இயல்புமா ருளவே. கரு

### மூன்றும் வேற்றுமை முடிபு

156. புள்ளி யிறுதியும் உயிரிறு கிளவியும்
வல்லெழுத்து மிகுதி சொல்லிய முறையால்
தம்மி னாகிய தொழிற்சொல் முன்வரின்
மெய்ம்மை யாகலும் உறழத் தோன்றலும்
அம்முறை யிரண்டும் உரியவை உளவே
வேற்றுமை மருங்கிற் போற்றல் வேண்டும். கச

### இரண்டாம் வேற்றுமைத் திரிபு

157. மெல்லெழுத்து மிகுவழி வலிப்பொடு
[தோன்றலும்
வல்லெழுத்து மிகுவழி மெலிப்பொடு
[தோன்றலும்

---

155. இயல்புமாருள - இயல்பும் உள; மார், அசை. எனவே, இயல்பன்றி முடிவனவும் உளவாதல் காண்க.

156. மிகுதி - மிகுதலை. தம்மினாகிய தொழிற்சொல் - தம்மால் நிகழுந் தொழில்களை யுணர்த்தும் வினைச்சொற்கள். முன் வரின் - தமக்குமுன் வரின். மெய்ம்மையாகலும் - இயல்பாகலும். வல்லெழுத்து மிகுதி போற்றல் வேண்டும் என்க. போற்றல் - மிகாதபடி காத்தல். தம்மினாகிய தொழிற்சொல் என்றமையால், இந் நூற்பா மூன்றும் வேற்றுமைத் திரிபுணர்த்துதல் பெறப்படும்.

இயற்கை மருங்கின் மிகற்கை தோன்றலும்
உயிர்மிக வருவழி உயிர்கெட வருதலும்
சாரியை உள்வழிச் சாரியை கெடுதலும்
சாரியை உள்வழித் தன்னுருபு நிலையலும்
சாரியை யியற்கை உறழத் தோன்றலும்
உயர்திணை மருங்கின் ஒழியாது வருதலும்
அஃறிணை விரவுப்பெயர்க் கவ்வியல் நிலையலும்
மெய்பிறி தாகிடத் தியற்கை யாதலும்
அன்ன பிறவும் தன்னியல் மருங்கின்
மெய்பெறக் கிளந்து பொருள்வரைந் திசைக்கும்
ஐகார வேற்றுமைத் திரிபென மொழிப. ௧௫

இகர ஐகார ஈற்று அல்வழி முடிபு

158. வேற்றுமை யல்வழி இ ஐ என்னும்
ஈற்றுப்பெயர்க் கிளவி மூவகை நிலைய;
அவைதாம்,
இயல்பா குநவும் வல்லெழுத்து மிகுநவும்
உறழா குநவும் என்மனார் புலவர். ௧௬

இ ஐ ஈற்று ஏழாம் வேற்றுமை முடிபு

159. சுட்டுமுத லாகிய இகர இறுதியும்
எகரமுதல் வினாவின் இகர இறுதியும்

157. இயற்கை மருங்கின் - இயல்பாமிடத்து. மிகற்கை - மிகுதல். உயிர் மிக வருவழி என்றது, எழுத்துப் பேறு. சாரியை யியற்கை - சாரியை இயல்பாந் தன்மை. ஒழியாது வருதலும் - உருபு தொகாது விரிந்தே வருதலும். அவ்வியல் - அங்ஙனம் உருபு ஒழியாது வருதல். மெய் பெற - பொருள் பெற.

சுட்டுச்சினை நீடிய ஐயென் இறுதியும்
யாவென் வினாவின் ஐயென் இறுதியும்
வல்லெழுத்து மிகுநவும் உறழா குநவும்
சொல்லியல் மருங்கின் உளவென மொழிப.

**நெடில்முன் குறில்முன் ஒற்றுக்கள்**

160. நெடியதன் முன்னர் ஒற்றுமெய் கெடுதலும்
குறியதன் முன்னர்த் தன்னுரு இரட்டலும்
அறியத் தோன்றிய நெறியியல் என்ப. ௧அ

**குறில்முன் ஒற்று இரட்டாத இடம்**

161. ஆறன் உருபினும் நான்கன் உருபினும்
கூறிய குற்றொற் றிரட்ட லில்லை
ஈறாகு புள்ளி அகரமொடு நிலையும்
நெடுமுதல் குறுகும் மொழிமுன் னான. ௧௯

**'நும்' என் மொழிக்கும் அவ் விதி**

162. நும் என் இறுதியும் அந்நிலை திரியாது. ௨௦

---

**159.** சுட்டு முதலாகிய இகர இறுதி என்பது, அதோளி இதோளி அவ்வழி இவ்வழி முதலிய சொற்கள். அதோளி, அவ்விடம் என்னும் பொருட்டு. சொலலியல் மருங்கின் - முன் சொன்ன இயல்பில்.

**160.** இந் நூற்பா, நெட்டெழுத்தின் பின்னுங் குற்றெழுத்தின பின்னும் நிறகும் ஒற்றுககளைப் பறறியது. நெறியியல் - வழக்கியல்; வழககினகண் அடிப்பட்டு வந்த மரபென்றபடி.

**161.** கூறிய - மேல் நூற்பாவிற் கூறிய. நெடுமுதல் குறுகும் மொழிமுன இலலை, நிலையும் எனக கொள்க.

**162.** நெடுமுதல் குறுகாததான நும் என இறுதியும் அவ் விதி பெறுமென்றபடி.

### புள்ளியிறுதி உகரம் பெறுத இடம்

163. உகரமொடு புணரும் புள்ளி யிறுதி
யகரமும் உயிரும் வருவழி இயற்கை. உக

### அளவு, நிறை எண்ணுப் பெயர்கள் தம்மிற் புணருமாறு

164. உயிரும் புள்ளியும் இறுதி யாகி
அளவும் நிறையும் எண்ணுஞ் சுட்டி
உளவெனப் பட்ட எல்லாச் சொல்லும்
தத்தங் கிளவி தம்மகப் பட்ட
முத்தை வரூஉங் காலம் தோன்றின்
ஒத்த தென்ப ஏயென் சாரியை. உஉ

### அவை 'அரை' என்பதனோடு புணர்தல்

165. அரை என வரூஉம் பால்வரை கிளவிக்குப்
புரைவ தன்றாற் சாரியை யியற்கை. உங

### அவை 'குறை' என்பதனோடு புணர்தல்

166. குறையென் கிளவி முன்வரு காலை
நிறையத் தோன்றும் வேற்றுமை யியற்கை. உச

---

163. உகரமொடு புணரும் - உகர எழுத்துப்பேறு சேர்ந்து வரும்.

164. தத்தங் கிளவி தம் அகப்பட்ட - தம் அளவிற குறைந்த தத்தமக்கினமான சொற்கள். முத்தை - தம் முன். ஒத்தது - ஒத்தியல்வது.

165. வரூஉம் - தம் முன் வருகின்ற. பால் வரை கிளவி- கூறுபாடு வரையறுக்குஞ் சொல். சாரியை யியற்கை; சாரியை பெறுகின்ற தன்மை. புரைவதன்று - ஒத்ததன்று ; இல்லை யென்றபடி.

166. வேற்றுமை யியற்கை - வேற்றுமைக்குக் கூறிய முடிபு; அஃதாவது, மிகுந் திரிந்தும் முடிதல். வேற்றுமை யியற்கை தோன்றுமெனவே, இந் நூற்பாவிற் கூறப்படுந் தொடர், வேற்றுமையன்றுதல் பெறப்படும்.

அவற்றுட் குற்றுகர மொழிகட்குச் சாரியை

167. குற்றிய லுகரக் கின்னே சாரியை. உரு

'கலம்' அத்துச் சாரியை பெறுதல்

168. அத்திடை வரூஉம் கலமென் அளவே. உசு

'பனை'யும் 'கா'வும் இன் சாரியை பெறுதல்

169. பனையென் அளவும் காவென் நிறையும்
நினையுங் காலை இன்னொடு சிவணும். உஎ

அளவு நிறைப் பெயர்களில் மொழி
முதலாம் எழுத்துக்கள்

170. அளவிற்கும் நிறையிற்கும் மொழிமுத லாகி
உளவெனப் பட்ட ஒன்பதிற் றெழுத்தே;
அவைதாம்,
க ச த ப என்ற ந ம வ என்ற
அகர உகரமோ டவையென மொழிப. உஅ

## ௬. புறனடை

இவ்வியலுக்குப் புறனடை

171. ஈறியல் மருங்கின் இவையிவற் றியல்பெனக்
கூறிய கிளவிப் பல்லா றெல்லாம்

---

168. 'கலம்' என்னும் அளவுப் பெயர்க்குக் 'கலத்துக் குறை' என அத்து இடையில் வருமென்க.

169. 'பனை' என்பது ஓர் அளவுப் பெயர்; ஒரு பேரளவைக் குறிக்கும். 'கா' என்பது ஒரு நிறைப் பெயர்.

170. உளவெனப்பட்ட-உள்ளன என்று கூறப்பட்டன. ஒன்பதிற்றெழுத்து - ஒன்பதெழுத்துக்கள். என்ற, எண்ணிடைச் சொல்.

மெய்த்தலைப் பட்ட வழக்கொடு சிவணி
ஒத்தவை யுரிய புணர்மொழி நிலையே. உக

**'யாவர்' 'யாது' என்னுஞ் சொற்களின் மருஉ**

172. பலரறி சொல்முன் யாவர் என்னும்
பெயரிடை வகரம் கெடுதலும் ஏனை
ஒன்றறி சொல்முன் யாதென் வினாவிடை
ஒன்றிய வகரம் வருதலும் இரண்டும்
மருவின் பாத்தியின் திரியுமன் பயின்றே. ௩0

---

171. ஈறு இயல் மருங்கின் - சொற்களின் இறுதி யெழுத்துக்கள் வருமொழி முதலெழுத்துக்களோடு கூடியியலும் வகையில். இளவிப் பல் ஆறு - சொற்களின் பலவகைப்பட்ட முடிபுகள். மெய்த்தலைப்பட்ட - உண்மையோடு பொருந்திய. ஒத்தவை - பொருந்தினவை. புணர் மொழிநிலை - புணரும் மொழிகளின் நிலைமையில்.

172. யாவர் என்னுஞ் சொல்லின் வடிவு யார் என்றாதலும், யாதுஎன்னுஞ் சொல்லின் வடிவு யாவது என்றாதலும் என்க. மருஉ முடிபின் வகையில் திரிந்து பயிலும் என்பது ஈற்று வரியின் பொருள்.

உ

## ௩. உருபியல்

[உருபெழுத்துக்களின் புணர்ச்சியிலக்கணம் உணர்த்துவது.]

### க. உயிரீறுகள்

**அகர ஈறு முதலியவற்றில் வேற்றுமை உருபிற்கு இன் சாரியை**

173. அ ஆ உ ஊ ஏ ஔ என்னும்
அப்பால் ஆறன் நிலைமொழி முன்னர்
வேற்றுமை யுருபிற்கு இன்னே சாரியை. க

**அகர ஈற்றுப் பன்மைப் பெயர்கட்கு வற்றுச் சாரியை**

174. பல்லவை நுதலிய அகர இறுபெயர்
வற்றொடு சிவணல் எச்ச மின்றே. உ

**'யா' என் வினவுக்கும் வற்றுச் சாரியை**

175. யாவென் வினாவும் ஆயியல் திரியாது. ௩

**உகரவீற்றுச் சுட்டுக்கு அன் சாரியை**

176. சுட்டுமுதல் உகரம் அன்னொடு சிவணி
ஒட்டிய மெய்யொழித்து உகரம் கெடுமே. ௪

---

173. அ முதலிய ஆறெழுத்துக்களையும் ஈறாகவுடைய நிலைமொழி முன்னரென்க.

174. பல்லவை - பன்மை; நுதலிய - சுட்டிய. எச்ச மின்று - ஒழிதலில்லை; கொள்ளப்படுமென்பது கருத்து.

175. ஆயியல் என்றது வற்றொடு சிவணலை.

176. உகரம் தான் பொருந்திய மெய்யை விட்டு நீங்கிக் கெடும் என்பது ஈற்றடியின் கருத்து.

### ஐகார ஈற்றிற்கு வற்றுச் சாரியை

177. சுட்டுமுத லாகிய ஐயென் இறுதி
வற்றொடு சிவணி நிற்றலு முரித்தே. ௫

### யாவென் வினாவின் ஐக்கும் வற்றுச் சாரியை

178. யாவென் வினாவின் ஐயென் இறுதியும்
ஆயியல் திரியா தென்மனார் புலவர்;
ஆவயின் வகரம் ஐயொடுங் கெடுமே. ௬

### ' என்னும் ஈகார ஈற்றுப் பெயர்க்கு னகர ஒற்று

179. நீயென் ஒருபெயர் நெடுமுதல் குறுகும்
ஆவயின் னகரம் ஒற்றா கும்மே. ௭

### ஒகர ஈற்றுக்கு ஒன் சாரியை

180. ஒகர இறுதிக்கு ஒன்னே சாரியை. ௮

### அகர ஆகார ஈற்றுப் பெயர்க்கு அத்துச் சாரியை

181. அ ஆ என்னும் மரப்பெயர்க் கிளவிக்கு
அத்தொடுஞ் சிவணும் ஏழ னுருபே. ௯

## உ. மெய்யீறுகள்

### ஞ ந மெய் ஈற்றுக்கு இன் சாரியை

182. ஞ ந என் புள்ளிக்கு இன்னே சாரியை. ௧0

---

178. வகரம் ஐயொடும் என்றது, 'வை' என்னும் இறுதி எழுத்து.

179. ஒற்று - ஒற்று எழுத்துப்பேறு.

### வகர ஈற்றுச் சுட்டுக்கு வற்றுச் சாரியை

183. சுட்டுமுதல் வகரம் ஐயும் மெய்யும்
கெட்ட இறுதி யியல்திரி பின்றே. கக

### ஏனை வகர ஈற்றுக்கு இன் சாரியை

184. ஏனை வகரம் இன்னொடு சிவணும். கஉ

### மகர ஈற்றுக்கு அத்துச் சாரியை

185. மஃகான் புள்ளிமுன் அத்தே சாரியை கங

### சில மகர ஈறு இன் சாரியை பெறுதல்

186. இன்னிடை வரூஉம் மொழியுமா ருளவே. கச

### 'நும்' என்னும் மகர ஈற்றுப் பெயர் சாரியை பெறாமை

187. நும் என் இறுதி இயற்கை யாகும். கரு

---

188. சுட்டு முதல் வகரம் - அவ் இவ் முதலியன. ஐயும் மெய்யும் கெட்ட இறுதி என்றது, யாவை எனனுஞ் சொல்லை நினைந்து. இயல் திரிபினறு - ஐயும் அது பொருந்திய மெய் யாகிய வகரமுங் கெட்டு வற்றுப் பெற்று முடிந்த தன்மையில் திரிபில்லை. எனவே, அவ் என்னுஞ் சுட்டும அங்ஙனமே ஈறு கெட்டு 'அவற்று' என முடியுமெனபது.

184. ஏனை வகரம் என்ற சொல் 'தெவ்' என்பது. எனவே, வேறு வகர ஈற்று மொழி தமிழில் இல்லாமை பெறப்படும்.

187. இயற்கையாகும் - சாரியை பெறாமல் இயல்பாகும்.

**'தாம்' 'நாம்' 'யாம்' என்னும் மகர ஈறுகளும் அன்ன**

188. தாம் நாம் என்னும் மகர இறுதியும்
யாம் என் இறுதியும் அதனோ ரன்ன;
ஆ எ ஆகும் யாம் என் இறுதி
ஆவயின் யகரமெய் கெடுதல் வேண்டும்
ஏனை யிரண்டும் நெடுமுதல் குறுகும். ௧௬

**'எல்லாம்' என்னும் மகர ஈற்றிற்கு வற்றும் உம்மும்**

189. எல்லாம் என்னும் இறுதி முன்னர்
வற்றென் சாரியை முற்றத் தோன்றும்
உம்மை நிலையும் இறுதி யான. ௧௭

**உயர்திணையில் அது நம் சாரியை பெறுதல்**

190. உயர்திணை யாயின் நம் இடை வருமே. ௧௮

**'எல்லாரும்' 'எல்லீரும்' என்னும் மகர ஈறுகளின் முடிபு**

191. எல்லாரு மென்னும் படர்க்கை யிறுதியும்
எல்லீரு மென்னும் முன்னிலை யிறுதியும்
ஒற்றும் உகரமுங் கெடுமென மொழிப
நிற்றல் வேண்டும் ரகரப் புள்ளி

---

188. அதனோரன்ன - நும் என்னுஞ் சொன் முடிபோடு ஒரு தன்மையவாய்ச் சாரியை இயல்பாகும். ஆ எ ஆகும் - யாம் என்னுஞ் சொல்லின் முதலிலுள்ள ஆகாரம் எகரமாய்த் திரியும். ஆவயின் யகரமெய் - அவ்விடத்து நின்ற யகரமெய். ஏனை இரண்டும் என்றது, தாம் நாம் எனனுஞ் சொறகளை.

189. இறுதியான - இறுதிககண்.

190. எல்லாம் என்னுஞ் சொல் உயர்திணையாயின் என்க. நம் என்றது, சாரியை. இடை வருமே என்றார், இறுதியில் உம்மை வருதலின்.

உம்மை நிலையும் இறுதி யான
தம் இடை வரூஉம் படர்க்கை மேன
நும் இடை வரூஉம் முன்னிலை மொழிக்கே.

**'தான்' 'யான்' என்னும் னகர ஈற்றுப் பெயர்கள் சாரியை பெருமை**

192. தான் யான் என்னும் ஆயீ ரிறுதியும்
மேல்முப் பெயரொடும் வேறுபா டிலவே. உ0

**'அழன்' 'புழன்' என்னும் னகர ஈறுகள் அத்தும் இன்னும் பெறுதல்**

193. அழனே புழனே ஆயிரு மொழிக்கும்
அத்தும் இன்னும் உறழத் தோன்றல்
ஒத்த தென்ப உணரு மோரே. உக

## ௬. முற்றுகர குற்றுகர ஈறுகள்

**'ஏழு' என்னும் எண்ணுப்பெயர்க்கு அன் சாரியை**

194. அன் என் சாரியை ஏழ னிறுதி
முன்னர்த் தோன்றும் இயற்கைத் தென்ப. உஉ

---

**191.** ஒருபொருளது, மகரவொற்று. **தம் நும் என்பன இங்கே சாரியை.**

**192.** மேல் முப்பெயர் என்றது, மேற் சொன்ன **தாம் நாம் யாம் எனனுஞ் சொற்களை.**

**193.** **உறழத் தோன்றல் - மாறி வருதல்; இரண்டும் வரும் என்றபடி.**

**194.** **ஏழன் இறுதி முன்னர் - ஏழ் என்னும் எண்ணுப்** பெயரின இறுதிமுன. மேல் நூற்பாவிலும் 'இறுதி முன்னர்' **என்னும் வழக்கு வருதல் காண்க. இயற்கைத்து-இயற்கையை யுடையது.**

**குற்றுகர ஈற்றிற்கு இன் சாரியை**

195. குற்றிய லுகரத் திறுதி முன்னர்
முற்றத் தோன்றும் இன் என் சாரியை. ௨௩

**சில குற்றுகர ஈறுகள் இரட்டி முடிதல்**

196. நெட்டெழுத் திம்பர் ஒற்று மிகத் தோன்றும்
அப்பால் மொழிகள் அல்வழி யான. ௨௪

**இரட்டி முடிவன சாரியை பெறுமை**

197. அவைதாம்,
இயற்கைய வாகும் செயற்கைய என்ப. ௨௫

**குற்றுகர ஈற்று எண்ணுப்பெயர்க்கு அன் சாரியை**

198. எண்ணின் இறுதி அன்னொடு சிவணும். ௨௬

**ஒருபஃது முதலிய குற்றுகர ஈறுகள் ஆன் சாரியையும் பெறுதல்**

199. ஒன்றுமுத லாகப் பத்தூர்ந்து வரூஉம்
எல்லா எண்ணுஞ் சொல்லுங் காலை

---

**196.** நெட்டெழுத்திம்பர் ஒற்று என்றது, நெடிற்றொடர்க் குற்றுகர ஈற்று மெய். மிகத்தோன்றும் - இரட்டும். இரட்டுதல், நிலைமொழியில் நிகழுஞ் செய்கை. அப்பால் மொழிகள் - அங்ஙனம் இரட்டுதற்கு அப்பாற் பட்ட மொழிகள். அல் வழியான் - அல்லாத இடத்தில்; என்றது, க ச த ப என்னும் ஒற்றுக்கள் வராத இடத்தில்; எனவே, ட ற என்னும் ஒற்றுககள் வருமிடத்தில் இரட்டும் எனபது.

**197.** இயற்கைய என்றார், மேல் நூற்பாவிற் கூறிய இன சாரியைப்பேறு இயல்பாகுமென்றற்கு. செயற்கை - செய்கை. இயல்பாவனவாகும் செய்கையையுடைய என்பது பொருள்.

**198.** எண்ணின் இறுதி - எண்ணுப் பெயர்களின் குற்றுகர ஈறு.

ஆன் இடை வரினும் மானம் இல்லை
அஃதென் கிளவி ஆவயின் கெடுமே
உய்தல் வேண்டும் பஃகான் மெய்யே. ௨௭

**'யாது' 'அஃது' என்னுங் குற்றுகர ஈறுகட்கு அன் சாரியை**

200. யாதென் இறுதியும் சுட்டுமுத லாகிய
ஆய்த இறுதியும் அன்னொடு சிவணும்
ஆய்தங் கெடுதல் ஆவயி னான. ௨௮

**குற்றுகர ஈற்றுத் திசைப்பெயர்**
**ஏழனுருபிற் சாரியை பெருமலும் வருதல்**

201. ஏழ னுருபிற்குத் திசைப்பெயர் முன்னர்ச்
சாரியைக் கிளவி இயற்கையு மாகும்
ஆவயின் இறுதி மெய்யொடுங் கெடுமே. ௨௯

---

199. சொல்லுங்காலை - வழங்குமிடத்து. ஆன் இடை வரினும் - முன்சொன்ன அன் சாரியையேயன்றி ஆன் சாரியை இடையில் வந்தாலும். மானமில்லை - குற்றமில்லை. அஃது என்பது, பஃது என பதிலுள்ளது. உய்தல் வேண்டும் - கெடாது நிற்றல் வேண்டும். பஃகான் மெய் - பகர ஒற்று.

200. சுட்டு முதலாகிய ஆய்த இறுதி, அஃது என்பது. ஆவயின் - சாரியை புணரும் அவ்விடத்தில்.

201. திசைப்பெயர் முன்னர் வரும் ஏழனுருபிற் கென்க. சாரியைக் கிளவி யென்றது பொதுவாக இன் சாரியையை யுணர்த்தும். இயற்கையுமாகும் - இயல்புமாகும். உம்மையால் அச் சாரியை வருதலு முண்டென்க. இறுதி - இறுதி உகரம்.

## ௪. புறனடை

### இவ்வியலின் புறனடை

202. புள்ளி யிறுதியும் உயிரிறு கிளவியும்
சொல்லிய அல்ல ஏனைய வெல்லாம்
தேருங் காலை உருபொடு சிவணிச்
சாரியை நிலையுங் கடப்பா டிலவே. ௩0

---

202. சொல்லிய அல்லாதனவான ஏனையவெல்லாம் என்க. சிவணி - சிவணுதலால. கடப்பாடு இல என்றமையாற் சாரியை நின்றும் நில்லாதும் முடியும் என்றபடி.

# எ. உயிர் மயங்கியல்

[உயிரீறுகளின் புணர்ச்சியிலக்கணம் உணர்த்துவது.]

## க. அகர ஈறு

**அல்வழியில் அகர ஈற்றுப் பெயர் புணருமாறு**

203. அகர இறுதிப் பெயர்நிலை முன்னர்
வேற்றுமை யல்வழிக் க ச த பத் தோன்றின்
தத்தம் ஒத்த ஒற்றிடை மிகுமே. க

**அகர ஈற்று வினைச்சொல்லும் இடைச்சொல்லும்**

204. வினையெஞ்சு கிளவியும் உவமக் கிளவியும்
என்னென் எச்சமும் சுட்டின் இறுதியும்
ஆங்க என்னும் உரையசைக் கிளவியும்
ஞாங்கர்க் கிளந்த வல்லெழுத்து மிகுமே. உ

**சுட்டின்முன் ஞ ந ம மெய்**

205. சுட்டின் முன்னர் ஞ ந மத் தோன்றின்
ஒட்டிய ஒற்றுஇடை மிகுதல் வேண்டும். ௩

**சுட்டின்முன் ய வ மெய்**

206. ய வ முன் வரினே வகரம் ஒற்றும். ௪

---

**203.** பெயர்நிலை - பெயராக நிலைபெற்றிருப்பதன் முன்னர். தத்தம் ஒத்த ஒற்று என்றதனால், பொருந்துமிடங்களில் அவ்வவற்றின் மென்கணமுங் கொள்ளப்படும்.

**204.** ஞாங்கர்க் கிளந்த - முன்னே சொன்ன. முன் என்றது, முன் நூற்பாவை நினைந்து.

**205.** ஒட்டிய ஒற்று - தத்தமக்குப் பொருத்தமான அவ்வவ்வொற்று.

**206.** ஒற்றும் - ஒற்றாகும்.

### சுட்டின் முன் உயிர்

207. உயிர்முன் வரினும் ஆயியல் திரியாது. ௫

### செய்யுளில் சுட்டு நீளுதல்

208. நீட வருதல் செய்யுளுள் உரித்தே. ௬

### 'சாவ' என்னுஞ் சொல்

209. சாவ என்னும் செயவென் எச்சத்து
இறுதி வகரம் கெடுதலும் உரித்தே. ௭

### இயல்பாகும் அகர ஈற்றுச் சொற்கள்

210. அன்ன என்னும் உவமக் கிளவியும்
அண்மை சுட்டிய விளிநிலைக் கிளவியும்
செய்ம்மன என்னுந் தொழில்இறு சொல்லும்
ஏவல் கண்ணிய வியங்கோட் கிளவியும்
செய்த என்னும் பெயரெஞ்சு கிளவியும்
செய்யிய என்னும் வினையெஞ்சு கிளவியும்
அம்ம என்னும் உரைப்பொருட் கிளவியும்
பலவற் றிறுதிப் பெயர்க்கொடை உளப்பட
அன்றி அனைத்தும் இயல்பென மொழிப. ௮

---

208. புணர்ச்சியதிகாரமாகலின், இந் நீட்சி இருமொழிப் புணர்ச்சிக்கண்ணதென்க.

209. உம்மையாற் கெடாது நிற்றலே பெரும்பான்மையாம்.

210. விளிநிலைக் கிளவி - விளியாகிய நிலைமையையுடைய கிளவி. தொழில் இறு - வினைச் சொல்லாகிய அகர ஈற்றினையுடைய. கண்ணிய - கருதிய. உரைப்பொருட் கிளவி - எதிர்முகமாகப் பேசுதற் பொருண்மையையுடைய சொல். பலவற்றிறுதிப் பெயர்க்கொடை உளப்பட - பன்மைப்பொருளையுணர்த்தும் அகர ஈறறுப் பெயர்களாகிய பல சில முதலிய வற்றைச் சேர்த்தல் உளப்பட. அனைத்தும் - அவ்வெல்லாம்.

**'வாழிய' என்னுஞ் சொல்**

211. வாழிய என்னுஞ் செயவென் கிளவி
இறுதி அகரம் கெடுதலும் உரித்தே. ௯

**'அம்ம' என்னுஞ் சொல்லுக்கு மேலும் ஒரு விதி**

212. உரைப்பொருட் கிளவி நீட்டமும் வரையார். ௧0

**'பல' என்னுஞ் சொல்**

213. பலவற் றிறுதி நீடுமொழி உளவே
செய்யுள் கண்ணிய தொடர்மொழி யான. ௧௧

**'பல' 'சில' என்னுஞ் சொற்கள்**

214. தொடர்அல் இறுதி தம்முன் தாம்வரின்
லகரம் றகரவொற் றாகலும் உரித்தே. ௧௨

**அவற்றிற்கு, மேலும் ஒரு முடிபு**

215. வல்லெழுத் தியற்கை உறழத் தோன்றும். ௧௩

**வேற்றுமையில் அகர ஈறு**

216. வேற்றுமைக் கண்ணும் அதனோ ரற்றே. ௧௪

**மரப் பெயர்க்குப் பிறிது விதி**

217. மரப்பெயர்க் கிளவி மெல்லெழுத்து மிகுமே. ௧௫

**'மக' என்னும் பெயர்**

218. மகப்பெயர்க் கிளவிக்கு இன்னே சாரியை. ௧௬
219. அத்து அவண் வரினும் வரைநிலை இன்றே. ௧௭

---

212. நீட்டம் என்றது, இறுதி யகரத்துக்கு.

213. நீடுமொழி - நீடுதலையுடைய மொழி. செய்யுள் கண்ணிய தொடர்மொழி - செய்யுளாதலைக் கருதிய தொடர்ச்சி கொள்ளும் மொழிகளில்; அஃதாவது, செய்யுளில் எனனும் பொருட்டு.

214. தொடர் அல் - தொடர்மொழி அல்லாத தனிச் சொற்களின்.

### அகர ஈற்றுப் பன்மைச் சொற்கள்

220. பலவற் றிறுதி உருபியல் நிலையும். ௧௮

## ௨. ஆகார ஈறு

### அல்வழியில் ஆகார ஈற்றுப் பெயர்

221. ஆகார இறுதி அகர இயற்றே. ௧௯

### ஆகார ஈற்று வினை

222. செய்யா என்னும் வினையெஞ்சு கிளவியும்
அவ்வியல் திரியாது என்மனார் புலவர். ௨0

### உம்மைத் தொகை முடிபு

223. உம்மை எஞ்சிய இருபெயர்த் தொகைமொழி
மெய்ம்மை யாக அகரம் மிகுமே. ௨௧

### இயல்பாகும் ஆகார ஈற்று சொற்கள்

224. ஆவும் மாவும் விளிப்பெயர்க் கிளவியும்
யாவென் வினாவும் பலவற் றிறுதியும்

---

220. பலவற்று இறுதி - பன்மையுணர்த்தும் பல முதலிய சொற்களின் அகர இறுதி. உருபியல் என்றது, உருபு புணர்ச்சியின் முடிபு. அஃதாவது, வற்றுச் சாரியை பெற்று முடிதல்.

221. அகர இயற்று என்றது, தத்தம் ஒற்றுப்பெற்று முடிதல்.

223. மெய்ம்மையாக - பொருண்மை தோன்ற. அகரம் மிகும் – நிலைமொழியீற்றில் அகரம் மிகுமெனக.

ஏவல் குறித்த உரையசை மியாவும்
தன்தொழில் உரைக்கும் வினாவின் கிளவியொடு
அன்றி அனைத்தும் இயல்பென மொழிப. உஉ

**வேற்றுமையில் ஆகார ஈறு**

225. வேற்றுமைக் கண்ணும் அதனோ ரற்றே. உ௩

**குறிற்கீழ் ஆகாரமும் தனி ஆகாரமும்**

226. குறியதன் முன்னரும் ஓரெழுத்து மொழிக்கும்
அறியத் தோன்றும் அகரக் கிளவி. உ௪

**'இரா' என்னுஞ் சொல்**

227. இரா என் கிளவிக்கு அகரம் இல்லை. உ௫

**'நிலா' என்னுஞ் சொல்**

228. நிலா என் கிளவி அத்தொடு சிவணும். உ௬

**சில மரப்பெயர்கள்**

229. யா மரக் கிளவியும் பிடாவும் தளாவும்
ஆமுப் பெயரும் மெல்லெழுத்து மிகுமே. உ௭

**அவற்றிற்கு, மேலும் ஒரு முடிபு**

230. வல்லெழுத்து மிகினும் மான மில்லை. உ௮

---

224. ஆ, ஆவென்னும் பெயர்ச்சொல். மா, மாவென்னும் பெயர்ச்சொல். பலவற்றிறுதி யென்றது, பன்மையுணர்த்தும் ஆகாரவீற்று வினைச்சொல் தன தொழில் உரைக்கும் என்றது, தன்மையிடத்து வினையைக் குறிக்கும் எனனும் பொருட்டு. இதற்கு 'உண்கா' எனபது காட்டு; உண்பேனோ எனபது பொருள்.

226. அகரக் கிளவி யென்றது, ஈற்றில் அகர எழுத்துப் பேறு.

227. அகரம் - முற்கூறிய அகரப்பேறு.

229. யா என்னும் மரப்பெயர்ச் சொல்லுமென்க.

**'மா' என்னும் மரப் பெயரும்; 'ஆ' 'மா' என்னும் விலங்கின் பெயர்களும்**

231. மாமரக் கிளவியும் ஆவும் மாவும்
ஆமுப் பெயரும் அவற்றோ ரன்ன
அகரம் வல்லெழுத்து அவைஅவண் நிலையா
னகரம் ஒற்றும் ஆவும் மாவும். ௨௧

**'ஆன்' என்னுஞ் சொல்**

232. ஆன் ஒற்று அகரமொடு நிலையிடன் உடைத்தே.
233. ஆன் முன் வரூஉம் ஈகார பகரம்
தான்மிகத் தோன்றிக் குறுகலும் உரித்தே. ௩௧

**சிலவற்றிற்கு உகரப்பேறு**

234. குறியதன் இறுதிச் சினைகெட உகரம்
அறிய வருதல் செய்யுளுள் உரித்தே. ௩௨

## ௩. இகர ஈறு

**வேற்றுமையில் இகர ஈற்றுப் பெயர்**

235. இகர இறுதிப் பெயர்நிலை முன்னர்
வேற்றுமை யாயின் வல்லெழுத்து மிகுமே. ௩௩

---

**231.** மா என்னும் மரப்பெயர்ச் சொல்லு மென்க. அவற்றோரன்ன என்றது, மெல்லெழுத்து மிக்கு முடியு மென்றற்கு. அகரமும் வல்லெழுத்துமாகிய அவை.

**232.** ஆனநெய் என்பது இந் நூற்பாவுக்குக் காட்டு.

**234.** சினை என்றது, இங்கே ஆகாரத்தின் பகுதியாகிய ஒரு மாத்திரையை உணர்த்திற்று.

**235.** இதற்கு அல்வழி முடிபு தொகைமரபிற் காண்க.

### இகர ஈற்று வினைச்சொல்லும் இடைச்சொல்லும்

236. இனி அணி என்னுங் காலையும் இடனும்
வினையெஞ்சு கிளவியுஞ் சுட்டும் அன்ன. ௩௪

### 'இன்றி' என்னுஞ் சொல்

237. இன்றி என்னும் வினையெஞ்சு இறுதி
நின்ற இகரம் உகரம் ஆதல்
தொன்றியல் மருங்கின் செய்யுளுள் உரித்தே. ௩௫

### சுட்டுப் பெயர்

238. சுட்டின் இயற்கை முற்கிளந் தற்றே. ௩௬

### 'தூணி' முன் 'பதக்கு'

239. பதக்குமுன் வரினே தூணிக் கிளவி
முதற்கிளந் தெடுத்த வேற்றுமை யியற்றே. ௩௭

### 'நாழி' முன் உரி

240. உரிவரு காலை நாழிக் கிளவி
இறுதி இகரம் மெய்யொடுங் கெடுமே
டகரம் ஒற்றும் ஆவயி னான. ௩௮

---

236. 'இனி' என்னுங் காலமுணர்த்தும் இடைச்சொல்லும், 'அணி' என்னும இடமுணர்த்தும் இடைச் சொல்லு மென்க.

237. வினையெஞ்சு - வினையெஞ்சு கிளவியின். தொன்றியல் மருங்கினையுடைய செயயுளிடத்தென்க. பழமைதொட்டு வழங்கிவருஞ் சார்பு, ஈண்டுத் தொன்றியல் மருங்கெனப் பட்டது.

238. முன் என்றது, அகரவீற்றுச் சுட்டியல்பு கூறிய இடத்தை நினைந்து.

239. முதற் கிளந்தெடுத்த - முன்பு விதந்தெடுத்துச் சொன்ன,

'பனி' என்னும் காலச்சொல்

241. பனியென வரூஉம் காலவேற் றுமைக்கு
அத்தும் இன்னும் சாரியை யாகும். ௩௯

'வளி' என்னும் பூதச்சொல்

242. வளியென வரூஉம் பூதக் கிளவியும்
அவ்வியல் நிலையல் செவ்வி தென்ப. ௪0

'உதி' என்னும் மரப்பெயர்

243. உதிமரக் கிளவி மெல்லெழுத்து மிகுமே. ௪௧

'புளி' என்னும் மரப்பெயர்

244. புளிமரக் கிளவிக்கு அம்மே சாரியை. ௪௨

'புளி' என்னும் சுவைப்பெயர்

245. ஏனைப் புளிப்பெயர் மெல்லெழுத்து மிகுமே.

அதற்கு, மேலும் ஒரு முடிபு

246. வல்லெழுத்து மிகினும் மான மில்லை
ஒல்வழி யறிதல் வழக்கத் தான. ௪௪

நாட் பெயர்

247. நாள்முன் தோன்றுந் தொழில்நிலைக் கிளவிக்கு
ஆன் இடை வருதல் ஐய மின்றே. ௪௫

---

241. வேற்றுமைக்கு - வேற்றுமை முடிபுடைய பெயர்க்கு.

242. பூதக் கிளவி யென்றூர், ஐம் பூதங்களுள் ஒன்றுன காற்றென்றற்கு. செவ்விது, நல முடிபுடையது.

245. ஏனைப் புளிப்பெயரென்றது. சுவைப்பெயரை.

246. அறிதல் - அறிக.

247. நாள் - நாட்பெயர்; தொழில் நிலைக் கிளவி - தொழிற்றனைமையதான வினைச்சொல். ஆன என்றது சாரியை. வருதல் ஐயமில்லாததாகும் என்க.

### திங்கட் பெயர்

248. திங்கள் முன்வரின் இக்கே சாரியை. ௪௬

## ௪. ஈகார ஈறு

### அல்வழியில் ஈகார ஈற்றுப் பெயர்

249. ஈகார இறுதி ஆகார இயற்றே. ௪எ

### 'நீ' மீ முதலிய சொற்கள்

250. நீ என் பெயரும் இடக்கர்ப் பெயரும்
மீஎன மரீஇய இடம்வரை கிளவியும்
ஆவயின் வல்லெழுத் தியற்கை யாகும். ௪அ

### 'மீ' என்னுஞ் சொல்லுக்கு மேலும் ஒரு முடிபு

251. இடம்வரை கிளவிமுன் வல்லெழுத்து மிகூஉம்
உடனிலை மொழியும் உளவென மொழிப. ௪௯

### வேற்றுமையில் ஈகார ஈற்றுப் பெயர்

252. வேற்றுமைக் கண்ணும் அதனோ ரற்றே. ௫0

### 'நீ' என்னும் பெயர்

253 நீ என் ஒருபெயர் உருபியல் நிலையும்
ஆவயின் வல்லெழுத்து இயற்கை யாகும். ௫௧

---

248. திங்கள் என்றது மாதத்தின் பெயர்.

250, வரை - வரைந்துணர்த்தும். இயற்கையாகும் - இயல்பாகும்.

251· உடன் நிலை மொழியும் - தம்முடன் ஓஸிநயம் உண்டாக இயைந்து நிற்றலையுடைய மொழிகளும்.

253. உருபியல் என்றது, நெடுமுதல் குறுகிச் சாரியை பெறுதல்.

## ௫. உகர ஈறு

**அல்வழியில் உகர ஈற்றுப் பெயர்**

254. உகர இறுதி அகர இயற்றே. ௫௨

**உகரச் சுட்டு**

255. சுட்டின் முன்னரும் அத்தொழிற் றாகும். ௫௩

**சுட்டின்முன் மென்கண முதலியன**

256. ஏனவை வரினே மேல்நிலை இயல. ௫௪

**சுட்டின்முன் வலி இயல்பாதல்**

257. சுட்டுமுதல் இறுதி இயல்பா கும்மே. ௫௫

**செய்யுளிற் சுட்டுப் பெயர்**

258. அன்றுவரு காலை ஆஆ குதலும்
ஐவரு காலை மெய்வரைந்து கெடுதலும்
செய்யுள் மருங்கின் உரித்தென மொழிப. ௫௬

**வேற்றுமையில் உகர ஈற்றுப் பெயர்**

259. வேற்றுமைக் கண்ணும் அதனோ ரற்றே. ௫௭

---

255. அத்தொழிற்றாகும் - அங்ஙனம் வல்லினம் மிகுதலாகிய தொழிலையுடையதாகும்.

256. ஏனவை - மென்கண முதலிய மூன்றும். மேல்நிலை என்றது, அகரவீற்றுச் சுட்டில் அவை வருங்கால் முடியும் முடிபை.

258. அன்று வரு காலை சுட்டுச்சொல்லின் ஈற்றிலுள்ள உகரம் ஆ ஆகுதலென்க. மெய் வரைந்து கெடுதலும் - தான் ஊர்ந்து நின்ற மெய்யெழுத்தை நிறுத்தி உகரங் கெடுதலும்.

### 'எரு' 'செரு' என்னுஞ் சொற்கள்

260 எருவும் செருவும் அம்மொடு சிவணித்
திரிபிட னுடைய தெரியுங் காலை
அம்மின் மகரம் செருவயின் கெடுமே
தம்மொற்று மிகூஉம் வல்லெழுத் தியற்கை. ௫௮

### ழகர உகர ஈறு

261. ழகர உகரம் நீடிடன் உடைத்தே
உகரம் வருதல் ஆவயி னான. ௫௯

### 'ஒடு' என்னும் மரப்பெயர்

262. ஒடுமரக் கிளவி உதிமர இயற்றே. ௬0

### சுட்டுப் பெயர்க்குச் சாரியை

263. சுட்டுமுதல் இறுதி உருபியல் நிலையும்
ஒற்றிடை மிகாஅ வல்லெழுத் தியற்கை. ௬௧

## ௬. ஊகார ஈறு

### அல்வழியில் ஊகார ஈற்றுப் பெயர்

264. ஊகார இறுதி ஆகார இயற்றே. ௬௨

### ஊகார ஈற்று வினைச்சொல்

265. வினையெஞ்சு கிளவிக்கும் முன்னிலை மொழிக்கும்
நினையுங் காலை அவ்வகை வரையார். ௬௩

---

260. எருவும் செருவும் - எரு என்னும் மொழியும், செரு என்னும் மொழியும். அம் முடிபு, தம் ஒற்று மிகூஉம் வல்லெழுத்தியற்கையை யுடையது எனக. தம் ஒற்றென்றது, தம் வல்லொற்று.

263. அம் முடிபு, 'ஒற்று இடை மிகாஅ' வல்லெழுத்தியற்கையையுடையது.

265. அவ்வகை வரையார் - அங்ஙனம் வல்லெழுத்து மிக்கு முடியும் வகையை நீக்கார்.

### வேற்றுமையில் ஊகார ஈறு

266\. வேற்றுமைக் கண்ணும் அதனோ ரற்றே. சுச

### குறிற்கீழ் ஊகாரமும் தனிமொழி ஊகாரமும்

267\. குற்றெழுத் திம்பரும் ஓரெழுத்து மொழிக்கும்
நிற்றல் வேண்டும் உகரக் கிளவி. சுரு

### 'பூ' என்னும் பெயர்

268\. பூ என் ஒருபெயர் ஆயியல் பின்றே
ஆவயின் வல்லெழுத்து மிகுதலும் உரித்தே.

### 'ஊ' என்னும் பெயர்

269\. ஊ என் ஒருபெயர் ஆவொடு சிவணும். சுஎ

270\. அக்கென் சாரியை பெறுதலும் உரித்தே
தக்கவழி அறிதல் வழக்கத் தான. சுஅ

### 'ஆடூஉ' 'மகடூஉ' என்னும் பெயர்கள்

271\. ஆடூஉ மகடூஉ ஆயிரு பெயர்க்கும்
இன் இடை வரினும் மான மில்லை. சுகூ

---

***267.*** உகரக கிளவி - உகர எழுத்து.

***268.*** பூவென்பது பொலிவென்னும் வினைக் குறிப்பை உணர்த்தாதென்றற்கு ஒரு பெயர் என்றாரெனபது நச். கருத்து. எனவே, மலர் எனபது பொருளாயிற்று. வல்லெழுத்து மிகுதலும் உரித்தே எனறமையால், மெல்லெழுத்து மிகுதல் பெரும்பான்மையெனப் பெறப்பட்டது.

***269.*** ஊ என்னும் பெயர்க்கு இறைச்சி என்பது பொருள்.

## ௭. எகர ஒகர ஈறு

**அல்வழியில் எகர ஒகர ஈறுகள்**

272. எகர ஒகரம் பெயர்க்கீ றாகா
முன்னிலை மொழிய என்மனார் புலவர்
தேற்றமும் சிறப்பும் அல்வழி யான. ௭0

**எகர ஒகர இடைச்சொற்கள்**

273. தேற்ற எகரமும் சிறப்பின் ஒவ்வும்
மேற்கூ றியற்கை வல்லெழுத்து மிகா. ௭௧

## ௮. ஏகார ஈறு

**அல்வழியில் ஏகார ஈற்றுப் பெயர்**

274. ஏகார இறுதி ஊகார இயற்றே. ௭௨

**ஏகார இடைச்சொற்கள்**

275. மாறுகோள் எச்சமும் வினாவும் எண்ணும்
கூறிய வல்லெழுத்து இயற்கை யாகும். ௭௩

**வேற்றுமையில் ஏகார ஈறு**

276. வேற்றுமைக் கண்ணும் அஃதோ ரற்றே. ௭௪

---

**272.** பெயர்க்கு ஈறாகா என்றமையால், வினைக்கு ஈறாகும் எனவும், முன்னிலை மொழிய என்றமையால் அஃதும் முன்னிலை மொழிக்கண்ணவாம் எனவும் பெறப்படும். தேற்றமும் சிறப்பும் அல்வழி - தெளிவுப்பொருளுணர்த்தும் எகரமும் சிறப்புப் பொருளுணர்த்தும் ஓகரமுமாகிய இடைச்சொற்களல்லாத நிலையில்.

**273.** மேற்கூறியற்கை என்றது, இயல்பாதல். மேற்கூறியற்கையாய் வல்லெழுத்து மிகா என்க.

**275.** மாறுகோள் என்றது எதிர்மறையை. எச்சமென்றது, சொல்லெச்சப் பொருண்மைக்கு.

**அதற்கு, மேலும் ஒரு முடிபு**

277. ஏ என் இறுதிக்கு எகரம் வருமே. ௭௫

**'சே' என்னும் மரப்பெயர்**

278. சே என் மரப்பெயா ஒடுமர இயற்றே. ௭௬

**'சே' என்னும் விலங்கின் பெயர்**

279. பெற்றம் ஆயின் முற்ற இன் வேண்டும். ௭௭

## ௯. ஐகார ஈறு

**வேற்றுமையில் ஐயீற்றுப் பெயர்**

280. ஐகார இறுதிப் பெயர்நிலை முன்னர்
வேற்றுமை யாயின் வல்லெழுத்து மிகுமே. ௭௮

**சுட்டுப் பெயர்**

231. சுட்டுமுதல் இறுதி உருபியல் நிலையும். ௭௯

**'விசை' 'ஞெமை' 'நமை' என்னும் மரப்பெயர்கள்**

282. விசைமரக் கிளவியும் ஞெமையும் நமையும்
அவைமுப் பெயரும் சே மர இயல. ௮0

**'பனை' 'அரை' 'ஆவிரை' என்னும் மரப்பெயர்கள்**

283. பனையும் அரையும் ஆவிரைக் கிளவியும்
நினையுங் காலை அம்மொடு சிவணும்
ஐயென் இறுதி அரைவரைந்து கெடுமே
மெய்அவண் ஒழிய என்மனூர் புலவர். ௮௧

---

*279. முன நூறபாவிற் கூறிய சே என்னும் பெயர் ஈண்டு மாடு எனனும பொருளை யுணர்த்துமாயின எனக.*

*280. இதறகு அல்வழி முடிபு தொகைமரபிற் காண்க.*

*283. அரை, ஓரு மரப்பெயர், அரை வரைந்து கெடும என்றூர். அரை எனனும் பெயரை நீக்கி ஏனையிரண்டினுங் கெடும் என்றற்கு. ஓழிய - நிற்க.*

'பனை' முன் 'அட்டு'

284. பனையின் முன்னர் அட்டுவரு காலை
நிலையின் றாகும் ஐ என் உயிரே
ஆகாரம் வருதல் ஆவயி னான. ௮௨

'பனை' முன் 'கொடி'

285. கொடிமுன் வரினே ஐ அவண் நிற்பக்
கடிநிலை இன்றே வல்லெழுத்து மிகுதி. ௮௩

திங்கட்பெயரும் நாட்பெயரும்

286. திங்களும் நாளும் முந்துகிளந் தன்ன. ௮௪

'மழை' என்னுஞ் சொல்

287. மழையென் கிளவி வளியியல் நிலையும். ௮௫

'வேட்கை' முன் 'அவா'

288. செய்யுள் மருங்கின் வேட்கை என்னும்
ஐ என் இறுதி அவாமுன் வரினே
மெய்யொடுங் கெடுதல் என்மனார் புலவர்
டகாரம் ணகார மாதல் வேண்டும். ௮௬

---

284. அட்டு - அட்டு என்னுஞ் சொல். பனாஅட்டு என்பது இந்நூற்பாவினால் முடிக்கப்பட்ட மொழி; பனைவெல்லம் என்பது பொருள்.

285. கொடி என்னுஞ் சொல் பனைமுன் வரினே என்க. கடிநிலை இன்று - நீக்கும் இயல்பின்று; மிகும் என்பது.

286. திங்களும் நாளும் - திங்கட் பெயரும் நாட்பெயரும்.

288. 'வேணவா' என்பது இந் நூற்பாவின் முடிபு.

## ௧௦. ஓகார ஈறு

### அல்வழியில் ஓகார ஈற்றுப் பெயர்

289. ஓகார இறுதி ஏகார இயற்றே. ௭

### ஓகார இடைச்சொல்

290. மாறுகோள் எச்சமும் வினாவும் ஐயமும்
கூறிய வல்லெழுத்து இயற்கை யாகும். ௮

291. ஒழிந்ததன் நிலையும் மொழிந்தவற் றியற்றே.

### வேற்றுமையில் ஓகார ஈற்றுப் பெயர்

292. வேற்றுமைக் கண்ணும் அதனோ ரற்றே
ஒகரம் வருதல் ஆவயி னான. ௧௦

### 'கோ' முன் 'இல்'

293. இல்லொடு கிளப்பின் இயற்கை யாகும். ௧௧

### சில ஈறுகட்குச் சாரியை

294. உருபியல் நிலையும் மொழியுமா ருளவே
ஆவயின் வல்லெழுத்து இயற்கை யாகும். ௧௨

---

*291. ஒழிந்தது என்றது, ஒழியிசை ஓகாரம். மொழிந்தவற்றென்றார், முன் நூற்பாவிற் சொன்ன ஓகாரங்களை நினைந்து.*

*293. இந் நூற்பாவுக்கு, ஓகாரவீற்று மொழி என எழுவாய் கொள்ளப்படும். அது, கோ என்பது. இல்லொடு - இல் என்னும் வருமொழியோடு. இயற்கையாகும் என்றது முன் நூற்பாவிற் கூறிய ஒகர எழுத்துப்பேறு இயல்பாகும் என்றபடி.*

*294. உருபியல் என்றது சாரியை பெற்று முடிதல். ஓகார ஈற்று மொழியும் உள என்றபடி.*

## ௧௧. ஔகார ஈறு

### இருவழியிலும் ஔகார ஈற்றுப் பெயர்

295. ஔகார இறுதிப் பெயர்நிலை முன்னர்
அல்வழி யானும் வேற்றுமைக் கண்ணும்
வல்லெழுத்து மிகுதல் வரைநிலை இன்றே
அவ்விரு ஈற்றும் உகரம் வருதல்
செவ்வி தென்ப சிறந்திசி னோரே. ௬௫

---

295. மிகுதல் வரைநிலை யின்று - மிகுதல் நீக்கு நிலைமை யின்று; மிகும் என்றபடி. அவ்விரு ஈற்றும் என்றது, அல்வழி வேற்றுமையென ஈரிடத்து வரும் ஈறுகளிலும் என்றற்கு. உகரம், உகர எழுத்துப்பேறு. சிறந்திசினோர் - சிறந்தோர்.

# அ. புள்ளி மயங்கியல்

[மெய்யீறுகளின் புணர்ச்சி யிலக்கணம் உணர்த்துவது]

## க. மெல்லொற்று ஈறுகள்

**இருவழியினும் ஞகார ஈற்றுத் தொழிற்பெயர்**

296. ஞகாரை ஒற்றிய தொழிற்பெயர் முன்னர்
அல்லது கிளப்பினும் வேற்றுமைக் கண்ணும்
வல்லெழுத் தியையின் அவ்வெழுத்து மிகுமே
உகரம் வருதல் ஆவயி னான. க

297. ஞ ந ம வ இயையினும் உகரம் நிலையும். உ

**அல்வழியில் நகர ஈறு**

298. நகர இறுதியும் அதனோ ரற்றே. ங

**வேற்றுமையில் நகர ஈறு**

299. வேற்றுமைக்கு உக்கெட அகரம் நிலையும். ச

**'வெரிந்' என்னுஞ் சொல்**

300. வெரிந் என் இறுதி முழுதும் கெடுவழி
வருமிட னுடைத்தே மெல்லெழுத் தியற்கை. ரு

**அதற்கு, மேலும் ஒரு முடிபு**

301. ஆவயின் வல்லெழுத்து மிகுதலு முரித்தே. சு

---

296. ஒற்றிய - ஒற்றாக நின்ற. அல்லது - அல்வழியில்.

299. இந் நூற்பாவும் நகர இறுதிக்கு.

300. மெல்லெழுத்துப் பெறுகின்ற தன்மை வந்து முடியும் இடனுடைத்து என்க.

### வேற்றுமையில் ணகர ஈறு

302. ணகார இறுதி வல்லெழுத் தியையின்
டகார மாகும் வேற்றுமைப் பொருட்கே. எ

### 'ஆண்,' 'பெண்' என்னுஞ் சொற்கள்

303. ஆணும் பெண்ணும் அஃறிணை இயற்கை. அ

### 'ஆண்' என்னும் மரப்பெயர்

304. ஆண்மரக் கிளவி அரைமர இயற்றே. கூ

### 'விண்' என்னுஞ் சொல்

305. விண் என வரூஉம் காயப் பெயர்வயின்
உண்மையு முரித்தே அத்தென் சாரியை
செய்யுள் மருங்கின் தொழில்வரு காலை. க0

### ணகர ஈற்றுத் தொழிற்பெயர்

306. தொழிற்பெய ரெல்லாம் தொழிற்பெய ரியல.

---

303. ஆண் என்னும் பெயரும் பெண் என்னும் பெயரு மென்க; இவை விரவுப்பெயர்.

304. 'ஆண்' 'அரை' என்பன ஈண்டு மரப்பெயர்கள்.

305. காயம் - ஆகாயம்; வான். உண்மையும் - உண்டாதலும். செய்யுள் மருங்கின் - செய்யுளிடத்தில். தொழில் - வினைச்சொல்.

306. தொழிற்பெய ரியல என்றது, இவ்வியலின் முதலிரண்டு நூற்பாக்களை நினைந்து. அஃதாவது, வல்லெழுத்து வந்தால் வல்லெழுத்தும் உகரப்பேறும், மெல்லெழுத்தும் இடையெழுத்தில் வகரமும் வந்தால் உகரமும் பெற்று முடிதல்.

**ணகர ஈற்றுக் கிளைப்பெயர்**

307. கிளைப்பெய ரெல்லாம் கொளத்திரி பிலவே.

**அல்வழியில் 'எண்' என்னும் உணவுப்பெயர்**

308. வேற்றுமை யல்வழி எண் என் உணவுப்பெயர்
வேற்றுமை யியற்கை நிலையலு முரித்தே. ௧௩

**இருவழியினும் 'முரண்' என்னுந் தொழிற்பெயர்**

309. முரண் என் தொழிற்பெயர் முதலியல் நிலையும்.

**வேற்றுமையில் மகர ஈறு**

310. மகர இறுதி வேற்றுமை யாயின்
துவரக் கெட்டு வல்லெழுத்து மிகுமே. ௧௪

**அதற்கு, மேலும் இரு முடிபுகள்**

311. அகர ஆகாரம் வருஉங் காலை
ஈற்றுமிசை அகரம் நீடலு முரித்தே. ௧௬

312. மெல்லெழுத்து உறழும் மொழியுமா ருளவே
செல்வழி அறிதல் வழக்கத் தான. ௧௭

---

307. கொள - கருதுதற்கேற்ற; கிளைப்பெயரெல்லாம் திரிபில எனபது நூற்பாவின் பொருள்.

308. எண் - எள். வேற்றுமை யியற்கை யென்றது, திரிந்து முடியும் இயல்பு.

309. முதல் இயல் - முற் கூறிய இயல்பு; அஃதாவது, இயல்புந் திரிபுமாய் முடிதல்.

310. துவர - முற்ற.

311. இதுவும் மகர ஈற்று முடிபு நுவலும் நூற்பா. ஈற்று மிசை அகரம் - இறுதியிலுள்ள மகரவொற்றின்மேல் நின்ற அகரம்.

312. உறழு மென்றமையால், வல்லெழுத்தோடு மெல்லெழுத்தும் பெற்று முடியும் மொழிகளும் என்க.

### 'இல்லம்' என்னும் மரப்பெயர்

313. இல்ல மரப்பெயர் விசை மர இயற்றே. கஅ

### அல்வழியில் மகர ஈறு

314. அல்வழி யெல்லாம் மெல்லெழுத் தாகும். ககூ

### 'அகம்' முன் 'கை'

315. அகம் என் கிளவிக்குக் கை முன் வரினே
முதனிலை யொழிய முன்னவை கெடுதலும்
வரைநிலை யின்றே ஆசிரி யர்க்க
மெல்லெழுத்து மிகுதல் ஆவயி னான. உ௦

### 'இலம்' முன் 'படு'

316. இலம் என் கிளவிக்குப் படு வரு காலை
நிலையலு முரித்தே செய்யு ளான. உக

---

313. 'இல்லம்' 'விசை' மரப்பெயர்கள்

314. மகர ஈறு திரிந்து மெல்லெழுத்தாகும் என்றபடி.

315. முதல் நிலை - முதலில் நின்ற எழுத்தாகிய அகரம். ஒழிய - நிற்க. முனனவை - அதனை அடுத்து நின்ற இரண்டெழுத்துக்களும். கெடுதலும் என்ற உம்மையாற் கெடாது நிற்றலுங் கொள்ளப்படும். ஆசிரியர்க்க எனபதில், அகரம் சாரியை. ஆசிரியர்க்கு என்பது சொல். 'அங்கை' என்பது இந் நூற்பாவின் முடிபு.

316. இலம் - இல்லாமை என்னும் பொருள்தரும் உரிச்சொல். படு - உண்டாதலென்னும் பொருள்தரும் வினைக் குறிப்புப் பெயர். மகர ஈறு நிலையலும் உரித்து என்க. செய்யுளான் - செய்யுளிடத்து.

‘ஆயிரம்’ என்னும் எண்ணுப்பெயர்

317. அத்தொடு சிவணும் ஆயிரந் திறுதி
ஒத்த எண்ணு முன்வரு காலை. உஉ

அடையடுத்த ஆயிரம்

318. அடையொடு தோன்றினும் அதனோ ரற்றே. உங

அதன்முன் அளவுப்பெயரும் நிறைப்பெயரும்

319. அளவும் நிறையும் வேற்றுமை யியல. உச

வேற்றுமையில் உயர்திணைப்பெயரும் விரவுப்பெயரும்

320. படர்க்கைப் பெயரும் முன்னிலைப் பெயரும்
தொடக்கங் குறுகும் பெயர்நிலைக் கிளவியும்
வேற்றுமை யாயின் உருபியல் நிலையும்
மெல்லெழுத்து மிகுதல் ஆவயி னான. உரு

அல்வழியில் அவை

321. அல்லது கிளப்பின் இயற்கை யாகும். உசு

---

317. ஒத்த எண் - தனக்கு அகப்படு மொழியாய்ப் பொருந்தின எண்ணுப் பெயர். எண் என்பது, எண்ணு என நின்றது. தொகைமரபிற் கூறிய ‘ஏ’ என்னுஞ் சாரியை இதற்கு நீக்கினார்.

318. ஆயிரம் என்பது அடையொடு தோன்றினும் என்க.

319. அளவுப் பெயரும் நிறைப் பெயரும் வருமொழியாக வந்தால் என்க.

320. தொடக்கம் குறுகும் பெயர்நிலைக் கிளவி என்பன, தாம் நாம் முதலியன.

321. அல்லது-அல்வழி முடிபு. இயற்கையாகும்-சாரியை பெறாது இயல்பாகும்.

**'எல்லாம்' என்னும் விரவுப்பெயர்**

322. அல்லது கிளப்பினும் வேற்றுமைக் கண்ணும்
எல்லாம் எனும்பெயர் உருபியல் நிலையும்
வேற்றுமை யல்வழிச் சாரியை நிலையாது. உள

**அதற்கு, மேலும் ஒரு முடிபு**

323. மெல்லெழுத்து மிகினும் மான மில்லை. உஅ

**அதற்கு, உயர்திணை முடிபு**

324. உயர்திணை யாயின் உருபியல் நிலையும். உகூ

**வேற்றுமையில் 'நும்' என்னும் பெயர்**

325. நும் என் ஒருபெயர் மெல்லெழுத்து மிகுமே. ௩0

**அல்வழியில் 'நும்' என்னும் பெயர்**

326. அல்லதன் மருங்கிற் சொல்லுங் காலை
உக் கெட நின்ற மெய்வயின் ஈ வர
இ இடை நிலைஇ ஈறுகெட ரகரம்
நிற்றல் வேண்டும் புள்ளியொடு புணர்ந்தே
அப்பால் மொழிவயின் இயற்கை யாகும். ௩க

---

322. உருபியல் என்றது, இடையில் வற்றும் இறுதியில் உம்மும் பெறுதல்; அல்வழிக்கு இடையில் வற்றுப்பெறுதல் இல்லை என்க.

325. மிகும் என்றதனுல், இறுதி மகரக்கேடு கொள்க.

326. இந் நூற்பாவும் 'நும்' என்னும் பெயர்க்கு. உக் கெட என்றது, நகரத்திலுள்ள உகரத்தை நினைந்து. புள்ளியொடு புணர்ந்து ரகரம் நிறறல்வேண்டும் என்க. வேண்டும் - ஆசிரியன் வேண்டுவன். புள்ளியொடு புணர்ந்தென்றது, மெய்யெழுத்தென்றற்கு. அப் பால் - அவ்வகைப்பட்ட. இயற்கை யாகும் - வருஞ் சொல் இயல்பாய் முடியும்.

### மகர ஈற்றுத் தொழிற் பெயர்

327. தொழிற்பெய ரெல்லாம் தொழிற்பெய ரியல.

### 'ஈம்' 'கம்' 'உரும்' என்னும் பெயர்கள்

328. ஈமும் கம்மும் உருமென் கிளவியும்
ஆமுப் பெயரும் அவற்றோ ரன்ன. ௩௩

### 'ஈம்' 'கம்' என்னும் இருபெயர்க்குஞ் சாரியை

329. வேற்றுமை யாயின் ஏனை இரண்டும்
தோற்றம் வேண்டும் அக்குஎன் சாரியை. ௩௪

### மகரம் குறுகுமிடம்

330. வகார மிசையும் மகாரம் குறுகும். ௩௫

### மகர ஈற்று நாட்பெயர்

331. நாட்பெயர்க் கிளவி மேற்கிளந் தன்ன
அத்தும் ஆன் மிசை வரைநிலை யின்றே
ஒற்றுமெய் கெடுதல் என்மனார் புலவர். ௩௬

### வேற்றுமையில் னகர ஈறு

332. னகார இறுதி வல்லெழுத் தியையின்
றகார மாகும் வேற்றுமைப் பொருட்கே. ௩௭

---

329. ஏனை இரண்டு என்றது, ஈம் கம் என்பன. தோற்றம் - தோன்றுதல்; சாரியை தோன்றுதல் என்க.

330. வகார மிசையும் என்னும் எச்ச உம்மை, முன் 'போன்ம்' முதலிய தனிமொழிகளிற் குறுகுதலைக் கருதிற்று.

331. மேற்கிளந்தன்ன என்றார் இகர ஈற்று நாட்பெயர் நினைந்து. அத்தும் வரைநிலை யின்றென்க. ஒற்றுமெய் கெடுதல்-மகரவொற்றுத் தன் வடிவு கெடுதல்.

### சில னகர ஈற்றுச் சொற்கள்

333. மன்னும் சின்னும் ஆனும் ஈனும்
பின்னும் முன்னும் வினையெஞ்சு கிளவியும்
அன்ன இயல என்மனார் புலவர். ௩௮

### 'வயின்' என்னுஞ் சொல்

334. சுட்டுமுதல் வயினும் எகரமுதல் வயினும்
அப்பண்பு நிலையும் இயற்கைய என்ப. ௩௯

### 'குயின்' என்னுஞ் சொல்

335. குயின் என் கிளவி இயற்கை யாகும். ௪0

### 'எகின்' என்னும் மரப்பெயர்

336. எகின்மர மாயின் ஆண்மர இயற்றே. ௪௧

### 'எகின்' என்னும் பிற உயிரின் பெயர்

337. ஏனை எகினே அகரம் வருமே
வல்லெழுத் தியற்கை மிகுதல் வேண்டும். ௪௨

### கிளைப் பெயர்

338. கிளைப்பெய ரெல்லாம் கிளைப்பெய ரியல. ௪௩

---

333. 'மன்' 'சின்' அசைச் சொற்கள்; 'ஆன்' 'ஈன்' சுட்டு. வினையெஞ்சு கிளவி, 'வரின்' 'செய்யின்' போல்வன.

334. வயின் - வயின் என்னுஞ் சொல்; அவ்வயின் முதலியனவும், எவ்வயின் என்பதும்.

335. இயற்கையாகும் - னகரம் றகரமாகத் திரியாது இயல்பாய் முடியும்.

336. எகின் என்னும் மரப்பெயராயின் என்க.

337. ஏனை எகின் என்றது, புள்ளியின் பெயர்; அகரம், அகர எழுத்துப் பேறு.

338. கிளைப் பெயர், எயின் முதலிய இனப்பெயர்.

**'மீன்' என்னுஞ் சொல்**

339. மீன் என் கிளவி வல்லெழுத்து உறழ்வே. ௪௪

**'தேன்' என்னுஞ் சொல்**

340. தேன் என் கிளவி வல்லெழுத் தியையின்
மேல்நிலை ஒத்தலும் வல்லெழுத்து மிகுதலும்
ஆமுறை இரண்டும் உரிமையு முடைத்தே
வல்லெழுத்து மிகுவழி இறுதி யில்லை. ௪௫

**அதற்கு, மேலும் முடிபுகள்**

341. மெல்லெழுத்து மிகினும் மான மில்லை. ௪௬
342. மெல்லெழுத் தியையின் இறுதியொடு உறழும்.

**'தேன்' முன் 'இறால்'**

343. இருஅல் தோற்றம் இயற்கை யாகும். ௪௮

**அதற்கு, மேலும் ஒரு முடிபு**

344. ஒற்றுமிகு தகரமொடு நிற்றலு முரித்தே. ௪௯

**'மின்' 'பின்' 'பன்' 'கன்' என்னுஞ் சொற்கள்**

345. மின்னும் பின்னும் பன்னுங் கன்னும்
அந்நாற் சொல்லும் தொழிற்பெய ரியல. ௫0

---

339. உறழ்வு - திரிந்துந் திரியாதும் முடிதல்.

340. மேல் நிலை ஒத்தல்-மேல் நூற்பாவில் கூறிய உறழ்வு நிலை பொருந்துதல். இறுதி - இறுதி னகரம்.

342. ஈண்டு உறழ்தல், னகரங் கெடுதலும் கெடாமையும்.

343. தேனென்னுஞ் சொல்முன் இருஅல் என்னுஞ் சொல் வருதல் என்க.

344. ஒற்று மிகு தகரம் என்றமையால் அதுவே ஈரொற்றுதல் பெறப்படும்

345. பன் - பருத்தி; கன் - சிறு துலாத்தின் தட்டு என்ப. உகரப்பேறு கருதித் 'தொழிற்பெய ரியல' என்றார்.

### 'கன்' என்னுஞ் சொல்லுக்கு, மேலும் ஒரு முடிபு

346. வேற்றுமை யாயின் ஏனை எகினொடு
தோற்றம் ஒக்கும் கன் என் கிளவி. ருக

### இயற்பெயர் முன் 'தந்தை' என்னுஞ் சொல்

347. இயற்பெயர் முன்னர்த் தந்தை முறைவரின்
முதற்கண் மெய்கெட அகரம் நிலையும்
மெய்யொழித்து அன்கெடும் அவ்வியற் பெயரே.

### அதற்கு, மேலும் ஒரு முடிபு

348. ஆதனும் பூதனும் கூறிய இயல்பொடு
பெயரொற்று அகரம் துவரக் கெடுமே. ருரு

---

346. ஏனை எகின் என்றது, புட்பெயர்; அச் சொன் முடிபோ டொத்து அகரப் பேறும் வல்லெழுத்து மிகுதியும் பெற்று முடியுமென்றற்கு, எகினொடு தோற்றம் ஒக்குமென்றார்.

347. தந்தை முறை - தந்தை என்னும் முறைப்பெயர். முதற்கண் என்றது, தந்தை என்னும் வருமொழிச் சொல்லின் முதற்கண். மெய்யொழித்து அனகெடுதல், நிலைமொழியீற்றி லென்க. இந் நூற்பாவின் முடிபு 'சாத்தந்தை' முதலியன; சாத்தன் தந்தை என்பது பொருள்.

348. கூறிய இயல்பொடு - மேல் நூற்பாவிற் கூறிய முடிபுகளோடு; பெயரொற்றும் அகரமும் எனக. இயற்பெயராகிய நிலைமொழியுள் எஞ்சிநின்ற ஒற்றும், வருமொழியில் நின்ற அகரமும் என்றபடி. இதன் முடிபு 'ஆந்தை' 'பூந்தை' முதலியன. ஆதன்றந்தை, பூதன்றந்தை என்பது பொருள்.

அதற்கு, வேறொரு முடிபு

349. சிறப்பொடு வருவழி இயற்கை யாகும். ௫௪

இயற்பெயர் முன் 'மகன்' முதலிய பிற பெயர்கள்

350. அப்பெயர் மெய்யொழித்து அன்கெடு வழியும்
நிற்றலும் உரித்தே அம் என் சாரியை
மக்கள் முறைதொகூஉம் மருங்கி னான. ௫௫

'தான்' 'பேன்' 'கோன்' என்னும் இயற்பெயர்கள்

351. தானும் பேனும் கோனும் என்னும்
ஆமுறை இயற்பெயர் திரிபிடன் இலவே. ௫௬

'தான்' 'யான்' என்னுஞ் சொற்கள்

352. தான் யான் எனும் பெயர் உருபியல் நிலையும்.

அல்வழியில் அச் சொற்கள்

353. வேற்றுமை யல்வழிக் குறுகலும் திரிதலும்
தோற்றம் இல்லை என்மனார் புலவர். ௫௮

'அழன்' என்னுஞ் சொல்

354. அழன் என் இறுதிகெட வல்லெழுத்து மிகுமே.

---

349. சிறப்பொடு - சிறப்புணர்த்தும் அடைமொழி யோடு.

350. மக்கள் முறை - மக்கள் என்னும் முறைப்பெயர்; தொகூஉம் - வந்து கூடும்.

351. ஆ முறை - அத் தன்மையான.

352. ஈண்டு உருபியல் என்றது, தான் தன் ஆதலும், யான் என் ஆதலும். இச் சொற்களுக்கு முடிபு மேல் நூற்பா வில் வரும்.

353. வேற்றுமை யல்வழி - வேற்றுமைப் புணர்ச்சி யல்லாத விடத்து. தோற்றம் இல்லை - உண்டாதலில்லை; இயல்பாய் முடியு மென்பது.

**'முன்' என்பதற்குமுன் 'இல்'**

355. முன் என் கிளவி முன்னர்த் தோன்றும்
இல் என் கிளவிமிசை றகரம் ஒற்றல்
தொல்லியல் மருங்கின் மரீஇய மரபே. ௬0

**'பொன்' என்னுஞ் சொல்**

356. பொன் என் கிளவி ஈறுகெட முறையின்
முன்னர்த் தோன்றும் லகார மகாரம்
செய்யுள் மருங்கில் தொடரிய லான. ௬௧

## உ. இடையொற்று ஈறுகள்

**வேற்றுமையில் யகர ஈறு**

357. யகர இறுதி வேற்றுமைப் பொருள்வயின்
வல்லெழுத் தியையின் அவ்வெழுத்து மிகுமே.

**'தாய்' என்னுஞ் சொல்**

358. தாய் என் கிளவி இயற்கை யாகும். ௬௩

**அதற்கு மேலும் ஒரு முடிபு**

359. மகன்வினை கிளப்பின் முதனிலை யியற்றே. ௬௪

---

**355.** கிளவியின் முன்ன ரெனக. மிசை என்றமையால் முதலில் எனப் பெறப்பட்டு 'றில்' என்றாதல் கொள்ளப்படும்.

**356.** லகார மகாரம் முறையின் தோன்றுமெனபது. லகார மென்றது ஈண்டு உயிர்மெய். தொடரியலான-சொற்கள் தொடர்ந்துசெல்லும் இயல்பில் எனக இந் நூற்பாவின் முடிபு, 'பொலம்' என்பது.

**359.** மகன் பகைமையைத் தாய் என்பதனோடு இயைத்துக் கூறின் எனக. வினை - பகைமை என்னும் பொருட்டு. 'முதல் நிலை இயற்று' என்றார், யகர இறுதி என்னும் இவ்வீற்று முதல் நூற்பாவின் முடிபு கருதி.

**யகர ஈற்றிற்கு வேறு முடிபு**

360. மெல்லெழுத்து உறழும் மொழியுமா ருளவே.

**அல்வழியில் யகர ஈறு**

361. அல்வழி யெல்லாம் இயல்பென மொழிப. சுசு

**வேற்றுமையில் ரகார ஈறு**

362. ரகார இறுதி யகார இயற்றே. சுஎ

**'ஆர்' 'வெதிர்' 'சார்' 'பீர்' என்னுஞ் சொற்கள்**

363. ஆரும் வெதிரும் சாரும் பீரும்
மெல்லெழுத்து மிகுதல் மெய்பெறத்தோன்றும்.

**'சார்' முன் 'காழ்'**

364. சார் என் கிளவி காழ்வயின் வலிக்கும். சுகூ

**'பீர்' என்னுஞ் சொற்கு, மேலும் ஒரு முடிபு**

365. பீர் என் கிளவி அம்மொடும் சிவணும். எ0

**வேற்றுமையில் லகார ஈறு**

366. லகார இறுதி னகார இயற்றே. எக

**அதற்கு, மேலும் ஒரு முடிபு**

367. மெல்லெழுத்து இயையின் னகார மாகும். எஉ

**அல்வழியில் லகார ஈறு**

368. அல்வழி யெல்லாம் உறழ்என மொழிப. எங

---

363. 'ஆர்' 'வெதிர்' 'சார்' 'பீர்' என்பன மரப்பெயர்கள். மெய்பெற - பொருண்மை பெற.

364. காழ் வயின் - காழ் என்னுஞ் சொல் வந்து புணருமிடத்து.

365. அம் என்றது; சாரியை.

367. ஈறு, னகாரமாகத் திரியுமென்பது.

லகார மெய் ஆய்தமாதல்

369. தகரம் வருவழி ஆய்தம் நிலையலும்
புகரின் றென்மனார் புலமை யோரே. எசு

லகார ஈற்றிற்கு வேறு முடிபு

370. நெடியதன் இறுதி இயல்புமா ருளவே. எரு

'நெல்' முதலிய சொற்கள்

371. நெல்லும் செல்லும் கொல்லும் சொல்லும்
அல்லது கிளப்பினும் வேற்றுமை யியல. எசா

'இல்' என்னும் இன்மைச் சொல்

372. இல் என் கிளவி இன்மை செப்பின்
வல்லெழுத்து மிகுதலும் ஐ இடை வருதலும்
இயற்கை யாதலும் ஆகாரம் வருதலும்
கொளத்தகு மரபின் ஆகிடன் னுடைத்தே. எஎ

'வல்' என்னுஞ் சொல்

373. வல் என் கிளவி தொழிற்பெய ரியற்றே. எஅ

---

369. ஆய்தம் நிலையலும் - லகரம் ஆய்தமாகத் திரிந்து நிலைபெறுதலும். புகர் இன்று - குற்றமில்லை; தழுவத்தக்கதே யென்றபடி.

370. இயல்பும் என்றதனால் திரிபுங் கொள்க.

371. செல் - இடி. அல்லது - அல்வழி முடிபு.

372. இன்மை செப்பின் - இல்லாமையை உணர்த்துமிடத்து; இருமொழிப் புணர்ச்சியில் ஐ இடை வருதலும் எனலால், தனிமொழியின் இயல்பில் அஃதில்லையாதல் உணரப்படும்.

373. வல் - சூதுகாய்.

அதற்கு, வேறொரு முடிபு

374. நாயும் பலகையும் வருஉங் காலை
ஆவயின் உகரம் கெடுதலு முரித்தே
உகரம் கெடுவழி அகரம் நிலையும். ௭௯

'பூல்' 'வேல்' 'ஆல்'

375. பூல் வேல் என்றா ஆல் என் கிளவியொடு
ஆமுப் பெயர்க்கும் அம் இடை வருமே. ௮௦

லகர ஈற்றுத் தொழிற்பெயர்

376. தொழிற்பெய ரெல்லாம் தொழிற்பெய ரியல.

'வெயில்' என்னுஞ் சொல்

377. வெயில் என் கிளவி மழையியல் நிலையும். ௮௨

வேற்றுமையில் வகர ஈறு

378. சுட்டுமுத லாகிய வகர இறுதி
முற்படக் கிளந்த உருபியல் நிலையும். ௮௩

அதற்கு, அல்வழி முடிபு

379. வேற்றுமை யல்வழி ஆய்த மாகும். ௮௪

அதற்கு, வேறு முடிபுகள்

330. மெல்லெழுத்து இயையின் அவ்வெழுத் தாகும்.

---

374. வல் என்னுஞ் சொல்லின் முன் நாய் என்னுஞ் சொல்லும் பலகை எனனுஞ் சொல்லும் வருமொழியாய் வருங் காலத்து என்க.

375. என்றா ஒடு என்பவை எண்ணுப்பொருள. பூலும் வேலும் ஆல் என்னுங் கிளவியும் என்பது பொருள். பூல் என்பது ஒரு பூடு வேல் ஆல், மரங்கள்.

378. முற்படக் கிளந்த - முன்னே தெரியும்படி விதந்த.

380. அவ்வெழுத்து - அம் மெல்லெழுத்து.

381. ஏனவை புணரின் இயல்பென மொழிப. அ௬

**வகர ஈற்று உரிச்சொல்**

382. ஏனை வகரம் தொழிற்பெய ரியற்றே. அ௭

**வேற்றுமையில் ழகார ஈறு**

383. ழகார இறுதி ரகார இயற்றே. அ௮

**'தாழ்' என்னுஞ் சொல்**

384. தாழ் என் கிளவி கோலொடு புணரின்
அக்கு இடை வருதல் உரித்து மாகும். அ௯

**'தமிழ்' என்னுஞ் சொல்**

385. தமிழ் என் கிளவியும் அதனோ ரற்றே. ௯0

**'குமிழ்' என்னும் மரப்பெயர்**

386. குமிழ் என் கிளவி மரப்பெய ராயின்
பீர் என் கிளவியொடு ஓரியற் றாகும். ௯௧

---

381. ஏனவை என்றது, மேல் நாற்பாவிற் கூறிய மெல்லெழுத்தும் அதற்கு முன் உணர வைத்த வல்லெழுத்தும் நீங்கலாக ஏனை இடையெழுத்தும் உயிரெழுத்தும்.

382. ஏனை வகரமென்பது, 'தெவ்' என்னும் மொழி.

384. கோலொடு - கோல் என்னும் மொழியோடு. உரித்தும ஆகும் என்னும் உம்மையால் அக்குப் பெறாது வல்லெழுத்து மிகுதல் வலியுடைத்தாயிற்று. அக்குப் பெற்றால் தாழக்கோல் எனவும், இன்றேல் தாழ்க்கோல் எனவும் வரும். இதற்குத் 'தாழைத் திறக்குங் கோல்' எனப் பொருள் கூறுவர், நச்.

386. ஓரியற்றாகும் என்றது, ஒருவழி மெல்லெழுத்தும் ஒருவழி அம்மும் பெற்று முடிதல்.

'பாழ்' என்னுஞ் சொல்

387. பாழ் என் கிளவி மெல்லெழுத்து உறழ்வே. ௧௨

'ஏழ்' என்னும் எண்ணுப் பெயர்

388. ஏழ் என் கிளவி உருபியல் நிலையும். ௧௩

'ஏழ்' முன் அளவு முதலிய பெயர்கள்

389. அளவும் நிறையும் எண்ணும் வருவழி
நெடுமுதல் குறுகலும் உகரம் வருதலும்
கடிநிலை யின்றே ஆசிரி யர்க்க. ௧௪

390. பத்தென் கிளவி ஒற்றிடை கெடுவழி
நிற்றல் வேண்டும் ஆய்தப் புள்ளி. ௧௫

391. ஆயிரம் வருவழி உகரங் கெடுமே. ௧௬

392. நூறு ஊர்ந்து வரூஉம் ஆயிரக் கிளவிக்குக்
கூறிய நெடுமுதல் குறுக்க மின்றே. ௧௭

---

387. 'உறழ்வே' என்றதனால், வல்லெழுத்துப் பெற்று முடிதலுங் கொள்க.

388. 'உருபியல்' என்றது, அன் சாரியை பெற்று முடிதல்.

389. அளவுப் பெயரும், எண்ணுப் பெயரும், நிறைப் பெயருமென்க. நெடுமுதல் - ஏழ் என்னுஞ் சொல்லில் நெடிலாகிய முதலெழுத்து.

390. ஏழ் என்பதனோடு பத்து என்னும் எண் புணருமிடத்து, அப் பத்து என்னுங் கிளவி என விதந்து கொள்க. ஏழ் எழுவென ஆதல், மேல் நூற்பாவிற் பெறப்பட்டது.

391. உகரம், நிலைமொழியில் முன்வந்த உகரம்.

393. ஐ அம் பல் என வரூஉம் இறுதி
அல்பெயர் எண்ணினும் ஆயியல் நிலையும். கூஅ

394. உயிர்முன் வரினும் ஆயியல் திரியாது. கூகூ

'கீழ்' என்னுஞ் சொல்

395. கீழ் என் கிளவி உறழத் தோன்றும். க00

வேற்றுமையில் ளகர ஈறு

396. ளகார இறுதி ணகார இயற்றே. க0க

அதற்கு, வேறு முடிபு

397. மெல்லெழுத்து இயையின் ணகார மாகும். க0உ

அல்வழியில் ளகர ஈறு

398. அல்வழி யெல்லாம் உறழ் என மொழிப. க0ங

அதற்கு, வேறு முடிபு

399. ஆய்தம் நிலையலும் வரைநிலை யின்றே
தகரம் வரூஉங் காலை யான. க0ச

---

393. ஐ அம் பல் என வரூஉம் இறுதி எண்ணினும் - ஐ அம் பல் என வருகின்ற இறுதிகளையுடைய தாமரை, வெள்ளம், ஆம்பல் என்னும் எண்ணுப் பெயர்கள் வருமொழியாக வரினும்; அல் பெயர் என்றார். பொருட்பெயர் அல்லாத எண்ணுப்பெயரென்றற்கு.

395. வல்லொற்று மிகுந்தும் மிகாமலும் என்றற்கு 'உறழ' வென்றார்.

397. ளகரம் ணகரமாகத் திரியுமென்க.

398. உறழ என்றது ஈண்டு, ளகரம் வலித்தலும் இயல்பாதலும்.

399. ஆய்தம் நிலையலும் - ளகரம் ஆய்தமாகத் திரிந்து நிலைபெறுதலும்.

### அதற்கு, மேலும் ஒரு முடிபு

400. நெடியதன் இறுதி இயல்பா குநவும்
வேற்றுமை யல்வழி வேற்றுமை நிலையலும்
போற்றல் வேண்டும் மொழியுமா ருளவே. க0௬

### ளகர ஈற்றுத் தொழிற்பெயர்

401. தொழிற்பெய ரெல்லாம் தொழிற்பெய ரியல.

### 'இருள்' என்னுஞ் சொல்

402. இருள் என் கிளவி வெயிலியல் நிலையும் க0எ

### 'புள்' 'வள்' என்னுஞ் சொற்கள்

403. புள்ளும் வள்ளும் தொழிற்பெய ரியல. க0அ

### 'மக்கள்' என்னுஞ் சொல்

404. மக்கள் என்னும் பெயர்ச்சொல் இறுதி
தக்கவழி அறிந்து வலித்தலு முரித்தே. க0௯

---

400. வேற்றுமை நிலையல் என்றது, திரிந்து முடிதல். போறறல் வேண்டும், காத்துத் தழீக்கோடல் வேண்டும் என்னும்பொருட்டு.

403. புள் என்னுஞ் சொல்லும் வள் என்னுஞ் சொல்லும் என்க. வள் - வார்.

404. தக்கவழி என்றது, "அம் மக்கள் உடம்பு உயிர் நீங்கிய காலத்து" என்பர் உரையாசிரியர். உமமை, இயல் பாதலே பெரும்பானமை என்றறகு. உயிர் நீங்காத காலத்தும் தனமை கிளந்தவழிச் சிறுபானமை 'மககட் சுட்டு' 'மக்கட் பண்பு' என வலித்தல் பொருந்துமெனறறகு, 'உரித்து' என்றார்.

## ௫. புறனடை

### இவ்வியலின் புறனடை

405. உணரக் கூறிய புணரியல் மருங்கில்
கண்டுசெயற் குரியவை கண்ணினர் கொளலே.

---

405. கண்டு - மொழியியற்கையும் வழக்கியலுங் கண்டு. உரியவையும் என்க. கண்ணினர் கொளல் - கருதி முடித்துக் கொள்க.

# ௬. குற்றியலுகரப் புணரியல்

[குற்றியலுகர ஈறுகட்குரிய புணர்ச்சி யிலக்கணம் உணர்த்துவது.]

## க. குற்றியலுகரத்தின் இயல்பு

**குற்றியலுகரத்தின் பெயர், முறை, தொகை**

406. ஈரெழுத் தொருமொழி உயிர்த்தொடர் [இடைத்தொடர்
ஆய்தத் தொடர்மொழி வன்றொடர் மென்றொடர்
ஆயிரு மூன்றே உகரம் குறுகிடன். க

**அவற்றுள், ஈரொற்றுத் தொடர்கள்**

407. அவற்றுள்,
ஈரொற்றுத் தொடர்மொழி இடைத்தொட ராகா. உ

**இருவழியினும் குற்றுகரம் வருமாறு**

408. அல்லது கிளப்பினும் வேற்றுமைக் கண்ணும்
எல்லா இறுதியும் உகரம் நிலையும். ஙு

---

406. ஈரெழுத் தொருமொழி - நெடிற்றொடர்க் குற்றியலுகரம். இருமூன்று - ஆறு.

407. ஈரொற்றுத் தொடர்மொழி - ஈர்க்கு, மொய்ம்பு போல்வன. இவ் வீரொற்றில் இடையின எழுத்துக்கள் தொடர்ந்து காணப்பட்டாலும் இவை இடைத் தொடராகா என்பது நூற்பாவின் பொருள். இறுதி யெழுத்தை யடுத்துத் தொடர்வதான வல்லின மெல்லின எழுத்துக்களைக்கொண்டு வன்றொடர்மொழி அல்லது மென்றொடர் மொழி என்றுரைக்க வேண்டுமென்பது கருத்து.

408. எல்லா இறுதியும் - எல்லாத் தொடர்மொழியின் இறுதியும். உகரம் - ஈற்றுக் குற்றுகரம்.

**அதற்கு, மேலும் ஒரு முடிபு**

409. வல்லொற்றுத்தொடர்மொழி வல்லெழுத்து [வருவழித்
தொல்லை இயற்கை நிலையலும் உரித்தே. ௪

## ௨. குற்றியலிகரம்

**குற்றியலிகரம் வருமாறு**

410. யகரம் வருவழி இகரம் குறுகும்
உகரக் கிளவி துவரத் தோன்றாது. ௫

## ௩. குற்றுகரப் பொதுப் புணர்ச்சி

**நெடிற்றொடர், உயிர்த்தொடர்**

411. ஈரெழுத்துமொழியும் உயிர்த்தொடர் மொழியும்
வேற்றுமை யாயின் ஒற்றிடை இனமிகத்
தோற்றம் வேண்டும் வல்லெழுத்து மிகுதி. ௬

**அதற்கு, வேறு முடிபு**

412. ஒற்றிடை இனமிகா மொழியுமா ருளவே
அத்திறத் தில்லை வல்லெழுத்து மிகலே. ௭

---

*409.* தொல்லை இயற்கை என்றது, தனது பழைய முழு மாத்திரை யியற்கை.

*410.* உகரம், குற்றுகரம்.

*411.* ஒற்று இடை இன மிக - இடையே இறுதி ஒற்றின் இனமான பிறிதோர் ஒற்று மிக. இங்ஙனம் இனம் மிகுதலை இரட்டுதலென்ப. இது நிலைமொழியின செய்கை.

*412.* இந் நூற்பா, மேற்கூறிய நெடிற்றொடர் உயிர்த் தொடர்க் குற்றுகர மொழிகட்கு. அத்திறத்து - அப்பகுதியில்; இனவொற்று மிகாத நிலையுமென்க.

### இடைத்தொடர், ஆய்தத்தொடர்

413. இடையொற்றுத் தொடரும் ஆய்தத் தொடரும்
நடையா இயல என்மனார் புலவர். அ

### வன்றொடர், மென்றொடர்

414. வன்றொடர் மொழியும் மென்றொடர் மொழியும்
வந்த வல்லெழுத் தொற்றிடை மிகுமே
மெல்லொற்றுத் தொடர்மொழி மெல்லொற் [றெல்லாம்
வல்லொற் றிறுதி கிளையொற் றாகும். கூ

### மரப்பெயர்

415. மரப்பெயர்க் கிளவிக் கம்மே சாரியை. க0

### அதற்கு, மேலும் ஒரு முடிபு

416. மெல்லொற்று வலியா மரப்பெயரும் உளவே.

### நெடிற்றொடர், வன்றொடர்

417. ஈரெழுத்து மொழியும் வல்லொற்றுத் தொடரும்
அம் இடை வரற்கும் உரியவை உளவே
அம்மரம் பொழுகும் மொழிவயி னான. கஉ

---

**413.** நடை - நடத்தல். ஆ இயல - அவ்வாறு இயல்பா தலையுடைய; சுட்டு, மேல் நூற்பாவின் இயல்பு முடிபினைச் சுட்டிற்று.

**414.** அவற்றுள் மெல்லொற்றுத் தொடர்மொழி யென்க. வல்லொற்றிறுதி கிளையொற்றாகும் என்பதற்கு, இறுதி வல்லொற்றும் அதன் கிளை வல்லொற்றுமாய்த் திரிந்து முடியும் என்றுரைக்க. குரங்குக்கால் என்பது குரக்குக்கால் என வருதல் இறுதி வல்லொற்றாயத் திரிதலெனவும், எண்குக்கால் எட்குக் கால் என வருதல் கிளை வல்லொற்றாயத் திரிதலெனவுங் கொள்ளப்படும்.

**417.** அம் மரபொழுகும் மொழிவயின் - அத்தன்மை நிகழும் மொழிகளிடத்து.

**சில மென்றொடர் மொழிகள்**

418. ஒற்றுநிலை திரியாது அக்கொடு வரூஉம்
அக்கிளை மொழியும் உளவென மொழிப. ௧௩

**எண்ணுப் பெயர்**

419. எண்ணுப்பெயர்க் கிளவி உருபியல் நிலையும். ௧௪

## ௪. குற்றுகரச் சிறப்புப் புணர்ச்சி

**'வண்டு' 'பெண்டு' என்னுஞ் சொற்கள்**

420. வண்டும் பெண்டும் இன்னொடு சிவணும். ௧௫

**'பெண்டு' என்னுஞ் சொல்லுக்கு, மேலும் ஒரு முடிபு**

421. பெண்டென் கிளவிக்கு அன்னும் வரையார்,

**வினாப்பெயர், சுட்டுப்பெயர்**

422. யாதென் இறுதியும் சுட்டுமுத லாகிய
ஆய்த இறுதியும் உருபியல் நிலையும். ௧௭

---

*418.* ஒற்று - இடை நின்ற மெல்லொற்று. அக்கு, சாரியை. அக் கிளை மொழியும் - அவ் வகைப்பட்ட மொழிகளும். குன்றக் கூகை என்பது எடுத்துக்காட்டு. 'குன்று அக்கு கூகை' என்பது குன்றக் கூகையாயிற்று.

*419.* உருபியல் என்றது, சாரியைப் பேறு.

*420.* 'வண்டு' 'பெண்டு' என்னுங் குற்றுகர மொழிகள் என்க. பிறவண்டும் இங்ஙனங் கொள்ளப்படும்.

*422.* ஆய்த இறுதி - ஆய்தத் தொடர்மொழி யிறுதி: இதற்கு உருபியல் எனனுஞ் சாரியைப்பேறு நிலையும்போது ஆய்தங் கெட்டுமுடியும். 'அஃது அன்' அதன் என்றுதல்.

**அல்வழியிற் சுட்டுப் பெயர்**

423. முன்உயிர் வருமிடத் தாய்தப் புள்ளி
மன்னல் வேண்டும் அல்வழி யான. ௧௭

**அல்வழியில் அதற்கு, மேலும் ஒரு முடிபு**

424. ஏனைமுன் வரினே தான்நிலை இன்றே. ௧௮

**பொதுவாக அல்வழியிற் குற்றுகர ஈறுகள்**

425. அல்லது கிளப்பின் எல்லா மொழியும்
சொல்லிய பண்பின் இயற்கை யாகும். ௨0

**வன்றொடர்**

426. வல்லொற்றுத் தொடர்மொழி வல்லெழுத்து
[மிகுமே. ௨௧

**'ஆங்கு' 'யாங்கு' முதலிய மென்றொடர் மொழிகள்**

427. சுட்டுச்சினை நீடிய மென்றொடர் மொழியும்
யாவினா முதலிய மென்றொடர் மொழியும்
ஆயியல் திரியா வல்லெழுத் தியற்கை. ௨௨

---

423. முன் - சுட்டுமுதலாகிய ஆய்தத் தொடர்க் குற்று கரத்தின்முன்.

424. ஏனை - உயிரல்லாத பிற எழுத்துக்கள். முன்வரின் - அதன் முன வந்தால்.

425. எல்லா மொழியும் - எல்லாக் குற்றுகர மொழி களும். சொல்லிய பண்பின - அல்வழி முடிபுக்குக் கூறிய இயல்பாதலென்னுந் தன்மைப்படி.

426. அவற்றுள் வல்லொற்றுத் தொடர்மொழியானது அல்வழிக்கண்ணும் வல்லெழுத்து மிகுமெனக.

427. வல்லெழுத்தியற்கை - வல்லெழுத்துப் பெறுந் தன்மை; ஆ இயல் திரியா - அத்தன்மையாகிய இயல்பில் திரியா ஏன்றபடி. மிகும் என்பது கருத்து.

**'யாங்கு' என்பதற்கு, மேலும் ஒரு முடிபு**

428. யா வினா மொழியே இயல்பு மாகும். உரு

**அவற்றிற்கு நிலைமொழிச் செய்கை**

429. அந்நான் மொழியும் தந்நிலை திரியா. உ௬

**'உண்டு' என்னுஞ் சொல்**

430. உண்டென் கிளவி உண்மை செப்பின்
முந்தை இறுதி மெய்யொடுங் கெடுதலும்
மேல்நிலை ஒற்றே ளகார மாதலும்
ஆமுறை இரண்டும் உரிமையு முடைத்தே
வல்லெழுத்து வரூஉங் காலை யான. உ௭

**திசைப்பெயர்**

431. இருதிசை புணரின் ஏ இடை வருமே. உ௮

---

**428.** இயல்பும் என்ற உம்மையால், மிக்கு முடிதலை வலிவுடைத்தென்க.

**429.** சுட்டு ஈண்டு அதிகாரமாதலின், அந் நான்மொழி என்றார். அவை அங்கு, இங்கு, உங்கு, எங்கு எனபன. தம் நிலை-தம் மெல்லொற்றாகிய நிலை; திரியா - வல்லொற்றாய்த் திரியா.

**430.** உண்மை செப்பின்- வினைக்குறிப்பை உணர்த்தாமல் என்றும் உளதாம் இயல்பாகிய பண்பை உணர்த்தின். முந்தை யிறுதி - புணர்ச்சிக்கு முன் நிற்குங் குற்றுகரமாகிய இறுதி. மேல் நிலை ஒற்றொன்றது, ணகரம். ஆமுறை இரண்டு - அத் தன்மையவான இரண்டு செய்கைகளும்.

**431.** திசை - திசைப்பெயர்கள். இந் நூற்பாவின் முடிபு 'வடக்கே தெற்கு' 'கிழக்கே மேற்கு' எனபன. இவை உம்மைத் தொகை என்பர் நச். வடக்கும் தெற்கும் என்பதுபொருள்.

### திசைப்பெயர் முன் திசைப்பெயர்

432. திரிபுவேறு கிளப்பின் ஒற்றும் உகரமும்
கெடுதல் வேண்டும் என்மனார் புலவர்
ஒற்றுமெய் திரிந்து னகார மாகும்
தெற்கொடு புணருங் காலை யான. உ௭

## ௫. குற்றுகர எண்ணுப் புணர்ச்சி

### பத்தொடு எண்ணுப் பெயர்

433. ஒன்று முதலாக எட்டன் இறுதி
எல்லா எண்ணும் பத்தன் முன்வரிற்
குற்றிய லுகரம் மெய்யொடுங் கெடுமே
முற்ற இன் வரூஉம் இரண்டலங் கடையே. உ௮

### பத்தின் முன் இரண்டு

434. பத்தன் ஒற்றுக்கெட னகாரம் இரட்டல்
ஒத்த தென்ப இரண்டுவரு காலை. உ௯

---

432. திரிபு வேறு கிளப்பின் - திசைப்பெயர்ப் புணர்ச்சியுள் வேறு வகையான திரிபுகளை எடுத்துக்காட்டின். ஈண்டு ஒற்றென்றது, இடைநின்ற ஒற்று; அது கெடுதல் கூறவே, ஈற்றொற்றுக் கெடுதல் தானே பெறப்படுமெனக். ஒற்று மெய் திரிந்து - ஒற்று, தன் வடிவு திரிந்து. இந்நூற்பா, திசையொடு திசை புணர்தற்குக் கூறப்படும்; திசையொடு பிறபொருள் புணர்தற்கும் ஆகும்.

433. எட்டன் இறுதி - எட்டு என்னும் எண் ஈறுக. மெய்யொடும் - தான் ஊர்ந்துநின்ற மெய்யோடும். பதினொன்று பதின்மூன்று முதலியன எடுத்துக் காட்டு.

434. மேல் நூற்பாவினால் இறுதியுகரமும் அஃதூர்ந்த மெய்யுங் கெடுதல் பெறப்பட்டமையால், ஈண்டு ஒற்றுக் கெட என்றது, இடைநின்ற ஒற்றாகும். ஒத்தது - பொருந்தியது. 'பன்னிரண்டு' என்பது இந்நூற்பாவின் முடிபு. அதன்கண், னகரம் இரட்டியிருத்தல் அறிந்துகொள்க.

### பத்தின் முன் ஆயிரம்

435. ஆயிரம் வரினும் ஆயியல் திரியாது. ௩௦

### பத்தின் முன் நிறை, அளவுப் பெயர்கள்

436. நிறையும் அளவும் வரூஉங் காலையும்
குறையா தாகும் இன் என் சாரியை. ௩௧

### எண்ணுப் பெயரொடு பத்து

437. ஒன்றுமுதல் ஒன்பான் இறுதி முன்னர்
நின்ற பத்தன் ஒற்றுக்கெட ஆய்தம்
வந்து இடைநிலையும் இயற்கைத் தென்ப
கூறிய இயற்கை குற்றிய லுகரம்
ஆறன் இறுதி அல்வழி யான. ௩௨

### அதன்கண், 'ஒன்று' 'இரண்டு' என்னுஞ் சொற்கள்

438. முதலீ ரெண்ணின் ஒற்று ரகர மாகும்
உகரம் வருதல் ஆவயி னான. ௩௩

---

435. ஆயியல் என்றது, ஈறுகெட்டு இன் பெறுதல்.

437. நின்ற - வருமொழியாக வந்து நின்ற. ஒற்று - இடை நின்ற ஒற்று. இடை நிலையும் இயற்கைத்து - இடையே நிலை பெறுந் தன்மையுடையது. இது வருமொழிச் செய்கை; நிலைமொழிச் செய்கை ஏனை இரண்டடிகளாற் கூறப்பட்டன. குற்றியலுகரம் என்றார், ஒன்று முதல் ஒன்பான எண்களுள் குற்றுகர ஈற்றனவற்றை. அவற்றுள், ஆறன் இறுதி அல்வழி யான் என்க. அல்வழியான் - அல்லாவிடத்து. கூறிய இயற்கை யென்றது, உகரம் மெய்யொடுங் கெட்டுமுடிதல்.

'இரண்டு' என்பதற்கு, மேலும் ஒரு முடிபு

439. 'இடைநிலை ரகரம் இரண்டெ னெண்ணிற்கு
நடைமருங் கின்றே பொருள்வயி னான. ௩௪

'மூன்று' 'ஆறு'

440. மூன்றும் ஆறும் நெடுமுதல் குறுகும். ௩௫

'மூன்று' என்பதற்கு, மேலும் ஒரு முடிபு

441. மூன்றன் ஒற்றே பகாரம் ஆகும். ௩௬

'நான்கு' என்னுஞ் சொல்

442. நான்கன் ஒற்றே றகாரம் ஆகும். ௩௭

'ஐந்து' என்னுஞ் சொல்

443. ஐந்தன் ஒற்றே மகாரம் ஆகும். ௩௮

'எட்டு' என்னுஞ் சொல்

444. எட்டன் ஒற்றே ணகாரம் ஆகும். ௩௯

'ஒன்பது' என்னுஞ் சொல்

445. ஒன்பான் ஒகரமிசைத் தகரம் ஒற்றும்
முந்தை ஒற்றே ணகாரம் இரட்டும்
பஃதென் கிளவி ஆய்தபக ரங்கெட
நிற்றல் வேண்டும் ஊகாரக் கிளவி
ஒற்றிய தகரம் றகர மாகும். ௪0

439. ஈண்டு ரகரம், உயிர் மெய்யெழுத்து. நடை மருங் கின்று - நடக்குமிடமில்லை. பொருள் வயின- பொருளாகு மிடத்தில்.

445. இந் நூற்பா ஒன்பான் முன் பஃது வந்து முடிதற்கு. ஒன்பான் ஒகரமிசை-ஒன்பது என்னும் எண்ணினது ஒகரத்தின் மேல். ஒற்றும் - ஒற்றாய் வரும். முந்தை ஒற்றென்றது னகரம். அது ணகாரமாகி இரட்டும் என்றபடி. பஃதென் கிளவி

அவ்வெண்ணுப் பெயர்கள் முன் அளவு நிறைப் பெயர்கள்

446. அளந்தறி கிளவியும் நிறையின் கிளவியும்
கிளந்த இயல தோன்றுங் காலை. ௪௧

அதன்கண் 'மூன்று' என்னுஞ் சொல்

447. மூன்றன் ஒற்றே வந்த தொக்கும். ௪௨

'ஐந்து' என்னுஞ் சொல்

448. ஐந்தன் ஒற்றே மெல்லெழுத் தாகும். ௪௩

அவ்விரண்டின் மேன்முடிபுகட்கு வரையறை

449. க ச த ப முதன்மொழி வரூஉங் காலை. ௪௪

'எட்டு' என்னுஞ் சொல்

450. ந ம வ என்னும் மூன்றொடு சிவணி
அகரம் வரினும் எட்டன்முன் இயல்பே. ௪௫

---

என்றது, வருமொழி. ஆய்த பகரம் - ஆய்தமும் பகரமும். கெட - ஆண்டு நிறறல் வேண்டுமென்க. ஒறறிய - ஒற்றாய் நின்ற. ஒன்பது என்னும் நிலைமொழியிற் பது எனனும ஈறு இவ்வாற்றால் தானே கெடுதல் உணரப்படும். 'தொண்ணூறு' என்பது இந் நூற்பாவின் முடிபு.

447. வந்தது - வந்த வருமொழியின் முதலொற்றோடு; ஒக்கும் - ஒத்த ஒறறாய்த் திரிந்து முடியும்.

449. மேல் நூற்பா இரண்டுக்கும் இது வருமொழி கூறிற்று.

450. சிவணி - கூடி; ந, ம, வ, அ முதல்மொழி வரினும் என்றபடி. ஈறு மெய்யுடன் கேடு முன்னரே பெறப்பட்டது.

### 'ஐந்து' 'மூன்று' என்னும் இரண்டு சொற்களுக்கும் ஒத்த முடிபு

451. ஐந்தும் மூன்றும் நமவரு காலை
வந்த தொக்கும் ஒற்றியல் நிலையே. சசு

### 'மூன்று' 'நான்கு' 'ஐந்து' முன் வகரமுதன் மொழி

452. மூன்றன் ஒற்றே வகரம் வருவழித்
தோன்றிய வகரத்து உருவா கும்மே. சஎ
453. நான்கன் ஒற்றே லகாரம ஆகும். சஅ
454. ஐந்தன் ஒற்றே முந்தையது கெடுமே. சகூ

### 'ஒரு' 'இரு' முன் உயிர்முதன் மொழி

455. முதலீ ரெண்ணின்முன் உயிர்வரு காலைத்
தவலென மொழிப உகரக் கிளவி
முதனிலை நீடல் ஆவயி னான. ருo

### 'மூன்று' 'நான்கு' 'ஐந்து' முன் உயிர்முதன் மொழி

456. மூன்றும் நான்கும் ஐந்தென் கிளவியும்
தோன்றிய வகரத் தியற்கை யாகும். ருக

### அவற்றுள் 'மூன்று' என்பதற்கு, மேலும் ஒரு முடிபு

457. மூன்றன் முதனிலை நீடலும் உரித்தே
உழக்கென் கிளவி வழக்கத் தான. ருஉ

---

451. ஒற்றியல் நிலை - ஒற்று நடைபெறும் நிலைமை.
452. தோன்றிய - வந்த.
454. முந்தையது - முன் நின்ற நகர ஒற்று.
455. தவல் - கெடுக.
456. வகரத்தியற்கை - வகர வருமொழிக்குக் கூறிய தன்மை.
457. கிளவி வழக்கத்தான் - கிளவியது வழக்கத்தில்.

'ஆறு' என்பதற்கும் அம் முடிபு

458. ஆறு என் கிளவி முதல்நீ டும்மே. ருங

'ஒன்பது' என்னுஞ் சொல்

459. ஒன்பான் இறுதி உருபுநிலை திரியாது
இன் பெறல் வேண்டும் சாரியை மொழியே.

ஒன்றுமுதல் ஒன்பது எண்முன் நூறு

460. நூறு முன் வரினும் கூறிய இயல்பே. ருரு

அதன்கண், 'மூன்று' என்னுஞ் சொல்

461. மூன்றன் ஒற்றே நகாரம் ஆகும். ருசு

அதன்கண், 'நான்கு' 'ஐந்து'

462. நான்கும் ஐந்தும் ஒற்றுமெய் திரியா. ருஎ

அதன்கண், 'ஒன்பது' என்னுஞ் சொல்

463. ஒன்பான் முதனிலை முந்துகிளந் தற்றே
முந்தை ஒற்றே ளகாரம் இரட்டும்
நூறு என் கிளவி நகார மெய்கெட
ஊ ஆ ஆகும் இயற்கைத் தென்ப
ஆயிடை வருதல் இகார ரகாரம்
ஈறுமெய் கெடுத்து மகாரம் ஒற்றும். ருஅ

---

458. முதல் - முன் குறுகி நின்ற முதலெழுத்து.

459. உருபுநிலை - தன் வடிவுநிலை; அஃதாவது, குற்றுகர மென்னும் வடிவு; ஈறுகெடாமல் என்பது கருத்து. சாரியை மொழியாகிய 'இன்' பெறல் வேண்டும் என்க.

460. ஒன்று முதல் ஒன்பான் எண்முன் நூறு என்னும் எண் வரினும் என்றபடி.

463. இந் நூற்பா ஒன்பது என்பதன்முன் நூறு வந்து புணர்தற்கு விதி. முந்து கிளந்தற்று என்றார், முன் பத்து வந்து

'ஒன்று, இரண்டு' முன் 'ஆயிரம்'

464. ஆயிரக் கிளவி வரூஉங் காலை
முதலீ ரெண்ணின் உகரங் கெடுமே. ௪௯

அவற்றிற்கு, மேலும் ஒரு முடிபு

465. முதனிலை நீடினும் மான மில்லை. ௫௦

'மூன்று' முன் 'ஆயிரம்'

466. மூன்றன் ஒற்றே வகாரம் ஆகும். ௫௧

'நான்கு' முன் 'ஆயிரம்'

467. நான்கன் ஒற்றே லகாரம் ஆகும். ௫௨

'ஐந்து' முன் 'ஆயிரம்'

468. ஐந்தன் ஒற்றே யகாரம் ஆகும். ௫௩

'ஆறு' முன் 'ஆயிரம்'

469. ஆறன் மருங்கிற் குற்றிய லுகரம்
ஈறுமெய் ஒழியக் கெடுதல் வேண்டும். ௫௪

---

புணர்தற்குக் கூறியபடி தகரம் ஒற்றும் என்றற்கு. ஆஇடை, அம்மொழியிடை. இகார ரகாரம் - இகரமும் ரகரமும். ஈறு மெய் - ஈறும் அஃதேறிய மெய்யும். 'தொள்ளாயிரம்' என்பது இதன் முடிபு.

464. முதலீரெண் என்றது முன் முடிந்து நின்ற 'ஒரு' 'இரு' எனனும் முதலிரண்டு எண்கள். 'ஓராயிரம்' 'இராயிரம்' என்பன இதற்குக் காட்டு.

469. ஒழிய - நீறக. கெடுதல் - உகரம் தான் கெடுதல். இதற்குக் காட்டு, 'அறுயிரம்' என்பது. 'அறு' எனனும் முற்று கரத்துக்கு இது விதியாகலின், உகரக்கேடு விதித்தற்கு இந் நூற்பா எழுந்தது. ஆறு என்னுங் குற்றுகரமாயின் வருமொழி உயிர் ஏறி முடிதல் இயல்பாகலின், ஈண்டதற்கு நூற்பா வேண்டாவென்பது கருத்து.

**'ஒன்பது' முன் 'ஆயிரம்'**

470. ஒன்பான் இறுதி உருபுநிலை திரியாது
இன் பெறல் வேண்டும் சாரியை மரபே. ௬௫

**ஒன்று முதல் ஒன்பது எண்முன் 'நூறாயிரம்'**

471. நூறா யிரமுன் வரூஉங் காலை
நூறன் இயற்கை முதனிலைக் கிளவி. ௬௬

**நூறுமுன் ஒன்று முதல் ஒன்பது எண்கள்**

472. நூறு என் கிளவி ஒன்றுமுதல் ஒன்பாற்கு
ஈறுசினை ஒழிய இனவொற்று மிகுமே. ௬௭

**நூறுமுன் 'ஒருபஃது' முதலியன**

473. அவை ஊர் பத்தினும் அத்தொழிற் றாகும். ௬௮

---

470. உருபு - வடிவு. சாரியை என்னுந் தன்மையையுடைய இன் என்க.

471. முதனிலைக் கிளவி - முதலில் நிற்றலையுடைய ஒன்று என்னுஞ் சொல். நூறன் இயற்கை - நூறு வந்து முடிந்த முடிபுடையது. எனவே, இரண்டு முதலிய ஏனைய எண்கள் திரியாதும் திரிந்தும் வரும் எனக; ஆசிரியர் அவற்றைக் கிளவாமையின், திரியாது முடிதலே பெரும்பான்மையும் வலிவுமாம்.

472. வருமொழியாகிய ஒன்றுமுத லொன்பாற் கென்க. ஈறு சினை - ஈறாகிய உறுப்பு. எனறது, உகரமும் அஃதூர்ந்த மெய்யும். ஒழிய - கெடாது நிற்க. இனவொற்று என்றார், நின்ற றகரமாகிய தன ஒற்று என்றற்கு. 'நூறொன்று' 'நூற்றிரண்டு' முதலியவாக வரும்.

473. இந் நூற்பாவுக்குக் காட்டு, 'நூற்றொருபஃது' 'நூற்றிருபஃது' முதலியன.

### நூறுமுன், அளவுப்பெயர் நிறைப்பெயர்

474. அளவும் நிறையும் ஆயியல் திரியாது
குற்றிய லுகரமும் வல்லெழுத் தியற்கையும்
முற்கிளந் தன்ன என்மனார் புலவர். சுக

### 'ஒருபஃது' முதலியவற்றின்முன் ஒன்று முதல் ஒன்பது எண்கள்

475. ஒன்றுமுத லாகிய பத்தூர் கிளவி
ஒன்றுமுதல் ஒன்பாற்கு ஒற்றுஇடை மிகுமே
நின்ற ஆய்தங் கெடுதல் வேண்டும். எ0

### அவற்றின்முன் 'ஆயிரம்'

476. ஆயிரம் வரினே இன் என் சாரியை;
ஆவயின் ஒற்றுஇடை மிகுதல் இல்லை. எக

---

474. அளவுப் பெயரும் நிறைப்பெயரும் நூறுமுன் புணருங்கால் என்க. ஆ இயல் - இனவொற்று மிகுதல். குற்றிய லுகரமும் - குற்றியலுகரங் கெடாமையும். வல்லெழுத்தியற்கையும் - வருமொழி வல்லெழுத்து மிகுதலாகிய தன்மையும். முற்கிளந்தன்ன வென்றது, 'ஈறு சினை யொழிய (சஎஉ) என்பது நினைந்தும், வன்றொடர் மொழிப்புணர்ச்சி யிடத்துக் கூறிய விதியை நினைந்தும் (சஉக) எனக.

475. ஒன்று முதலாகிய பத்து ஊர்ந்த கிளவி - ஒருபஃது, இருபஃது முதலாயின. அவற்றின முன் வருமொழியாக வரும் ஒன்று முதல் ஒன்பாற்கு எனக. நின்ற - பஃது எனபதன் இடையில் நினற; ஆய்தங் கெடுதல் வேண்டும். ஆண்டு இனவொற்றாய்த் தகர ஒறறு இடைமிகும் எனறு கொள்க.

476. இன் என் சாரியை - இன்னென் சாரியை பெறுதல் வேண்டும். ஒற்று மிகுதலில்லை யெனவே, ஆய்தக் கேடு மட்டுங் கொள்ளப்படும்.

### அவற்றின் முன், அளவுப்பெயர் நிறைப்பெயர்

477. அளவும் நிறையும் ஆயியல் திரியா. ௭௨

### ஒன்றுமுதல் ஒன்பது எண்முன் பொருட்பெயர்

478. முதனிலை எண்ணின்முன் வல்லெழுத்து வரினும்
ஞ ந மத் தோன்றினும் ய வ வந்து இயையினும்
முதனிலை யியற்கை என்மனார் புலவர். ௭௩

### அவற்றுடன் உயிர்முதல் மொழியும் யகரமும்

479. அதன்நிலை உயிர்க்கும் யா வரு காலை
முதனிலை ஒகரம் ஓவா கும்மே
ரகரத்து உகரம் துவரக் கெடுமே. ௭௪

---

477. ஆயியல் - மேல் நூற்பாவின் முடிபாகிய ஆய்தக் கேடுஞ் சாரியைப் பேறும்.

478. முதனிலை எண் என்றது, ஒன்று; வல்லெழுத்து வரினும், ஞ ந மத் தோன்றினும், ய வ வந்தியையினும் என்றார், வல்லின மெல்லின இடையின முறைமை தோன்ற. முதல் நிலை இயற்கை - முன் எய்திய முடிபு நிலைத் தன்மை பெறும். என்றது, ஒன்று கல் ஒரு கல் எனத் திரிந்து முடிதல். ஒன்றென்பதற்குக் கூறவே, ஏனை எண்கள் இவ் விகாரம் எய்தியும் எய்தாதும் முடியும் என்க.

479. அதன் நிலை-மேல் நூற்பாவிற் கூறிய அப்புணர்ச்சி நிலையில். வருமொழியாய் வரும் உயிர்க்கும் யா வரு காலையும் என்று உம்மை கூட்டுக. முதனிலை ஓகரம் - ஒன்று என்னும் எண்ணின் ஒகரம். இதனால், ஏனை இரண்டு முதலிய எண்கள் இவ்வகையானும் முற் கூறியவாறே இருவகையானும் முடியு மெனக் கொள்ளப்படும்.

இரண்டு முதல் ஒன்பது எண்முன், 'மா' என்னுஞ் சொல்

480. இரண்டுமுதல் ஒன்பான் இறுதி முன்னர்
வழங்கியல் மாவென் கிளவி தோன்றின்
மகர அளவொடு நிகரலு முரித்தே. ௭௫

## ௬. அதிகாரப் புறனடை

புள்ளிமயங்கியலுள் ஒழிந்து நின்ற மெய்யீறுகளின் செய்யுள் முடிபு

481. லன என வரூஉம் புள்ளி யிறுதிமுன்
உம்முங் கெழுவும் உளப்படப் பிறவும்
அன்ன மரபின் மொழியிடைத் தோன்றிச்
செய்யுட் டொடர்வயின் மெய்பெற நிலையும்
வேற்றுமை குறித்த பொருள்வயி னான. ௭௬

எழுத்ததிகாரத்திற் புணர்க்கப்படாத சொற்கள்

482. உயிரும் புள்ளியும் இறுதி யாகிக்
குறிப்பினும் பண்பினும் இசையினுந் தோன்றி
நெறிப்பட வாராக் குறைச்சொற் கிளவியும்

---

480. வழங்கியல் மா என் கிளவி - வழக்கின்கண் நடைபெறுகின்ற மா என்னும் அளவுப் பெயர்ச்சொல். மகர அளவொடு - மகரத்தை முதலாகவுடைய மண்டை முதலிய அளவுப் பெயரின் புணர்ச்சி முடிபோடு (௪௪௬). நிகரலும் - ஒத்துத் திரிந்து முடிதலும். உம்மையான் திரியாது முடிதலுங் கொள்க.

481. உம், கெழு என்பன சாரியை. பிறவும் என்றார், செய்யுட்களிற் பிற சாரியைகளும் நின்று விகார மெய்தி முடிவனவற்றிற்கெல்லாம் இதுவே விதியாகுமென்றற்கு.

உயர்திணை அஃறிணை ஆயிரு மருங்கின்
ஐம்பால் அறியும் பண்புதொகு மொழியும்
செய்யும் செய்த என்னுங் கிளவியின்
மெய்ஒருங் கியலுந் தொழில்தொகு மொழியும்
தம்இயல் கிளப்பின் தம்முன் தாம்வரூஉம்
எண்ணின் தொகுதி உளப்படப் பிறவும்
அன்னவை யெல்லாம் மருவின் பாத்திய
புணரியல் நிலையிடை உணரத் தோன்றா. ௭௭

---

482. தோன்றி - குறிப்பு, பண்பு, இசை என்னும் பொருள்களிற் பிறந்து. குறைச் சொற் கிளவி என்றது, ஈண்டு உரிச் சொல் எனப; இப் பொருள்கள்மேல் வருவன, ஒரு நெறிப்பட வாராமையின் குறைச்சொற றன்மையுடைய வென் பது கருத்து, 'பண்பு தொகு மொழி' என்பதை நச். பண்பு கொள் பெயர் தொகுந்தொகைச் சொல் என விதந்துரைப்பர். மெய் என்றது, இங்கே 'செய்யும்' 'செய்த' என்பவற்றின் ஈற்றுருப்பு, அது தொகுமாயின், செய் என வினைத்தொகை மொழியாய் நிற்குமாகலின், 'தொழில் தொகு மொழி'யும் என்றார். 'மெய் ஓருங்கு இயலும்' என்றது, 'செய் பொருள்' என்னும் ஓர் வினைத்தொகை, அகர ஈறும் உம் ஈறும் செய் என்னும் ஒன்றன்கண்ணே விரிந்து இயலுதற்கேறப நிற்றலின் என்க. தம் இயல் கிளப்பின் - எண்ணுப் பெயர்களின் இயல்பைக் கூறுமிடத்து. தம்முன் தாம் வரூஉம் எண் என்றது, 'பப்பத்து, 'ஓரோவொன்று' முதலியன. மருவின் பாத்திய - மரூஉ வழக்கின் பகுதியன. புணரியல் நிலையிடை உணரத் தோன்றா - புணரியல் இலக்கண முறைமையில் அவை தெளியத் தெரிவன வல்ல; இலக்கண வகையிற் கொள்ளலாகாமையின் மரூஉ வகையிற் கொள்கவென்பது கருத்து.

### எழுத்ததிகாரத்திற்குப் புறனடை

483. கிளந்த அல்ல செய்யுளுள் திரிநவும்
வழங்கியல் மருங்கின் மருவொடு திரிநவும்
விளம்பிய இயற்கையின் வேறுபடத் தோன்றின்
வழங்கியல் மருங்கின் உணர்ந்தனர் ஒழுக்கல்
நன்மதி நாட்டத்து என்மனார் புலவர். ௭௮

## எழுத்ததிகாரம் முற்றும்.

---

483. வழங்கியல் மருங்கின்-இருவகை வழக்கும் வழங்கிச் செல்லும் நெறியில். நன்மதி நாட்டத்து - நல்ல அறிவினது ஆராய்ச்சியின் வைத்து. உணர்ந்தனர் ஒழுக்கல் - உணர்ந்து நடத்துக என்பது.

# உ. சொல்லதிகாரம்

## க. கிளவியாக்கம்

[எழுத்துக்கள் பொருள்தரும் முறையில் சொற்க ளாகும் வகை உணர்த்துவது.]

### க. திணை

**உயர்திணையும் அஃறிணையும்**

484. உயர்திணை யென்மனார் மக்கட் சுட்டே ;
அஃறிணை யென்மனார் அவரல பிறவே ;
ஆயிரு திணையின் இசைக்குமன் சொல்லே. க

### உ. பால்

**உயர்திணையில் மூன்று பால்**

485. ஆடூஉ அறிசொல் மகடூஉ அறிசொல்
பல்லோ ரறியுஞ் சொல்லொடு சிவணி
அம்முப் பாற்சொல் உயர்திணை யவ்வே. உ

**அஃறிணையில் இரண்டு பால்**

486. ஒன்றறி சொல்லே பலவறி சொல்லென்று
ஆயிரு பாற்சொல் அஃறிணை யவ்வே. ங

---

**484.** மக்கட்சுட்டு - மக்கள் எனச் சுட்டப்படுவோர். 'அவரல பிற' என்றது, பிற உயிருள்ளன. இனி, உயிரில்லனவும் அடக்கிக் கொள்ளப்படும். சொல் இசைக்கும் - சொல் பொரு ளுணர்த்தும். மன், அசை.

**485.** ஆடூஉ - ஆண்; மகடூஉ - பெண். ஆடூஉ அறி சொல் - ஆண்மகனை அறியுஞ் சொல். சிவணி - கூடி. உயர் திணையவ்வே - உயர்திணையன.

### 'பேடி' முதலிய சொற்கள் இப்பகுதியில் அடங்கும் முறை

487. பெண்மை சுட்டிய உயர்திணை மருங்கின்
ஆண்மை திரிந்த பெயர்நிலைக் கிளவியும்
தெய்வஞ் சுட்டிய பெயர்நிலைக் கிளவியும்
இவ்வென அறியும் அந்தந் தமக் கிலவே
உயர்திணை மருங்கின் பால்பிரிந் திசைக்கும். ௪

### ஆண்பால் ஈறு

488. னஃகான் ஒற்றே ஆடூஉ அறிசொல். ௫

### பெண்பால் ஈறு

489. ளஃகான் ஒற்றே மகடூஉ அறிசொல். ௬

### பலர்பால் ஈறு

490. ரஃகான் ஒற்றும் பகர இறுதியும்
மாரைக் கிளவி உளப்பட மூன்றும்
நேரத் தோன்றும் பலரறி சொல்லே. ௭

### ஒன்றன்பால் ஈறு

491. ஒன்றறி கிளவி தறட ஊர்ந்த
குன்றிய லுகரத் திறுதி யாகும். ௮

---

487. பெயர்நிலை - பெயர். 'பேடி' என்னும் பெயரும் தெய்வத்தைக் குறிக்கும் பெயர்களும் என்பது முதல் மூன்றடிகளின் பொருள். இவ் - இவை. அந்தம் - ஈற்றுறுப்பு; விகுதி. உயர்திணை மருங்கினபால் - உயர் திணையிடத்திற்குரிய பால். மக்களிற் பிரிந்த பெயர்கள் தமக்கெனப் பாலுணர்த்தும் ஈறில்லனவாய் மக்கட் பெயர்க்குரிய ஈறுகளையே கொண்டு பால் பிரிந்திசைக்கும் என்பது பொருள்.

488. ஒற்று - ஈற்றுறுப்பாகிய ஒற்று.

490. நேர - நிரம்ப வென்ப; இசைய எனினுமாம்.

**பலவின்பால் ஈறு**

492. அ ஆ வ என வரூஉம் இறுதி
அப்பால் மூன்றே பலவறி சொல்லே. ௯

**இந்த ஈறுகள் வினையிலும் வருதல்**

493. இருதிணை மருங்கின் ஐம்பால் அறிய
ஈற்றில்நின் றிசைக்கும் பதினோ ரெழுத்தும்
தோற்றந் தாமே வினையொடு வருமே. ௧௦

**பெயரும் வினையும் ஒத்த பாலில் வருதல்**

494. வினையின் தோன்றும் பாலறி கிளவியும்
பெயரின் தோன்றும் பாலறி கிளவியும்
மயங்கல் கூடா தம்மர பினவே. ௧௧

**'பேடி' என்னுஞ் சொல் இம்முறையில் அமையும் வகை**

495. ஆண்மை திரிந்த பெயர்நிலைக் கிளவி
ஆண்மை அறிசொற்கு ஆகிடன் இன்றே. ௧௨

---

492. அப் பால் - அவ் வகைப்பட்ட.

493. தோற்றந்தாமே வினையொடு வருமே - வினையொடு வந்து புலப்படும் என்றபடி.

494. மயங்கல் கூடா-வேறுபடுதல் ஆகா. 'தம்மரபின' என்றமையால், அவை தமக்குள் இங்ஙனம் ஒத்த இலக்கண முடையன என்று மேலும் விதந்தவாறாயிற்று; ஈண்டுப் பால் வழுவாமை கூறினமையின், ஏனைத் திணை இடம் காலம் மரபு முதலியன வழுவாமைக்கு இதுவே இடமாக, நச். காட்டுவர்.

495. ஆண்மை திரிந்து விட்டமையாற் பெண்மையறி சொல் ஈறும் பலரறிசொல் ஈறும் வினையிற் பெறும் என்றபடி. 'பேடி வந்தான்' என ஆண்மை அறிசொற்கு இடமின்மை காண்க. 'பேடி வந்தாள்' 'பேடியர் வந்தார்' எனல் ஒக்கும்.

### வினாவும் விடையும் அமையும் வகை

496. செப்பும் வினாவும் வழாஅல் ஓம்பல். கரு

497. வினாவும் செப்பே வினாஎதிர் வரினே. கசு

498. செப்பே வழீஇயினும் வரைநிலை யின்றே
அப்பொருள் புணர்ந்த கிளவி யான. கஎ

499. செப்பினும் வினாவினும் சினைமுதற் கிளவிக்கு
அப்பொருள் ஆகும் உறழ்துணைப் பொருளே.

---

*496. செப்பு - விடை. வழாஅல ஓம்பல் - வழாது ஓம்புக.*

*497. வினா எதிர் வரின் - வினாவுக்கு மறுமொழியாய் வரின்.*

*498. செப்பு வழீஇயினும் - விடை நேர் விடையாகாமல் வழுவினும். அப்பொருள் புணர்ந்த கிளவியான - அவ் விடைப் பொருள் கூடிய சொற்களானவிடத்து. வரைநிலை இன்று - அவ் வழுவிற்கு வரையறை செய்யும் நிலைமையில்லை, நீக்கத்தக்க தன்று என்க. செப்பே என்னும் ஏகாரம் பிரிநிலை யாதலின், வினா அங்ஙனம் வழுவுதல் ஆகாதென்பது.*

*499. சினை முதற் கிளவிக்கு - சினைக் கிளவிக்கும் முதற் கிளவிக்கும். அப்பொருள் ஆகும் - செப்பினும் வினாவினும் ஒத்த பொருளே வரும். உறழ் துணைப் பொருள் என்றார், ஒக்கும் இசைவினையுடைய பொருள்; அதாவது, இசைய ஒத்து வரும் பொருள் என்றற்கு. செப்பினும் வினாவினும் இசைய ஒத்துவரும் பொருள் ஒத்த பொருளே ஆகும் என்பது இரண்டாவது அடியின் கருத்து. வினாவில் வருஞ் சினைச் சொல்லுக்கு விடையிலுஞ் சினைச் சொல் வரும்; அங்ஙனமே முதற் சொல்லும் என்றபடி. இதற்குக் காட்டு, 'கொற்றன் மயிர் நல்லவோ சாத்தன் மயிர் நல்லவோ?' என்று வினாவிய விடத்துக்*

### இயல்புவழக்கும் தகுதிவழக்கும் அமையும் வகை

500. தகுதியும் வழக்கும் தழீஇயின ஒழுகும்
பகுதிக் கிளவி வரைநிலை யிலவே. கள

501. இனச்சுட் டில்லாப் பண்புகொள் பெயர்க்கொடை
வழக்கா றல்ல செய்யு ளாறே. க௮

502. இயற்கைப் பொருளை இற்றெனக் கிளத்தல். க௯

503. செயற்கைப் பொருளை ஆக்கமொடு கூறல். உ௦

'கொற்றன் மயிரிற் சாத்தன் மயிர் நல்ல' என வருதல். 'கொற்றனிற் சாத்தன் நல்லன' 'கொற்றனிற் சாத்தன் மயிர் நல்ல' என முதலுஞ் சினையும் மாறி விடையிறுத்தல் பிழை என்பது.

500. தகுதி யென்றது, தகுதி வழக்கும்; வழக்கென்றது, இயல்பு வழககுமாம். இவற்றைத் தழீஇயினவாய் நடைபெறும் பகுதியையுடைய கிளவி வரைநிலையில என்க.

501. இனச் சுட்டு - இனஞ் சுட்டுதல். பெயர்க்கொடை- பெயர் வழக்கு; பெயரைப் புலனெறிப் படுத்தலென்பது. இதற்குக் காட்டு, செஞ்ஞாயிறு போல்வன. இதிற் செம்மை, இனஞ்சுட்டுத லில்லாதது; ஏனென்றால், கருஞாயிறு என ஒன் றில்லாமையின. ஆதலால ஞாயிற்றின் இயல்பாகிய பண்பை மட்டும் அஃதுணர்த்தி வந்தமை அறியப்படும். இங்ஙனம் இனச் சுட்டில்லாப் பண்பைக்கொண்ட பெயர் ஞாயிறு என்பது. இந் நூற்பாவினால், 'வழக்கில் ஞாயிறு எனலாம், செய்யுளிற் செஞ்ஞாயிறு எனலாம்' எனபது போதரும்.

502. இற்று - இத்தகைபது; கிளத்தல் - சொல்லுக.

503. ஆக்கம் - ஆயினதுணர்த்துங் குறி; 'பயிர் நல்ல' என்றுமட்டுங் கூருமல், 'பயிர் நல்ல ஆயின' என ஆக்கச் சொற் கொடுத்துக் கூறுக என்றபடி. கூறல் - கூறுக.

504\. ஆக்கந் தானே காரண முதற்றே. உக

505\. ஆக்கக் கிளவி காரண மின்றியும்
போக்கின் றென்ப வழக்கி னுள்ளே. உஉ

**பால் ஐயமுள்ளன அமையும் வகை**

506\. பால்மயக் குற்ற ஐயக் கிளவி
தான்அறி பொருள்வயின் பன்மை கூறல். உங

507\. உருவென மொழியினும் அஃறிணைப் பிரிப்பினும்
இருவீற்று முரித்தே சுட்டுங் காலை. உச

---

504\. காரண முதற்று - உரிய காரணத்தை முன் வைத்துச் சொல்லுதற் குரித்து. 'எருப் பெய்தமையாற் பயிர் நல்ல ஆயின' எனபது.

505\. இன்றியும் - இன்றி வரினும். போக்கு இன்று - குற்றமில்லை. உம்மையால், வழக்கினும் காரணங் கொடுத்துச் சொல்லலே வலிவுடைத்தென்க.

506\. மயக்குற்ற - துணிதறகியலாது நின்ற. 'தான் அறிபொருள்' எனறு பொதுவாகக் கூறினர், அஃறிணை யியற் கையுங் கருதி யெனக; அஃதாவது அஃறிணை யியறகையாகிய ஒருமை பன்மை எனனும் ஐயமும் இவ்வுயர் திணையிற கருதி யென்றபடி. இந் நூறபா உயர்திணைப் பால் ஐயததிற்கு: அடுத்த நூற்பாவில் அஃறிணைப் பிரிபபினும் என்னுமிடத்து அஃறிணைப் பால் ஐயம் வரும்.

507\. இந் நூற்பாவில் 'அஃறிணைப் பிரிப்பினும்' எனப் பால் ஐயம் வருதலின், 'உரு' என்றது, திணை ஐயத்திற்கு.

அவை, துணிந்தபின் அமையும் வகை

508. தன்மை சுட்டலும் உரித்தென மொழிப
அன்மைக் கிளவி வேறிடத் தான. உ௫

வண்ணச் சினைச்சொல் அமையும் வகை

509. அடைசினை முதல்என முறைமூன் றும்
[மயங்காமை
நடைபெற் றியலும் வண்ணச் சினைச்சொல். உ௬

பால் வழுவமைதி

510. ஒருவரைக் கூறும் பன்மைக் கிளவியும்
ஒன்றனைக் கூறும் பன்மைக் கிளவியும்
வழக்கி னாகிய உயர்சொற் கிளவி;
இலக்கண மருங்கின் சொல்லா றல்ல. உ௭

---

508. தன்மை சுட்டலும் - ஐயுற்ற பொருளின் உண்மைத் தன்மையைச் சுட்டிக் கூறுதலும்; என்றது, ஐயம் நீங்கித் துணிந்த தன்மையைச் சுட்டல். வேறிடத்தான - துணிந்த தன்மைக்கு வேறான ஐயுற்ற தன்மைக்குரிய சொல்லின்கண். 'இவன் பெண் அல்லன் ஆண் மகன்' என்பது இதற்கு எடுத்துக் காட்டு, இதில் அல்லன் என்றது, அன்மைக் கிளவி.

509. அடை - அடைமொழி; வண்ணம். சினை - சினைச் சொல். உறுப்பு முதல - அவ்விரண்டும் அடுத்த ஒரு பொருளின் பெயராகிய முதற் சொல; இம் மூன்றும் முறையே சேர்ந்து வருவது 'வண்ணச் சினைச்சொல்' எனப்படும். 'செங்கால் நாரை' என்பது இதற்கு எடுத்துக்காட்டு. இம் மூன்றும் முறை மயங்காமை நடைபெற்றியலும் என்பது பொருள்.

510. உயர்சொற் கிளவி - உயர்த்துக் கூறுஞ் சொல் லாகிய குறிப்பு.

## ௩. இடம்

### இடம் உணர்த்தும் சொற்கள்

511. செலவினும் வரவினுந் தரவினுங் கொடையினும்
நிலைபெறத் தோன்றும் அந்நாற் சொல்லும்
தன்மை முன்னிலை படர்க்கை என்னும்
அம்மூ விடத்தும் உரிய என்ப. உ௮

### தன்மை முன்னிலைக்குரிய சொற்கள்

512. அவற்றுள்,
தருசொல் வருசொல் ஆயிரு கிளவியும்
தன்மை முன்னிலை ஆயீ ரிடத்த. உ௯

### படர்க்கைக்குரிய சொற்கள்

513. ஏனை யிரண்டும் ஏனை இடத்த. ௩0

### 'யாது' 'எவன்' என்னுஞ் சொற்கள் அமையும் வகை

514. யாது எவன் என்னும் ஆயிரு கிளவியும்
அறியாப் பொருள்வயின் செறியத் தோன்றும்.

---

511. 'மூவிடத்தும் உரிய' என்பதன் விளக்கம் மேல் நூற்பாக்களில் வரும்.

512. தருசொல் - தருதலைப் பற்றிய சொல். வருசொல் - வருதலைப் பற்றிய சொல்.

513. ஏனையிடத்த - படர்க்கை யிடத்தன.

514. எவன், உயர்திணை யன்று; அஃறிணையே; பொதுவாக வினாமாத்திரையாய் வருதலின், 'அறியாப் பொருள்வயின்' என்றார். பால் திணை அறிதற்கன்று. செறிய என்றது, மிகப் பொருத்தமாக என்றற்கு.

### அவற்றுள், 'யாது' என்னுஞ் சொல்

515. அவற்றுள்,
யாது என வரூஉம் வினாவின் கிளவி
அறிந்த பொருள்வயின் ஐயந் தீர்தற்குத்
தெரிந்த கிளவி யாதலு முரித்தே. ௩௨

### சினைமுதற் சொல் அமையும் வகை

516. இனைத்தென அறிந்த சினைமுதற் கிளவிக்கு
வினைப்படு தொகுதியின் உம்மை வேண்டும்.

### நிலையாமைக்குரிய சொல் அமையும் வகை

517. மன்னாப் பொருளும் அன்ன இயற்றே. ௩௪

### இல்லாமைக்குரிய சொல் அமையும் வகை

518. எப்பொரு ளாயினும் அல்லது இல்லெனின்
அப்பொருள் அல்லாப் பிறிதுபொருள் கூறல்.

519. அப்பொருள் கூறின் சுட்டிக் கூறல். ௩௬

---

516. இனைத்தென - இத்துணை யென. சினைமுதற் கிளவிக்கு - சினைக்கிளவி முதற்கிளவிகளுக்கு. வினைப்படு தொகுதியின் - முடிக்குஞ் சொல்லாகிய வினைச்சொல்லோடு படுந் தொகை மொழிக்கண். 'நம்பி கண் இரண்டும் மலர்ந்தன' என்பது எடுத்துக்காட்டு.

517. மன்னாப் பொருள் - நிலையாப் பொருள்; யாக்கை, செல்வம் முதலியன. 'அன்ன இயற்று' என்றது, உம்மை பெறும் என்றபடி.

518. அல்லது இல்லெனின் - இது வல்லது இல்லை என்று கூறவேண்டினால்.

519. அப்பொருள் என்றது, மேல் நூற்பாவிற் கூறிய பிறிது பொருள் என்றதை. சுட்டிக்கூறல் - சுட்டொடு சேர்த்துக் கூறல்; 'இப் பயறல்லது இல்லை' என்றபடி.

**பொருட்பெயரும் சுட்டுப்பெயரும் அமையும் வகை**

520. பொருளொடு புணராச் சுட்டுப்பெய ராயினும்
பொருள் வேறு படாஅது ஒன்று கும்மே. ௩௭

521. இயற்பெயர்க் கிளவியும் சுட்டுப்பெயர்க் கிளவியும்
வினைக்கொருங் கியலுங் காலந் தோன்றின்
சுட்டுப்பெயர்க் கிளவி முற்படக் கிளவார்
இயற்பெயர் வழிய என்மனார் புலவர். ௩௮

522. முற்படக் கிளத்தல் செய்யுளுள் உரித்தே. ௩௯

523. சுட்டுமுத லாகிய காரணக் கிளவியும்
சுட்டுப்பெய ரியற்கையின் செறியத்தோன்றும்.

**இயற்பெயரும் சிறப்புப்பெயரும் அமையும் வகை**

524. சிறப்பி னாகிய பெயர்நிலைக் கிளவிக்கும்
இயற்பெயர்க் கிளவி முற்படக் கிளவார். ௪௧

---

520. பொருளொடு - பொருளுணர்த்தும் பெயரோடு. இயைபினால் ஒன்றுகும் என்றபடி.

521. வினைக்கு - வேறுவேறு வினை கொள்ளுதற்கு. இயலுங் காலம் - நிகழு நேரம். கிளவார் - எடுத்துக் கூறார். இயற்பெயர் வழிய - இயற்பெயரை அடுத்து வருதலுடைய. 'சாத்தன் வந்தான் அவற்குச் சோறு கொடுக்க' என்பது காட்டு.

523. சுட்டு முதலாகிய காரணக் கிளவி, 'அதனால்' 'இதனால்' என்பவை போல்வன. செறிய - பொருந்த. 'சுட்டுப் பெயரியற்கையின்' என்றது, இயற்பெயரை அடுத்து வருதல். 'சாத்தன் எழுதுதல் வல்லன்; அதனால் தந்தை உவக்கும்' என்பதுபோல.

524. சிறப்பினாகிய பெயர்நிலைக் கிளவி - சிறப்புப் பெயர்கள். 'ஏனாதி' 'ஆசிரியன்' என்றாற்போல்வன. உம்மை, மேல் நூற்பாக்களின் முடிபோடொப்ப முன்பின் வருதலைக் கரு

525. ஒருபொருள் குறித்த வேறுபெயர்க் கிளவி
தொழில்வேறு கிளப்பின் ஒன்றிட னிலவே. சஉ

## இட வழுவமைதி

526. தன்மைச் சொல்லே அஃறிணைக் கிளவியென்று
எண்ணுவழி மருங்கின் விரவுதல் வரையார். சங

## ச. எண்

### ஒருமைக்குரிய சொற்கள்

527. ஒருமை யெண்ணின் பொதுப்பிரி பாற்சொல்
ஒருமைக் கல்லது எண்ணுமுறை நில்லாது. சச

---

திற்று; 'ஏறுதி நல்லூதடன்' 'ஆசிரியர் திருவள்ளுவர்' என இயற்பெயர்க் கிளவி பிறபட வந்தமை காண்க.

525. வேறு பெயர்க் கிளவி - பலவேறு பெயர்ச் சொற்கள். தொழில் - வினைசசொல். ஒன்றிடன - ஒரு பொருளில் ஒன்றும முறை; வேறு வேறு பெயர்களாகும் எனறபடி.

526. எண்ணுவழி மருங்கின - எண்ணுமுறைச் சார்பில்; எண்ணுதற்கண் எனறபடி. வரையார் - வரையறை செய்யார்; நீக்கார்.

527. பொதுப் பிரி பாறசொல்-ஒருவன் ஒருத்தி என்பதை உயர்வினகண் 'ஒருவா' எனறு கூறுஞ் சொல். 'இங்கே ஒருவர்' என்பது இருவா மூவர் எனபதுபோல எண்ணும் வகையிற் பொதுவாய் நினறதனறு; அப் பொதுமையிலிருந்து பிரிந்து ஆண் அல்லது பெண் என்று பால் உணர்த்தி உயர்வில் வந்ததாதலின், பொதுப் பிரிபாற் சொல் எனப்பட்டது. ஒருமைக்கு இங்ஙனம் வருமல்லது, இருவர் மூவர் முதலியவாக எண்ணு முறைக்கண், இவ்வுயர்வுச்சொல் நில்லாதென்க.

### வியங்கோள் அமையும் வகை

528. வியங்கோள் எண்ணுப்பெயர் திணைவிரவு
வரையார். ௪௫

### பன்மைக்குரிய சொற்கள்

529. வேறுவினைப்பொதுச்சொல் ஒருவினை கிளவார்.

530. எண்ணுங் காலும் அதுஅதன் மரபே. ௪௭

### இரட்டைக் கிளவி அமையும் வகை

531. இரட்டைக் கிளவி இரட்டிற்பிரிந் திசையா. ௪௮

### பன்மை பற்றிய வழக்குகள்

532. ஒருபெயர்ப் பொதுச்சொல் உள்பொருள் ஒழியத்
தெரிபுவேறு கிளத்தல் தலைமையும் பன்மையும்

---

528. வியங்கோள் எண்ணுப்பெயர் - வியங்கோள் வினையோடு முடியும் எண்ணுதலையுடைய பெயர்கள். 'ஆவும் ஆயனும் செல்க' என்பது இதற்குக் காட்டு.

529. வேறு வினைப் பொதுச்சொல்-வேறு வேறு வினைச் சொற்களைப் பெற்று முடிதற்குரிய பொதுச்சொல். அணி என்பது கட்டுவன, கவிப்பன, பூண்பன முதலியவற்றிற்குப் பொதுச் சொல்லாதல் காண்க. இதற்கு அணிந்தார் எனப் பொது வினை கொடுக்க வென்பது கருத்து. 'அணி கட்டினர்' 'அணி கவித்தார்' எனல் மரபு வழு.

530. எண்ணுங்காலும் - பொருள்களைப் பொதுச் சொல்லாற் கூறாது பிரித்து அவற்றை எண்ணுமிடத்தும். அது-அதன் இலக்கணம். அதன் மரபே - அம் மரபே; என்றது, மேல் நூற்பாவிற் கூறிய ஒரு வினை கிளவாத மரபு; பொதுவினை கொடுக்க என்றபடி. யாழுங் குழலும் ஊதினர் என்னாது, யாழுங் குழலும் இயம்பினர் என்பது.

531. இரட்டைக் கிளவி. 'குறுகுறு' 'சலசல' என்பன.

உயர்திணை மருங்கினும் அஃறிணை மருங்கினும்.

533. பெயரினும் தொழிலினும் பிரிபவை யெல்லாம்
மயங்கல் கூடா வழக்குவழிப் பட்டன. ௫0

534. பலவயி னானும் எண்ணுத்திணை விரவுப்பெயர்
அஃறிணை முடிபின செய்யு ளுள்ளே. ௫க

**பலபொருளொருசொல் அமையும் வகை**

535. வினைவேறு படூஉம் பலபொருள் ஒருசொல்
வினைவேறு படாஅப் பலபொருள் ஒருசொல் [என்று
ஆயிரு வகைய பலபொருள் ஒருசொல் ௫உ

---

532. ஒரு பெயர்ப் பொதுச்சொல் - ஓரிடத்திலுள்ள பல பொருள்கட்கும் பொதுவாக ஒரு பெயராய் வரும் சொல்லே. உள் பொருள் ஒழிய - ஆண்டு உள்ள பிற பொருள் நீங்க. தலைமையும், பன்மையுந் தெரிந்து சொல்லுக என்பது. தெரிபு - தெரிந்து. கிளத்தல் - எடுத்துச் சொல்லுக. 'பார்ப்பனச் சேரி' 'கமுகந் தோட்டம்' என்பன இதற்கு எடுத்துக்காட்டு.

533. பிரிபவை யெல்லாம் - இருபாற் பொதுமையிலிருந்து ஆண்பாலாகவும் பெண்பாலாகவும் பிரிந்து வழங்குவவெல்லாம். மயங்கல் கூடா - அறிந்து போற்றுதற்கண் மயங்கல் ஆகா; மயங்கல் கூடா - வழுவுடைமை ஆகா. முன் நூற்பாவிற் கூறிய 'உயர்திணை மருங்கினும் அஃறிணை மருங்கினும்' என்பதை இதற்குங் கொள்க. 'மக்கள் ஆயிரவர் பொருதார்' என்பதில் மக்கள், என்னுஞ்சொல் உயர்திணையிற், பெயரில் இருபாற் பொதுமையிலிருந்து ஆண்பாலாகப் பிரிந்து வழங்குதல் காண்க.

534. பலவயினானும்-பெரும்பான்மையும். எண்ணுத்திணை விரவுப்பெயர் - திணை விரவி எண்ணப்பட்ட பெயர்.

535. இதன் விளக்கம் மேல் நூற்பாக்களில் வரும்.

536. அவற்றுள்,
வினைவேறு படூஉம் பலபொருள் ஒருசொல்
வேறுபடு வினையினும் இனத்தினுஞ் சார்பினுந்
தேறத் தோன்றும் பொருள்தெரி நிலையே. ௫௩

537. [1]ஒன்றுவினை மருங்கின் ஒன்றித் தோன்றும். ௫௪

538. வினைவேறு படாஅப் பலபொருள் ஒருசொல்
நினையுங் காலைக் கிளந்தாங் கியலும். ௫௫

---

536. வினைவேறுபடூஉம் - தத்தம் வினையால் வேறுபடுகின்ற. தேற - தெளிய. பல பொருட்கும் பொதுவான பெயராய் வருஞ்சொல், இன்னவிடத்தில் இன்ன பொருளில் வருகின்றதெனப் பொருள் தெரியும் நிலை, ஆண்டு வரும் வினையினாலும் இனமொழியினாலும் சார்பினாலும் தெளியத் தோன்றும் என்றபடி. 'சார்பு' யாதானும் ஒரு வகையினால் இயைபுடையது. 'மா' என்பது விலங்கு, பறவை, மரம் முதலிய பல பொருள்களையும் உணர்த்தும் ஒரு சொல்.

537. ஒன்று வினை மருங்கின் - ஒத்த வினை கொள்ளும் வகையில். இது மேல் நூற்பாவிற்குப் புறனடை. வேறுபடும் வினையுடையவாயினும் வேறுபடா வினையுடையபோல் தோன்றும். 'மா வீழ்ந்தது' எனுமிடத்து மா விலங்காயின் இறந்ததென்றும், செல்வப் பொருளாயின் உண்டாயிற்றென்றும் வேறுபடும் வினையுடைமை காண்க. இங்ஙனம் வேறுபடும் வினையுடைமையால் பெயர்களும் வேறு வேறாயினும், இடநோக்கிப் பொருள் விளங்குமாதலின் ஒன்றுவினை மருங்கின் ஒன்றித் தோன்றும் எனக.

538. 'வினை வேறு படாஅப் பல பொருள் ஒருசொல்' என்றது, 'விலங்கு இறந்தது' 'பறவை இறந்தது'

---

(பா. வே.) 1. அடுத்த நூற்பாவையும் இதனோடு சேர்த்துச் சேனாவரையர் ஒரு நூற்பாவாகக் கொள்வர்.

**இதற்கு, வழுவமைதி**

539. குறித்தோன் கூற்றம் தெரித்துமொழி கிளவி.

## ரு. புறனடை

**திணைக்குப் புறனடை**

540. குடிமை ஆண்மை இளமை மூப்பே
அடிமை வன்மை விருந்தே குழுவே
பெண்மை அரசே மகவே குழவி
தன்மை திரிபெயர் உறுப்பின் கிளவி
காதல்சிறப்பே செறற்சொல்விறற்சொல் என்று
ஆஅறு மூன்றும் உளப்படத் தொகைஇ
அன்ன பிறவும் அவற்றொடு சிவணி
முன்னத்தி னுணருங் கிளவி யெல்லாம்
உயர்திணை மருங்கின் நிலையின வாயினும்
அஃறிணை மருங்கின் கிளந்தாங் கியலும். ௫௰

என்னும் ஓரே வினைக்கண் வரும் ' மா வீழ்ந்தது ' என்பதாகும். கிளந்தாங்கு இயலும் - கிளந்து கூறப்பட்டு நடைபெறும்: அரிமா வீழ்ந்தது; அன்னமா வீழ்ந்தது என.

539. பொதுவாகப், பொருள் வேறுபாடு கருதிக் கூறு வோனசொல் மேறகாட்டிய முறைகளிலும் விளக்கம் பெரு தாயின், கருத்தைத் தெரிவித்துக் கூறுஞ் சொல்லாகவே அஃது அமைக என்பது.

540. தனமை திரி பெயர் - அலி முதலியன. உறுப்பின் கிளவி - குருடு முதலியன. காதல் - காதற்சொல். சிறப்பு - சிறப்புச்சொல், ஆ அறு மூனறும் - அப் பதினெட்டு வகைக் கிளவிகளும், தொகைஇ - தொக்கு. முன்னத்தின - குறிப்பின். கிளந்தாங்கு - உரைத்ததுபோல; அஃறிணை முடிபு கொள்ளும் என்பது கருத்து.

### பாலுக்குப் புறனடை

541. காலம் உலகம் உயிரே உடம்பே
பால்வரை தெய்வம் வினையே பூதம்
ஞாயிறு திங்கள் சொல் என வரூஉம்
ஆயீ ரைந்தொடு பிறவும் அன்ன
ஆவயின் வரூஉங் கிளவி யெல்லாம்
பால்பிரிந் திசையா உயர்திணை மேன. ருஅ

### இடத்துக்குப் புறனடை

542. நின்றாங் கிசைத்தல் இவண்இயல் பின்றே. ருகூ

543. இசைத்தலு முரிய வேறிடத் தான. கூ0

---

541. பால் வரை தெய்வம் - இருவினை வகுக்கும் ஊழ். சொல் - நாமகளாகிய தெய்வம். ஆவயின் - அப்பகுதிக்கண்; என்றது, முன் நூற்பாவிற சுட்டிய உயர்திணைக்கண் எனறபடி. உயர்திணைமேன பால் பிரிந்து இசையா - அவ்வுயர்திணையிடத்தில் பால் பிரிந்து இசையா. அஃறிணைப் பாலவாய் இசைக்கும் என்பது கருத்து. மேல் எனனும் ஏழாம் வேற்றுமையுணர்த்தும் இடைச்சொல் 'மேன' எனத் திரிந்து நினறது.

542. நின்றாங்கு - ஈறு திரியாமல் நின்று; இசைத்தல் - உயர்திணையாயிசைத்தல். இவண் என்றது, இந்நூறபாவிற் கூறிய காலம் முதலிய சொற்களுக்கு என்றபடி; இதனால், முன் நூற்பாவிற் கூறிய குடிமை முதலிய சொற்கள் ஈறு திரியாமல் நின்று 'குடிமை நல்லன்' முதலியவாக உயர்திணையில் இசைக்கும் என்பது பெறப்படும்.

543. இசைத்தலும் - இங்கே கூறிய காலம் முதலிய சொற்கள் உயர்திணையாய் இசைத்தலும். வேறு இடத்தான - ஈறு திரிந்து வேறுபட்ட விடத்து; 'காலன்' 'உலகர்' என. 'காலன் கொண்டான்' 'உலகர் பசித்தார்' என்பது காட்டு.

544. எடுத்த மொழியினஞ் செப்பலு முரித்தே. ௬௧

**எண்ணுக்குப் புறனடை**

545. கண்ணுந் தோளும் முலையும் பிறவும்
பன்மை சுட்டிய சினைநிலைக் கிளவி
பன்மை கூறுங் கடப்பா டிலவே
தம்வினைக் கியலும் எழுத்தலங் கடையே. ௬௨

---

**544.** எடுத்த மொழி - எடுத்து விதந்த மொழி. இனம் செப்பலும் - தனக்கு இனமாகிய பிற பொருள்களைக் குறிப்பால் உணர்த்தலும். 'அறஞ் செய்தான் துறக்கம் புகும்' என்னும் எடுத்தமொழி, 'மறஞ் செய்தான் நிரயம் புகும்' எனத் தன் இனப் பொருளை உணர்த்துதல் என்க.

**545.** சினைநிலைக் கிளவி - உறுப்பு நிலையை உணர்த்துஞ் சொல். சினைச் சொறகள் தம் வினையான் முடிதலும், தம் முதறபொருளின் வினையான் முடிதலும் என இருவகைப்படும். கண் நல்ல எனபதும் கண் நல்லன எனபதும் முறையே இவ்விரு வகைக்கும் எடுத்துககாட்டு. இவற்றில் தம் வினையான் வருங் கால் அஃறிணையாய் அதற்குரிய அகர ஈறறெழுத்தால் நல்ல என முடிநதுள்ளது. அங்ஙனம் தம் வினைக்கியலும் எழுத்தல்லாத விடத்துப் பன்மைகூறும் கடப்பாடில என்றபடி, எழுத்தலங் கடை - எழுத்தல்லாதவிடத்து.

# உ. வேற்றுமை யியல்

[பெயர்கள், உருபுகளேற்றுப் பொருள் வேற்றுமைப் படும் இயல்புணர்த்துவது.]

## க. வேற்றுமையின் வகை

**வேற்றுமை இத்தனை என்பது**

546. வேற்றுமை தாமே ஏழென மொழிப. க

547. விளிகொள் வதன்கண் விளியோடு எட்டே. உ

**வேற்றுமையின் பெயர், முறை**

548. அவைதாம்,
பெயர், ஐ ஒடு கு
இன் அது கண் விளி என்னும் ஈற்ற. ந

## உ. முதல் வேற்றுமை

**எழுவாய் வேற்றுமை**

549. அவற்றுள்,
எழுவாய் வேற்றுமை பெயர்தோன்று நிலையே. ச

---

547. கொள்வது - கொள்ளும் பெயர்; விளிப்பொருள் கொள்ளும் பெயரினகண்ணதான விளிவேற்றுமையோடு சேர்க்க, வேற்றுமை எட்டு எனபது.

548. விளி என்னும் ஈறற - விளிவேறறுமையை இறுதியாக உடைய. அவைதாம் பெயர் வேற்றுமையும் ஐயும் ஒடுவும் குவ்வும் இன்னும் அதுவும் கண்ணுமாம் என்று முடிக்க.

549. வேறு தனியாக உருபில்லை யென்றபடி.

### எழுவாய் ஏற்கும் பயனிலைகள்

550. பொருண்மை சுட்டல் வியங்கொள வருதல்
வினைநிலை உரைத்தல் வினாவிற்கு ஏற்றல்
பண்புகொள வருதல் பெயர்கொள வருதல் என்று
அன்றி அனைத்தும் பெயர்ப்பய னிலையே. ௫

### தொகைப்பெயரும் பயனிலை கொள்ளல்

551. பெயரி னாகிய தொகையுமா ருளவே
அவ்வும் உரிய அப்பா லான. ௬

### எழுவாயும், தோன்று எழுவாயும்

552. எவ்வயின் பெயரும் வெளிப்படத் தோன்றி
அவ்வியல் நிலையல் செவ்வி தென்ப. ௭

---

550. வியங்கொள - ஏவல் கொள்ள. அன்றியனைத்தும் - அவ்வனைத்தும். பெயர்ப் பயனிலை - எழுவாய் வேற்றுமையது பயனாகிய நிலைமை.

551. பெயரினாகிய தொகை - பெயரும் பெயரும் தொக்க தொகை. யானைக்கோடு, மதிமுகம் என்றாற் போல்வன, அவ்வும் - அத்தகைய தொகையும். உரிய அப்பாலான - அவ் வகைக்கு உரிய; என்றது, எழுவாய் வேற்றுமையாய்ப் பயனிலை கோடற்கு உரிய என்றபடி.

552. எவ்வயின் பெயரும் - தன்மை முன்னிலை படர்க்கை யென்னும் மூவிடத்துப் பெயரும். அவ்வியல் நிலையல் - அத் தன்மை பெற்று நிற்றல்; பொருண்மை சுட்டல் என்னும் நூற்பாவிற் கூறிய ஆறு வகையாகப் பயனிலை ஏற்குந் தன்மை.

### பெயரில் உருபு நிற்கும் இடம்

553. கூறிய முறையின் உருபுநிலை திரியாது
ஈறுபெயர்க் காகும் இயற்கைய என்ப. ௮

### பெயரின் இயல்பு

554. பெயர்நிலைக் கிளவி காலந் தோன்றா
தொழில்நிலை ஒட்டும் ஒன்றலங் கடையே. ௯

## ௫. இரண்டாம் வேற்றுமை

### 'ஐ' உருபின் பொருள்

555. இரண்டா குவதே,
ஐயெனப் பெயரிய வேற்றுமைக் கிளவி;
எவ்வழி வரினும் வினையே வினைக்குறிப்பு
அவ்விரு முதலின் தோன்றும் அதுவே ௧௦

### அப்பொருளின் பாகுபாடுகள்

556. காப்பின் ஒப்பின் ஊர்தியின் இழையின்
ஒப்பின் புகழின் பழியின் என்றா,
பெறலின் இழவின் காதலின் வெகுளியின்
செறலின் உவத்தலின் கற்பின் என்றா,

---

553. முறையின் - முறைமையையுடைய. பெயர்க்கு ஈறாகும் இயல்புடைய என்றபடி.

554. பெயர்நிலைக் கிளவி - பெயர்ச்சொல்; பலவகையான பெயரும் அடங்குதற்குப் பெயராகிய நிலையையுடைய கிளவி யெனப்பட்டது. தோன்றா - தோன்றுவாய் நிற்கும். தொழில்நிலை யொட்டும் ஒன்று என்றது, ஒருவகைத் தொழிற் பெயரை; அது வினையாலணையும் பெயர்.

555. எவ்வழி - எந்த இடத்தில். முதலின் - காரணத்தின் கண்ணும்.

அறுத்தலின் குறைத்தலின் தொகுத்தலின்
[பிரித்தலின்
நிறுத்தலின் அளவின் எண்ணின் என்ற,
ஆக்கலின் சார்தலின் செலவின் கன்றலின்
நோக்கலின் அஞ்சலின் சிதைப்பின் என்ற
அன்ன பிறவும் அம்முதற் பொருள
என்ன கிளவியும் அதன்பால என்மனார். கக

## ௬. மூன்றும் வேற்றுமை

### 'ஒடு' உருபின் பொருள்

557. மூன்றா குவதே,
ஒடுவெனப் பெயரிய வேற்றுமைக் கிளவி;
வினைமுதல் கருவி அனைமுதற்று அதுவே. கஉ

### அப்பொருளின் பாகுபாடுகள்

558. அதனின் இயறல் அதன்தகு கிளவி
அதன்வினைப் படுதல் அதனின் ஆதல்
அதனின் கோடல் அதனொடு மயங்கல்
அதனொடு இயைந்த ஒருவினைக் கிளவி

---

556. இழை - இழைக்கப்படுவது; இயற்றப்படுவது. ஓப்பு-ஓட்டுதல், என்ற - என்று சொல்லப்படுவனவும். செலவு - செல்லுதல். கன்றல் - அடிப்படுதல். அம்முதற் பொருள என்றது, முற்கூறப்பட்ட செயப்படு பொருண்மேல் வரும் கருத்தினவாகிய என்றற்கு. என்ன கிளவியும் - எவ்வகைப் பட்ட சொல்லும்; எல்லாச் சொல்லும். அதன் பால - இரண்டாம் வேற்றுமையின்பால.

557. அனை முதற்று அது - அஃது அவ்விரண்டு காரணத்தையும் பொருளாக உடையது.

அதனொடு இயைந்த வேறுவினைக் கிளவி
அதனொடு இயைந்த ஒப்பல் ஒப்புரை
இன்னான் ஏது ஈங்கென வரூஉம்
அன்ன பிறவும் அதன்பால என்மனார். கரு

## ரு. நான்காம் வேற்றுமை

### 'கு' உருபின் பொருள்

559. நான்கா குவதே,
கு எனப் பெயரிய வேற்றுமைக் கிளவி;
எப்பொரு ளாயினும் கொள்ளும் அதுவே. கசு

### அப்பொருளின் பாகுபாடுகள்

560. அதற்குவினை யுடைமையின் அதற்குடம்படுதலின்
அதற்குப்படு பொருளின் அதுவாகு கிளவியின்
அதற்குயாப் புடைமையின் அதன்பொருட்
[டாதலின்
நட்பின் பகையின் காதலின் சிறப்பின்என்று
அப்பொருட் கிளவியும் அதன்பால என்மனார்.

---

558. இயறல் - பண்ணப்படுதல். கோடல் - கொள்ளுதல். ஒப்பல் ஒப்பு - ஒப்பல்லதனை ஒப்பாகக் கூறுதல். இன்னான் ஏது - இன்னும் ஆனுமாகிய ஏதுப்பொருண்மை ஈங்கு - இங்ஙனம்; இங்ஙனம் வினைமுதலுங் கருவியுமாகிய பொருளிடத்து என்பது.

560. வினையுடைமை என்றது, இங்கே பயன்படுதலே. படுபொருள் - ஒருகூற்றிற் படுகின்ற கருத்து. யாப்புடைமை - பொருத்தமுடைத்தாதல். பொருட்டாதல் - ஒன்றன் காரணமாக மேற்கொள்ளல்.

## ௬. ஐந்தாம் வேற்றுமை

### 'இன்' உருபின் பொருள்

561. ஐந்தா குவதே,
இன் எனப் பெயரிய வேற்றுமைக் கிளவி;
இதனின் இற்றிது என்னும் அதுவே. ௧௬

### அப்பொருளின் பாகுபாடுகள்

562. வண்ணம் வடிவே அளவே சுவையே
தண்மை வெம்மை அச்சம் என்றா,
நன்மை தீமை சிறுமை பெருமை
வன்மை மென்மை கடுமை என்றா,
முதுமை இளமை சிறத்தல் இழித்தல்
புதுமை பழமை ஆக்கம் என்றா,
இன்மை உடைமை நாற்றம் தீர்தல்
பன்மை சின்மை பற்று விடுதல் என்று
அன்ன பிறவும் அதன்பால என்மனார். ௧௭

## எ. ஆறாம் வேற்றுமை

### 'அது' உருபின் பொருள்

563 ஆறா குவதே,
அது எனப் பெயரிய வேற்றுமைக் கிளவி;

---

561. இதனின் இற்று இது - இதனினும் இத்தன்மையது இது. என்னும் - என்று உணர்த்தும்.

562. இந் நூற்பாவிற் கூறிய பொருள்களின்மேல் இதனின் இத்தகையது இது என வரும் என்றபடி. 'காக்கையிற் கரிது களம்பழம்' என்பது வண்ணப்பொருளில் வந்தது. இங்ஙனம் ஏனையவும் கொள்ளப்படும்.

தன்னினும் பிறிதினும் இதனது இதுஎனும்
அன்ன கிளவிக் கிழமைத் ததுவே. கரு

அப் பொருளின் பாகுபாடுகள்

564. இயற்கையின் உடைமையின் முறைமையின் [கிழமையின்
செயற்கையின் முதுமையின் வினையின் என்று,
கருவியின் துணையின் கலத்தின் முதலின்
ஒருவழி உறுப்பின் குழுவின் என்று,
தெரிந்துமொழிச் செய்தியின் நிலையின் [வாழ்ச்சியின்
திரிந்துவேறு படூஉம் பிறவும் அன்ன
கூறிய மருங்கில் தோன்றுங் கிளவி
ஆறன் பால என்மனார் புலவர் கக

---

563. தன்னினும் - தன்னோடு ஒற்றுமையுடைய பொருளானும்; தற்கிழமை. பிறிதினும் - தனனின் வேறுகிய பொருளானும்; பிறிதின கிழமை. அனன கிளவிக் கிழமைத்து - அன்ன கிளவியாற் றோனறுங் கிழமைப் பொருளையுடையது.

564. இயறகையின் - இயல்பாகிய கிழமையின், என்றது. இயற்கைக் கிழமை. 'சாத்தனது இயறகை; சாத்தனது அறிவு' என்பன அதறகுக் காட்டு. கிழமையின் என்றது, கிழமைக் கிழமை. 'சாத்தனது கிழமை; முருகனது குறிஞ்சிநிலம்' எனபன இதற்குக் காட்டு. கலம் - ஓலை (Document); ஒற்றிச் சீட்டு முதலியன. கலக்கிழமை யெனக. முதல் - முதறகிழமை; முதற்பொருளின கிழமை. தெரிந்து மொழிச்செய்தி - தெரிந்து மொழியாற செயயப்படுஞ் செய்தி; என்றது, பொருட்பிறிதின் கிழமை. வாழ்ச்சி - வாழ்தற் கிழமை. திரிந்துவேறுபடூஉம் பிற என்றது, 'எட்சாந்து' 'தொகையது விரி' எனபவை போல்வன.

## அ. ஏழாம் வேற்றுமை

### 'கண்' உருபின் பொருள்

565. ஏழா குவதே,
கண் எனப் பெயரிய வேற்றுமைக் கிளவி;
வினைசெய் இடத்தின் நிலத்தின் காலத்தின்
அனைவகைக் குறிப்பின் தோன்றும் அதுவே. உ0

### ஏழாம் வேற்றுமை உருபுகள்

566. கண் கால் புறம் அகம் உள் உழை கீழ் மேல்
பின் சார் அயல் புடை தேவகை எனாஅ,
முன் இடை கடை தலை வலம் இடம் எனாஅ,
அன்ன பிறவும் அதன்பால என்மனார். உக

## கூ. வேற்றுமையின் தொகைவிரி இயல்பு

567. வேற்றுமைப் பொருளை விரிக்குங் காலை
ஈற்றுநின்று இயலுந் தொகைவயின் பிரிந்து
பல்லா றாகப் பொருள்புணர்ந் திசைக்கும்
எல்லாச் சொல்லும் உரிய என்ப. உஉ

---

565 அனைவகைக் குறிப்பின – என அம் மூவகைக் குறிப்பினும்.

566. தேவகை என்றது, திசைப் பகுதி; ஓர் உருபாகவும் கொள்ளப்படும்; 'கிழவோள் தேஎத்து' என்பது அதற்குக் காட்டு. எனா - என்று சொல்லப்படுவனவும்; அன்ன பிறவும் என்றதனால் இல், மாட்டு முதலியனவுங் கொள்ளப்படும்.

567. வேற்றுமைப் பொருளை யென்றது, ஈண்டுத், தொக்கு நிற்கும் வேற்றுமைப்பொருளை. ஈற்று நின்றியலுந் தொகை என்றது, அன்மொழித்தொகையை. உரிய - விரித்தற்கு உரிய. இடையே இன்றியமையாதனவாய் வருவிக்கப் பட்டுப் பொருள் புணர்ந்து இசைக்கும் எல்லாச் சொல்லும் விரித்தற்கு உரிய என்பது. உருபேயன்றிப் பிறசொற்களும் விரித்துரைத்தல் நுவன்றபடி.

## ௩. வேற்றுமை மயங்கியல்

[வேற்றுமையுருபுகள் தம்முள் மயங்கிப் பொருள் வேறுபாடு கொள்ளும் இயல்புணர்த்துவது.]

### க. வேற்றுமையுருபுகள் மயங்குதல்

**சார்பு பொருளில்**

568. கருமம் அல்லாச் சார்பென் கிளவிக்கு
உரிமையும் உடைத்தே கண் என் வேற்றுமை.

**சினைப் பெயரில்**

569. சினைநிலைக் கிளவிக்கு ஐயும் கண்ணும்
வினைநிலை ஒக்கும் என்மனார் புலவர். ௨

**கன்றல் செல்லல் பொருளில்**

570. கன்றலும் செலவும் ஒன்றுமார் வினையே. ௩

---

568. 'தூணினைச் சார்ந்தான' என்றவிடத்து மெய்யுறுதலாகிய கருமம் பெறப்படும்; அரசரைச் சார்ந்தான் என்றவிடத்து அது பெறப்படாது; ஆதலால், இது கருமம் அல்லாச் சார்பு எனப்பட்டது. கிளவிககு - கருததுக்கு. 'அரசர்கண் சார்ந்தான்' எனக் கூறலும் பொருந்தும் என்பது இந்நூற்பாவின் கருத்து.

569. கிளவிக்கு - சொல்லுக்கு. வினை நிலை - வினை கூறுதற்கண். ஒக்கும் - ஒத்து வரும்.

570. கன்றலும் - கனறுதற கருத்திலும், செலவும் - செல்லுதற் கருத்திலும். ஒன்றும் வினை - ஒககும் செயலுடைய; முற்கூறிய இரண்டனுருபும் ஏழனுருபும் இவ்விரு கருத்துக்களிலுந் தம்முள் ஒத்து மயங்கிவரும் என்றபடி.

### முதற்பெயர் சினைப்பெயர்களில்

571. முதற்சினைக் கிளவிக்கு அது என் வேற்றுமை
முதற்கண் வரினே சினைக்கு ஐ வருமே. ௪

572. முதல்முன் ஐ வரின் கண் என் வேற்றுமை
சினைமுன் வருதல் தெள்ளி தென்ப. ௫

573. முதலும் சினையும் பொருள்வேறு படாஅ;
நுவலுங் காலைச் சொற்குறிப் பினவே. ௬

### பிண்டப் பெயரில்

574. பிண்டப் பெயரும் ஆயியல் திரியா
பண்டியல் மருங்கின் மரீஇய மரபே. ௭

### உயர்பு பொருளில்

575. ஒருவினை ஒடுச்சொல் உயர்பின் வழித்தே. ௮

---

571. முதற் சினைக் கிளவிக்கு - முதற்சொல்லும் சினைச் சொல்லும் தொடர்ந்து வந்த தொடர்க்கு.

572. தெள்ளிது - முன் நூறபாவின் முடிபினும் தெளிவுடையது.

573. பொருள் வேறுபடா - தத்தம் பொருளில் வேறுபட்டு நில்லா; சொறகுறிப்பின - சொல்லுதற குறிப்பினால், எதற்கு எது முதல், எது சினை, எனனும் குறிப்புடையன.

574. பிண்டம் என்பது, பல பொருள் தொகுதி. ஆயியல் என்றது, முதறசினைக கிளவிககுக கூறிய இயல்பு. பண்டு இயல் மருங்கின் - பண்டு தொட்டு நடைபெறும் வகையில்.

575. ஒரு வினை ஒடுச்சொல் எனறது, வேற்றுமையியலில் மூன்றும் வேறறுமை விரிககண் வநத (௫௮௮) 'அதனொடியைந்த ஒரு வினைக கிளவி' என்பது. உயர்பின வழித்து - உயர்பொருளில் வரும்பெயரை அடுதது நிற்கும். 'ஆசிரியனொடு மாணுக்கர் வந்தார்' எனபது காட்டு.

### ஏதுப் பொருளில்

576. மூன்றனும் ஐந்தனும் தோன்றக் கூறிய
ஆக்கமொடு புணர்ந்த ஏதுக் கிளவி
நோக்கோ ரனைய என்மனார் புலவர். ௯

### நோக்கப் பொருளில்

577. இரண்டன் மருங்கின் நோக்கல் நோக்கம்அவ்
விரண்டன் மருங்கின் ஏதுவு மாகும். ௧௦

### உடைமைப் பொருளில்

578. அது என் வேற்றுமை உயர்திணைத் தொகைவயின்
அது என் உருபுகெடக் குகரம் வருமே. ௧௧

### தடுமாறு பொருளில்

579. தடுமாறு தொழிற்பெயர்க்கு இரண்டும் மூன்றும்
கடிநிலை யிலவே பொருள்வயி னான. ௧௨

---

**576.** மூன்றனும் - மூன்றாம் வேற்றுமைக் கண்ணும். நோக்கு - பொருள்நோக்கு. 'வாணிகத்தான் ஆயினான்' 'வாணிகத்தின் ஆயினான்' என்பவற்றில் ஆக்கமொடு புணர்ந்த ஏதுக் காணப்படுதலும், இருருபும் பொருணோக்கில் ஒருதன்மைய வாதலுங் காண்க.

**577.** நோக்கு அல் நோக்கம் - 'வானோக்கி வாழும்' என்புழிப்போலக் கண்ணால் நோக்காது மனத்தாற் கருதுதல். ஏதுவுமாகும் என்றது, ஏதுப் பொருளில் வரும். மூன்றாவதும் ஐந்தாவதுமாய்ப் பொருளாம் என்றபடி.

**579.** தடுமாறு தொழிற்பெயர் - பொருள் தடுமாறு தற்கு ஏதுவாய்த் தொழிலோடு தொடர்ந்துவரும் பெயர். இரண்டும் மூன்றும் - இரண்டாம் வேற்றுமையும் மூன்றாம் வேற்றுமையும். பொருள்வயினான - உரிய பொருள் நிற்கு மிடத்து.

580. ஈற்றுப்பெயர் முன்னர் மெய்யறி பனுவலின்
வேற்றுமை தெரிப உணரு மோரே. கரு

**பாதுகாத்தற் பொருளில்**

581. ஓம்படைக் கிளவிக்கு ஐயும் ஆனும்
தாம்பிரி விலவே தொகவரு காலை. கசு

**வாழ்தற் பொருளில்**

582. ஆறன் மருங்கின் வாழ்ச்சிக் கிழமைக்கு
ஏழும் ஆகும் உறைநிலத் தான. கஎ

**கொடைப் பொருளில்**

583. குத்தொக வரூஉம் கொடையெதிர் கிளவி;
அப்பொருள் ஆறற் குரித்து மாகும். கஅ

---

580. ஈற்றுப் பெயர் - தடுமாறுந் தொழிலொடு தொடர்ந்துவந்த இருவகைப் பெயருள் இறுதிப் பெயர். மெய் அறி பனுவலின் - பொருள் வேறுபாடு அறிதற்குரிய சொல் லால. குறிப்பால் அறிய வேண்டுதலின உணருமோர் எனப் பட்டது.

581. ஓம்படைக் கிளவிக்கு - பாதுகாப்புக் கருத்துக்கு, எனறது, தொடரில அக் கருத்துடைய இடத்துக்கு. தாம் பிரிவில எனறார், ஒத்த உரிமையாய் மயங்குப என்றற்கு; தொக வரு காலை, வேறறுமை தொககு நிறபுழி எனபது.

582. உறை நிலத்தான - உறையும் நிலப்பெயரினிடத்து.

583. கொடை எதிர் கிளவி - கொடைப்பொருளுணர்த் துந் தொகைச்சொல்.

### அச்சப் பொருளில்

584. அச்சக் கிளவிக்கு ஐந்தும் இரண்டும்
எச்சம் இலவே பொருள்வயி னான. கஎ

### வேற்றுமை மயக்கத்திற்கு வழக்கு முதன்மை

585. அன்ன பிறவுந் தொன்னெறி பிழையாது
உருபினும் பொருளினும் மெய்தடு மாறி
இருவயின் நிலையும் வேற்றுமை யெல்லாம்
திரிபிட னிலவே தெரியு மோர்க்கே. கஅ

## உ. அவ்வுருபுகளின் இயல்புகள்

### உருபு தொடர்ந்தடுக்கி வருதல்

586. உருபுதொடர்ந் தடுக்கிய வேற்றுமைக் கிளவி
ஒருசொல் நடைய பொருள்செல் மருங்கே. கசு

### உருபு விரிந்துநிற்கும் இடம்

587. இறுதியும் இடையும் எல்லா உருபும்
நெறிபடு பொருள்வயின் நிலவுதல் வரையார். உ0

---

584. எச்சம் இல - ஒழிதலில; ஒத்த உரிமைய என்பது.

585. மெய் - வடிவு. ஈண்டு மெய் தடுமாறி என்றது - ஒன்றன் நிலைக்களத்து ஒன்று சென்று என்றற்கு. இருவயின், இருவேற்றுமைப் பொருளிடத்தும்.

586. ஒரு சொல் நடைய - ஒரு முடிக்குஞ் சொல்லினால் முற்றுப்பெறும் நடையினையுடைய; 'என்னொடும் நின்னொடும் சூழாது' என்புழிப்போல.

587. நிலவுதல் வரையார் - நின்று சிறத்தலை நீக்கார்.

**உருபு மற்றொன் றேற்றலும் தொக்குவருதலும்**

588. பிறிதுபிறி தேற்றலும் உருபுதொக வருதலும்
நெறிபட வழங்கிய வழிமருங் கென்ப. உக

589. ஐயும் கண்ணும் அல்லாப் பொருள்வயின்
மெய்யுருபு தொகாஅ இறுதி யான. உஉ

**வேற்றுமை, பொருள் பற்றியது**

590. யாதன் உருபிற் கூறிற் றாயினும்
பொருள்செல் மருங்கின் வேற்றுமை சாரும்.

**எதிர்மறைக்கண்ணும் வேற்றுமை ஒக்கும்**

591. எதிர்மறுத்து மொழியினும் தத்தம் மரபின்
பொருள்நிலை திரியா வேற்றுமைச் சொல்லே. உச

**உருபுகளின் திரிபு**

592 கு ஐ ஆன் என வரூஉம் இறுதி
அவ்வொடுஞ் சிவணும் செய்யு ளுள்ளே. உரு

593. அ எனப் பிறத்தல் அஃறிணை மருங்கின்
குவ்வும் ஐயும் இல்லென மொழிப. உசு

---

**588. பிறிது பிறிது ஏற்றலும் - ஓர் உருபு பிறிது பிறிது ஏற்றலும் எனக. ஓர் உருபெனபது, ஏற்புழிக் கோடலால் ஆறனுருபாம். வழிமருங்கு - வழக்கினிடத்தது.**

**589. உருத் தெரிதற்குரிய உருபு என்றற்கு, 'மெய் உருபு' எனப்பட்டது. தொடரிறுதியில் தொகா எனபது கருதது.**

**592. இறுதி - இறுதிககண் நின்ற உருபுகள். அவ்வொடு, அகரச் சாரியையோடு.**

**593. ஆன உருபுக்கு மட்டும் அஃறிணை மருங்கில் அகரந் தோன்றுமென்பது இதன் கருத்து.**

### உருபுகள் பல பொருள்களினும் மயங்குதல்

594. இதனது இதுஇற்று என்னுங் கிளவியும்,
அதனைக் கொள்ளும் பொருள்வயி னானும்,
அதனாற் செயற்படற்கு ஒத்த கிளவியும், [யும்,
முறைக்கொண் டெழுந்த பெயர்ச்சொற் கிளவி
பால்வரை கிளவியும், பண்பின் ஆக்கமும்,
காலத்தின் அறியும் வேற்றுமைக் கிளவியும்,
பற்றுவிடு கிளவியும், தீர்ந்துமொழிக் கிளவியும்,
அன்ன பிறவும் நான்கன் உருபில்
தொன்னெறி மரபின தோன்ற லாறே. ௨௭

595. ஏனை உருபும் அன்ன மரபின;
மானம் இலவே சொல்முறை யான. ௨௮

### வேற்றுமை தோன்றுதற்கு ஏது

596. வினையே செய்வது செயப்படு பொருளே
நிலனே காலம் கருவி என்றா,
இன்னதற்கு இதுபயன் ஆக என்னும்

---

594. இற்று - இத்தன்மையது. பால்வரை - நிலத்தைப் பகுதி வரைந்து கூறும். இந்நூற்பாவில், முதல் நான்கு உம்மைகளால் எண்ணப்பட்டவை முறையே ஆறாவது, இரண்டாவது, மூன்றாவது, ஆறாவது என்னும் வேற்றுமைகளின் பொருள்களில் அடங்கும். 'காலத்தின் அறியும் வேற்றுமைக் கிளவி' என்றது, ஏழாவது. ஏனைய நான்கும் ஐந்தன் பொருளன. இவை அத்தனையும் நான்கனுருபிற் கூறுதல் மரபென்றபடி.

595. மானம் - குற்றம். சொல்முறையான் - சொல்லும் முறையினால்; வழங்கும் முறையினால் என்றபடி; வழக்கு முறையான் என்க.

அன்ன மரபின் இரண்டொடுந் தொகைஇ
ஆறெட் டென்ப தொழில்முதல் நிலையே. உ௯

597 அவைதாம்,
வழங்கியல் மருங்கின் குன்றுவ குன்றும். ௩0

## ௩. இதன்கண், ஆகுபெயர் முடிபு

### அதன் இயல்பு

598. முதலிற் கூறுஞ் சினையறி கிளவியும்,
சினையிற் கூறும் முதலறி கிளவியும்,
பிறந்தவழிக் கூறலும், பண்புகொள் பெயரும்,
இயன்றது மொழிதலும் இருபெய ரொட்டும்
வினைமுதல் உரைக்குங் கிளவியொடு தொகைஇ
அனைமர பினவே ஆகுபெயர்க் கிளவி. ௩௧

599. அவைதாம்,
தத்தம் பொருள்வயின் தம்மொடு சிவணலும்

---

596. இனைத்தறகாக இது பயன ஆக என, 'ஆக' என்பதை முன்னும் கூட்டி இரண்டாக எண்ணுக. ஆ எட்டு - அவ்வகை எட்டு; தொழில முதல் நிலை - காரியத்திற்கு முன்னிறகுங் காரணம்; முதனிலை - காரணம் என்னும் பொருட்டு.

597. குன்றுவ குன்றும் - குறைவன குறைந்துவரும். ஒவ்வொரு தொழிற்கும மறகூறிய எட்டுக் காரணமும் வருமெனனும் யாப்புறவிலலை எனறபடி.

598. முதலின் - முதற்சொல்லால். பிறந்த வழி - பிறந்த இடத்தால். பணபு - பண்பினால். இயன்றது - காரியத்தினால். வினைமுதல் - வினைமுதலால்.

ஒப்பில் வழியான் பிறிதுபொருள் சுட்டலும்
அப்பண் பினவே நுவலுங் காலை. ௩௨

600. வேற்றுமை மருங்கிற் போற்றல் வேண்டும். ௩௩

601. அளவும் நிறையும் அவற்றொடு கொள்வழி
உளவென மொழிப உணர்ந்திசி னோரே. ௩௪

அதற்குப் புறனடை

602. கிளந்த அல்ல வேறுபிற தோன்றினும்
கிளந்தவற் றியலான் உணர்ந்தனர் கொளலே.



599. அப்பண்பின - அவ்விரண்டு பண்பின. முன்னது இயைபோடு வந்த ஆகுபெயர்; பின்னது இயைபின்றி வந்த ஆகுபெயரென்க.

600. போற்றல் வேண்டும்-ஆண்டுகொள்ளல் வேண்டும்; ஆகுபெயரும் வேற்றுமை ஏற்கும் என்றபடி.

601. அளவு - அளவுப்பெயர்; நிறை - நிறைப்பெயர். அவற்றொடு - முன்சொன்ன ஆகுபெயர் வகையோடு. கொள்வழி - கொள்ளும் இடமும். அளக்கப்பட்ட நிறுக்கப்பட்ட பொருள்கள்மேல் ஆகிவரும் என்பது.

# ௪. விளி மரபு

[சொற்கள் விளியேற்கும் இயல்புணர்த்துவது]

## ௧. விளியின் இயல்பு

603. விளியெனப் படுப கொள்ளும் பெயரொடு
தெளியத் தோன்றும் இயற்கைய என்ப. ௧

604. அவ்வே,
இவ்வென அறிதற்கு மெய்பெறக் கிளப்ப. ௨

## ௨. உயர்திணைப்பெயர் விளியேற்குமாறு

**அதன்கண், விளி ஏற்கும் உயிரீறுகள்**

605. அவைதாம்,
இ உ ஐ ஓ என்னும் இறுதி
அப்பால் நான்கே உயர்திணை மருங்கில்
மெய்ப்பொருள் சுட்டிய விளிகொள் பெயரே.

---

603. கொள்ளும் - தம்மை ஏற்கும். இயற்கைய - இயல்பினையுடைய.

604. அவ் - அவை; இவ்வென - இவையென. மெய் பெறக் கிளப்ப - நன்கு வழக்குத் தோன்ற விதந்து கூறப்படும்.

605. அப் பால் நான்கு - அப் பகுதிப்பட்ட நான்கு பெயர். 'உயர்திணை மருங்கின்' என்றார். உயர்திணைப் பெயருள் என்றற்கு. உயர்திணையிடத்து மெய்ப்பொருள் சுட்டிய என்றது, அஃறிணைப் பெயரும் விரவுப்பெயரும் ஆகுபெயராய் உயர்திணைக்கண் வருமிடத்து, அவ்விடத்து மெய்ப்பொருளாகிய உயர்திணைப்பொருள் கருதிய என்றற்கு. விளிகொள் பெயர் அப்பால் நான்கே என்க.

### அவற்றுள், இகர ஐகார ஈறுகள்

606. அவற்றுள்,
இ ஈ ஆகும் ஐ ஆய் ஆகும். ௪

### ஓகார உகர ஈறுகள்

607. ஓவும் உவ்வும் ஏயொடு சிவணும். ௫
608. உகரம் தானே குற்றிய லுகரம். ௬

### முடிபு

609. ஏனை உயிரே உயர்திணை மருங்கில்
தாம்விளி கொள்ளா என்மனார் புலவர். ௭

### அளபெடைப் பெயர்

610. அளபெடை மிகூஉம் இகர இறுபெயர்
இயற்கைய வாகுஞ் செயற்கைய என்ப. ௮

### முறைப் பெயர்

611. முறைப்பெயர் மருங்கின் ஐ என் இறுதி
ஆவொடு வருதற் குரியவும் உளவே ௯

### அண்மை விளி

612. அண்மைச் சொல்லே இயற்கை யாகும். ௧௦

### விளியேற்கும் புள்ளியீறுகள்

613. ன ர ல ள என்னும் அந்நான் கென்ப
புள்ளி யிறுதி விளிகொள் பெயரே. ௧௧

---

610. இயல்பாக ஒரு குறில் அளபெடுத்ததினும் மிக்குத் 'தொழீஇ' 'தொழீஇஇ' என இரண்டு குறில் மூன்று குறில் அளபெடுத்தவிடத்தும் என்றற்கு, 'அளபெடை மிகூஉம்' என்றார். இயற்கையவாகும் - இகரம் ஈயாகாது இயல்பாக விளியேற்கும். செயற்கைய - செயலுடைய வென்பது.

முடிபு

614. ஏனைப் புள்ளி யீறுவிளி கொள்ளா. ௧௨

அவற்றுள், னகர ஈறு

615. அவற்றுள்,
அன் என் இறுதி ஆவா கும்மே. ௧௩

அதன்கண், அண்மை விளி

616. அண்மைச் சொல்லிற்கு அகரம் ஆகும். ௧௪

ஆன் என்னும் ஈறு

617. ஆன் என் இறுதி இயற்கை யாகும். ௧௫

அதன்கண், வினையாலணையும் பெயர்

618. தொழிலிற் கூறும் ஆன் என் இறுதி
ஆய் ஆ கும்மே விளிவயி னான. ௧௬

பண்புப் பெயர்

619. பண்புகொள் பெயரும் அதனோ ரற்றே. ௧௭

அளபெடைப் பெயர்

620. அளபெடைப் பெயரே அளபெடை யியல. ௧௮

முறைப் பெயர்

621. முறைப்பெயர்க் கிளவி ஏயொடு வருமே. ௧௯

---

616. அகரம் ஆகும் - அன ஈறு அகரம் ஆகும். ஊரன் என்பது ஊர என வருதல்.

618. தொழிலில் - வினைச்சொல்லில்.

620. அளபெடை இயல - மிககு அளபெடுத்தலால் விளிப் பொருள் கொள்ளும் இயலபினையுடைய.

621. முறைபபெயர் எனறது, ஈண்டு னகர ஈற்று முறைப் பெயர்.

**னகர ஈற்றுள் விளியேலாதவை**

622. தான் என் பெயருஞ் சுட்டுமுதற் பெயரும்
யான் என் பெயரும் வினாவின் பெயரும்
அன்றி அனைத்தும் விளிகோள் இலவே. உ0

**ரகார ஈறு**

623. ஆரும் அருவும் ஈரொடு சிவணும். உக

**அதன்கண், வினையாலணையும் பெயர்**

624. தொழிற்பெய ராயின் ஏகாரம் வருதலும்
வழுக்கின் றென்மனார் வயங்கி யோரே. உஉ

**பண்புப் பெயர்**

625. பண்புகொள் பெயரும் அதனோ ரற்றே. உங

**அளபெடைப் பெயர்**

626. அளபெடைப் பெயரே அளபெடை யியல. உச

**ரகர ஈற்றுள் விளி ஏலாதவை**

627. சுட்டுமுதற் பெயரே முற்கிளந் தன்ன. உரு

---

622. இந் நூற்பாவிற் கூறும் பெயர்களை னகர ஈற்றுப் பெயர்களாகக் கொள்க. அனைத்தும் - அவ்வனைத்தும். விளிகோள இல - விளி கொள்ளுதல் இல்லாதன; விளியேலா என்பது.

623. ஆரும் அருவும் என்றது, ஆர் அர் ஈறுகள்.

624. முன் நூற்பாவிற் கூறிய ஆர் அர் எனும் இரண்டீறுகளும் வரும் இடம் வினையாலணையும் பெயராயின என்றற்கு, தொழிற்பெயராயின என விதந்தார். வயங்கியோர் - விளங்கிய அறிவினையுடையார்.

625. பண்புகொள் பெயர், கரியர், இளையர் போல்வன.

627. முற்கிளந்தன்ன - முன்பு (கஉஉ) னகர ஈற்றுச் சுட்டு முதற்பெயர்க்குக் கூறியதுபோல் விளிகொள்ளுதல் இல்லை.

628. நும்மின் திரிபெயர் வினாவின் பெயரென்று
அம்முறை யிரண்டும் அவற்றியல் பியலும். ௨௬

**லகர ளகர ஈறு**

629. எஞ்சிய இரண்டின் இறுதிப் பெயரே
நின்ற ஈற்றயல் நீட்டம் வேண்டும். ௨௭

630. அயல்நெடி தாயின் இயற்கை யாகும். ௨௮

**ளகர ஈற்று வினைப்பெயரும் பண்புப்பெயரும்**

631. வினையினும் பண்பினும்
நினையத் தோன்றும ஆள் என் இறுதி
ஆய் ஆ கும்மே விளிவயி னான. ௨௯

**முறைப் பெயர்**

632. முறைப்பெயர்க் கிளவி முறைப்பெய ரியல. ௩௦

**ளகார ஈற்றுள் விளி யேலாதவை**

633. சுட்டுமுதற் பெயரும் வினாவின் பெயரும்
முற்கிளந் தன்ன என்மனார் புலவர். ௩௧

---

**628.** 'நும்'மின் திரிபெயர், 'நீவிர்'. வினாவின் பெயர், 'யாவர்'. அம் முறை - அம் முறைமையினையுடைய. அவற்றியல் பியலும் என்றார், விளி ஏலா என்றற்கு.

**629.** எஞ்சிய இரண்டு என்றது, இதுகாறும் உணர்த்தாது எஞ்சி நின்ற லகர ளகார ஈறு. அயல் - அயலெழுத்து. தோன்றல் தோன்றால் எனவும், மக்கள் மக்காள் எனவும் வரும்.

**630.** இயற்கையாகும் - அவ் வியல்பில் நின்றே விளிப் பொருள் ஏற்கும்.

**631.** வினையினும் - வினைச் சொல்லின் கண்ணும். பண்பினும் - பண்புச் சொல்லின் கண்ணும். நினைய - எங்ஙனம் விளிகொள்ளுமென நினையும்படி.

**லகர ளகர ஈற்று அளபெடைப் பெயர்**

634. அளபெடைப் பெயரே அளபெடை யியல. ௩௨

## ௩. விரவுப்பெயர் விளியேற்குமாறு

635. கிளந்த இறுதி அஃறிணை விரவுப்பெயர்
விளம்பிய நெறிய விளிக்குங் காலை. ௩௩

## ௪. அஃறிணைப்பெயர் விளியேற்குமாறு

636. புள்ளியும் உயிரும் இறுதி யாகிய
அஃறிணை மருங்கின் எல்லாப் பெயரும்
விளிநிலை பெறாஉங் காலம் தோன்றின்
தெளிநிலை உடைய ஏகாரம் வரலே. ௩௪

## ௫. புறனடை

**மூவகைப் பெயரினுஞ் சேய்மைவிளி**

637. உளவெனப் பட்ட எல்லாப் பெயரும்
அளபிறந் தனவே விளிக்குங் காலைச்
சேய்மையின் இசைக்கும் வழக்கத் தான. ௩௫

---

635. கிளந்த இறுதி - விளியேற்குமெனக் கிளந்த ஈற்றுகளையும் உடைய. விளம்பிய நெறிய - ஈண்டு விதித்த முறைமையினையே உடையன.

636. தெளிநிலை என்றது, தெளியப்பட்ட உண்மையென்றற்கு.

637. உளவெனப்பட்ட - விளியேற்கும் இயைபுள்ளன எனப்பட்ட. எல்லாப் பெயரும் என்றது, உயர்திணை, அஃறிணை, விரவுப்பெயர் என்னும் மூவகைப் பெயரும் என்றற்கு. அளபு இறந்தன - மாத்திரை மிகக்கொலித்த இயல்பின. சேய்மைக்கண் விளிக்கும் வழக்கில் அளபிறந்தன வெனக், சேய்மையின - தொலைவில்.

### 'அம்ம' என்னும் இடைச்சொல் விளி

638. அம்ம என்னும் அசைச்சொல் நீட்டம்
அம்முறைப் பெயரொடு சிவணா தாயினும்
விளியொடு கொள்ப தெளியு மோரே. ௩௬

### உயர்திணைப் பெயருள் விளியேலாதவை

689. தநநு எஎன அவைமுத லாகித்
தன்மை குறித்தன ரஎன் இறுதியும்
அன்ன பிறவும் பெயர்நிலை வரினே
இன்மை வேண்டும் விளியொடு கொளலே. ௩௭

---

638. நீட்டம் என்றது, 'அம்மா' வென்பதை நினைந்து. அம் முறைப் பெயரொடு - முன் நூற்பாக்களில் எடுத்துக் காட்டிய விளிகொள்ளும் முறைமையினையுடைய பெயர்களோடு. விளியொடு கொள்ப - விளிப்பொருளோடு கொள்வர் என்றபடி; விளியேற்றதாகக் கொள்வர் என்பது.

639. தன்மை குறித்த - தம்மைச் சேர்ந்தவரென்னும் முறைமையினைக் குறித்த. பெயர் நிலை வரினே - பெயர்ச்சொல் நிலையின வரின; பெயர்ச் சொல்லாய் வரின் என்க. விளியொடு கொளல் இன்மை வேண்டும் என்றது, விளி ஏலா என்றற்கு.

# ரு. பெயரியல்

[பெயர்ச்சொல்லின் இலக்கணம் உணர்த்துவது.]

## க. சொற்களின் இயல்பு

**சொற்கள் பொருளுணர்த்தல்**

640. எல்லாச் சொல்லும் பொருள்குறித் தனவே. க

**சொல், தன்மையும் பொருளையும் உணர்த்தல்**

641. பொருண்மை தெரிதலும் சொன்மை தெரிதலும்
சொல்லின் ஆகும் என்மனார் புலவர். உ

**குறிப்பும், வெளிப்படையும்**

642. தெரிபுவேறு நிலையலும் குறிப்பின் தோன்றலும்
இருபாற் றென்ப பொருண்மை நிலையே. ௩

**சொற்களின் பாகுபாடு**

643. சொல்லெனப் படுப பெயரே வினை என்று
ஆயிரண் டென்ப அறிந்திசி னோரே. ச

644. இடைச்சொல் கிளவியும் உரிச்சொல் கிளவியும்
அவற்றுவழி மருங்கில் தோன்றும் என்ப. ரு

---

641. சொன்மை தெரிதலாவது, சொல் தன்மையே உணர்த்துதல்; 'தஞ்சக கிளவி' என்பது காட்டு.

642. தெரிபு நிலையல் - தெரிந்த பொருளில் நிற்றல். இங்ஙனம் ஒரு வகையும் எனற்கு வேறு என வந்தது.

643. அறிந்திசினோர் - அறிந்தோர்; இசின், அசைநிலை.

644. அவற்றுவழி மருங்கில் - அவற்றின் சார்பில்.

## உ. பெயர்ச்சொல்லின் இலக்கணம்

645. அவற்றுள்,
பெயர்எனப் படுபவை தெரியுங் காலை
உயர்திணைக் குரிமையும் அஃறிணைக்குரி மையும்
ஆயிரு திணைக்குமோ ரன்ன உரிமையும்
அம்மூ வுருபின தோன்ற லாறே. ௬

646. இருதிணைப் பிரிந்த ஐம்பாற் கிளவிக்கும்
உரியவை உரிய பெயர்வயி னான. ௭

## ௩. உயர்திணைப் பெயர்கள்

647. அவ்வழி,
அவன்இவன் உவன்என வரூஉம் பெயரும்
அவள்இவள் உவள்என வரூஉம் பெயரும்
அவர்இவர் உவர்என வரூஉம் பெயரும்
யான்யாம் நாம்என வரூஉம் பெயரும்
யாவன் யாவள் யாவர்என்னும்
ஆவயின் மூன்றொடு அப்பதி னைந்தும்
பாலறி வந்த உயர்திணைப் பெயரே. ௮

---

645. ஓரன்ன உரிமை - ஒரு தன்மையான உரிமை; அஃதாவது ஒத்த உரிமை என்றது, விரவுப் பெயரை. அம்மூ உருபின - அம் மூன்று வடிவினையுடைய; அதாவது, அம் மூவகை வேறுபாட்டினையுடைய. தோன்றலாறு - தோன்று நெறிக்கண்.

646. இருதிணைக்கும் உரிமையின்றிச் சார்புபற்றிப் பால் உணர்த்துதற்குரிய சொற்களும் பெயரில் அடங்குதற்குரிய என்பது இந் நூற்பாவின் கருத்து.

647. அவ்வழி - முற்கூறிய மூன்று கூறான முறைமையில். ஆவயின் - அவ் விருபொருளிடத்தவான. பால அறி வந்த - மூன்று பாலினையும் அறியும்படி வந்த.

### இதுவும் அது

648. ஆண்மை அடுத்த மகன்என் கிளவியும்
பெண்மை அடுத்த மகள்என் கிளவியும்
பெண்மை அடுத்த இகர இறுதியும்
நம் ஊர்ந்து வரூஉம் இகர ஐ காரமும்
முறைமை சுட்டா மகனும் மகளும்
மாந்தர் மக்கள் என்னும் பெயரும்
ஆடூஉ மகடூஉ ஆயிரு கிளவியும்
சுட்டுமுத லாகிய அன்னும் ஆனும்
அவைமுத லாகிய பெண்டுஎன் கிளவியும்
ஒப்பொடு வரூஉங் கிளவியொடு தொகைஇ
அப்பதி னைந்தும் அவற்றோ ரன்ன. ௧

### இதுவும் அது

649. எல்லாரும் என்னும் பெயர்நிலைக் கிளவியும்
எல்லீரும் என்னும் பெயர்நிலைக் கிளவியும்

---

**648.** ஆண்மை அடுத்த மகனென் கிளவி, 'ஆண் மகன்'. பெண்மை அடுத்த இகர இறுதி, 'பெண்டாட்டி'. நம் ஊர்ந்து வரும் இகரம், நம் ஊர்ந்து வரும் ஐகாரம் என்பன, 'நம்பி' 'நங்கை'. முறைமை - உறவு முறைமை. சுட்டுமுதல் ஆகிய அன் ஆன் என்பன, 'இவன்' 'இனனுன்' போல்வன. அவை முதலாகிய - அச் சுட்டெழுத்துக்கள் முதலாகிய. ஒப்பொடு வருங் கிளவி, பொன்னன்னாள். தொகைஇ - கூடி. அவற்றோரன்ன - முற்கூறிய பதினைந்து பெயர்களோடு ஒப்பக் கருதப்படுந் தன்மையன. என்றது, பாலறிவந்த உயர்திணைப் பெயர்கள் என்றபடி.

பெண்மை அடுத்த மகன்என் கிளவியும்
அன்ன இயல என்மனார் புலவர். க0

### இதுவும் அது

650. நிலப்பெயர் குடிப்பெயர் குழுவின் பெயரே
வினைப்பெயர் உடைப்பெயர் பண்புகொள் பெயரே
பல்லோர்க் குறித்த முறைநிலைப் பெயரே
பல்லோர்க் குறித்த சினைநிலைப் பெயரே
பல்லோர்க் குறித்த திணைநிலைப் பெயரே
கூடிவரு வழக்கின் ஆடியல் பெயரே
இன்றிவர் என்னும் எண்ணியல் பெயரொடு
அன்றி அனைத்தும் அவற்றியல் பினவே. கக

---

649. பெயர் நிலை - பெயர்த்தன்மையுடைய. பெண்மையடுத்த மகனென் கிளவி, 'பெண்மகன'; புறத்துப்போய் விளையாடும் பேதைப் பருவத்துப் பெண்மகளைக் கொற்கை நாட்டார் 'பெண்மகன்' என்று வழங்குப வென்பர், சேனா.

650. நிலப்பெயர் முதல் எண்ணியல் பெயர் வரையில் அவற்றிற்கு எடுத்துக் காட்டு முறையே சோழியன, சேரமான், அவையத்தார், கொல்லர், பேரூர்கிழான, கரியன, தாயர், பெருந்தோளர், வேட்டுவர், பட்டிபுத்திரர், ஒருவர் என்பன. கூடிவரு வழக்கின் ஆடியல் பெயர் - சிறூர் தம்மிற் கூடி விளையாடி வருகின்ற வழக்கில் அவ் விளையாட்டியல்பு குறித்துத் தாமே படைத்துக்கொண்ட பெயர். இன்றிவர் - இத்துணையர். அன்றியனைத்தும் - அவ்வனைத்தும்.

### புறனடை

651. அன்ன பிறவும் உயர்திணை மருங்கில்
பன்மையும் ஒருமையும் பால்அறி வந்த
என்ன பெயரும் அத்திணை யவ்வே. ௧௨

## ௪. அஃறிணைப் பெயர்கள்

652. அதுஇது உதுஎன வரூஉம் பெயரும்
அவைமுத லாகிய ஆய்தப் பெயரும்
அவைஇவை உவைஎன வரூஉம் பெயரும்
அவைமுத லாகிய வகரப் பெயரும்
யாதுயா யாவை என்னும் பெயரும்
ஆவயின் மூன்றொடு அப்பதி னைந்தும்
பால்அறி வந்த அஃறிணைப் பெயரே. ௧௩

### இதுவும் அது

653. பல்ல பலசில என்னும் பெயரும்
உள்ள இல்ல என்னும் பெயரும்
வினைப்பெயர்க் கிளவியும் பண்புகொள் பெயரும்
இனைத்தெனக் கிளக்கும் எண்ணுக்குறிப் பெயரும்

---

**651.** என்ன பெயரும் - எல்லாப் பெயரும். அத்திணை யவ்வே - அத் திணையவே.

**652.** அவை முதலாகிய - அச் சுட்டுக்கள் முதலாகிய ; என்றது, அஃது இஃது உஃது எனபன. வகரப்பெயர், அவ், இவ், உவ், எனபன. ஆவயின - அவ் வினாப் பொருளிடத்தவான. முதல் நான்கு வரிகளால் சுட்டுப்பெயர் உரைத்தமையால், யாது யா யாவை எனபன வினாப்பொருள வென்று வேறுரைத்தற்கு 'ஆவயின மூன்றொடு' என மேலும் விதந்து சென்றார். பெயருமாகிய ஆவயின் மூன்றொடு என இயைக்க.

ஒப்பி னாகிய பெயர்நிலை உளப்பட
அப்பால் ஒன்பதும் அவற்றோ ரன்ன. கச

அவற்றிற்குக் கள் விகுதி

654. கள்ளொடு சிவணும் அவ்வியற் பெயரே
கொள்வழி யுடைய பலஅறி சொற்கே. கரு

புறனடை

655. அன்ன பிறவும் அஃறிணை மருங்கில்
பன்மையும் ஒருமையும் பால்அறி வந்த
என்ன பெயரும் அத்திணை யவ்வே. கசு

அவை, விகுதி பெறுமற் பாலுணர்த்துமாறு

656. தெரிநிலை யுடைய அஃறிணை இயற்பெயர்
ஒருமையும் பன்மையும் வினையொடு வரினே.

## ரு. விரவுப் பெயர்கள்

திணை தெரியுமாறு

657. இருதிணைச் சொற்கும் ஓரன்ன உரிமையின்
திரிபுவேறு படூஉம் எல்லாப் பெயரும்
நினையுங் காலைத் தந்தம் மரபின்
வினையோ டல்லது பால்தெரி பிலவே. கஅ

653. வினைப்பெயர்க ளாவி எனறது, 'வருவது' 'வருவன' எனபவை

654. கள, பலவின் ஈறு. அவ்வியற பெயர் - அவ்வஃறிணை யியற்பெயர்.

656. தெரிநிலையுடைய - பால் அறியப்படும் நிலைமையை யுடைய வினையொடு வரின - வினைசசொலலோடு தொடர்ந்து வரின.

657. உரிமையின் - உரிமைய வாதலின். திரிபு வேறு படூஉம் - உயர்திணை அஃறிணைககண் நின்று அவ் வத்திணை யாய்த் திரிதல் மேவி வேறுபடுகின்ற. எல்லாப் பெயரும் -

விரவுப்பெயரின் தொகை வகை

658. நிகழூஉ நின்ற பால்வரை கிளவியின்
உயர்திணை ஒருமை தோன்றலு முரித்தே
அன்ன மரபின் வினைவயி னான. கக

விரவுப் பெயரின் தொகை, வகை

659. இயற்பெயர், சினைப்பெயர், சினைமுதற்பெயரே
முறைப்பெயர்க் கிளவி, தாமே, தானே,
எல்லாம் நீயிர், நீ, எனக் கிளந்து
சொல்லிய அல்ல பிறவும் ஆஅங்கு
அன்னவை தோன்றின் அவற்றொடுங் கொளலே.

அவற்றின் விரி

660. அவற்றுள்,
நான்கே இயற்பெயர்; நான்கே சினைப்பெயர்,
நான்கென மொழிமனார் சினைமுதற் பெயரே;
முறைப்பெயர்க் கிளவி இரண்டா கும்மே;
ஏனைப் பெயரே தத்தம் மரபின. உக

---

எல்லா விரவுப் பெயர்களும். தத்தம் மரபின - அவ்வத்திணை முறைமையினையுடைய. பால் தெரிபு இல - திணை தெரிதல் இல்லன. பால், திணைப் பிரிவு எனினும் பொருட்டு.

658. நிகழூஉ நின்ற - நிகழ்காலம் பற்றி வருகின்ற. பால்வரை கிளவியின் - தன்னியல்பிற பால் புலப்படுத்தாத சொல்லான், என்றது, 'செய்யும்' என்னும் முற்றுச் சொல்லான்.

659. சொல்லிய அல்ல பிறவும் - இசசொல்லிய அல்லாதனவான பிறவும்.

660. ஏனைப்பெயர், தாம் தான் முதலியன. தத்தம் மரபின - தத்தம் ஓரே சொல்வகையின,

அவற்றுள், இயற்பெயர்

661. அவைதாம்,
பெண்மை இயற்பெயர் ஆண்மை இயற்பெயர்
பன்மை இயற்பெயர் ஒருமை இயற்பெயர் என்று
அந்நான்கு என்ப இயற்பெயர் நிலையே. உ௨

சினைப்பெயர்

662. பெண்மைச் சினைப்பெயர் ஆண்மைச் சினைப்பெயர்
பன்மைச் சினைப்பெயர் ஒருமைச் சினைப்பெயர் [என்று
அந்நான்கு என்ப சினைப்பெயர் நிலையே. உ௩

சினைமுதற்பெயர்

663 பெண்மை சுட்டிய சினைமுதற் பெயரே
ஆண்மை சுட்டிய சினைமுதற் பெயரே
பன்மை சுட்டிய சினைமுதற் பெயரே
ஒருமை சுட்டிய சினைமுதற் பெயரென்று
அந்நான்கு என்ப சினைமுதற் பெயரே. உ௪

முறைப்பெயர்

664. பெண்மை முறைப்பெயர் ஆண்மைப் முறைப் [பெயர் என்று
ஆயிரண் டென்ப முறைப்பெயர் நிலையே. உ௫

பெண்மை சுட்டிய பெயர்

665. பெண்மை சுட்டிய எல்லாப் பெயரும்
ஒன்றற்கும் ஒருத்திக்கும் ஒன்றிய நிலையே. உ௬

ஆண்மை சுட்டிய பெயர்

666. ஆண்மை சுட்டிய எல்லாப் பெயரும்
ஒன்றற்கும் ஒருவற்கும் ஒன்றிய நிலையே. உ௭

665. ஒன்றிய நிலையே - பொருந்திய நிலையினையுடையது.

**பன்மை சுட்டிய பெயர்**

667. பன்மை சுட்டிய எல்லாப் பெயரும்
ஒன்றே பலவே ஒருவர் என்னும்
என்றிப் பாற்கும் ஓரன் னவ்வே. ௨௮

**ஒருமை சுட்டிய பெயர்**

668. ஒருமை சுட்டிய எல்லாப் பெயரும்
ஒன்றற்கும் ஒருவற்கும் ஒன்றிய நிலையே. ௨௯

**தாம் என்னும் பெயர்**

669. தாம் என் கிளவி பன்மைக் குரித்தே. ௩0

**தான் என்னும் பெயர்**

670. தான் என் கிளவி ஒருமைக் குரித்தே. ௩௧

**எல்லாம் என்னும் பெயர்**

671. எல்லாம் என்னும் பெயர்நிலைக் கிளவி
பல்வழி நுதலிய நிலைத்தா கும்மே. ௩௨

**அதற்கு, மேலும் ஒரு விதி**

672. தன்னுள் உறுத்த பன்மைக் கல்லது
உயர்திணை மருங்கின் ஆக்கம் இல்லை. ௩௩

---

667. என்று இப் பாற்கும் - என்று இம் முப்பாற்கும். ஓரன்னவ்வே - ஓரன்னவே; ஒத்து வருவன என்றபடி.

671. பல்வழி யென்றது, பன்மை.

672. தன்னுள் உறுத்த பன்மை யென்றது, தன்மைப் பன்மை; உயர்திணை மருங்கின, பிறபன்மைக்கு ஆக்கமில்லை யென்றபடி; ஆக்கமென்பது பெருக்கமாதலின, சிறுபான்மை அவற்றிற்கும் வருமென்பது.

**'நீயிர்', 'நீ' என்னுஞ் சொற்கள்**

673. நீயிர் நீ என வரூஉங் கிளவி
பால்தெரி பிலவே உடன்மொழிப் பொருள.

**அவற்றுள், 'நீ' என்னுஞ் சொல்**

674. அவற்றுள்,
நீ என் கிளவி ஒருமைக் குரித்தே. ௩௫

**'நீயிர்' என்னுஞ் சொல்**

675. ஏனைக் கிளவி பன்மைக் குரித்தே. ௩௬

**'ஒருவர்' என்னுஞ் சொல்**

676. ஒருவர் என்னும் பெயர்நிலைக் கிளவி
இருபாற்கும் உரித்தே தெரியுங் காலை. ௩௭

**அதன் வினை முடிபு**

677. தன்மை சுட்டின் பன்மைக்கு ஏற்கும் ௩௮

**'நீயிர்' 'நீ' 'ஒருவர்' என்னுஞ் சொற்களுக்கு மேலும் ஒரு முடிபு**

678. இன்ன பெயரே இவை எனல் வேண்டின்
முன்னம் சேர்த்தி முறையின் உணர்தல். ௩௯

---

673. பால் - திணைப்பிரிவு. உடன் மொழிப்பொருள - இருதிணைகட்கும் ஒருங்கு பொருந்தும் சொற்பொருண்மையுடையன.

676. இருபாற்கும் - ஒருவன் ஒருத்தி என்னும் இரு பாற்கும்.

677. தன்மை சுட்டின் - அதன் சொற்றன்மை கருதுமிடத்து. பன்மைக்கு - பன்மை வினை கொள்ளுதற்கு. ஏற்கும் - உரியதாகும்.

678. இன்ன பெயர் - இன்ன திணைப்பெயர். முன்னம் - குறிப்பு; சொல்லுவான குறிப்போடு கூட்டியென்க.

### பால்திரிந்த பெயரின் வினை முடிபு

679. மகடூஉ மருங்கின் பால்திரி கிளவி
மகடூஉ இயற்கை தொழில்வயி னான. ௪௦

### பெயரீறு செய்யுளுள் திரிதல்

680. ஆ ஓ ஆகும் பெயருமா ருளவே
ஆயிடன் அறிதல் செய்யு ளுள்ளே ௪௧

### உயர்திணை ஈறு அமைந்த விரவுப் பெயர்கள்

681. இறைச்சிப் பொருள்வயின் செய்யுளுள் கிளக்கும்
இயற்பெயர்க் கிளவி உயர்திணை சுட்டா
நிலத்துவழி மருங்கில் தோன்ற லான. ௪௨

---

679. மகடூஉ மருங்கின பால் திரி கிளவி, 'பெண்மகன்' என்பது. (நூறபா ௯௪௯ - ன குறிப்புப் பார்க்க.) தொழில் வயின் - வினை கொள்ளுமிடத்து. மகடூஉ இயற்கை - பெண் பால் இயல்பினையுடையது. 'பெண்மகன வந்தான்' எனப் பெண்பால் இயல்பில் வினைகொள்ளுமென்பது.

680. நல்லார் என்பது, 'நல்லோர்' என வருதல். அறிதல் அறிந்துகொள்க.

681. இறைச்சிப் பொருள்வயின் - கருப்பொருள் கூறு மிடத்து. இயறபெயர்க் கிளவி - உயர்திணை ஈறு அமைந்த இயறுபெயர்க் கிளவி; 'கடுவன முதுமகன' 'வனபறழ்க் குமரி' போல்வன. குறிஞ்சி முதலிய நிலவியறகையின் சார்பிற் கருப் பொருளாய்த் தோனறலான, அவ் விரவுப் பெயர்கள் அஃறிணைப் பொருளவாம எனபது கருத்து.

682. திணையொடு பழகிய பெயரலங் கடையே. ௪௩

---

682. திணையொடு பழகிய பெயரலங்கடையே - அவ்வத் திணைககுரியவாய வழங்கப்பட்டு வரும் விரவுப் பெயரல்லாத விடதது எனக. அபபெயர் 'காளை' 'விடலை' முதலியன. இவை உயாதிணையிடத்து அத் திணைககுரியவாய் வழங்குதலின், இவைடல்லாதவிடத்து என்ருர். ஏனைய, உயர்திணை சுட்டா என முன் நூறபாவொடு இயைத்துக காண்க.

# ௬. வினையியல்

[வினைச்சொல்லின் இலக்கணம் உணர்த்துவது.]

## ௧. வினைச்சொல்லின் பொதுவியல்பு

### வினை இன்னதென்பது

683. வினையெனப் படுவது வேற்றுமை கொள்ளாது
நினையுங் காலைக் காலமொடு தோன்றும் ௧

### காலம்

684. காலந் தாமே மூன்றென மொழிப. ௨

### காலத்தின் பெயர் முதலியன

685. இறப்பின் நிகழ்வின் எதிர்வின் என்றா
அம்முக் காலமுங் குறிப்பொடுங் கொள்ளும்
மெய்ந்நிலை யுடைய தோன்ற லாறே. ௩

### வினைச்சொற்களின் வகை

686. குறிப்பினும் வினையினும் நெறிப்படத் தோன்றிக்
காலமொடு வரூஉம் வினைச்சொ லெல்லாம்
உயர்திணைக் குரிமையும் அஃறிணைக் குரிமையும்
ஆயிரு திணைக்குமோ ரன்ன உரிமையும்
அம்மூ வுருபின தோன்ற லாறே. ௪

---

683. வேற்றுமை - பெயர்க்குக் கூறிய எட்டு வேற்றுமைகள். ஈண்டு, அவற்றின் உருபுகளென்க. காலம் என்பது மேற்கூறப்படும்.

685. குறிப்பொடுங் கொள்ளும் - வெளிப்படையாக வன்றிக் குறிப்பாகவும் வரும். மெய்ந்நிலையுடைய - பொருண்மையுடைய. தோன்றலாறு - அவை வழங்குநெறிக்கண்.

686. தெரிநிலை வினையில் தொழில் தெளிவாகத் தெரிதல் பற்றி அதனை 'வினையினும்' என்றார். அம்மூ உருபின - அம்மூவகையின.

## உ. உயர்திணை வினை

### தன்மைப்பன்மை வினைமுற்று

687. அவைதாம்,
அம் ஆம் எம் ஏம் என்னுங் கிளவியும்
உம்மொடு வரூஉங் க ட த ற என்னும்
அந்நாற் கிளவியோடு ஆயெண் கிளவியும்
பன்மை உரைக்குந் தன்மைச் சொல்லே. ரு

### தன்மை ஒருமை வினைமுற்று

688. க ட த ற என்னும்,
அந்நான் கூர்ந்த குன்றிய லுகரமோடு
என் ஏன் அல்என வரூஉம் ஏழும்
தன்வினை யுரைக்குந் தன்மைச் சொல்லே. சு

### 'செய்கு' என்னும் வாய்பாட்டுவினை

689. அவற்றுள்,
செய்குஎன் கிளவி வினையொடு முடியினும்
அவ்வியல் திரியாது என்மனார் புலவர். எ

---

687. என்னும் கிளவியும் - என்னும் ஈறுடைய சொல்லும். உம்மொடு வருஉங் க ட த ற வென்பன கும் டும் தும் றும் என்னும் ஈறுகள.

688. ஊர்ந்த - ஏறிய. குன்றியலுகரம் ஊர்ந்த க ட த ற, கு டு து று. தன் வினை உரைக்கும் - பிறரை உளப் படுத்தாது தன வினையை உணர்த்தும் என்றபடி. எனவே, தனமை ஒருமைககு இவை உரிய வென்பது பெறப்பட்டது.

689. செய்கு என் கிளவி - செய்கு என்னும் வாய்பாட்டு முற்றுச்சொல். அவ் வியல் - வினைமுற்ருகிய அவ் வியல்பு.

**படர்க்கை ஒருமை வினைமுற்று**

690. அன் ஆன் அள் ஆள் என்னும் நான்கும்
ஒருவர் மருங்கில் படர்க்கைச் சொல்லே. அ

**படர்க்கைப் பன்மை வினைமுற்று**

691. அர் ஆர் ப எனவரூஉம் மூன்றும்
பல்லோர் மருங்கில் படர்க்கைச் சொல்லே. கூ

**'செய்மார்' என்னும் வாய்பாட்டு வினை**

692. மாரைக் கிளவியும் பல்லோர் படர்க்கை;
காலக் கிளவியொடு முடியும் என்ப. க0

**உயர்திணைக்குரிய வினைமுற்றுக்கள்**

693. பன்மையும் ஒருமையும் பால்அறி வந்த
அந்நா லைந்தும் மூன்றுதலை யிட்ட
முன்னுறக் கிளந்த உயர்திணை யவ்வே. கக

**தன்மைப் பன்மை வினைக்கு ஒரு வேறுபாடு**

694. அவற்றுள்,
பன்மை யுரைக்குந் தன்மைக் கிளவி
எண்ணியல் மருங்கில் திரிபவை உளவே. கஉ

---

690. 'ஒருவர் மருங்கில்' என்றது, ஒருமைப்பாலில் என்னும் பொருட்டு.

692. மாரைக் கிளவி - மார் என்னும் ஈறு. காலக் கிளவியொடு முடியும் - வினைச் சொல்லோடு இயைந்து வரும்; என்னுமார் கொண்மார் என.

693. பால் அறி வந்த - பால் அறிய வந்த. அந்நாலைந்தும் மூன்று தலையிட்டனவென்க. என்றது, இருபத்துமூன்று ஈறுகள். முன்னுறக் கிளந்த - முதலிற் கிளவியாகத்துட் கிளந்தெடுத்துக்கொண்ட.

694. பன்மை உரைக்குந் தன்மைக் கிளவி - தன்மைப் பன்மை ஈறுடைய உயர்திணைச் சொற்கள். எண்ணியல் மருங்கில் - எண்ணி முடிக்கும் முறைமையில். திரிபவை உள - அஃறிணைப் பொருளையும் உளப்படுத்துச் சொல்லுதலுடைய.

### 'யார்' என்னும் குறிப்பு முற்று

695. யாஅர் என்னும் வினாவின் கிளவி
அத்திணை மருங்கின் முப்பாற்கு முரித்தே. கசு

### வினைமுற்றுக்களின் ஈறுகளிற் சில திரியுமாறு

696. பால்அறி மரபின் அம்மூ ஈற்றும்
ஆ ஓ ஆகும் செய்யு ளுள்ளே. கஎ

697. ஆய் என் கிளவியும் அவற்றொடு கொள்ளும். கஅ

### குறிப்பு வினைமுற்று

698. அதுச்சொல் வேற்றுமை உடைமை யானும்
கண் என் வேற்றுமை நிலத்தி னானும்
ஒப்பி னானும் பண்பி னானும்என்று
அப்பால், காலம் குறிப்பொடு தோன்றும். ககூ

---

695. அத்திணை யென்றது, உயர்திணை.

696. பால் அறி மரபின் - பால் விளங்க வருந் தன்மை யினையுடைய. அம் மூ ஈறு; ஆன், ஆள், ஆர்.

697. ஆய் என் கிளவியும் - ஆய் என்னும் ஈறும். அவற்றொடு கொள்ளும் - அவற்றோடு பொருந்தி வரும்; என்றது. ஆ ஓவாய வரும் என்றபடி.

698. அதுச்சொல் வேற்றுமை யென்றது, ஆறும் வேற்றுமை. அவ் வேற்றுமையின உடைமைப் பொருளினும் என்றற்கு, உடைமையானும எனறூர். கண் என் வேற்றுமை யாவது ஏழாம் வேற்றுமை. அதன் இடப்பொருளினும் என்றற்கு நிலத்தினானும் எனறூர். இவற்றிற்கு முறையே 'குழையன்' 'இல்லத்தன்' என்பன காட்டு. ஒப்பினும் பண்பினும் வருதற்கு முறையே 'பொன்னன்னன்' 'கரியன்' என்பன காட்டு. என்று அப்பால் - என்று அப் பகுதிப்பட்ட சொற்களில்.

699. அன்மையின் இன்மையின் உண்மையின் [வன்மையின்
அன்ன பிறவும் குறிப்பொடு கொள்ளும்
என்ன கிளவியும் குறிப்பே காலம். ௧௭

**குறிப்பு வினைமுற்றின் ஈறு**

700. பன்மையும் ஒருமையும் பால்அறி வந்த
அன்ன மரபின் குறிப்பொடு வரூஉங்
காலக் கிளவி உயர்திணை மருங்கில்
மேலைக் கிளவியொடு வேறுபா டிலவே. ௧௮

## ௬. அஃறிணை வினை

**பன்மை வினைமுற்று**

701. அ ஆ வ என வரூஉம் இறுதி
அப்பால் மூன்றே பலவற்றுப் படர்க்கை. ௧௯

**ஒருமை வினைமுற்று**

702. ஒன்றன் படர்க்கை த ற ட ஊர்ந்த
குன்றிய லுகரத்து இறுதி யாகும். ௨0

---

*699.* அன்மை, இன்மை, உண்மை, வன்மை என்னும் பொருள்பற்றி வருவனவும் என்பது முதல் வரியின பொருள். பிறவும் - பிறவுமாகிய. என்ன கிளவியும் - எல்லாச் சொல்லும், காலம் குறிப்பே யென்க.

*700.* மரபின் - தன்மையில். 'மேலைக் கிளவி' யென்றது. முற்கூறிய தெரிநிலைவினைக் கிளவி. வேறுபாடில என்றது, அவற்றின ஈறே தமக்கும் ஈறாய் ஏற்பன ஏற்று ஒத்துவரு மென்பது.

*701.* பலவற்றுப் படர்க்கை - அஃறிணைப் பன்மைப் படர்க்கை.

### அஃறிணைக்குரிய வினைமுற்றுக்கள்

703\. பன்மையும் ஒருமையும் பால்அறி வந்த
அம்மூ விரண்டும் அஃறிணை யவ்வே உக

### 'எவன்' என்னுங் குறிப்புமுற்று

704\. அத்திணை மருங்கின் இருபாற் கிளவிக்கும்
ஒக்கும் என்ப எவன்என் வினவே. உஉ

### குறிப்பு வினைமுற்று

705\. இன்று இல உடைய என்னுங் கிளவியும்
அன்று உடைத்து அல்ல என்னுங் கிளவியும்
பண்புகொள் கிளவியும் உள என் கிளவியும்
பண்பி னாகிய சினைமுதற் கிளவியும்
ஒப்பொடு வரூஉங் கிளவியொடு தொகைஇ
அப்பாற் பத்தும் குறிப்பொடு கொள்ளும். உங

### குறிப்பு வினைமுற்றின் ஈறு

706\. பன்மையும் ஒருமையும் பால்அறி வந்த
அன்ன மரபின் குறிப்பொடு வரூஉங்
காலக் கிளவி அஃறிணை மருங்கில்
மேலைக் கிளவியொடு வேறுபா டிலவே. உச

---

703\. அம் மூவிரண்டும் என்றது, முன் இரண்டு நூற்பாக்களிலும் வந்த அ, ஆ, வ, து, று, டு எனனும் ஆறு ஈறுகளும்.

704\. 'அத் திணை' யென்றது, அஃறிணை.

705\. பண்பு கொள் கிளவி, 'கரிது' 'கரிய' என்பவை போல்வன. பண்பின ஆகிய சினை முதற கிளவி, 'வெண் கோட்டது' 'நெடுஞ் செவிய' எனபவை போல்வன. ஒப்பொடு வருஉங் கிளவி. 'பொனனனனது' 'பொன்னன்ன' போல்வன.

706\. இந் நூற்பா அஃறிணைக்கு. உயர்திணைக்குக் கூறிய 700-ஆம் நூற்பாவின் குறிப்பை நோக்குக.

## ௪. விரவு வினை

### பெயர், முறை, தொகை

707. முன்னிலை வியங்கோள் வினையெஞ்சு கிளவி
இன்மை செப்பல் வேறு என் கிளவி
செய்ம்மன செய்யும் செய்த என்னும்
அம்முறை நின்ற ஆயென் கிளவியும்
பிரிவுவேறு படூஉஞ் செய்திய வாகி
இருதிணைச் சொற்கும் ஓரன்ன உரிமைய. ௨௫

### அவற்றுள், முன்னிலை யொருமை வினைமுற்று

708. அவற்றுள்,
முன்னிலைக் கிளவி,
இ ஐ ஆய் என வரூஉம் மூன்றும்
ஒப்பத் தோன்றும் ஒருவர்க்கும் ஒன்றற்கும். ௨௬

---

707. முன்னிலை - முன்னிலை வினைமுற்று. வியங்கோள் - வியங்கோள் வினைமுற்று. இன்மை செப்பல் என்றது, இன்மையை உணர்த்தும் 'இல்லை' என்ற குறிப்பு முற்றுச் சொல். பிரிவு வேறுபடூஉம் செய்திய ஆகி - இருதிணைக்கும் பொதுவாகிய நிலையினின்றும் பிரிந்து ஒருகால் உயர்திணையையும் ஒருகால் அஃறிணையையும் உணர்த்தி வேறுபடுகின்ற தொழிலுடையன ஆகி.

708. என வரூஉம் மூன்றும் - என வருகின்ற மூன்று முற்றுச் சொல்லும். ஒருவர்க்கும் என்றது, உயர் திணைக்கண் ஆண்பாலும் பெண்பாலுமாகிய ஒருமைப்பாற்கும் என்றபடி.

### முன்னிலைப் பன்மை வினைமுற்று

709. இர் ஈர் மின் என வரூஉம் மூன்றும்
பல்லோர் மருங்கினும் பலவற்று மருங்கினும்
சொல்லோ ரனைய என்மனார் புலவர். உஎ

### ஏனை வினைகள்

710. எஞ்சிய கிளவி இடத்தொடு சிவணி
ஐம்பாற்கும் உரிய தோன்ற லாறே. உஅ

### வியங்கோள் வினை

711. அவற்றுள்,
முன்னிலை தன்மை ஆயீ ரிடத்தொடும்
மன்னா தாகும் வியங்கோட் கிளவி. உக

### செய்யும் என்னும் வினை

712. பல்லோர் படர்க்கை முன்னிலை தன்மை
அவ்வயின் மூன்றும் நிகழுங் காலத்துச்
செய்யும் என்னும் கிளவியொடு கொள்ளா. ஙய

---

710. எஞ்சிய கிளவி, ஏனை ஏழு வினைச்சொற்களும். இடத்தொடு - மூன்று இடத்தோடும்.

711. மன்னாதாகும் - நிலைபெறாதாகும்; எனவே, சிறுபான்மை வருதலுண்டென்பதுங் கொள்ளப்படும்.

712. படர்க்கை முன்னிலை தன்மையாகிய அவ்வயின் மூன்றும் என்க. நிகழுங் காலத்துச் செய்யுமென்னுங் கிளவி - நிகழ்காலத்தில் வரும் செய்யு மென்னுஞ் சொல்; இங்கே இது முற்றுச் சொல், எச்சச் சொல்லாயின் மூன்றுங் கொள்ளும். (நூற். எஉ0-காண்க.)

## ௬. விரவு வினை

### பெயர், முறை, தொகை

707. முன்னிலை வியங்கோள் வினையெஞ்சு கிளவி
இன்மை செப்பல் வேறு என் கிளவி
செய்ம்மன செய்யும் செய்த என்னும்
அம்முறை நின்ற ஆயென் கிளவியும்
பிரிவுவேறு படூஉஞ் செய்திய வாகி
இருதிணைச் சொற்கும் ஓரன்ன உரிமைய. ௨௫

**அவற்றுள், முன்னிலை யொருமை வினைமுற்று**

708. அவற்றுள்,
முன்னிலைக் கிளவி,
இ ஐ ஆய் என வரூஉம் மூன்றும்
ஒப்பத் தோன்றும் ஒருவர்க்கும் ஒன்றற்கும். ௨௬

---

707. முன்னிலை - முன்னிலை வினைமுற்று. வியங்கோள் - வியங்கோள் வினைமுற்று. இன்மை செப்பல் என்றது, இன்மையை உணர்த்தும் 'இல்லை' என்ற குறிப்பு முற்றுச் சொல். பிரிவு வேறுபடூஉம் செய்திய ஆகி - இருதிணைக்கும் பொதுவாகிய நிலையினின்றும் பிரிந்து ஒருகால் உயர்திணையையும் ஒருகால் அஃறிணையையும் உணர்த்தி வேறுபடுகின்ற தொழிலுடையன ஆகி.

708. என வரூஉம் மூன்றும் - என வருகின்ற மூன்று ஈற்றுச் சொல்லும். ஒருவர்க்கும் என்றது, உயர்திணைக்கண் ஆண்பாலும் பெண்பாலுமாகிய ஒருமைப்பாற்கும் என்றபடி.

### முன்னிலைப் பன்மை வினைமுற்று

709. இர் ஈர் மின் என வரூஉம் மூன்றும்
பல்லோர் மருங்கினும் பலவற்று மருங்கினும்
சொல்லோ ரனைய என்மனார் புலவர். ௨௭

### ஏனை வினைகள்

710. எஞ்சிய கிளவி இடத்தொடு சிவணி
ஐம்பாற்கும் உரிய தோன்ற லாறே. ௨௮

### வியங்கோள் வினை

711. அவற்றுள்,
முன்னிலை தன்மை ஆயீ ரிடத்தொடும்
மன்னா தாகும் வியங்கோட் கிளவி. ௨௯

### செய்யும் என்னும் வினை

712. பல்லோர் படர்க்கை முன்னிலை தன்மை
அவ்வயின் மூன்றும் நிகழுங் காலத்துச்
செய்யும் என்னும் கிளவியொடு கொள்ளா. ௩௰

---

710. எஞ்சிய கிளவி, ஏனை ஏழு வினைச்சொற்களும். இடத்தொடு - மூன்று இடத்தோடும்.

711. மன்னாதாகும் - நிலைபெறாதாகும்; எனவே, சிறுபான்மை வருதலுண்டென்பதுங் கொள்ளப்படும்.

712. படர்க்கை முன்னிலை தன்மையாகிய அவ்வயின் மூன்றும் என்க. நிகழுங் காலத்துச் செய்யுமென்னுங் கிளவி - நிகழ்காலத்தில் வரும் செய்யு மென்னுஞ் சொல்; இங்கே இது முற்றுச் சொல், எச்சச் சொல்லாயின் மூன்றுங் கொள்ளும். (நூற். ௭௨௦-காண்க.)

### வினையெச்ச வாய்பாடுகள்

713. செய்து செய்யூச் செய்பு செய்தெனச்
செய்யியர் செய்யிய செயின்செயச் செயற்கென
அவ்வகை யொன்பதும் வினையெஞ்சு கிளவி. ருக

714. பின் முன் கால் கடை வழி இடத்து என்னும்
அன்ன மரபின் காலங் கண்ணிய
என்ன கிளவியும் அவற்றியல் பினவே. ருஉ

### அவற்றுள், முதல் மூன்று வாய்பாடுகள்

715. அவற்றுள்,
முதனிலை மூன்றும் வினைமுதல் முடிபின. ருரு

716. அம்முக் கிளவியும் சினைவினை தோன்றின்
சினையொடு முடியா: முதலொடு முடியினும்
வினையோ ரனைய என்மனார் புலவர். ருச

---

713. வினையெஞ்சு கிளவி - வினையெச்சச் சொற்களாகும்.

714. என்னும் - என்னும் ஈறுடையவாய் வரும் என்க. அவற்றியல்பின - வினையெச்சத்தின வாய்பாடாம் இயல் புடையன.

715. அவற்றுள் - முன் இரண்டு நூற்பாக்களிலுங் கூறிய வினையெச்ச வாய்பாடுகள் பதினொன்றனுள். முதல் நிலை மூன்று - முதற்கண் நின்ற மூன்று; அவை, 'செய்து' 'செய்யூ' 'செய்பு'. வினைமுதல் முடிபின - தம் வினை முதலின் வினை கொண்டு முடிதலுடையன.

716. அவை சினைப்பொருளின் எச்சவினையாய் வரினும், முதற்பொருளின் வினையோடு ஒத்து முடியும் எனபது இந் நூற் பாவின் கருத்து. 'கை இற்று வீழ்ந்தான்' என்பது இதற்குக் காட்டு.

### ஏனை வாய்பாடுகள்

717. ஏனை எச்சம் வினைமுத லானும்
ஆன்வந் தியையும் வினைநிலை யானும்
தாம்இயல் மருங்கின் முடியும் என்ப. ௩௫

### வினையெச்சங்கள் அடுக்கி முடிதல்

718. பன்முறை யானும் வினையெஞ்சு கிளவி
சொன்முறை முடியாது அடுக்குந வரினும்
முன்னது முடிய முடியுமன் பொருளே. ௩௬

### பெயரெச்ச வாய்பாடுகள்

719. நிலனும் பொருளுங் காலமுங் கருவியும்
வினைமுதற் கிளவியும் வினையும் உளப்பட
அவ்வறு பொருட்கும் ஓரன்ன உரிமைய
செய்யும் செய்த என்னுஞ் சொல்லே. ௩௭

---

717- ஏனை எச்சம் - மூன்றொழிந்த ஏனைப் பன்னிரண்டு எச்சங்கள். ஆன் - ஆண்டு. இயல் மருங்கின் - இசையும் வழியில்.

718. பன்முறையானும் என்றது, பல வகை வாய்பாடுகளானும் என்றற்கு. அடுக்குந வரினும் - அடுக்கி வரினும். சொன்முறை முடியாது - முடிக்குஞ் சொல்லான் முறையாக முடியாமல். பன்முறையானும் சொன்முறை முடியாது அடுக்குந வரினும் என்க. முன்னது இறுதிக் கண் நின்ற எச்சம். முடிய - முடிக்குஞ் சொல்கொண்டு பொருள் முடிய. முடியும் பொருள் - ஏனைய வெல்லாமும் பொருள் முடிந்தனவாகும்.

719. வினையும் - வினைப் பொருளும்; என்றது, தொழிற் பெயர்ப் பொருள்; 'உண்ணும் ஊண்' என்பது இதற்குக் காட்டு. அறு பொருட்கும் என்றது, கொண்டு முடியும் பொருள்கள்.

**அவற்றுள், 'செய்யும்' என்னும் வாய்பாடு**

720. அவற்றொடு வருவழிச் செய்யும் என் கிளவி
முதற்கண் வரைந்த மூவீற்றும் உரித்தே. ௩அ

**பெயரெச்சமும் வினையெச்சமும்**

721. பெயரெஞ்சு கிளவியும் வினையெஞ்சு கிளவியும்
எதிர்மறுத்து மொழியினும் பொருள்நிலை திரியா.

**எச்சங்களிடையே பிற சொற்கள் வருதல்**

722. தத்தம் எச்சமொடு சிவணுங் குறிப்பின்
எச்சொல் லாயினும் இடைநிலை வரையார். ௪0

**'செய்யும்' என்னும் பெயரெச்சம் ஈறு கெடுதல்**

723. அவற்றுள்,
செய்யும் என்னும் பெயரெஞ்சு கிளவிக்கு

---

720. அவற்றொடு - அந்நிலம் முதலிய பொருள்களோடு. முதற்கண் - முன்னே (எகஉ). வரைந்த - கொள்ளா என்று நீக்கிய. மூவீற்றும் - 'பலர்பாலில் வரும் படர்க்கை முன்னிலை தன்மை என்னும் மூவகைக்கண்ணும்' என்னும் பொருட்டு. மூவீற்றும் என ஈறு குறித்துக் கூறுதலின், ஆண்டு நுவன்றது செய்யுமென்னும் முற்றுச்சொல் என்பது பெறப்படும். இந்நூற்பாவில் கூறுவது அவ் வாய்பாட்டின் எச்சச் சொல்லாகலின், அம் மூவகையானும் முடிதல் உரித்தென்றார்.

721. பொருள் நிலை - எச்சமாகிய பொருள்நிலை.

722. சிவணுங் குறிப்பின் - இயையுங் கருத்தினையுடைய. இடை நிலை வரையார் - இடை வந்து நிற்றலை நீக்கார்.

மெய்யொடுங் கெடுமே ஈற்றுமிசை உகரம்
அவ்விடன் அறிதல் என்மனார் புலவர். சுக

**இறந்தகாலச் சொல் எதிர்காலச் சொல்லோடு இயைதல்**

724. செய்து என் எச்சத்து இறந்த காலம்
எய்துஇடன் உடைத்தே வாராக் காலம். சுஉ

**முக்காலங்கட்கும் உரிய இயற்கையை நிகழ்காலத்தாற் கூறுதல்**

725. முந்நிலைக் காலமுந் தோன்றும் இயற்கை
எம்முறைச் சொல்லும் நிகழுங் காலத்து
மெய்ந்நிலைப் பொதுச்சொல் கிளத்தல் வேண்டும்.

**விரைவுப் பொருளில் காலம் மயங்குதல்**

726. வாராக் காலத்தும் நிகழுங் காலத்தும்
ஓராங்கு வரூஉம் வினைச்சொற் கிளவி

---

723. ஈற்று மிசை உகரம் - ஈற்றெழுத்துக்கு முன் அதன் அயல் நின்ற உகரம். உகரம், தான ஊர்ந்து நின்ற மெய்யொடுங் கெடும் என்க. அறிதல் - அறிக.

724. வாராக் காலம் - எதிர்காலம்; முடிக்குஞ் சொல் வினை எதிர்காலத்தை எய்தும் இடனை உடைத்து என்க. 'நீ உண்டு வருவாய்' என்பது இதற்குக் காட்டு.

725. முந்நிலைக் காலம் - மூவகைக் காலத்தும், தோன்றும் இயற்கை - உளதாம் இயல்பினையுடைய. எம் முறைச் சொல்லும் - எவ்வகைப்பட்ட பொருளையும்; எல்லாப் பொருளையும் என்க. நிகழுங் காலத்து மெய்ந்நிலைப் பொதுச்சொல் - நிகழ்காலத்துப் பொருள் நிலைமையுடைய பொதுச் சொல்லால்; என்றது, செய்யுமென்னும் வாய்பாட்டுக் கிளவியால் என்க. அது முக்காலத்திற்கும் பொதுவாய் முற்றும் எச்சமுமாய் வருதலின், 'பொதுச் சொல்' என்றார். மெய் - பொருள். 'மலை நிற்கும்' 'தீச் சுடும்' என்பவை போல்வன இந் நூற்பாவிற்குக் காட்டு.

இறந்த காலத்துக் குறிப்பொடு கிளத்தல்
விரைந்த பொருள என்மனார் புலவர். ௪௪

**சிறப்புப் பொருளிற் காலம் மயங்குதல்**

727. மிக்கதன் மருங்கின் வினைச்சொல் சுட்டி
அப்பண்பு குறித்த வினைமுதற் கிளவி
செய்வது இல்வழி நிகழுங் காலத்து
மெய்பெறத் தோன்றும் பொருட்டா குமே.

---

726. ஓராங்கு - ஒரு தன்மையாக. கிளவி - பொருள் கள். குறிப்பொடு - கருத்தொடு. கிளத்தல் - கிளத்தலால், பொருள - கருத்துடையவாம்.

727. மிககதன் மருங்கின் - உயர்வின்கண் வருகின்ற. சுட்டி - நோக்கி. அப் பணபு - அவ் வுயர்வாகிய பண்பு. செய்வது இல்வழி - பெயர் சுட்டிச் சொல்லப்படுவதோர் வினைமுதல் வாராதவிடத்து, நிகழ்காலத்துப் பொருட்டாகும் என்க. மெய்பெறத் தோனறும் என்றது, அப்பொருள் யாப் புறத் தோன்றும் என்றற்கு. 'தவம் செய்தல்' என்பது, உயர்வின்கண் வரும் வினைச்சொல். அவ்வினைச் சொல்லை நோக்கி வருதற்குரிய அதற்கேற்ற உயர்வுப் பண்பு குறித்த வினைமுதல் 'சானறோன்' என்பது. இந்நூற்பா இயைபுடைய இருவினைக்கண் சிறப்பு நிகழ்ச்சி கூறுவது. (நிகழ்காலப் பொருளில் ஒரு வினைக்கண் இயல்பு நிகழ்ச்சி கூறுவது முனனர்ப் (எ௨௫) பெறப்பட்டது.) அதனுல், இயைபுடைய இரு வினைகள் தொடரச் சிறப்பின்கண், 'சான்றோன் தவஞ் செய்யின் துறககம் புகும்' எனபது, இதற்குக் காட்டு. பெயர் சுட்டிய வினைமுதல் வருவதாயின, 'சாத்தன் தவஞ்செய்யின். துறக்கம் புகுவான' என எதிர்காலச் சொல்லாதல், 'சாத்தன் தவஞ்செய்து துறக்கம் புக்கான்' என இறந்தகாலச் சொல்லாதல் இட்டு முடிககப்படுமல்லது, 'சாத்தன் தவஞ்செய்யின் துறக்கம் புகும்,' எனப், 'புகும்' என்னும் நிகழ்காலப் பொதுச் சொல் லான் முடிக்கப்படுதலில்லை யாகலின் என்பது.

## 'இது செயல் வேண்டும்' என்னும் முற்று

728\. இதுசெயல் வேண்டும் என்னுங் கிளவி
இருவயின் நிலையும் பொருட்டா கும்மே
தன்பா லானும் பிறன்பா லானும். ௩௬

## வற்புறுத்தற் பொருளில் வரும் வினா

729\. வன்புற வரூஉம் வினாவுடை வினைச்சொல்
எதிர்மறுத் துணர்த்துதற்கு உரிமையு முடைத்தே.

---

728\. 'இது செயல் வேண்டும்' என்னுங் கருத்துத் தோன்ற வரும் சொல்லாவது, 'ஓதல் வேண்டும்' 'செய்யல் வேண்டும்' என்பவை போல்வன. தன்பாலானும் பிறன் பாலானும் என ஈரிடத்து நிலைபெறும் பொருளுடையதாகும் என்க. இருவயின் - ஈரிடத்து. 'சாத்தன் ஓதல் வேண்டும்' என்பதில், வேண்டும் என்பதற்கு வினைமுதல், ஓதல் என்பதற்கு வினைமுதலான சாத்தனே யாதலின், இது தன்பாற் பொருளது. சாத்தன் ஓதுதலைத் தந்தை வேண்டும் எனக் கருத்தாகுமாயின், பிறன்பாற் பொருளதாகும்.

729\. வன்புற - வற்புறுத்தல் தோன்ற. வினாவுடை - வினாவையுடைய. 'யான் வைதேனோ' எனின், 'யான் வைதிலேன்' என்னும் எதிர்மறைப்பொருள் உணர்த்துதல் காண்க. வினை நிகழ்வு உணர்த்துதற்குரிய வினைச்சொல் வினாவுடையதாய், எதிர்மறுத்து வினை நிகழாமையும் உணர்த்துதலின், 'உரிமையும் உடைத்தே' என உம்மை கொடுத்தார்.

## இயற்கைப் பொருளினும் தெளிவுப் பொருளினும் காலம் மயங்குதல்

730. வாராக் காலத்து வினைச்சொற் கிளவி
இறப்பினும் நிகழ்வினுஞ் சிறப்பத் தோன்றும்
இயற்கையுந் தெளிவுங் கிளக்குங் காலை. சுஅ

## செயப்படுபொருள் வினைமுதல்போல வருதல்

731. செயப்படு பொருளைச் செய்தது போலத்
தொழிற்படக் கிளத்தலும் வழக்கியல் மரபே.

---

730. வினைச்சொற் கிளவி - வினைச்சொற் பொருண்மை, சிறப்பத் தோன்றும் - விளங்கத் தோன்றும். இயல்பு தெரிந்த விடத்தும், தெளிவுப் பொருளான விடத்தும் சிறப்பத் தோன்றும் என்பது. காட்டிற போவார் புலிகோட் படுதல இயற்கை. ஒருவன் காட்டுட் செல்லாமுன்னும் 'இவன காட்டுட் போகின் புலிகோட்பட்டான்' 'இவன காட்டுட் போயப் புலிக்கோட் படுகின்றான்' என அவ்வியறகை தோன்ற இறந்த காலத்தானும் நிகழ்காலத்தானுஞ் சொல்லுப. புலிகோட் படுதல் - புலியாற கொள்ளப்படுதல. இனி, 'எறும்பு முட்டை கொண்டு திட்டை ஏறின் மழை பெயயும்' எனபது தெளிவு, இதனையும் இத்தெளிவு பற்றி, மழை பெய்யாமுனனும், 'எறும்பு ஏறின் மழை பெய்தது' 'எறும்பு ஏறி மழை பெய கின்றது' எனப.

731. செய்தது போல - வினைமுதல் போல. தொழிற் பட - அதறகு வினையுண்டாக. 'திண்ணை மெழுகிற்று' என்பது இதற்குக் காட்டு. 'இதனை வழக்கியல் என்றமையால், இலக்கணம் அன்றாயிற்று' என்பது சேனா, நச் - கருத்து.

### வேறிடத்தினும் காலம் மயங்குதல்

732. இறப்பே எதிர்வே ஆயிரு காலமும்
சிறப்பத் தோன்றும் மயங்குமொழிக் கிளவி. ௩௦

733. ஏனைக் காலமும் மயங்குதல் வரையார். ௩௧

---

732. ஏதுங் காரணமின்றி இயல்பாகவே தம்முள் மயங்கு மொழிக் கிளவியாய்த் தோன்றும் என்பது கருத்து. 'இவர் இப் பொழிலிற் பண்டு விளையாடுவர்' 'நாளை வெகுண்டு வந்தான்பின் நீ என செய்வை' எனபவை போல்வன இதற்குக் காட்டு. பொருந்திய வழக்காதலின், 'சிறப்பத் தோன்றும்' என்றார்.

733. ஏனைக் காலமும் என்றது, நிகழ்காலம். 'இவன் பண்டு இப் பொழிலில் விளையாடும்' 'இவன் நாளை வரும்' என்பவை போல்வன இதற்குக் காட்டு.

# எ. இடையியல்

[இடைச்சொல்லின் இலக்கணம் உணர்த்துவது.]

## க. பொதுவிலக்கணம்

### இடைச்சொல்லின் இயல்பு

734. இடையெனப் படுப பெயரொடும் வினையொடும்
நடைபெற் றியலும்; தமக்கியல் பிலவே. க

### அதன் பாகுபாடு

735. அவைதாம்,
புணரியல் நிலையிடைப் பொருணிலைக் குதநவும்
வினைசெயல் மருங்கில் காலமொடு வருநவும்
வேற்றுமைப் பொருள்வயின் உருபா குநவும்
அசைநிலைக் கிளவி ஆகி வருநவும்
இசைநிறைக் கிளவி ஆகி வருநவும்
தத்தம் குறிப்பிற் பொருள்செய் குநவும்
ஒப்பில் வழியாற் பொருள்செய் குநவும்என்று
அப்பண் பினவே நுவலுங் காலை. உ

---

734. இடை - இடைச்சொல். பெயரொடும் வினையொடும் சார்ந்து நடைபெறறியலும் எனக. தமககு இயல்பு இல - தாமே தனித்து நடைபெறும் இயல்பில்லாதன.

735. நிலையிடை - நிலையில். உதநவும் - உதவுநவும்; சார்ந்து நின்று உதவுநவும். ஓப்பில் வழியால பொருள் செய்கு நவும் - ஓப்புமை தோனறுதவழி அவ் வொப்புமைப் பொருள் பயப்பனவும் என்க; என்றது, உவம உருபுகள். தாம்தோன்றி ஓப்புமைப் பொருள் விளங்கத் தோறறுதலின், 'ஓப்பில் வழியாற் பொருள் செய்குந' என்றார்.

**இடைச்சொல் நிற்கும் இடமும் வேறுபாடும்**

736. அவைதாம்,
முன்னும் பின்னும் மொழியடுத்து வருதலும்
தம் ஈறு திரிதலும் பிறிதுஅவண் நிலையலும்
அன்னவை யெல்லாம் உரிய என்ப. ௩

## உ. சிறப்பிலக்கணம்

**அவற்றுள், 'மன்' என்னும் இடைச்சொல்லின் பொருள்**

737. கழிவே ஆக்கம் ஒழியிசைக் கிளவியென்று
அம்மூன் றென்ப மன்னைச் சொல்லே. ௪

**'தில்' என்னுஞ் சொல்**

738. விழைவே காலம் ஒழியிசைக் கிளவியென்று
அம்மூன் றென்ப தில்லைச் சொல்லே. ௫

**'கொன்' என்னுஞ் சொல்**

739. அச்சம் பயமிலி காலம் பெருமையென்று
அப்பால் நான்கே கொன்னைச் சொல்லே. ௬

**'உம்' என்னுஞ் சொல்**

740. எச்சம் சிறப்பே ஐயம் எதிர்மறை
முற்றே எண்ணே தெரிநிலை ஆக்கம் என்று
அப்பால் எட்டே உம்மைச் சொல்லே. ௭

---

**736.** இடை வருதலேயன்றி முன்னும் பின்னும் மொழியடுத்து வருதலும் எனக.

**737.** இந் நூற்பாமுதல், தத்தம் குறிப்பிற் பொருள் செய்வனவாகிய இடைச்சொற்கள் பல நுவலப்படுகின்றன. ஒழி இசை - ஒழிந்த சொல்; ஒழிந்து நின்ற சொல்லின்பொருள் என்றபடி. மன்னைச் சொல் - 'மன்' என்னுஞ் சொல்.

**739.** பயம் இலி – பயன் இல்லாமைப் பொருள்.

**'ஓ' என்னுஞ் சொல்**

741. பிரிநிலை வினாவே எதிர்மறை ஒழியிசை
தெரிநிலைக் கிளவி சிறப்பொடு தொகைஇ
இருமூன் றென்ப ஓகா ரம்மே. ௮

**'ஏ' என்னுஞ் சொல்**

742. தேற்றம் வினாவே பிரிநிலை எண்ணே
ஈற்றசை இவ்வைந்து ஏகா ரம்மே. ௯

**'என' என்னுஞ் சொல்**

743. வினையே குறிப்பே இசையே பண்பே
எண்ணே பெயரொடு அவ்வாறு கிளவியும்
கண்ணிய நிலைத்தே என என் கிளவி. ௧௦

**'என்று' என்னுஞ் சொல்**

744. என்று என் கிளவியும் அதனோ ரற்றே. ௧௧

**'தில்' என்னுஞ் சொல்லிற்கு, மேலும் ஒரு முடிபு**

745. விழைவின் தில்லை தன்னிடத்து இயலும். ௧௨

**'ஏ' 'ஓ' சொற்களுக்கு மேலும் ஒரு முடிபு**

746. தெளிவின் ஏயும் சிறப்பின் ஓவும்
அளபின் எடுத்த இசைய என்ப. ௧௩

---

742. தேற்றம் - தெளிவு.

743. குறிப்பு - குறிப்புப் பொருள், அறு கிளவியும் - ஆறு பொருளும். கண்ணிய நிலைத்து - கருதிய நிலைமையினையுடையது.

745. விழைவின் தில்லை - விழைவுப் பொருளில் வரும் 'தில்' என்னுஞ் சொல். தன்னிடத்து இயலும் - தன்மைக்கண் நடைபெறும்;

746. அளபின் எடுத்த இசைய - மாத்திரைக்கண் மிக்க ஓசையினை உடைய; அளபெடையாய் வரும் என்றபடி.

'மற்று' என்னுஞ் சொல்

747. மற்று என் கிளவி வினைமாற்று அசைநிலை
அப்பால் இரண்டென மொழிமனார் புலவர். கச

'எற்று' என்னுஞ் சொல்

748. எற்று என் கிளவி இறந்த பொருட்டே. கரு

'மற்றையது' என்னுஞ் சொல்

749. மற்றையது என்னுங் கிளவி தானே
சுட்டுநிலை யொழிய இனங்குறித் தன்றே. கசு

'மன்ற' என்னுஞ் சொல்

750. மன்ற என் கிளவி தேற்றம் செய்யும். கஎ

'தஞ்சம்' என்னுஞ் சொல்

751. தஞ்சக் கிளவி எண்மைப் பொருட்டே. கஅ

'அந்தில்' என்னுஞ் சொல்

752. அந்தில் ஆங்க அசைநிலைக் கிளவியென்று
ஆயிரண் டாகும் இயற்கைத் தென்ப. ககூ

'கொல்' என்னுஞ் சொல்

753. கொல்லே ஐயம். உ0

'எல்' என்னுஞ் சொல்

754. எல்லே இலக்கம். உக

---

748. இறந்த பொருட்டு - போயிற்று எனனும் பொருளுடையது.

749. சுட்டுநிலை - சுட்டப்பட்ட பொருள். இனம், அதன இனம்.

751. எண்மை - எளிமை.

753. கொல் என்னுஞ் சொல் ஐயப்பொருளது என்றபடி.

754. இலக்கம் - விளக்கம்.

### 'ஆர்' என்னுஞ் சொல்

755. இயற்பெயர் முன்னர் ஆரைக் கிளவி
பலர்க்குரி எழுத்தின் வினையொடு முடிமே. உஉ

### அதற்கு, மேலும் ஒரு விதி

756 அசைநிலைக் கிளவி ஆகுவழி அறிதல். உ௩

### 'ஏ' 'குரை' என்னுஞ் சொற்கள்

757. ஏயும் குரையும் இசைநிறை அசைநிலை
ஆயிரண் டாகும் இயற்கைத் தென்ப. உ௪

### 'மா' என்னுஞ் சொல்

758. மா என் கிளவி வியங்கோள் அசைச்சொல். உ௫

### முன்னிலை அசைச் சொற்கள்

759. மியா இக மோ மதி இகும் சின் என்னும்
ஆவயின் ஆறும் முன்னிலை அசைச்சொல். உ௬

---

755. ஆரைக் கிளவி, 'ஆர்' என்னும் இடைச்சொல். பலர்க்கு உரி எழுத்தின - பலர்பாற்கு உரிய ரகரவீற்றெழுத்தினை யுடைய. 'சேந்தனார் வந்தார்' என்பது இதற்குக் காட்டு.

756. அசைநிலைக் கிளவி ஆகுவழி - ஆர் என்னும் இடைச்சொல் அசைநிலைக் கிளவி ஆகும் இடம். அறிதல் - அறிக.

757. ஏயும் குரையும் - ஏ, குரை என்னுஞ் சொற்கள்.

758. வியங்கோளைச் சார்ந்து வரும் அசைச்சொல் என்க.

### அவற்றுள் 'இகும்' 'சின்' என்னுஞ் சொற்கள்

760. அவற்றுள்,
இகுமும் சின்னும் ஏனை இடத்தொடுந்
தகுநிலை யுடைய என்மனார் புலவர். உஎ

### 'அம்ம' என்னுஞ் சொல்

761. அம்ம கேட் பிக்கும். உஅ

### 'ஆங்க' என்னுஞ் சொல்

762. ஆங்க உரையசை. உகூ

### ஒப்பில் போலி

763. ஒப்பில் போலியும் அப்பொருட் டாகும். ௩0

---

760. ஏனை இடத்தொடும் - முன் நூற்பாவிற் கூறிய முன்னிலையோடு, தன்மை படர்க்கை இடங்களோடும் என்க. தகும் நிலை - பொருந்தும நிலைமை.

761. 'அம்ம' என்பது இதனைக் கேள் எனக் கேட்பிக்கும் பொருண்மையினை யுடையது.

762. உரையசை - ஒன்று உரைத்தற்கண் வரும் அசைச் சொல். உரையசை - என்பது சிறிது பொருளுணர்த்தும் எனவும், ஆதலின 'ஆங்க' எனபதற்கு 'அங்ஙனே' என்பது பொருளாகும் எனவுங் கருதுவர், நச்.

763. ஒபபில் போலி - ஒப்புமைக் கருத்து இல்லாத போலி என்னுஞ் சொல். அப் பொருட்டாகும் - முன் நூற் பாவிற் கூறிய உரையசைப் பொருளில் வரும் என்றபடி.

### அசைநிலைச் சொற்கள்

764. யாகா,
பிறபிறக் கரோபோ மாது என வரூஉம்
ஆயேழ் சொல்லும் அசைநிலைக் கிளவி. ௩௧

### பிரிவில் அசைநிலைகள்

765. ஆக ஆகல் என்பது என்னும்
ஆவயின் மூன்றும் பிரிவில் அசைநிலை. ௩௨

### 'ஔ' என்னுஞ் சொல்

766. ஈரளபு இசைக்கும் இறுதியில் உயிரே
ஆயியல் நிலையுங் காலத் தானும்
அளபெடை நிலையுங் காலத் தானும்
அளபெடை யின்றித் தான்வரு காலையும்
உளவென மொழிப பொருள்வேறு படுதல்
குறிப்பின் இசையான் நெறிப்படத் தோன்றும்.

### குறிப்புச் சொற்கள்

767. நன்றீற் றேயும் அன்றீற் றேயும்
அந்தீற் றோவும் அன்னீற் றோவும்
அன்ன பிறவுங் குறிப்பொடு கொள்ளும். ௩௪

---

765. பிரிவில் அசைநிலை - தம்மிற் பிரிதலில்லாத அசைநிலை.

766. இறுதியில் உயிர் என்றது, ஔகாரம்; மொழிக்கு இறுதியில் வாராத உயிர் என்றபடி. ஆயியல் - முன் றாற பாவிற கூறிய பிரிவில் அசைநிலையியல். குறிப்பின் இசையான - சொல்லுவானது குறிப்பிற்கேற்ற ஓசையான். ஔ ஔ என்பதும், ஔஉ என்பதும், ஔ என்பதும் இதற்கு எடுத்துக் காட்டு.

767. நன்றீற்று ஏ, நன்றே. பிறவும் இங்ஙனங் கொள்க. குறிப்பொடு கொள்ளும் - சொல்லுவானது குறிப்பினாற் பொருள் கொள்ளும். இவை அடுக்கியும் அடுக்காதும் வரும்.

### 'உம்' என்னுஞ் சொல்லுக்கு, மேலும் ஒரு முடிபு

768. எச்ச உம்மையும் எதிர்மறை உம்மையும்
தத்தமுள் மயங்கும் உடனிலை இலவே. ௩௫

### இதுவும் அது

769. எஞ்சுபொருட் கிளவி செஞ்சொ லாயின்
பிற்படக் கிளவார் முற்படக் கிளத்தல். ௩௬

### முற்றும்மை எச்சமாதல்

770. முற்றிய உம்மைத் தொகைச்சொல் மருங்கின்
எச்சக் கிளவி உரித்து மாகும். ௩௭

---

768. மயங்கும் உடனிலை - ஒன்றும் இயைபுமில்லை. 'சாத்தனும் வந்தான், இனிக் கொற்றனும் வரும்' என்பது பொருந்தும்; கொற்றனும் வரலும் உரியன் எனல் பொருந்தா தென்பது. வரினும் என்பதன் உம்மை எதிர்மறையாகலின் என்க.

769. எஞ்சுபொருட் கிளவி - எச்சவும்மையால் தழுவப் படுஞ் சொல். செஞ்சொலாயின் - உம்மை யில்லாத தனிச் சொல்லாயின். 'சாத்தன் வந்தான்; கொற்றனும் வந்தான்' என்பது காட்டு. உம்மையில்லாத சாத்தன் என்னுஞ் செஞ் சொல் முற்பட வந்தமை காண்க. கிளவார் - கிளவாது. கிளத்தல் - கிளக்க.

770. முற்றிய உம்மை - முற்றும்மை. தொகை என்றது, எண்ணின் தொகை முதலியன. எச்சக்கிளவி - எச்சவும்மையின் பொருள். 'பத்தும் கொடாதே' என்னும் முற்றும்மை, 'சில கொடு' என்னும் எச்சப்பொருள் தந்து எச்சவும்மையாய்ப் பொருள் பயந்தமை காண்க.

**'ஏ' என்னுஞ் சொல்லுக்கு, மேலும் ஒரு முடிபு**

771. ஈற்றுநின்று இசைக்கும் ஏஎன் இறுதி
கூற்றுவயின் ஓரளபு ஆகலும் உரித்தே. ௩௮

## ௯. எண்ணிடைச் சொற்கள்

**எண்ணில் வரும் 'உம்' 'என' என்பன**

772. உம்மை எண்ணும் என என் எண்ணும்
தம்வயின் தொகுதி கடப்பா டிலவே. ௩௯

**எண்ணில் வரும் 'ஏ' என்பது**

773. எண்ணே காரம் இடையிட்டுக் கொளினும்
எண்ணுக் குறித் தியலும் என்மனார் புலவர். ௪௦

**'எனா' 'என்று' என்னுஞ் சொற்கள்**

774. உம்மை தொக்க எனாவென் கிளவியும்
ஆவீ றாகிய என்றென் கிளவியும்
ஆயிரு கிளவியும் எண்ணுவழிப் பட்டன. ௪௧

---

771. ஈற்று - செய்யுளிறுதிக்கண். ஓரளபாகலும் - ஒரு மாத்திரையாகலும். கூற்றுவயின் என்றார், செய்யுளுறுப் போடு பொருந்தக் கூறுதற்கண் என்றற்கு.

772. தம்வயின் - தம் இறுதிக்கண். தொகுதி - இத்தனை என்னுந் தொகைச் சொல் பெறுதல். கடப்பாடு இல - ஒரு முறைமையாக உடையவல்ல; எனவே, தொகைச்சொல் பெற்றும் பெறாதும் வரும் என்பது.

773. இடையிட்டுக் கொளினும் - இடையிட்டு வரினும். எண்ணு - எண்.

774. ஆவீறாகிய என்று - 'என்று' என்னுஞ் சொல்,

**தொகை பெற்றே முடியும் எண்ணிடைச் சொற்கள்**

775. அவற்றின் வரூஉம் எண்ணின் இறுதியும்
பெயர்க்குரி மரபின் செவ்வெண் இறுதியும்
ஏயி னாகிய எண்ணின் இறுதியும்
யாவயின் வரினும் தொகையின் றியலா. ௪௨

**எண்ணில் வரும் 'உம்'முக்கு, மேலும் ஒரு முடிபு**

776. உம்மை எண்ணின் உருபுதொகல் வரையார்.

## ௬. புறனடை

**'உம்' உந்து ஆதல்**

777. உம் உந் தாகும் இடனுமா ருண்டே. ௪௪

**எண்ணிடைச் சொற்கள் வினைச்சொற்களிலும் வருதல்**

778. வினையொடு நிலையினும் எண்ணுநிலை திரியா
நினையல் வேண்டும் அவற்றவற் றியல்பே. ௪௫

---

775. அவற்றின - முன் நூற்பாவிற் கூறிய 'எனா' 'என்று' என்னும் எண்ணிடைச் சொற்களான. எண்ணின் - எண்ணுதற்குரிய சொற்களின். செவ்வெண் என்றது, எண்ணிடைச் சொற்கள் இல்லாமல் தனிப்பெயர்களாய் எண்ணுப் பொருளில் வருவன. ஆதலாற், 'பெயர்க்குரி மரபின் செவ்வெண்' என்றார். யாவயின வரினும் - அவ் வெண்ணிடைச் சொற்கள் யாதானும் ஓரிடத்து வரினும். இறுதியும் இறுதியும் இறுதியும் தொகைச் சொல் இன்றி இயலா என்பது.

776. உருபென்றது, இரண்டாவதும் ஏழாவதும் என்ப.

777. ஒலிக்கும் என்பது ஒலிக்குந்து என வருதல் இதற்குக் காட்டு.

778. 'உண்டுந் தின்றும் பாடியும் வந்தான்' என வினையினும் எண்ணிடைச் சொற்கள் வருமென்பது கருத்து. பொருந்துமிடனறிந்து அவை கொள்ளப்படுமாகலின், 'நினையல் வேண்டும் அவற்றவற்றியல்பே' என்றார். முற்று வினையிலும் பெயரெச்சவினையிலும் வாராவென்பதும், வினையெச்ச வினையிலும் ஏற்பவற்றில்மட்டும் வருமென்பதும் நினைதல் வேண்டும்,

### எண்ணிடைச் சொற்கள் பிரிந்து சென்று ஒன்றுதல்

779. என்றும் எனவும் ஒடுவுந் தோன்றி
ஒன்றுவழி யுடைய எண்ணினுட் பிரிந்தே. ௪௬

### இடைச் சொற்களின் பொருளறியுமாறு

780. அவ்வச் சொல்லிற்கு அவையவை பொருளென
மெய்பெறக் கிளந்த இயல வாயினும்
வினையொடும் பெயரொடும் நினையத் தோன்றித்
திரிந்துவேறு படினுந் தெரிந்தனர் கொளலே.

### இவ்வியலுக்குப் புறனடை

781. கிளந்த அல்ல வேறுபிற தோன்றினும்
கிளந்தவற் றியலான் உணர்ந்தனர் கொளலே.

---

779. தோன்றி - ஓரிடத்துத் தோன்றி. எண்ணினுள் - எண்ணின்கண். பிரிந்து - பிரிந்து சென்று. ஒன்றுவழியுடைய- மீண்டும் ஒன்று முறைமையுடையன. "பொருள் கருவி காலம் வினையிடனோடு ஐந்தும்" என்றவிடத்துப், பொருளொடு கருவியொடு காலத்தொடு வினையொடு எனப் மீண்டும் எண் ஒடு பிரிந்து சென்று ஒன்றினமை காண்க. இந்நூற்பாவினால் 'ஒடு' வென்னும் ஓர் எண்ணிடைச் சொல்லும் பெறப்பட்டது.

780. மெய்பெற - நிலைபெற. நினைய - ஆராய்ந்துணரும் படி. தெரிந்தனர் கொளல் - ஆராய்ந்து கொள்க.

781. கிளந்தவற்றியலான் - கிளந்து சொல்லியவற்றின் இயல்பினால். உணர்ந்தனர் கொளல் - எண்ணித் தெரிந்து உணர்ந்து கொள்க.

# அ. உரியியல்

[உரிச்சொல் இலக்கணம் உணர்த்துவது.]

## க. பொது இலக்கணம்

### உரிச்சொல்லின் இயல்பு

782. உரிச்சொற் கிளவி விரிக்குங் காலை
இசையினும் குறிப்பினும் பண்பினும் தோன்றிப்
பெயரினும் வினையினும் மெய்தடு மாறி
ஒருசொற் பலபொருட் குரிமை தோன்றினும்
பலசொல் ஒருபொருட் குரிமை தோன்றினும்
பயிலா தவற்றைப் பயின்றவை சார்த்தித்
தத்தம் மரபிற் சென்றுநிலை மருங்கின்
எச்சொல் லாயினும் பொருள்வேறு கிளத்தல். க

### கீழ்வருவன இன்ன உரிச்சொல் என்பது

783. வெளிப்படு சொல்லே கிளத்தல் வேண்டா;
வெளிப்பட வாரா உரிச்சொல் மேன. உ

---

782. குறிப்பினும் - குறிப்புப் பொருளினும் பெயர் போலவும், வினைபோலவும் என்பதறகுப் பெயரினும் வினையினும் என்றார். மெய் - வடிவு. மரபின - இயல்பில். நிலை மருங்கின் - நிற்கும் நிலைக்களங்களால்; என்றது, பெயரும் வினையுமாகிய நிலைக்களங்களால் என்க. கிளத்தல் - சொல்லுக. பெயர் போலவும் வினைபோலவும் அவறறிறகு முதனிலையாயுந் தோன்றி, இசை, குறிப்பு, பண்பு எனனும் பொருள்கட்குத் தாமே உரியவாய், வருஞ் சொறகள் உரிச்சொல் என்றபடி.

783. வெளிப்படு சொல் - பொருள வெளிப்பட்டசொல். கிளத்தல், பொருள் வெளிப்பட வாராத உரிச்சொல் மேன என்பது. மேல என்பது மேன என நின்றது.

## உ. சிறப்பிலக்கணம்

**உரிச் சொற்களுள் 'உறு' 'தவ' 'நனி'**

784. அவைதாம்,
உறுதவ நனியென வரூஉம் மூன்றும்
மிகுதி செய்யும் பொருள என்ப. ௩

**'உரு' 'புரை'**

785. உருஉட் காகும்; புரைஉயர் வாகும். ௪

**'குரு' 'கெழு'**

786. குருவும் கெழுவும் நிறனா கும்மே. ௫

**'செல்லல்' 'இன்னல்'**

787. செல்லல் இன்னல் இன்னா மையே. ௬

**'மல்லல்' 'ஏ'**

788. மல்லல் வளனே; ஏபெற் றாகும். ௭

**'உகப்பு' 'உவப்பு'**

789. உகப்பே உயர்தல்; உவப்பே உவகை. ௮

**'பயப்பு'**

790. பயப்பே பயனா. ௯

---

784. மிகுதி - மிகுதி என்னுங் கருத்தை. செய்யும் - குறிக்கும். பொருள - பொருளன.

785. உரு - உரு என்னும் உரிச்சொல்; பிறவற்றிற்கும் இங்ஙனங் கொள்க. உட்கு ஆகும் - அச்சம் என்னும் பொருளுடையதாகும்; நனகுமதிப்பினகட் டோன்றும் அச்சமென்க.

787. செல்லல் இன்னல் என்னும் இரண்டும் என்க. இன்னாமை - துன்பம் எனனும பொருளன.

788- பெற்று - பெருக்கம்.

'பசப்பு'

791. பசப்பு நிறனாகும். க0

'இயைபு'

792. இயைபே புணர்ச்சி. கக

'இசைப்பு'

793. இசைப்பிசை யாகும். கஉ

'அலமரல்' 'தெருமரல்'

794. அலமரல் தெருமரல் ஆயிரண்டும் சுழற்சி. கங

'மழ' 'குழ'

795. மழவும் குழவும் இளமைப் பொருள. கச

'சீர்த்தி' 'மாலை'

796. சீர்த்தி மிகுபுகழ்; மாலை இயல்பே. கரு

'கூர்ப்பு' 'கழிவு'

797. கூர்ப்பும் கழிவும் உள்ளது சிறக்கும். கசா

'கதழ்வு' 'துனைவு'

798. கதழ்வும் துனைவும் விரைவின் பொருள. கஎ

'அதிர்வு' 'விதிர்ப்பு'

799. அதிர்வும் விதிர்ப்பும் நடுக்கம் செய்யும். கஅ

---

797. உள்ளது சிறக்கும் - உள்ளதே சிறந்து விளங்குதல்; உள்ளதன் பெருக்கம் எனறபடி.

799. நடுக்கம் செய்யும் - நடுக்கம் என்னும் பொருள் தரும்.

**'வார்தல்' 'போகல்' 'ஒழுகல்'**

800. வார்தல் போகல் ஒழுகல் மூன்றும்
நேர்பும் நெடுமையும் செய்யும் பொருள. கக

**'தீர்தல்' 'தீர்த்தல்'**

801. தீர்தலும் தீர்த்தலும் விடற்பொருட் டாகும். உ0

**'கெடவரல்' 'பண்ணை'**

802. கெடவரல் பண்ணை ஆயிரண்டும் விளையாட்டு.

**'தட' 'கய' 'நளி'**

803. தடவும் கயவும் நளியும் பெருமை. உஉ

**'தட' என்பதற்கு, மேலும் ஒரு பொருள்**

804. அவற்றுள்,
தடவென் கிளவி கோட்டமும் செய்யும். உங

**'கய' என்பதற்கு, மேலும் ஒரு பொருள்**

805 கயவென் கிளவி மென்மையும் செய்யும். உச

**'நளி' என்பதற்கு, மேலும் ஒரு பொருள்**

806. நளியென் கிளவி செறிவும் ஆகும். உரு

**'பழுது'**

807. பழுது பயமின்றே. உசா

---

800. நேர்பு - நேர்மை; என்றது இணைந்தமைவு. நெடுமை - நீட்டம். செய்யும் பொருள - குறிக்கும் பொருளன.

801. விடல் - விடுதல்; நீக்குதல்.

804. கோட்டம் - வளைவு.

806. செறிவு - நெருக்கம்.

807. பயம் இன்று - பயன் இல்லை; பயனில்லை யென்னும் பொருளுணர்த்தும் என்க. வீண் என்றபடி.

'சாயல்'

808. சாயல் மென்மை. உஎ

'முழுது'

809. முழுதென் கிளவி எஞ்சாப் பொருட்டே. உஅ

'வம்பு'

810. வம்புநிலை யின்மை. உகூ

'மாதர்'

811. மாதர் காதல். ௩0

'நம்பு' 'மே'

812. நம்பும் மேவும் நசையா கும்மே. ௩க

'ஓய்தல்' 'ஆய்தல்' 'நிழத்தல்' 'சாய்'

813. ஓய்தல் ஆய்தல் நிழத்தல் சாஅய்
ஆவயின் நான்கும் உள்ளதன் நுணுக்கம். ௩உ

'புலம்பு'

814. புலம்பே தனிமை. ௩௩

'துவன்று'

815. துவன்று நிறைவாகும். ௩௪

'முரஞ்சல்'

816. முரஞ்சல் முதிர்வே. ௩௫

---

809. எஞ்சாமைப் பொருட்டு - குறையாமைப் பொருளது.

812. நசை ஆகும் - விருப்பம் என்னும் பொருளுணர்த்தும்.

813. சாய்தல் என்பது இங்கே சாய் என நின்றது. ஆவயின - அவ்விடத்தவாகிய; அச்சொற்களிடத்தவாகிய நான்கு குறிகளும் என்க.

'வெம்மை'

817. வெம்மை வேண்டல். ௩௬

'பொற்பு'

818. பொற்பே பொலிவு. ௩௭

'வறிது'

819. வறிது சிறிதாகும். ௩௮

'ஏற்றம்'

820. [1]ஏற்றம் நினைவும் துணிவும் ஆகும். ௩௯

'பிணை' 'பேண்'

821. பிணையும் பேணும் பெட்பின் பொருள. ௪0

'பணை'

822. பணையே பிழைத்தல் பெருப்பும் ஆகும். ௪௧

'படர்'

823. படரே உள்ளல் செலவும் ஆகும். ௪௨

'பையுள்' 'சிறுமை'

824. பையுளும் சிறுமையும் நோயின் பொருள. ௪௩

821. பெட்பு என்பது, புறந்தருதல்; விரும்புதல். பெருமை முதலிய பொருள்களிலும் வரும்.

822. பணை - பணை என்னும் உரிச்சொல். பிழைத்தல் - தவறுதல். பெருப்பு - பெருத்தல். பிழைத்தல் என்னும் பொருளுணர்த்துதலே யன்றிப் பெருத்தலாகிய பொருளும் உணர்த்தும் என்பது உரை.

823. உள்ளல் - நினைத்தல்.

824. நோயின் பொருள - நோய் என்னும் பொருளன.

(பா - வே.) 1. எற்றம்.

'எய்யாமை'

825. எய்யா மையே அறியா மையே. ௪௪

'நன்று'

826. நன்று பெரி தாகும். ௪௫

'தா'

827. தாவே வலியும் வருத்தமும் ஆகும். ௪௬

'தெவு'

828. தெவுக் கொளற் பொருட்டே. ௪௭

'தெவ்வு'

829. தெவ்வுப் பகை யாகும். ௪௮

'விறப்பு' 'உறப்பு' 'வெறிப்பு'

830. விறப்பும் உறப்பும் வெறிப்பும் செறிவே. ௪௯

'விறப்பு' என்பதற்கு, மேலும் ஒரு பொருள்

831. அவற்றுள்,
விறப்பே வெரூஉப் பொருட்டும் ஆகும். ௫0

---

825. எய்யாமை என்பது அறியாமைப் பொருளது என்க.

826. பெருமை என்னுமல் பெரிது என்றமையால் இது வினையெச்சம்.

827. வலி - வலிமை.

828. தெவு என்னும் உரிச்சொல், கொள்ளுதல் என்னும் பொருட்டாகும்.

829. தெவ்வு - தெவ்வு என்னும் உரிச்சொல் பகையாகும்.

831. வெரூஉ - அச்சம்.

'கம்பலை' 'சும்மை' 'கலி' 'அழுங்கல்'

832 கம்பலை சும்மை கலியே அழுங்கல்
என்றிவை நான்கும் அரவப் பொருள. ருக

'அழுங்கல்' என்பதற்கு, மேலும் இருபொருள்

833. அவற்றுள்,
அழுங்கல் இரக்கமும் கேடும் ஆகும். ருஉ

'கழூஉ'

834. கழூஉமென் கிளவி மயக்கம் செய்யும். ருங

'செழுமை'

835. செழுமை வளனும் கொழுப்பும் ஆகும். ருச

'விழுமம்'

836. விழுமம் சீர்மையும் சிறப்பும் இடும்பையும். ருரு

'கருவி'

837. கருவி தொகுதி. ருசு

---

832. அரவப் பொருள - ஓசை என்னும் பொருளன.

833. கேடு - அழிவு.

834. கழூஉவென் கிளவி என்பது, கழூஉமென் கிளவி என நின்றது.

835. வளன் என்றது, ஆக்கம். கொழுப்பு என்றது, நிணம்.

836. சீர்மை - நன்மை. சிறப்பு - உயர்வு. இடும்பை - பெருந்துயர்.

837. கருவி என்னும் உரிச்சொல் தொகுதிப்பொருளை உணர்த்தும் எனபது.

**'கமம்'**

838. கமம்நிறைந் தியலும். ௫௭

**'அரி'**

839. அரியே ஐம்மை. ௫௮

**'கவவு'**

840. கவவகத் திடுமே. ௫௯

**'துவைத்தல்' 'சிலைத்தல்' 'இயம்பல்' 'இரங்கல்'**

841. துவைத்தலும் சிலைத்தலும் இயம்பலும் இரங்கலும்
இசைப்பொருட் கிளவி என்மனார் புலவர். ௬௦

**'இரங்கல்' என்பதற்கு, மேலும் ஒரு பொருள்**

842. அவற்றுள்,
இரங்கல் கழிந்த பொருட்டும் ஆகும். ௬௧

---

**838.** நிறைந்து - நிறைவுப் பொருளுற்று; இயலும் - நடைபெறும். நிறைவாகிய பொருளுணர்த்தும் என்பது.

**839.** ஐம்மை - மென்மை.

**840.** கவவு என்னுஞ் சொல் அகத்திடுதல் என்னும் பொருட்டாகும் என்பது. அகத்திடுதல் - உள்ளடங்கும்படி செய்தல்; என்றது, உள்ளடங்கும்படி அணைத்தல் முதலியன.

**841.** இசைப்பொருட் கிளவி - இசைப் பொருளுணர்த்துஞ் சொல். இசையென்றது ஈண்டு ஓசை.

**842.** கழிந்த பொருட்டுமாகும் - கழிந்த பொருளுடையது மாகும்; கழிந்த பொருள் பற்றி வரும் கவலையைக் கழிந்த பொருளென்றார். கழிவு - செயலறவு.

'இலம்பாடு' 'ஒற்கம்'

843. இலம்பா டொற்கம் ஆயிரண்டும் வறுமை. சுஉ

'ஞெமிர்தல்' 'பாய்தல்'

844. ஞெமிர்தலும் பாய்தலும் பரத்தற் பொருள. சுங

'கவர்வு'

845. கவர்வு விருப்பாகும். சுச

'சேர்'

846. சேரே திரட்சி. சுரு

'வியல்'

847. வியல் என் கிளவி அகலப் பொருட்டே. சுசு

'பேம்' 'நாம்' 'உரும்'

848. பேம் நாம் உரும் என வரூஉம் கிளவி
ஆமுறை மூன்றும் அச்சப் பொருள. சுஎ

'வய'

849. வய வலி யாகும். சுஅ

'வாள்'

850. வாள் ஒளி யாகும். சுகூ

'துயவு'

851. துயவு என் கிளவி அறிவின் திரிபே. எ0

848. என வரூஉம் கிளவியாகிய அம் முறைமையினை யுடைய மூன்றும் என்க.

849. 'வய' என்பது வலிமைப் பொருளுணர்த்தும் என்பது.

851. அறிவின் திரிபு - அறிவு வேறுபடுதலாகிய பொருளுணர்த்தும் என்பது.

'உயா'

852. உயாவே உயங்கல். எக

'உசா'

853. உசாவே சூழ்ச்சி. எஉ

'வயா'

854. வயா என் கிளவி வேட்கைப் பெருக்கம். எங

'கறுப்பு' 'சிவப்பு'

855. கறுப்பும் சிவப்பும் வெகுளிப் பொருள. எச

அவற்றிற்கு, மேலும் ஒரு பொருள்

856. நிறத்துரு உணர்த்தற்கும் உரிய என்ப. எரு

'நொசிவு' 'நுழைவு' 'நுணங்கு'

857. நொசிவும் நுழைவும் நுணங்கும் நுண்மை. எசு

'புனிறு'

858. புனிறென் கிளவி ஈன் றணிமைப் பொருட்டே.

'நனவு'

859. நனவே களனும் அகலமும் செய்யும். எஅ

---

852. 'உயா' என்னுஞ் சொல் உயங்கலாகிய பொருளுடையதென்க. உயங்கல் - வருந்தல்.

853. சூழ்ச்சி - சூழ்தல்; நெருங்கி நலங்கருதுதல்.

856. நிறத்து உரு - நிறவேறுபாடு. முன் நூற்பாவிற் கூறிய 'கறுப்பு' 'சிவப்பு' என்னும் இரண்டு உரிச்சொற்களும் நிறவேறுபாடு உணர்த்தற்கும் உரிய என்பது.

857. நுண்மை - நுண்மைப் பொருளுணர்த்தும்.

858. ஈன்றணிமை - கருவுயிர்த்த உடன்நிலைமை.

859. களன் - இடம்; அவை.

'மத'

860. மதவே மடனும் வலியும் ஆகும். எக

அதற்கு, மேலும் இரு பொருள்

861. மிகுதியும் வனப்பும் ஆகலும் உரித்தே. அ0

'யாணர்'

862. புதிதுபடற் பொருட்டே யாணர்க் கிளவி. அக

'அமர்தல்'

863. அமர்தல் மேவல். அஉ

'யாண்'

864. யாணுக் கவினாகும். அங

'பரவு' 'பழிச்சு'

865. பரவும் பழிச்சும் வழுத்தின் பொருள. அச

'கடி' என்னுஞ் சொல்

866. கடியென் கிளவி
வரைவே கூர்மை காப்பே புதுமை
விரைவே விளக்கம் மிகுதி சிறப்பே

---

860. மத என்னும் உரிச்சொல் என்க. மடன் - இளமை. வலி - வலிமை.

861. முன் நூற்பாவிற் கூறிய மத என்னுஞ் சொல், ஆகலும் உரித்து என்பது. வனப்பு - அழகு.

862. 'புதிது படல் - வருவாய் புதிதுண்டாதல். பொருட்டு - என்னும் பொருளது. புது வருவாய் எனபது கருத்து.

863. மேவல் – விரும்புதல்.

864. 'யாண்' எனனுஞ் சொல் 'யாணு' என உகரம் ஏற்று நின்றது. கவின் - அழகு.

865. வழுத்து - வழுத்துதல்; போற்றுதல்.

அச்சம் முன்தேற்று ஆயீ ரைந்தும்
மெய்ப்படத் தோன்றும் பொருட்டா கும்மே. அடு

**அதற்கு, மேலும் இருபொருள்**

867. ஐயமும் கரிப்பும் ஆகலும் உரித்தே. அசு

**'ஐ'**

868. ஐ வியப் பாகும். அஎ

**'முனைவு'**

869. முனைவுமுனிவ் வாகும். அஅ

**'வை'**

870. வையே கூர்மை. அக

**'எறும்'**

871. எறும் வலி யாகும். கூ0

## ரு. சொல்லும் பொருளும்

**உரிச்சொற்பொருள் மரபை ஒத்தது**

872. மெய்ப்பெறக் கிளந்த உரிச்சொல் எல்லாம்
முன்னும் பின்னும் வருபவை நாடி

---

866. வரைவு - நீக்குதல். காப்பு - காவல். முன்தேற்று - முன் நின்று தெளிவித்தல்; தெய்வத்தின் முன்னின்று தெளிவித்தலென்க. அதாவது சூளுரைத்தல். மெய்ப்பட - மெய்ம்மைப்பட.

867. முன் நூற்பாவிற் கூறிய 'கடி' என்னுஞ் சொல், ஆகலும் உரித்து எனக. கரிப்பு - காரம்; உறைப்பு.

ஒத்த மொழியாற் புணர்த்தனர் உணர்த்தல்
தத்தம் மரபிற் றோன்றுமன் பொருளே. ௯௧

**கூறிய சொற்கள் பிறபொருளும் உணர்த்தல்**

873. கூறிய கிளவிப் பொருணிலை அல்ல
வேறுபிற தோன்றினும் அவற்றொடு கொளலே.

**சொற்களாற் கருத்துணர்தலின் நிலை**

874. பொருட்குப் பொருள் தெரியின் அதுவரம்
[பின்றே.

**அதனை உணர்த்தும் ஆற்றல்**

875. பொருட்குத் திரிபில்லை உணர்த்த வல்லின். ௯௪

---

**872.** மெய் பெற - பொருள் பெற. எல்லாம் - எல்லாவற்றையும். அவ் வுரிச்சொற்களுக்கு முன்னும் பின்னும் என்க. வருபவை - வரும் மொழிகளை. ஒத்த மொழியால் - அவற்றுட், பொருந்திய மொழியோடு. புணர்த்தனர் - கூட்டி. உணர்த்தல் - ஏற்ற பொருளுணர்த்துக. அதனால் அவை தத்தம் முறைமையிற் பொருள் விளங்கத் தோன்றும் என்பது இறுதி வரியின் கருத்து. தோன்றும் மன் - விளங்கத் தோன்றும். தத்தம் முறைமை என்றது, தத்தம் வழக்கு முறைமை.

**873.** அல்ல - அன்றி என்னும் பொருட்டு. கூறிய கருத்து நிலையன்றி வேறு பிற தோன்றினும் என்க. அவற்றொடு - முற் கூறிய பொருள்களோடு.

**874.** பொருட்குப் பொருள் தெரியின் - சொன்ன பொருளுக்கும் பொருளென்னவென்று ஆராயின்.

**875.** உணர்த்த வல்லின் - ஆசிரியன் தக்க முறைமையிற் பொருளுணர்த்த வல்லனாயின், பொருட்குத் திரிபில்லை - கேட் போனுக்குச் சொல்லும் பொருட்கண் மயக்கமுண்டாகாது என்றபடி; மாணாக்கன் பொருட்குப் பொருள் நாடமாட்டான் என்பது.

### அதனை உணரும் ஆற்றல்

876. உணர்ச்சி வாயில் உணர்வோர் வலித்தே. ௬௫

### சொற்களின் பொருள்கட்குக் காரணம் உண்டு

877. மொழிப்பொருட் காரணம் விழிப்பத் தோன்ற.

### உரிச்சொற்களில் எழுத்துப் பிரிந்திசைத்தல் இல்லை

878. எழுத்துப்பிரிந் திசைத்தல் இவணியல் பின்றே.

## ௪. புறனடை

879. அன்ன பிறவும் கிளந்த அல்ல
பன்முறை யானும் பரந்தன வரூஉம்
உரிச்சொல் எல்லாம் பொருட்குறை கூட்ட
இயன்ற மருங்கின் இனைத்தென அறியும்

---

**876.** உணர்ச்சி வாயில் - உணர்தல் முறைமை. உணர்வோர் வலித்து - உணர்வோர்தம் உணர்ச்சி வலிமையையும் பொறுத்துள்ளது.

**877.** விழிப்ப - விளங்க; முற்றும் விளங்க. ஆயினும், காரணம் உண்டென்பதுமட்டுந் தேற்றம் என்றபடி.

**878.** முதனிலையும் இறுதிநிலையுமாக எழுத்துக்கள் பிரிந்து வேறு வேறு பொருளுணர்த்தல் உரிச்சொல்லிடத்து இயற்கையன்று என்றபடி. இவண் என்றது, இவ் வுரிச்சொல் லிடத்து என்றற்கு.

வரம்புதமக் கின்மையின் வழிநனி கடைப்பிடித்
தோம்படை ஆணையிற் கிளந்தவற் றியலாற்
பாங்குற உணர்தல் என்மனார் புலவர். ௩௮

---

879. கிளந்த அல்ல - கிளந்து சொல்லப்பட்டன அன்றி. அன்ன பிறவும் - அவை போல்வன பிறவும். பன்முறையானும் - பலவாற்றானும். பொருட்குறை கூட்ட - பொருளாகிய குறையை நிறைத்துணர்த்துதற்கு. இயன்ற மருங்கின் - அவை நடைபெறுகின்ற, இசை குறிப்பு பண்பு என்ற பொருட்களத்து. வழி - முன்னர்க் கூறிய வழிகளை. நனி - மிக; ஒன்றியென்னும் பொருட்டு. ஓம்படை ஆணையின் - அவற்றைப் போற்றிப் பாதுகாக்கும் ஆட்சியினால். கிளந்தவற்றியலான் - கிளந்து கூறியவற்றின் இயல்பினால். ஓம்படை ஆணையிற் கிளந்தவற்றிய லான் என்க. பாங்குற உணர்தல் - முறைப்பட உணர்ந்து கொள்க. 'பொருட்குறை கூட்டி யுரைத்தற்கு வரம்பு தமக் கின்மையின், வழி கடைப்பிடித்து, ஓம்படையாணையிற் கிளந்த வற்றியலான் பாங்குற உணர்ந்து கொள்க' என்பது.

# ௯. எச்சவியல்

## க. சொற்களின் வகை

### நால்வகைச் சொற்கள்

880. இயற்சொல் திரிசொல் திசைச்சொல் வடசொ
[லென்
றனைத்தே செய்யு ளீட்டச் சொல்லே. க

### அவற்றுள், இயற்சொல்

881. அவற்றுள்,
இயற்சொற் றாமே
செந்தமிழ் நிலத்து வழக்கொடு சிவணித்
தம்பொருள் வழாமை இசைக்குஞ் சொல்லே. உ

### திரிசொல்

882. ஒருபொருள் குறித்த வேறுசொல் லாகியும்
வேறுபொருள் குறித்த ஒருசொல் லாகியும்
இருபாற் றென்ப திரிசொற் கிளவி. ௩

---

880. என்று அனைத்தே - என்று அத்தனையே. ஈட்டச் சொல் - ஈட்டுதற்குரிய சொல்; செய்யுளைக் கூட்டுதற்குரிய சொற்கள் என்றபடி.

881. தம் பொருள் வழாமை இசைக்கும்சொல் - கேட்டோர்க்கு எந்நிலத்தும் தத்தம் பொருள் வழுவாமல் ஒலிக்கும் சொற்களாம். அவை; நிலம், நீர், மக்கள், மரம் முதலியன.

882. வேறு சொல்லாகியும் - வேறு பல சொற்களாகியும். வேறு பொருள் - வேறு பல பொருள். இருபாற்று - இருவகையினையுடையது.

## திசைச் சொல்

883. செந்தமிழ் சேர்ந்த பன்னிரு நிலத்தும்
தங்குறிப் பினவே திசைச்சொற் கிளவி. ௪

## வடசொல்

884. வடசொற் கிளவி வடவெழுத் தொரீஇ
எழுத்தொடு புணர்ந்த சொல்லா கும்மே. ௫

883. செந்தமிழ் என்றது, செந்தமிழ் நிலத்தை. தம் குறிப்பின - தம் பொருளன. இயற்சொல் போல எந்நிலத்தும் தம் பொருள் வழங்குதலில்லாதவை என்றபடி. செந்தமிழ் நிலம் என்பது, வையையாற்றின் வடக்கும் மருதயாற்றின் தெற்கும் கருவூரின் கிழக்கும் மருவூரின் மேற்குமாகும். அதைச் சேர்ந்த பன்னிரு நிலம் என்றது, பொங்கர்நாடு, ஒளிநாடு, தென்பாண்டிநாடு, குட்டநாடு, குடநாடு, பன்றிநாடு, கற்கா நாடு, சீதநாடு, பூழிநாடு, மலைநாடு, அருவாநாடு, அருவா வடதலை என்பன. அவை முறையே செந்தமிழ் நாட்டின் தென் கீழ்பால் முதலாக வடகீழ்பால் இறுதியாக எண்ணுதற்குரியன என்ப. நச். இவற்றையுங் குழச், சிங்களமும் பழந்தீவும் கொல்லமும் கூபமும் கொங்கணமும் துளுவும் குடகமும் கரு நடமும் கூடமும் வடுகும் தெலுங்கும் கலிங்கமும் என வேறு பன்னிரண்டு நாடுகள் கூறுவர்.

884. வடசொற் கிளவி - வடமொழி என்னுஞ் சொல். வடக்கே வழங்கி. எழுத்தும் பிறவும் வேறுபட்ட தமிழ் மொழி. இது வடதமிழ் என்பது உரையாசிரியர் கருத்து. எனை இயற்சொல் திரிசொல் திசைச்சொல் என்னும் மூன்றும் தென்றமிழ் வகையினவாம். வடவெழுத்து ஓரீஇ - வடக்கின் கண் வழங்கும் அவ்வெழுத்துக்களினின்று நீங்கி. எழுத்தொடு புணர்ந்த - செந்தமிழ் எழுத்துக்களால் ஆகிய.

885. சிதைந்தன வரினும் இயைந்தன வரையார். சு

**சொற்கள் அடையும் விகாரம்**

886. அந்நாற் சொல்லும் தொடுக்குங் காலை
வலிக்கும்வழி வலித்தலும் மெலிக்கும்வழி
[மெலித்தலும்
விரிக்கும்வழி விரித்தலும் தொகுக்கும்வழித்
[தொகுத்தலும்
நீட்டும்வழி நீட்டலும் குறுக்கும்வழிக் குறுக்கலும்
நாட்டல் வலிய என்மனார் புலவர். எ

## உ. பொருள்கோள் வகை

**நால்வகைப் பொருள்கோள்**

887. நிரனிறை சுண்ணம் அடிமறி மொழிமாற்று
அவைநான் கென்ப மொழிபுணர் இயல்பே. அ

---

**885.** சிதைந்தன - பொது எழுத்தான் இயன்றன அன்றி, வடவெழுத்துக்களால் ஆகிச் செந்தமிழ் எழுத்துக்களாகத் திரிந்து நின்றவை. வரினும் - வந்து வழங்கினும். இயைந்தன வரையார் - ஏற்பன நீக்கார்.

**886.** சொல்லும் - சொல்லையும். தொடுக்குங் காலை - செய்யுள் செய்யுங் காலத்து. வலிக்கும் வழி - வலிக்கவேண்டுமிடத்து; அஃதாவது மெல்லொற்றை வல்லொற்றாக்கவேண்டுமிடத்து. வலித்தலும் - வல்லொற்றாக்குதலும். நாட்டல் வலிய - செய்யுளின்பத்தின் பொருட்டுக் கருதி நிறுவுதலை வலியாக உடையன.

**887.** மொழி புணர் இயல்பு - மொழிகள் தம்முட் புணரும் முறைமை; பொருள் பொருந்தும் வகையில் மொழிகள் புணரும் முறைமை யென்க.

**அவற்றுள், நிரனிறைப் பொருள்கோள்**

888. அவற்றுள்,
நிரனிறை தானே,
வினையினும் பெயரினும் நினையத் தோன்றிச்
சொல்வேறு நிலைஇப் பொருள்வேறு நிலையல். ௯

**சுண்ணப் பொருள்கோள்**

889. சுண்ணம் தானே
பட்டாங் கமைந்த ஈரடி எண்சீர்
ஒட்டுவழி அறிந்து துணிந்தனர் இயற்றல். ௧0

**அடிமறிப் பொருள்கோள்**

890. அடிமறிச் செய்தி அடிநிலை திரிந்து
சீர்நிலை திரியாது தடுமா றும்மே. ௧௧

---

**888.** நிரனிறைப் பொருள்கோள், வினைச்சொல்லினும் பெயர்ச்சொல்லினும் அல்லது அவ்விரு சொல்லினும் வருமென்றற்கு; 'வினையினும் பெயரினும்' என்றார். வேறு - வேறு இடத்தில். நிலைஇ - நின்று. நிலையல் - நிற்றலாகும். பொருள் என்றது இங்கு, முடிக்குஞ் சொல். அவை, முறையே நின்று பொருள் கொள்ளக் கிடத்தலின், 'நிரனிறை' எனப்பட்டது.

**889.** பட்டாங்கு அமைந்த - இயல்பாக அமைந்த; என்றது, அளவடி என்றற்கு. துணிந்தனர் - துணிந்து. சுண்ணம் என்பது பொடி; அது சிதர்ந்துகிடத்தல்போலச் சொல்லும் அதனை முடிக்குஞ் சொல்லும் ஒரு முறையின் நில்லாது சிதர்ந்து கிடக்கும் நிலை சுண்ணப் பொருள்கோள் நிலையாகும்.

**890.** அடிமறிச் செய்தி - அடிமறி என்பதன் செய்தி.

அதற்கு, மேலும் ஒரு முடிபு

891. பொருடெரி மருங்கின்
ஈற்றடி இறுசீர் எருத்துவயின் திரியும்
தோற்றமும் வரையார் அடிமறி யான. கஉ

மொழிமாற்றுப் பொருள்கோள்

892. மொழிமாற் றியற்கை,
சொன்னிலை மாற்றிப் பொருளெதிர் இயைய
முன்னும் பின்னும் கொள்வழிக் கொளாஅல்.

## ௩. தொகைச்சொல் வகை

தொகையாகாதன

893. த ந நு எ எனும் அவைமுத லாகிய
கிளைநுதற் பெயரும் பிரிப்பப் பிரியா. கச

---

891. பொருள் தெரி மருங்கின் - பொருள் தெரியும் வகையால். இறுசீர் - இறுதிச் சீர்; எருத்துவயின் - அதன் அயற் சீரிடத்து. அடிமறியான் - அடிமறிப் பொருளில். முன் நூற்பாவிற சீர் திரியாது தடுமாறும் என்றமையால். இந்நூற்பாவிற, சீர் திரிதலும் ஈற்றடியின் ஈற்றயற்சீர்க்கண் ஒரோவழி உளதாதல் நுவலப்பட்டது.

892. எதிர் இயைய-எதிர் வந்து பொருந்த. கொளாஅல்-கொள்க.

893. எனும் அவை முதலாகிய - என்னும் அவற்றை முதலெழுத்தாக உடைய. கிளை நுதல் பெயரும் - உறவு நுதலி வரும் பெயர்களும். பிரிப்ப - பகுதி விகுதியெனப் பிரித்துப் பொருள்செயய. உம்மையால், தாய் தந்தை முதலிய பிற கிளைநுதற பெயர்களும் பிரிப்பப் பிரியா என்ப.

### தொகைபோல் அடுக்கி வருவன

894. இசைநிறை அசைநிலை பொருளொடு
[புணர்தலென்
றவைமூன் றென்ப ஒருசொல் அடுக்கே. கரு

### தொகை மொழிகள்

895. வேற்றுமைத் தொகையே உவமத் தொகையே
வினையின் தொகையே பண்பின் தொகையே
உம்மைத் தொகையே அன்மொழித் தொகையென்
றவ்வா றென்ப தொகைமொழி நிலையே. கசு

### அவற்றுள், வேற்றுமைத் தொகை

896. அவற்றுள்,
வேற்றுமைத் தொகையே வேற்றுமை இயல. கஎ

### உவமத் தொகை

897. உவமத் தொகையே உவம இயல. கஅ

### வினைத் தொகை

898. வினையின் தொகுதி காலத் தியலும். ககூ

---

**894.** ஒருசொல் அடுக்கு - ஒரு சொல் அடுக்கி வருதல்; 'வந்தது வந்தது, கூறு கூறு' என்றாற்போல.

**895.** வினையின் தொகை - வினைச்சொல் ஈறுகள் தொக்க தொகை; வினைத்தொகை.

**896.** வேற்றுமைத் தொகை - வேற்றுமை யுருபுகள் தொக்க தொகை. வேற்றுமை யியல - அங்ஙனம் உருபு தொகாத வேற்றுமைத் தொடரையொப்பப் பொருளுணர்த்துந் தன்மைய.

**898.** வினையின் தொகுதி - வினைத்தொகை. காலத்து இயலும் - காலப்பொருளில் நிகழும். காலப்பொருளே பொருளாக நிகழும் என்றபடி. தொகையாயினும், காலம் தொகையாற்றலால் உணர்த்தவல்லது.

### பண்புத் தொகை

899. வண்ணத்தின் வடிவின் அளவிற் சுவையினென்
றன்ன பிறவும் அதன்குணம் நுதலி
இன்ன திதுவென வரூஉம் இயற்கை
என்ன கிளவியும் பண்பின் தொகையே. ௨௦

### உம்மைத் தொகை

900. இருபெயர் பலபெயர் அளவின் பெயரே
எண்ணியற் பெயரே நிறைப்பெயர்க் கிளவி
எண்ணின் பெயரோ டவ்வறு கிளவியும்
கண்ணிய நிலைத்தே உம்மைத் தொகையே. ௨௧

### அன்மொழித் தொகை

901. பண்பு தொகவரூஉங் கிளவி யானும்
உம்மை தொக்க பெயர்வயி னானும்
வேற்றுமை தொக்க பெயர்வயி னானும்
ஈற்றுநின் றியலும் அன்மொழித் தொகையே.

---

899. அதன் என்றது, ஒரு பொருளின் என்றற்கு. பண்புத் தொகையிற் பின் வரும் ஒரு பொருள் என்க. அது தொகைக் கண்ணே வருதலின், சுட்டாற் கூறினார். இயற்கை - இயல்பினையுடைய.

900. கண்ணிய நிலைத்து - கருதிய நிலைமையினையுடையது. 'புலிவிற்கெண்டை' என்பது பலபெயரானாகிய உம்மைத் தொகை. அதனை விரிக்குமிடத்துப் 'புலியும் வில்லும் கெண்டையும்' என விரியும் பிறவும் இன்னனம் வரும்.

901. கிளவியானும் என்றதும் பெயர்வயினானும் என்னும் பொருட்டு; பெயர்க்கண்ணும் என்க. ஈற்று - அவற்றின் ஈற்றில்.

**தொகைமொழிகளிற் பொருள்நிற்குமிடம்**

902. அவைதாம்,
முன்மொழி நிலையலும் பின்மொழி நிலையலும்
இருமொழி மேலும் ஒருங்குடன் நிலையலும்
அம்மொழி நிலையாது அன்மொழி நிலையலும்
அந்நான் கென்ப பொருணிலை மரபே. உ௩

**தொகைமொழிகள் ஒருசொற்றன்மைய**

903. எல்லாத் தொகையும் ஒருசொல் நடைய. உ௪

**உம்மைத் தொகைக்கு, மேலும் ஒரு முடிபு**

904. உயர்திணை மருங்கின் உம்மைத் தொகையே
பலர்சொல் நடைத்தென மொழிமனார் புலவர்.

**பொருள் கொள்ளுங் குறிப்பு**

905. வாரா மரபின வரக்கூ றுதலும்
என்னா மரபின எனக்கூ றுதலும்

---

***902.*** **அவைதாம் - அத் தொகைச் சொற்களின் நிலை. நிலையல் - நிற்றல். இருமொழிமேலும் - இருமொழிக்கண்ணும். அம்மொழி - அவ்விரு மொழிக்கண்ணும்; அன்மொழி - அவை அல்லாத வேறு மொழிக்கண். பொருள்நிலை மரபு - பொருள் நிலைபெறும் இடமுறைமையினால். அந்நான்கு - ஆகிய அந் நான்கு வகையாம். 'முன்' 'பின்' என்பன இடமும் காலமும் பற்றிவரும். 'வேங்கைப்பூ' என்பதில் இடம்பற்றிக் கூறினால், பூ முன்மொழி. இம் முன்மொழியிற் பொருள் சிறந்து நின்றது என்றபடி.**

***903.*** **ஒரு சொல் நடைய - ஒரு சொற் றன்மையாய் நடைபெறுதலுடைய. தொகை என்பது இருசொற்கண்ணதாகலின், அவ்விருசொல்லும் ஒரு சொல் நடைய என்றார்.**

***904.*** **பலர் சொல் நடைத்து - ஈறு பலர்பாற் சொல் நடையது. 'கபில பரணர்' என்பது இதற்குக் காட்டு.**

அன்னவை எல்லாம் அவற்றவற் றியல்பான்
இன்ன என்னும் குறிப்புரை ஆகும். உ௬

**தொகையைப்போல அடுக்கி வருவனவற்றுள் இசைநிறை அடுக்கு**

906. இசைப்படு பொருளே நான்கு வரம்பாகும். உ௭

**பொருளொடு புணர்தல் என்னும் அடுக்கு**

907. விரைசொல் அடுக்கே மூன்று வரம்பாகும். உ௮

**அசைநிலை அடுக்கு**

908. கண்டீர் என்றா கேட்டீர் என்றா
சென்ற தென்றா போயிற் றென்றா

---

905. வாரா மரபின - இயங்காத இயல்புடையவற்றை. வரக் கூறுதலும் - இயங்குவனவாகக் கூறுதலும். என்னா மரபின - சொல்லா இயல்பினவற்றை. எனக் கூறுதலும் - சொல்லுவனவாகக் கூறுதலும். 'இக் குன்று அக் குன்றோடு பொருந்தும்' என்பதும், 'மழை மழை என்கின்றது பைங்கூழ்' என்பதும் முறையே இவற்றிற்குக் காட்டு. அன்னவையெல்லாம் - அங்ஙனங் கூறுவனவெல்லாம். இன்ன - இத்தன்மைய.

906. இசைப்படு பொருள் என்றது, இங்கே அப் பொருளின் அடுக்கு. நான்கு வரம்பாகும் - நான்காகிய எல்லையினையுடையது. 'பாடுகோ பாடுகோ பாடுகோ பாடுகோ' என இசைநிறைக்கண், நான்குவரையில் அடுக்கிவரும் என்றபடி. வரம்பு நான்கெனவே, குறைந்து வருதலும் ஆம் என்பது.

907. விரைசொல் அடுக்கு - விரைவுப் பொருளில் வரும் சொல்லடுக்கு. 'தீத் தீத் தீ' என்பது இதற்குக் காட்டு.

908. என்றா - எனவும், அன்றியனைத்தும் - அவை யனைத்தும்; அந் நான்கு வினைச்சொல்லும். அசைக்குங் கிளவி - அசைச்சொல். வினவொடு சிவணி நிற்றலாவது, 'கண்டீரே'

அன்றி அனைத்தும், வினையொடு சிவணி
நின்றவழி அசைக்குங் கிளவி என்ப. உ௯

**இதுவும் அது**

909. கேட்டை என்றா நின்றை என்றா
காத்தை என்றா கண்டை என்றா
அன்றி அனைத்தும் முன்னிலை அல்வழி
முன்னுறக் கிளந்த இயல்பா குமே. ௩0

## ௪. வினைமுற்றின் வகை

**அதன் இயல்பு**

910. இறப்பின் நிகழ்வின் எதிர்வின் என்ற
சிறப்புடை மரபின் அம்முக் காலமும்,
தன்மை முன்னிலை படர்க்கை என்னும்
அம்மூ விடத்தான், வினையினுங் குறிப்பினும்
மெய்ம்மை யானும் ஈரிரண் டாகும்
அவ்வா றென்ப முற்றியல் மொழியே. ௩௧

---

என வருதல், வினையொடு சிவணி நின்ற வழி அசைச்சொல் எனவே, சிவணாது நின்றவழி வினைச்சொல் என்பதாம். பொதுப்படக் கூறினமையால் இவை அடுக்கியும் அடுக்காதும் வருமென்க. மேல் நூற்பாவிற்கும் இஃதொக்கும்.

909. முன்னிலை அல்வழி - முன்னிலைப்பொருள் உணர்த்தாதவிடத்து. முன்னுறக் கிளந்த இயல்பாகும் - முன் நூற்பாவிற் கூறிய அசைச்சொல் இயல்பாகும்; அசைச்சொல்லாகும் என்றபடி.

910. வினைக்குக் காலம் சிறப்பாகலின், சிறப்புடை மரபின் அம் மூக் காலமும் என்றார். மெய்ம்மையானும் - பொருண்மையானும்; உயர்திணை அஃறிணை விரவுத்திணை

### அதற்கு, வேறு விதி

911. எவ்வயின் வினையும் அவ்வயின் நிலையும். ௯௨

### அதற்கு முடிபு

912. அவைதாம்,
தத்தங் கிளவி அடுக்குந வரினும்
எத்திறத் தானும் பெயர்முடி பினவே. ௯௩

---

என்னும் மூவகைப் பொருண்மையானும் என்ப. ஈரிரண்டு - இவ்விரண்டு; இரண்டிரண்டு, அதனால், வினையினுங் குறிப்பினு மென இரண்டிரண்டாக மூவகைப் பொருண்மையினும் ஆறும். கூறிய ஆறும், மூவகைக் காலத்தானும் மூவகையிடத்தானும் வருதல் முற்றுச்சொல் என்றபடி. முற்றியல் மொழி - முற்றுச் சொல் எனினும் பொருட்டு; பொருள் முற்றி யியலும் மொழி என்பது பொருள்.

911. எவ் வயின் வினையும் - முன் நூற்பாவிற்கூறிய முறைமையின் உட்படாது பொருள் முற்றி வருகின்ற எவ் வகைப்பட்ட வினைச்சொல்லும். அவ்வயின நிலையும் - அம் முற்றுச்சொல் வகையிற் பொருந்தும். 'யார்' 'எவன்' 'இல்லை' முதலிய முற்று வினைகள் இதற்கு எடுத்துக்காட்டு.

912. அவைதாம் - முற்றுச் சொற்கள்தாம். தத்தம் கிளவி அடுக்குந வரினும் - பலவகையான தத்தம் வாய்பாட்டுக் கிளவிகளாய அடுக்கிவரினும்; அடுக்குநவரினும் எனும் உம்மை, அடுக்காது வரினும் எனும் பொருட்டாய் நின்றது. 'பெயர் முடிபின' என்றா, அவை, தம்முள் தொடராது பெய ரோடு முடியுமென்றற்கு. முடிக்கும் பெயர் முன்னும் பின்னு மாய் வரினும் என்றற்கு, எத்திறத்தானும் எனப்பட்டது.

## ரு. எச்சச் சொற்களின் வகை

### அவற்றின் பாகுபாடு

913 பிரிநிலை வினையே பெயரே ஒழியிசை
எதிர்மறை உம்மை எனவே சொல்லே
குறிப்பே இசையே ஆயீ ரைந்தும்
நெறிப்படத் தோன்றும் எஞ்சுபொருட் கிளவி.

### அவற்றுள், பிரிநிலையெச்சம்

914. அவற்றுள்,
பிரிநிலை எச்சம் பிரிநிலை முடிபின. ௩௫

### வினையெச்சம்

915. வினையெஞ்சு கிளவிக்கு வினையும் குறிப்பும்
நினையத் தோன்றிய முடிபா குமே
ஆவயிற் குறிப்பே ஆக்கமொடு வருமே. ௩௬

---

913. பிரிநிலை - பிரிநிலையெச்சம். வினை – வினையெச்சம். என - எனவென் எச்சம். பிறவும் இங்ஙனங் கொள்க. 'எஞ்சு பொருட் கிளவி' என்றது, எச்சச் சொல் என்றற்கு.

914. அவற்றுள் - அவ் வெச்சங்களுள். பிரிநிலை முடிபின- பிரிநிலைப் பொருளோடு முடியும் இயல்பின. 'அவனே கொண் டான் எனபது பிறர் கொண்டிலர்' எனப் பிரிக்கப்பட்ட எச்சப் பொருளோடு கருத்து முடிந்து நின்றமை காண்க.

915. வினையெஞ்சு கிளவிகு - வினையெச்சச் சொல் லுக்கு; வினையெச்சத்திற்கு எனக. வினையும் - தெரிநிலை வினை யும். குறிப்பும் - குறிப்பு வினையும். ஆவயின் - அந்நிலையில். குறிப்புவினை ஆக்கச்சொல்லோடு வரும் என்க; 'மருந்துண்டு நல்லன் ஆயினை' என்பது ஆக்கச்சொல்லோடு வருதற்குக் காட்டு.

### பெயரெச்சம்

916. பெயரெஞ்சு கிளவி பெயரொடு முடிமே. ௫௭

### ஒழியிசை யெச்சம்

917. ஒழியிசை எச்சம் ஒழியிசை முடியின. ௫௮

### எதிர்மறை யெச்சம்

918. எதிர்மறை யெச்சம் எதிர்மறை முடியின. ௫௯

### உம்மை யெச்சம்

919. உம்மை யெச்சம் இருவீற் றானும்
தன்வினை ஒன்றிய முடிபா கும்மே. ௬௦

### அதற்கு, மேலும் ஒரு முடிபு

920. தன்மேற் செஞ்சொல் வரூஉங் காலை
நிகழுங் காலமொடு வாராக் காலமும்
இறந்த காலமொடு வாராக் காலமும்
மயங்குதல் வரையார் முறைநிலை யான. ௬௧

---

**917.** ஒழியிசை யெச்சம் - ஒழிந்த சொல்லை எச்சமாக உடையது. ஒழியிசை முடியின - ஒழிந்த அச்சொல்லின் பொருளோடு முடியும் இயல்பின. 'கூரியதோர் வாள்மன்' என்பது 'கூரியதில்லை' என்னும் ஒழிந்த பொருளோடு முடிந்து நின்றமை காண்க.

**919.** ஈற்றானும் - முடிபு வகையானும்; முடிபாவது, தழுவி முடிதல். ஆதலின இரு ஈற்றானும் என்றது, எதிரது தழீஇய எச்சமும் இறந்தது தழீஇய எச்சமும் எனக. ஒன்றன வினை முடிபே மற்றொன்றற்கும் ஒன்றிவரும் என்பார், 'தன் வினை ஒன்றிய முடிபாகும்' என்றார். 'சாத்தனும் வந்தான்' எனின், 'கொற்றனும் வந்தான்' என ஒரு வினையான முடிந்தமை காண்க.

**920.** தன் மேல் - அவ் வும்மை யெச்சத்தின்முன். செஞ்சொல் என்பது, உம்மையில்லாத சொல் என்றற்கு. 'கூழ்

**'என' என்னும் எச்சம்**

921. எனவென் எச்சம் வினையொடு முடிமே. சஉ

**ஏனை மூன்று எச்சங்கள்**

922. எஞ்சிய மூன்றும் மேல்வந்து முடிக்கும்
எஞ்சுபொருட் கிளவி இலவென மொழிப. சங

**அவற்றுள், குறிப்பெச்சமும் இசையெச்சமும்**

923. தத்தங் குறிப்பின் எச்சஞ் செப்பும். சச

---

உண்டான் சோறும் உண்பன்' என்பது இதற்குக் காட்டு. முறைநிலையான் - முறையாகிய நிலைமையுடைமையான்; முறைமைக்கண் என்க.

922. எஞ்சிய மூன்று என்றது, சொல்லெச்சமும் குறிப்பெச்சமும் இசையெச்சமும். எஞ்சுபொருட்கிளவி இல என்றதற்குக் காரணம், மேலவரும் நூற்பாக்களால் விளங்கும்.

923. சொல்லெச்சத்துக்கு, மேல் நூற்பா ஒன்று வருதலின், இந் நூற்பா ஏனைக் குறிப்பெச்சத்திற்கும் இசையெச்சத்திற்கு மெனக. தத்தங் குறிப்பின என்றது, தம்மைக் கூறுவோருடைய குறிப்புக்களால் என்றற்கு. 'கற்கறிக்க நன்கு அட்டான்' எனின், கூறுவோன் குறிப்பினால், நன்கு அட்டான் என்பது 'தீங்கு அட்டான்' என்னும் கருத்தைத் தானே தருதலின், குறிப்பெச்சமாய வேறு முடிக்குஞ் சொல் வேண்டாதாயிற்று. இங்ஙனமே 'வயிறு மொடுமொடுத்தது' என்னும் இசைப்பொருட் குறிப்பினும் கூறுவோன் குறிப்பினால் 'உணவு வேண்டா' என்னுங் கருத்தைத் தந்து வேறு முடிக்குஞ் சொல் வேண்டாது நின்றமையும் கொள்ளப்படும். இது நச். கருத்து.

### சொல்லெச்சம்

924. சொல்லென் எச்சம் முன்னும் பின்னும்
சொல்லள வல்ல தெஞ்சுதல் இன்றே. ௪௪

## ௯. சில மரபுவகை

### இடக்கர்ச் சொல்

925. அவையல் கிளவி மறைத்தனர் கிளத்தல். ௪௫
926. மறைக்குங் காலை மரீஇய தொராஅல். ௪௬

### ஈ, தா, கொடு என்னுஞ் சொற்கள்

927. ஈ தா கொடுவெனக் கிளக்கும் மூன்றும்
இரவின் கிளவி ஆகிடன் உடைய. ௪௭

### அவற்றுள், 'ஈ' என்னுஞ் சொல்

928. அவற்றுள்,
ஈயென் கிளவி இழிந்தோன் கூற்றே. ௪௮

---

924. 'சொல்லளவல்லது' எனறூர், தொடராய் எஞ்சவ தனறு என்றற்கு. இது சேனு. கருத்து.

925. அவை அல் கிளவி - அவைக்கண் உரைக்கப்படாத சொல். மறைத்தனர் - மறைத்து. கிளத்தல் - வேறு வாய்பாட்டாற சொல்லுக.

926. மரீஇயது - அவ் வாய்பாடுகளுள், வழக்கத்திற் பொருந்தி வருவதனை. ஓரால் - நீககற்க; வழக்கின்படி கூறுக என்பது.

927. இரவின் கிளவி - இரத்தற்சொல். 'ஈச் சிறகு' 'தாவில நனபொன்' 'கொடுங்கோல்' என அம் மூன்று சொல்லும் பறவை முதலிய பிறபொருளும் உணர்த்தலின், 'ஆகிடன் உடைய' என்ருர்.

### ‘ தா ’ என்னுஞ் சொல்

929. தா என் கிளவி ஒப்போன் கூற்றே. ௬௦

### ‘ கொடு ’ என்னுஞ் சொல்

930. கொடு என் கிளவி உயர்ந்தோன் கூற்றே. ௬௧

### அதற்கு, மேலும் ஒரு முடிபு

931. கொடு என் கிளவி படர்க்கை யாயினுந்
தன்னைப் பிறன்போற் கூறுங் குறிப்பின்
தன்னிடத் தியலும் என்மனார் புலவர். ௬௨

### பெயர்கள் முதலிய சொற்கள்

932. பெயர்நிலைக் கிளவியின் ஆஅ குநவும்
திசைநிலைக் கிளவியின் ஆஅ குநவும்
தொன்னெறி மொழிவயின் ஆஅ குநவும்
மெய்ந்நிலை மயக்கின் ஆஅ குநவும்
மந்திரப் பொருள்வயின் ஆஅ குநவும்
அன்றி அனைத்துங் கடப்பா டிலவே. ௬௩

---

**930.** உயர்ந்தோன் கூற்று - தன்னின் இழிந்தோனொருவனிடம் இரக்க நேர்ந்தக்கால் உயர்ந்தோன் கூறுங் கூற்று.

**931.** உயர்ந்தோன் தன்னைப் பிறன்போல் வைத்துக் கூறுதல் இயல்பாகலின், ‘கொடு என் கிளவி’ படர்க்கை யாயிற்று. தன்னையே அங்ஙனங் கூறுங் குறிப்பினால் ‘தன்னிடத்து இயலும்’ என்றார். தன்னிடத்து - தன்மையிடத்து.

**932.** பெயர்நிலைக் கிளவியின் - ஒருவர்க்கோ ஒன்றிற்கோ பெயரிடும் முறைமைக்குரிய குறியீடுகளால். ஆகுநவும் - ஆகுஞ் சொற்களும். திசைநிலைக் கிளவியின் - திசைப்பொருட்குரிய கிளவிகளால். தொன்னெறி மொழிவயின் - தொன்றுதொட்ட நெறியாய் வழங்கி வரும் மொழிகளின் காரணமாக; என்றது, பழமொழிக் காரணத்தான் என்க. மெய்ந்நிலை மயக்கின் - பொருள்நிலை மயக்கத்தால், மந்திரப் பொருள்வயின் - மந்திரப் பொருள் நிலையால். கடப்பாடு இல - இலக்கணத்தான் யாப்புறவு இல்லாதனவாகும்.

### செய்யாய் என்னுஞ் சொல்

933. செய்யாய் என்னும் முன்னிலை வினைச்சொல்
செய்யென் கிளவி ஆகிடன் உடைத்தே. ௫௪

### ஈ, ஏ என்னும் முன்னிலை ஈறுகள்

934. முன்னிலை முன்னர் ஈயும் ஏயும்
அந்நிலை மரபின் மெய்யூர்ந்து வருமே. ௫௫

### புதிய சொற்கள்

935. கடிசொல் இல்லைக் காலத்துப் படினே. ௫௬

### முதற்குறை முதலியன

936. குறைச்சொற் கிளவி குறைக்கும்வழி அறிதல்.

---

**933.** 'செய்யாய்' என்பது செய்யாய் என்னும் வாய்பாடு. அதன் ஆய் என்னும் ஈறு கெடச் செய் என்கிளவி ஆகிடனுடைத்தே என்க.

**934.** முன்னிலை முன்னர் - முன்னிலை வினைச்சொல்லின் முன் வரும். அந்நிலை மரபின - அம் முன்னிலையியல்பிற்கேற்ற. முன் நூற்பா முன்னிலை ஆய் ஈறு பற்றியதாகலின், இவற்றையும் உடன் கூறினர். 'சென்றீ' 'நின்மே' என்பவற்றில் ஏற்ற மெய்கள் ஊர்ந்து வந்தமை காண்க.

**935.** கடிசொல் - கடியப்படுஞ் சொல். காலத்து - அவ்வக் காலத்தில். படின் - தோன்றி வழங்குமாயின். சம்பு, சள்ளை, சமழ்ப்பு முதலாயின அவ் வகையில் வரும் புதிய சொற்கள் என்பர், சேனா.

**936.** குறைச்சொற் கிளவி - குறைத்தற்குரிய சொல்லாகிய கிளவிகள். கிளவி யென்றது, குறிப்பிட்ட சில சொற்

937. குறைத்தன வாயினும் நிறைப்பெயர் இயல. ௬அ

## இடைச்சொல் மரபு

938. இடைச்சொல் எல்லாம் வேற்றுமைச் சொல்லே.

## உரிச்சொல்லுக்கும் அவ்வியல்பு

939. உரிச்சொல் மருங்கினும் உரியவை உரிய. ௬0

## வினையெச்சச் சொற்கள்

940. வினையெஞ்சு கிளவியும் வேறுபல் குறிய. ௬௧

---

கள். குறைக்கும் வழி - குறைக்கும் இடம். அறிதல் - அறிக. அறிந்து குறைக்க என்றபடி. இடம் என்றது, ஒரு சொல்லின் தலை இடை கடை யெனபன. 'தாமரை' எனனுஞ் சொல் 'மரை' என்று குறைதல் தலைக்குறையாகும். பிறவும் இங்ஙனம் வரும்.

937. குறைத்தனவாயினும் - அங்ஙனங் குறைக்கப் பட்டனவாயினும். நிறைப்பெயர் இயல - நிறைந்து நின்ற முழுப்பெயரொப்பப் பொருளுணர்த்தும் இயல்பினவாம்.

938. வேற்றுமைச் சொல் - வேறுபாடுறுவிக்குஞ் சொல் லாம்; தாஞ் சார்ந்து நின்ற பிற சொற்களிடத்து வேறுபா டுண்டாக்குஞ் சொல் என்றபடி.

939. உரியவை - அங்ஙனம் வேறுபடுத்தற்குரியவை.

940. வினையெஞ்சு கிளவியும் - வினையெச்சச் சொல்லும். வேறு பல் குறிய - திரிதலுடைய பல வடிவுகளுடையன, செயவெனெச்சம் செய்தெனெச்சமாகத் திரிந்துநிறறல் முதலி யனஈண்டுக் கருதப்படும்.

### பொதுவாகத் தொடர்மொழிகள்

941. உரையிடத் தியலும் உடனிலை அறிதல். ௬உ

### குறிப்பால் உணருஞ் சொற்கள்

942. முன்னத்தின் உணருங் கிளவியும் உளவே
இன்ன என்னும் சொல்முறை யான. ௬௩

### ஒருசொல் இருபொருளுணர்த்துதல்

943. ஒருபொருள் இருசொற் பிரிவில வரையார். ௬௪

### ஒருமைப் பெயர் பன்மைக் காதல்

944. ஒருமை சுட்டிய பெயர்நிலைக் கிளவி
பன்மைக் காகும் இடனுமா ருண்டே. ௬௫

---

941. உரையிடத்து - வழக்கிடத்து. உடனிலை - தம்முள் மாறுபட்ட இருசொற்கள் உடனிற்றலை; உடன் நின்று தம் பொருளுணர்த்தி இயைதலை. அறிதல் - அறிந்து போற்றுக. 'இந்நாழிக் கிந்நாழி சிறிது பெரிது' என்பதில், தம்முள் மாறு பட்ட சிறிது பெரிது என்னும் இருசொற்கள் உடனின்று இயைதல் கண்டுகொள்ளப்படும்.

942. முன்னத்தின் - குறிப்பினால்; சொல்லா னன்றிச் சொல்லுவான்றன் குறிப்பினால். இவை இத்தன்மைய என்று சொல்லும் சொன்முறைக்கண் என்பது இரண்டாம் வரியின் கருத்து.

943. பிரிவிலவாய் ஒரு பொருள்மேல் வரும் இரு சொற்களை நீக்கார் என்றபடி. அவை 'நிவந்தோங்கும்' 'மீமிசை' போல்வன.

**ஆற்றுப்படையில் முன்னிலை யொருமை பன்மையொடு முடிதல்**

945. முன்னிலை சுட்டிய ஒருமைக் கிளவி
பன்மையொடு முடியினும் வரைநிலை யின்றே
ஆற்றுப்படை மருங்கிற் போற்றல் வேண்டும். சுசு

## எ. சொல்லதிகாரத்திற்குப் புறனடை

**இருவகை வழக்கினும் நூல்வழக்கின் முதன்மை**

946. செய்யுள் மருங்கினும் வழக்கியல் மருங்கினும்
மெய்பெறக் கிளந்த கிளவி யெல்லாம்
பல்வேறு செய்தியின் நூனெறி பிழையாது
சொல்வரைந் தறியப் பிரித்தனர் காட்டல். சுஎ

## சொல்லதிகாரம் முற்றும்.

---

**945.** வரைநிலை யின்று - நீக்குநிலையின்று. ஆற்றுப் படை என்றது, 'கூத்தராற்றுப்படை' 'பொருநராற்றுப் படை' போன்ற நூல்வகை.

**946.** மெய்பெற - பொருள்பெற. செய்தியின் நூல் நெறி - செய்கையையுடைய தொன்னூலின் புலனெறி வழக்கு. சொல் வரைந்து அறியப் பிரித்தனர் காட்டல் - சொல்லின் முறைமையை வரம்பு செய்து, மாணாக்கர் அறியும்படி வகுத்து அறிவுறுத்துக என்பது.

# ௩. பொருளதிகாரம்

## ௧. அகத்திணை யியல்

[இன்பவொழுக்கத்தின் இயல்புணர்த்துவது.]

### ௧. இன்பவொழுக்கத்தின் வகை

**அகப்பொருட்குரிய திணைகள்**

947. *கைக்கிளை முதலாப் பெருந்திணை இறுவாய்*
*முற்படக் கிளந்த எழுதிணை என்ப.* ௧

### ௨. உயர்ந்த இன்பவொழுக்கமும், ஏதுக்களும்

**அவற்றுள், தமக்கென நிலம் பெறுவன**

948. *அவற்றுள்,*
*நடுவண் ஐந்திணை நடுவண தொழியப்*
*படுதிரை வையம் பாத்திய பண்பே.* ௨

---

**947.** முதலா - முதலாக. இறுவாய் - ஈறாக. முன்பட - முதன்மை தோன்ற. கிளந்த - கிளக்கப்பட்டவை.

**948.** நடுவண் - கைக்கிளைக்கும் பெருந்திணைக்கும் நடுவண் நின்ற. ஐந்திணை - முல்லை குறிஞ்சி பாலை மருதம் நெய்தல் என்பன. நடுவணது ஒழிய - இவற்றுள், பொதுவானதாயுள்ள பாலைத்திணை நீங்கலாக; நடுவணது - பொதுவானது. படுதிரை வையம் - ஒலிக்கும் கடல்சூழ்ந்த இந்நிலப் பரப்பு. பாத்திய பண்பு - ஏனை நான்கு திணைகட்கும் நால்வகையாகப் பகுக்கப் பட்ட இயல்புடையதாகும்.

### திணைகளின் பொருள்கள்

949. முதல்கரு உரிப்பொருள் என்ற மூன்றே
நுவலுங் காலை முறைசிறந் தனவே
பாடலுட் பயின்றவை நாடுங் காலை. ௩

### முதற்பொருளின் வகை

950. முதல்எனப் படுவது, நிலம்பொழு திரண்டின்
இயல்பென மொழிப இயல்புணர்ந் தோரே. ௪

### அவற்றுள், நிலம்

951. மாயோன் மேய காடுறை உலகமும்
சேயோன் மேய மைவரை உலகமும்
வேந்தன் மேய தீம்புனல் உலகமும்
வருணன் மேய பெருமணல் உலகமும்
முல்லை குறிஞ்சி மருதம் நெய்தலெனச்
சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே. ௫

### காலம்

952. காரும் மாலையும் முல்லை; குறிஞ்சி
கூதிர் யாமம் என்மனார் புலவர். ௬

---

**949.** நுவலுங்காலை - குறித்துச் சொல்லுங்கால். பயின்றவை - பயின்ற கருத்துக்களை. நாடுங்காலை, மூன்று, முறை சிறந்தன எனபது.

**950.** இயல்பு - அவற்றின் இலக்கணம்.

**951.** மேய - விரும்பிய. காடு உறை உலகம் - காடு பொருந்திய நிலத்தையும். மைவரை - மேகம் உலாவும் மலைகள் பொருந்திய. சொல்லிய முறையால் - முன்னோர் சொல்லிய முறையால். வேந்தன் - வளக்கடவுள். வருணன் - அலைக் கடவுள்.

**952.** கார், பெரும்பொழுது. மாலை, சிறுபொழுது. முல்லை - முல்லையொழுக்கத்துக்குக் காலம். கூதிர் - குளிர் காலம். யாமம் - நள்ளிரவு. கூதிர்யாமம் குறிஞ்சி என்க.

953. பனியெதிர் பருவமும் உரித்தென மொழிப. எ

954. வைகறை விடியல் மருதம்; எற்பாடு
நெய்த லாதல் மெய்பெறத் தோன்றும். அ

955. நடுவுநிலைத் திணையே நண்பகல் வேனிலொடு
முடிவுநிலை மருங்கின் முன்னிய நெறித்தே. கூ

956. பின்பனி தானும் உரித்தென மொழிப. க0

---

953. பனி எதிர் பருவம் - முன்பனிப் பருவம்; உரித்தென - குறிஞ்சி யொழுக்கத்துக்கு உரித்தென. முன்பனிப் பருவம் என்பது பெரும்பொழுது; பெரும்பொழுது கூறவே, அதற்கேற்ற சிறுபொழுதாகிய வைகறையுங் கொள்ளப்படும். பிறவற்றிற்கும் இஃது ஒக்கும்.

954. வைகறை என்பது இரவின் பிற்பொழுது. விடியல் என்பது காலை. எற்பாடு - எல் படு பொழுது; கதிரவன் சாயுங் காலம். மெய்பெற - பொருண்மைபெற. பகலின் முதற் பத்து நாழிகையாகிய முதற்கூறு (6-10 மணி) விடியல் அல்லது காலை, இடைக்கூறு நண்பகல்; கடைக்கூறு எற்பாடு அல்லது சாயுங்காலம்; இரவின் முதற்கூறு மாலை; இடைக்கூறு யாமம்; கடைக்கூறு வைகறையாகும். இவற்றிற்குரிய பெரும்பொழுதுகள் முறையே பின்பனி, இளவேனில், முதுவேனில், கார், கூதிர், முன்பனி யென்க. இப்பெரும் பருவத்துச் சிறுபொழுதுகள் தம் சிறப்பியல்பு தோன்ற விளங்கும் என்றபடி.

955. நடுவுநிலைத் திணை - பொதுநிலையொழுக்கமாகிய பாலைத்திணை. நண்பகல் வேனிலொடு முடிவுநிலை - நண்பகற் பொழுது வேனிற்பருவத்தோடு ஒத்துமுடிதலாகிய நிலை. முன்னிய நெறித்து - கருதிய முறைமையினையுடையது.

956. உரித்தென - பாலைத்திணைக்கு உரித்தென.

957. இருவகைப் பிரிவும் நிலைபெறத் தோன்றினும்
உரிய தாகும் என்மனார் புலவர். ௧௧

### காலத்திற்கு, மேலும் ஒரு முடிபு

958. திணைமயக் குறுதலும் கடிநிலை இலவே
நிலன்ஒருங்கு மயங்குதல் இன்றென மொழிப
புலன்நன் குணர்ந்த புலமை யோரே. ௧௨

### முதற்பொருள் கருப்பொருள்கட்கு ஒரு விதி

959. உரிப்பொருள் அல்லன மயங்கவும் பெறுமே.

### உரிப் பொருள்

960. புணர்தல் பிரிதல் இருத்தல் இரங்கல்
ஊடல் இவற்றின் நிமித்தம் என்றிவை
தேருங் காலைத் திணைக்குரிப் பொருளே. ௧௪

---

**957.** இருவகைப் பிரிவு - கடலின்வழிப் பிரிவு, நிலத்தின் வழிப் பிரிவு என்பன. நிலைபெறத் தோன்றினும் - செயலளவில் நிகழ நேர்ந்தாலும். உரியதாகும் - அதற்குப் பின்பனிப் பருவம் உரியதாகும் என்பது.

**958.** திணை மயக்குறுதலும் - கூறிய முறையன்றித் திணைகள் தம்முள் மயங்குதலும். கடி நிலை இல - நீக்கும் நிலைமை இல்லை. நிலம் பொழுது என்னும் முதற்பொருள் இரண்டனுள், நிலம், தம்முள் ஒருங்கு மயங்குதல் என்க. புலன் - நிலத்தினியல்புகளை.

**959.** உரிப்பொருள் அல்லன - உரிப்பொருள் அல்லாதவை ; அவை முதற்பொருளிற் காலமும், கருப்பொருளும்.

**960.** இவற்றின் நிமித்தம் - இவை நிகழ்தற்குரிய குறிப்புக்கள். திணைக்குரிப்பொருள் என்றதனால், திணைக்கு உரிய பொருள் உரிப்பொருள் எனப்படுமென்பது.

### அவற்றுள், பிரிதலின் வேறு வகை

961. கொண்டுதலைக் கழிதலும் பிரிந்தவண் இரங்கலும்
உண்டென மொழிப ஓரிடத் தான. கரு
962. கலந்த பொழுதும் காட்சியும் அன்ன. கசு

### முதற்பொருளின் திட்டம்

963. முதல்எனப் படுவது ஆயிரு வகைத்தே. கஎ

### கருப் பொருள்

964. தெய்வம் உணாவே மாமரம் புட்பறை
செய்தி யாழின் பகுதியொடு தொகைஇ
அவ்வகை பிறவும் கருவென மொழிப. கஅ

---

**961.** கொண்டு தலைக்கழிதல் - தலைவியை உடன்கொண்டு அவளிருப்பிடத்தினின்று நீங்குதல்; என்றது, உடன்போக்கு. பிரிந்தவண் - தலைவன் பிரிந்தவிடத்து; பிரிந்த அவண் என்க. இரங்கலும் - தலைவி இரங்கலும். ஓரிடத்தான - இவ்விரு வகைப் பிரிவும் ஓரோரிடத்து நிகழும் என்றபடி.

**962.** கலந்தபொழுதும் - உடன்போக்கில் தலைவனுந் தலைவியுங் கலந்துசென்ற காலமும். காட்சியும் - இயற்கைப் புணர்ச்சி நிகழ்ந்த காலத்தில் ஒருவரையொருவர் தலைப்பட்டுக் கண்ட காட்சியும். அன்ன - பிரிவு உணர்ச்சிக் குரியனவே.

**963.** முதல் - முதற்பொருள். ஆயிருவகைத்து - நிலம் பொழுது என்னும் அவ்விருவகையினையே உடையது.

**964.** தெய்வம் - தெய்வ வழிபாட்டுமுறை. மா - விலங்கு. பறை - மேளம். செயதி - தொழில். யாழ் - இசை என்னும் பொருட்டு. தொகைஇ - கூட்டி, கருவென - கருப் பொருளென.

**கருப்பொருட்கு, மேலும் ஒரு முடிபு**

965. எந்நில மருங்கிற் பூவும் புள்ளும்
அந்நிலம் பொழுதொடு வாரா வாயினும்
வந்த நிலத்தின் பயத்த வாகும். ௧௯

## ௫. அவ்வொழுக்கத்துக்குரிய மக்கள் நிலைகள்

**அவர் பெயரியல்பு**

966. பெயரும் வினையும் என்று ஆயிரு வகைய;
திணைதொறும் மரீஇய திணைநிலைப் பெயரே. உ0

**முல்லை நிலத்து மக்கள்**

967. ஆயர் வேட்டுவர் ஆடூஉத் திணைப்பெயர்
ஆவயின் வரூஉம் கிழவரும் உளரே. உ௧

**ஏனை நிலத்து மக்கள்**

968. ஏனோர் பாங்கினும் எண்ணுங் காலை
ஆனா வகைய திணைநிலைப் பெயரே. உ௨

---

**965.** எந்நில மருங்கின் - எந்நிலச் சார்பான. வாரா வாயினும் - ஒத்துநில்லாவாயினும். வந்த நிலத்தின் பயத்த - வந்த நிலத்தின் பயனாகிய கருப்பொருள்களாம்.

**966.** பெயரும் வினையும் - ஒரு நிலத்தின் பெயரும் அந் நிலத்தின் தொழிலும். ஆயிரு வகைய - என்று அவ்விருவகையினால் அமைந்தனவாகும். திணைதொறும் - நிலந்தோறும், திணை நிலைப் பெயர் - நிலத்தான் நிலைபெறுதலுடைய பெயர். 'பெயர் ஆயிரு வகைய' என்க.

**967.** ஆவயின - அவ் வினத்தவருள். கிழவர் - நிலத்தின் ஆட்சிக் கிழமையுடையார்; என்றது, தலைமக்கள்.

**968.** ஏனோர் பாங்கினும் - ஏனை நிலத்தவர் சார்பினும். ஆனா வகைய - பலவாய் அவ் வகையினவேயாம்.

**கைக்கிளை, பெருந்திணை நிகழ்த்தும் மக்கள்**

969. அடியோர் பாங்கினும் [1]வினைவலர் பாங்கினும்
கடிவரை யிலபுறத்து என்மனார் புலவர். உரு

970. ஏவல் மரபின் ஏனோரும் உரியர்
ஆகிய நிலைமை அவரும் அன்னர். உச

## ச. இன்பத்தை மேம்படுத்தும் பிரிவொழுக்க முறைகள்

**பிரிவின் வகை**

971. ஓதல் பகையே தூது இவை பிரிவே. உரு

**அவற்றுள், ஓதற் பிரிவும் தூதிற் பிரிவும்**

972. அவற்றுள்,
ஓதலும் தூதும் உயர்ந்தோர் மேன. உசு

---

**969.** அடியோர் - குற்றேவல் செய்வோர். வினைவலர் - ஏதானும் ஒரு தொழில் வல்லுநர். கடிவரை யில புறத்து - ஐந்திணைப் புறத்தொழுக்கங்களாகிய கைக்கிளை பெருந்திணைகளில் நீக்கு நிலைமை இல்லை; என்றது, அவர் அவற்றிற்குரியர் என்றபடி.

**970.** ஏவல் மரபின் ஏனோரும் - ஏவுதல் நிலைமையுடைய ஏனை நிலமக்கள் தலைமக்களுங்கூட. உரியர் - ஓரோவொரு கால் கைக்கிளை பெருந்திணைகட்கு உரியராவர். அவரும் அன்னம் ஆகிய நிலைமை அக் கீழ்மக்களையொத்து வழுவுதலின் என்பது இறுதி வரியின் கருத்து.

**972.** உயர்ந்தோர் மேன - ஏவல்கொள்வோர் மேலன. அவர், நிலமக்களும் தலைமக்களும்.

(பா - வே.) 1. 'வினைவல.'

## பகைவயின் பிரிவு

973. தானே சேறலும் தன்னொடு சிவணிய
ஏனோர் சேறலும் வேந்தன் மேற்றே. உஎ

974. மேவிய சிறப்பின் ஏனோர் படிமைய,
முல்லை முதலாச் சொல்லிய முறையாற்
பிழைத்தது பிழையா தாகல் வேண்டியும்,
இழைத்த ஒண்பொருள் முடியவும் பிரிவே. உஅ

975. மேலோர் முறைமை நால்வர்க்கும் உரித்தே. உகூ

976. மன்னர் பாங்கின் பின்னோர் ஆகுப. ௩0

---

973. சேறலும் - செல்லுதலும். சிவணிய ஏனோர் என்றது. அவன் சார்பாளர். வேந்தன்மேறறு - அரசன் கண்ணது. வேந்தன் எனபது அரசியல் நடத்துவோன் என்னும் பொருட்டாதலின், சிவணிய ஏனோரையும் உடன் றழீஇ நின்றது.

974. மேவிய சிறப்பின் ஏனோர் - பொருந்திய சிறப்பினை யுடைய அச் சார்பாளர். படிமைய - நிலந்தோறும் அரசனை யொப்பச் செய்யுஞ் செயல்கள். பிழைத்தது - சீர் கெட்டது. ஒண் பொருள் - மிக்க வருவாய்ப் பொருள். முடியவும் - திரட்டவும். பிரிவு - வேந்தனுக்குப் பிரிவு நேரும்.

975. மேலோர் - முன் நூற்பாக்களிற் கூறப்பட்ட அரசியலாளர். நால்வர்க்கும் - ஏவல் கொள்வோரான தலைமக்கள் நிலமக்களிருவர், ஏவல் செய்வோரான அடியோர் வினைவலரிருவரென நால்வகையார்க்கும்.

976. மன்னர் பாங்கின் - அரசன் சார்பாளராய்த் தலைமைதாங்கிச் செல்லுதற்கு, பினனோர் - அரசனுக்கு அடுத்த பெருங்குடி மக்களான தலைமக்கள். ஆகுப - உரிய ராவர்.

977. உயர்ந்தோர்க்கு உரிய ஓத்தி ஞன. ௫௧

978. வேந்துவினை இயற்கை வேந்தனின் ஒரீஇய
ஏனோர் மருங்கினும் எய்துஇடன் உடைத்தே.

**பொருள்வயின் பிரிவு**

979. பொருள்வயின் பிரிதலும் அவர்வயின் உரித்தே
உயர்ந்தோர் பொருள்வயின் ஒழுக்கத் தான. ௫௫

**அப் பிரிவில், மகளிரைப்பற்றி ஒரு முடிபு**

980. முந்நீர் வழக்கம் மகடூஉவோ டில்லை. ௫௪

**அவரைப்பற்றி, மற்றொரு முடிபு**

981. எத்திணை மருங்கினும் மகடூஉ மடல்மேற்
பொற்புடை நெறிமை இன்மை யான. ௫௬

---

**977.** பொதுவாகப் பிரிவு நிகழ்த்தும் வகைகள், அறநூன் முறைப்படி உயர்ந்தோர்க்குரிய என்பது. உயர்ந்தோரென்றது, ஏவல்கொள்வோர்.

**978.** ஒரீஇய - நீங்கிய. ஏனோர் மருங்கினும் - ஏனை எல்லா மக்கட் பிரிவினரிடத்தும். எய்து இடன் உடைத்து - அவரவர் செயல்களில் நிகழுநிலைமையுடையது.

**979.** அவர்வயின் - அவ்வெல்லா மக்களிடத்தும், உயர்ந்தோர் - நிலமக்கள் தலைமக்களது. பொருள்வயின் - பொருள் வயிற் பிரிவு. ஒழுக்கத்தான - நல்லொழுககத்தோடு நிகழும்; அறத்திற்கு மாறுகாது நிகழும் என்றபடி.

**980.** முந்நீர் வழக்கம் - கடல் வழியாகச் செல்லும் முறைமை.

**981.** எத்திணை மருங்கினும் - எந் நிலத்தினும். மகடூஉ மடன்மேல் இல்லை என்றபடி; மகளிர் மடலேறுதல் இல்லை என்பது. பொற்புடை நெறிமை இன்மையான - அது சிறப்புடை முறைமை இல்லாமையான் என்க. முன்நூற்பாவிற் கூறிய 'இல்லை' என்னுஞ் சொல் ஈண்டும் கொள்ளப்படும். மடன்மேல் இல்லை - மடன்மேல் ஏறுதலில்லை.

## ௫. இன்பவொழுக்கப் பேச்சுகள்

**நற்றாய்**

982. தன்னும் அவனும் அவளும் சுட்டி,
மன்னு நிமித்தம், மொழிப்பொருள், தெய்வம்
நன்மை தீமை அச்சம் சார்தல்என்று
அன்ன பிறவும் அவற்றொடு தொகைஇ
முன்னிய காலம் மூன்றுடன் விளக்கித்
தோழி தேஎத்தும் கண்டோர் பாங்கினும்
போகிய திறத்து நற்றாய் புலம்பலும்
ஆகிய கிளவியும் அவ்வழி உரிய. ௩௬

983. ஏமப் பேரூர்ச் சேரியும் சுரத்தும்
தாமே செல்லும் தாயரும் உளரே. ௩௭

---

**982.** தன்னும் - தன்னையும். அவனும் அவளும் - தலைவனையும் தலைவியையும். மன்னும் - அந்நேரத்திற் பொருந்தும்; நிமித்தம் - பல்லி முதலியன சொல்லுஞ் சொல்; மொழிப் பொருள் என்றது, நண்டு நற்சொல். தெய்வம் - தெய்வ நிகழ்ச்சிகள்; கட்டினும் கழங்கினும் பார்த்தல், ஆவிகளை வருவித்துக் கேட்டல். முன்னிய - கருதிய. தோழி தேஎத்தும்- தோழியிடத்திலும். கண்டோர் பாங்கினும் - எதிர்ப்பட்டோ ரிடத்திலும். போகிய திறத்து - தலைவி உடன்போகிய வகையில். புலம்பலும் ஆகிய கிளவியும் - வருந்திக் கூறலும் அதனால் ஆகிய பிறபேச்சுக்களும். இந் நூற்பா, நற்றாய்க்குப் பேச்சு நிகழும் இடங்களைத் தொகுத்துணர்த்திற்று.

**983.** ஏமப் பேரூர்ச் சேரியும் - பாதுகாப்பு மிக்க தமது பெரிய ஊரின சுற்றுச் சேரிகளிலும். சுரத்தும் - அவற்றிற் கப்பாற் செல்லும் வழி நிலங்களிலும். தாயர் - செவிலித்தாய் முதலியோர். நற்றாய் புறஞ்சேரி வரையிற் சென்று தேடுதலுங் கொள்ளப்படும்.

984. அயலோ ராயினும் அகற்சி மேற்றே. ௩௮

### தோழி

985. தலைவரும் விழும நிலைஎடுத் துரைப்பினும்,
போக்கற் கண்ணும் விடுத்தற் கண்ணும்,
நீக்கலின் வந்த தம்முறு விழுமமும்,
வாய்மையும் பொய்ம்மையும் கண்டோர்ச் சுட்டித்
தாய்நிலை நோக்கித் தலைப்பெயர்த்துக் கொளினும்,
நோய்மிகப் பெருகித்தன் நெஞ்சுகலுழ்ந் தோளை
அழிந்தது களைஇய ஒழிந்தது கூறி
வன்புறை நெருங்கி வந்ததன் திறத்தோடு
என்றிவை யெல்லாம் இயல்புற நாடின்
ஒன்றித் தோன்றும் தோழி மேன. ௩௯

---

**984.** அயலோராயினும் - மனைக்கு அயலிடத்தே பிரிந்துள்ளோராயினும். அகறசி மேற்று - அஃதும் பிரிவின் கண்ணதாகும்.

**985.** தலைவரும் விழும நிலை - பின்பு மூண்டு வருந்துன்ப நிலைகளை. போககற்கண்ணும் - தலைவனையும் தலைவியையும் உடன்போக்கிற் போக்கும் வகையினும். விடுத்தற்கண்ணும் - அவரை வழிவிடும் வகையினும். தம் என்றது, தனக்கும் தன்னைச் சேர்ந்தவர்கட்கும். தலைவன் தலைவியரின் உண்மையும் பொய்ம்மையும் ஆராய்ந்து கண்டோரைத் தாய்க்குக் குறிப்பித்து அதனால் அவள் மனம் திரிந்துவரும் நிலைநோக்கித் தலைவியை மீட்டுக்கொள்ள வழி செய்யும் வகையினும் என்பது அடுத்ததன் கருத்து. களைஇய - களையும் பொருட்டு. ஒழிந்தது- இனி நடக்கவேண்டுவது. வன்புறை - வற்புறுத்தல். தோழி மேன - தோழியிடத்து நிகழும் பேச்சுக்களாகும்.

**கண்டோர்**

986. பொழுதும் ஆறும் உட்குவரத் தோன்றி
வழுவின் ஆகிய குற்றம் காட்டலும்,
ஊரது சார்வும் செல்லுந் தேயமும்
ஆர்வ நெஞ்சமொடு செப்பிய வழியினும்,
புணர்ந்தோர் பாங்கின் புணர்ந்த நெஞ்சமொடு
அழிந்தெதிர் கூறி விடுப்பினும், ஆங்கு அத்
தாய்நிலை கண்டு தடுப்பினும், விடுப்பினும்,
சேய்நிலைக்கு அகன்றோர் செலவினும் வரவினும்,
கண்டோர் மொழிதல் கண்டது என்ப. ௪௦

**தலைமகன்**

987. ஒன்றாத் தமரினும், பருவத்தும், சுரத்தும்,
ஒன்றிய தோழியொடு வலிப்பினும், விடுப்பினும்,
இடைச்சுர மருங்கின் அவள்தமர் எய்திக்
கடைக்கொண்டு பெயர்த்தலிற் கலங்கு அஞர்
எய்திக்

---

**986.** ஆறும் - வழியின் அருமையும். உட்குவர - அச்சம் வருமாறு. வழுவின் - அம் மாறுபாட்டால். ஊரின் சார்வும் - தமதூரின் அணிமையும். தாய்நிலை - அவர்களைத் தேடிக்கொண்டு வரும் செவிலித்தாயின் நிலை. தடுப்பினும் - அத் தாயை மேற் செல்லவொட்டாது தடுப்பினும். சேய்நிலைக்கு - தொலைவிடத்துக்கு. செலவினும் - போக்கினும். மொழிதல் - பேச்சு நிகழ்த்துதல். கண்டது - வழக்கிற் கண்டது.

**987.** ஒன்றாத் தமரினும் - வரைவுக்கு இணங்காத சுற்றத்தாரைப்பற்றியும். பருவத்தும் - பருவத்தைப்பற்றியும்; வேனிலின் கடுமை நோக்கி அப்பருவத்தைப்பற்றியும் எனக. ஒன்றிய - தனக்கு இணக்கமான. வலிப்பினும் - வற்புறுத்தலாய்க் கருத்திணங்கும் வகையினும், கடைக்கொண்டு பெயர்த்தலின் "

கற்பொடு புணர்ந்த கௌவை உளப்பட
அப்பாற் பட்ட ஒருதிறத் தானும்,
நாளது சின்மையும் இளமைய தருமையும்
தாளாண் பக்கமுந் தகுதிய தமைதியும்
இன்மைய திளிவும் உடைமைய துயர்ச்சியும்
அன்பின தகலமும் அகற்சிய தருமையும்
ஒன்றாப் பொருள்வயின் ஊக்கிய பாலினும்
வாயினுங் கையினும் வகுத்த பக்கமோடு
ஊதியங் கருதிய ஒருதிறத் தானும்
புகழும் மானமும் எடுத்துவற் புறுத்தலும்
தூதிடை யிட்ட வகையி னானும்

---

முயன்று மீட்கும் முறைமையால். அஞர் எய்தி - தலைவி வருத்தம் அடைந்து. கௌவை - அலர். அப் பால் பட்ட - உடன் போக்காகிய அப்பகுதிக்கண் மேலும் ஒருப்பட்ட. நாள் - வாழ்நாள். சின்மை - சிலவாதல். தாளாண் - முயற்சி. தகுதியென்றது ஈண்டு அறம். அகலம் - பெருக்கம். அகற்சி - பிரிவு. வாழ்நாள் சிலவாதல் கருதிப் பொருள்தேடுதலில் ஊக்கங் கொள்ளும்போது இளமையின் அருமைப்பாடு தோன்றி இன்பத்தில் ஈர்த்துத் தடுக்கின்றமை தோன்ற. 'நாளது சின்மையும் இளமையது அருமையும்' என்று தமக்குள் ஒன்றாத கருத்துக்கள் நுவலப்பட்டன. பிறவும் இங்ஙனங் கொள்ளப்படும். ஒன்றாப் பொருள்வயின் . இங்ஙனம் ஒன்றற்கொன்று ஒன்றாத கருத்துக்களிடையே. ஊக்கிய பாலினும் - பொருள் முயற்சிக்கு உள்ளங்கொண்ட வகையினும். வாயினும் கையினும் வகுத்த பக்கமென்றது, வாயினானுங் கையினாலும் வகுத்துக் கொண்ட அலுவல் வகை; அவை ஓதல் படைக்கலமெடுத்தல் முதலியன. ஊதியம் - மறுமைக்கு, ஊதியம்; அறம். வற்

ஆகித் தோன்றும் பாங்கோர் பாங்கினும்
மூன்றன் பகுதியும் மண்டிலத் தருமையும்
தோன்றல் சான்ற மாற்றோர் மேன்மையும்
பாசறைப் புலம்பலும் முடிந்த காலத்துப்
பாகனொடு விரும்பிய வினைத்திற வகையினும்
காவற் பாங்கின் ஆங்கோர் பக்கமும்
பரத்தையின் அகற்சியிற் பரிந்தோட் குறுகி
இரத்தலும் தெளித்தலும் எனஇரு வகையோடு
உரைத்திற நாட்டம் கிழவோன் மேன. ௪௧

மற்றவர்

988. எஞ்சி யோர்க்கும் எஞ்சுதல் இலவே. ௪௨

---

புறத்தலும் - வற்புறுத்தல் வகையினும். ஆகித் தோன்றும் பாங்கோர் என்றது, தமக்கு ஆக்கமாகித் தோன்றும் நண்பர்; பாங்கோர் பாங்கினும் - அவர்பொருட்டுப் பிரியும் வகையினும். மூன்றன் பகுதி, தன்வலி துணைவலி வினைவலி என்னும் மூவகை வலிமைகள். மண்டிலத்தருமை - நாட்டின் அருமைப்பாடுகள். பகுதியும் அருமையுஞ் சான்ற மாற்றோர் என்க. மேன்மையும் என்றது, அவர் மேம்பாடு காரணமாகப் பிரியும் வகையினும் என்றற்கு. முடிந்த காலத்து - போர் முதலிய எடுத்த முயற்சி முடிந்த காலத்து. தலைவியை விரைந்து சேரற் பொருட்டுக் கொள்ளும் வினைத்திறம் என்க. காவற்பாங்கின் பக்கமும் - நாடு காக்குங் காவற்சார்பிற் பிரியும் வகையினும், பரிந்தோள் - வருந்திய தலைவியை. உரைத்திற நாட்டம் கிழவோன் மேன - இன்னனம் உரைவகைக் குறிப்புத் தலைமகன் மேலன என்பது.

988. இதுகாறுங் கூறுது எஞ்சியவர்க்கும் பேச்சு நீங்குத லில்லை யென்றபடி. அவர், செவிலி, தலைவி முதலியோர்.

### பிரிவைப் பற்றிய பிற குறிப்புக்கள்

989. நிகழ்ந்தது நினைத்தற்கு ஏதுவும் ஆகும். ௪௩

990. நிகழ்ந்தது கூறி நிலையலும் திணையே. ௪௪

991 மரபுநிலை திரியா மாட்சிய ஆகி
விரவும் பொருளும் விரவும் என்ப. ௪௫

## ௬. இன்பம் முதிரப் பேசும் வகை

### உவமையின் வகை

992. உள்ளுறை உவமம், ஏனை உவமமெனத்
தள்ளா தாகும் திணைஉணர் வகையே. ௪௬

### அவற்றுள், உள்ளுறையுவமம்

993. உள்ளுறை தெய்வம் ஒழிந்ததை நிலன்எனக்
கொள்ளும் என்ப குறியறிந் தோரே. ௪௭

---

989. நிகழ்ந்தது - முன் நிகழ்ந்த நிகழ்ச்சி. நினைத்தற்கு - பின் நினைந்து பேசுதற்கு.

990. கூறி - பேசி. நிலையலும் - அதன்கண் கருத்து ஈர்ப்புண்டிருத்தலும். திணையே - பாலையொழுக்கமாகும்.

991. விரவும் பொருளும் - புதியவாகச் சேரும் கருத்துக்களும். விரவும் - இப் பிரிவொழுக்கத்திற் கலந்துவரும். அவை, பாசறைக்கண் தலைவியின் தூது கண்டு தலைவன் கூறுதல் முதலியனவாக இளம். கூறுவர்.

992. ஏனை - மற்றொன்றாகிய. உவமம் என - உவமம் போல. திணை - அகத்திணை. திணை உணர் வகையைத் தள்ளாது பின்னுஞ் சுவை பயப்பதாகும் என்க.

993. தெய்வம் ஒழிந்ததை என்றார், கருப்பொருள்களுள் தெய்வம் நீங்கலாக ஏனையவற்றை. நிலன் என - தனக்கு இடமாக. குறி - இலக்கணம்.

994. உள்ளுறுத்து இதனோடு ஒத்துப்பொருள் முடிகென
உள்ளுறுத்து இறுவதை உள்ளுறை யுவமம். ௪௮

**உவமம்**

995. ஏனை உவமம் தான்உணர் வகைத்தே. ௪௯

## ௭. தாழ்ந்த இன்ப நிலைகள்

**கைக்கிளை**

996. காமம் சாலா இளமை யோள்வயின்
ஏமம் சாலா இடும்பை எய்தி
நன்மையும் தீமையும் என்றுஇரு திறத்தால்
தன்னொடும் அவளொடும் தருக்கிய புணர்த்துச்
சொல்எதிர் பெறாஅன் சொல்லி இன்புறல்
புல்லித் தோன்றும் கைக்கிளைக் குறிப்பே. ௫0

---

**994.** உள்ளுறுத்து - புலவன் ஒரு கருத்தை உள்ளத்தே கருதிக்கொண்டு. இதனோடு ஒத்து - இக் கருத்தோடு, வெளிப்படையாய மேல் நுவலும் கருப்பொருள்கள் ஒத்து. உள்ளுறுத்து இறுவது - அவற்றின் உள்வைத்து முடிக்கப்படுவது.

**995.** தான் உணர் வகைத்து - தன்னியல்பால் வெளிப்படையாக உணரும் வகையினை யுடையது.

**996.** காமம் சாலா - காம உணர்வு அமையாத. ஏமம், நன்று உய்யும் வழி. நன்மையும் தீமையும் என்றது, புகழ்தலும் பழித்தலும். தருக்கிய - இயல்பு மிகுத்த கருத்துக்களை. சொல் - விடைமொழி. பெறாஅன் - பெறானாய். சொல்லி - தானே சொல்லி. புல்லித் தோன்றும் - பொருந்தித் தோன்றும்.

### பெருந்திணை

997. ஏறிய மடல்திறம், இளமை தீர்திறம்
தேறுதல் ஒழிந்த காமத்து மிகுதிறம்
மிக்க காமத்து மிடலொடு தொகைஇச்
செப்பிய நான்கும் பெருந்திணைக் குறிப்பே. ௫௧

### கைக்கிளைத் திணைக்கு, மேலும் ஒரு முடிபு

998. முன்னைய நான்கும் முன்னதற் கென்ப. ௫௨

## ௮. இன்ப வொழுக்கத்தைப் பற்றிய நூன் முறைகள்

### அகத்திணைக்குரிய செய்யுட்கள்

999. நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும்
பாடல் சான்ற புலனெறி வழக்கம்
கலியே பரிபாட்டு ஆயிரு பாங்கினும்
உரிய தாகும் என்மனார் புலவர். ௫௩

---

**997.** தேறுதல் ஒழிந்த - தெளிவிழந்த. மிடல் - ஈண்டு வற்புறுத்துதல்.

**998.** முன்னைய நான்கும் என்றது, முதற் கூட்டத்தில் நிகழ்வனவான காட்சி, ஐயம், தெரிதல், தேறல் என்னும் நான்கும். முன்னதற்கு - முதற்கண் கூறிய கைக்கிளைக்குரியது.

**999.** புலனெறி வழக்கம் - அகத்திணைப் புலனெறி வழக்கம். கலி - கலிப்பாட்டு. உரியதாகும் - செய்யுள் செய்தற்கு உரியதாகும்.

**அகத்திணை பற்றிய செய்யுட்களில் இயற்பெயர் வாராமை**

1000. மக்கள் நுதலிய அகனைந் திணையும்
சுட்டி ஒருவர்ப் பெயர்கொளப் பெறாஅர். ௫௪

**அப் பெயர் வருதற்குரிய இடம்**

1001. புறத்திணை மருங்கின் பொருந்தி னல்லது
அகத்திணை மருங்கின் அளவுதல் இலவே. ௫௫



*1000.* தேவர் தலைவராகவும் அகனைந்திணை செய்யுள் செய்யப்படுதலின், ஈண்டு மக்கள் நுதலிய அகனைந்திணைக் கண்ணும் என வேறு பிரித்துக்கொண்டார். பெயர் - இயற் பெயர். கொளப்பெறார் - சுட்டி ஆளப் பெறார் ஆசிரியர் எனபது.

*1001.* புறத்திணை மருங்கின் என்றது, அகத்திணைச் செய்யுட்களில் வரும் புறத்திணைப் பகுதிகளில் என்றறகு. பொருந்தினல்லது - அங்ஙனம் இயற்பெயர் கூறுதல் பொருந்தி வரினல்லது. அளவுதல் இல்லை - கலத்தல் இலலை.

# உ. புறத்திணை யியல்

[பொருள் அறவொழுக்கங்களின் இயல்புணர்த்துவது.]

## க. வெட்சித் திணை

### வெட்சியின் இயல்பு

1002. அகத்திணை மருங்கின் அரில்தப உணர்ந்தோர்
புறத்திணை இலக்கணம் திறப்படக் கிளப்பின்
வெட்சி தானே குறிஞ்சியது புறனே
உட்குவரத் தோன்றும் ஈரேழ் துறைத்தே. க

### அதன் இலக்கணம்

1003. வேந்துவிடு முனைஞர் வேற்றுப்புலக் களவின்
ஆதந்து ஓம்பல் மேவற் றாகும். உ

### அதன் துறை

1004. படையியங்கு அரவம், பாக்கத்து விரிச்சி,
புடைகெடப் போகிய செலவே, புடைகெட

---

***1002.*** ***அகத்திணை மருங்கின் - அகத்திணை வகையில். அரில் தப - உண்மையியல்போடு மாறுபாடு நீங்க. உணர்ந்தோர் - உணர்ந்தோரது. வெட்சி - வெட்சித்திணை. இது, அகத்திணையாகிய குறிஞ்சித் திணைக்குப் புறன் என்க. புறன், அதற்கு ஏற்ற புறத்திணை யெனனும் பொருட்டு. உட்குவர - அஞ்சுதல் உண்டாக. ஈரேழ் துறைத்து - பதினான்கு துறை யினையுடையது. போர் நிகழ்ச்சி நுவலப்படுதலின், 'உட்கு வரத் தோன்றும்' என்றார்.***

***1008, முனைஞர் - முனைப்புலத்துக் காவலர். வேற்றுப் புலக் களவின் - வேற்று நாட்டின்கண் களவினால். ஆதந்து - ஆனிரையைக் கொண்டுவந்து. ஓம்பலைப் பொருந்தியதாகும் என்க. வெட்சித்திணை என்பது இதற்கு எழுவாய்.***

ஒற்றின் ஆகிய வேயே, வேய்ப்புறம்
முற்றின் ஆகிய புறத்திறை, முற்றிய
ஊர்கொலை, ஆகோள், பூசல் மாற்றே,
நோயின்று உய்த்தல், நுவலுழித் தோற்றம்,
தந்துநிறை, பாதீடு, உண்டாட்டுக் கொடையென
வந்த ஈரேழ் வகையிற் றாகும். ௩

அதற்கு, மேலும் ஒரு துறை

1005. மறங்கடைக் கூட்டிய துடிநிலை சிறந்த
கொற்றவை நிலையும் அத்திணைப் புறனே. ௪

---

**1004.** படை - ஆனிரை கொள்ளுதற்கு எழுந்த படை. அரவம் - ஓசை. விரிச்சி - நற்சொல் கேட்டல். புடை - பக்கங்களில் அறியாதவகை யிருந்து ஒற்றுக்கேட்பார். கெட - அவர் கருத்துக் கெடுமாறு; அவர் அறியாத வகை யென்க. செலவு - போக்கு. வேய் - மறைந்த சொல். வேய்ப்புறம் - வேய்ப் பின்; வேய் கேட்டதன் பின். முற்றின் ஆகிய-முற்றுகை செய்தலால் ஆன. புறத்து இறை - பகைநாட்டுட் சென்று தங்கியிருத்தல். முற்றிய - பகைப்புறத்தை வளைத்துக்கொண்ட தனாலான. பூசன் மாற்று - பின்பற்றிப் போர்செய்து வந்தோரை எதிர்த்துப் பொருதல். உய்த்தல்-ஆக்களைச் செலுத்திக் கொண்டுபோதல். நுவலுழித் தோற்றம் - பாடி வீட்டிலுள்ளோர் மகிழ்ந்து பேசுதற்கு ஏதுவான நிரைகொண்டோர் வரவும். தந்து நிறை - ஆக்களைக்கொண்டு சென்று நிறுத்துதல். பாதீடு - அவற்றைப் பகுத்துக்கொள்ளுதல். கொடை - மகிழ்ச்சியாற் பிறர்க்கும் கொடுத்து மகிழ்தல். என வந்த - என்று பெறப்பட்ட.

**1005.** கடைக்கூட்டிய - கடைக்கூட்டும்பொருட்டு. துடிநிலை - துடிகொட்டும் நிலை. அத் திணைப்புறன் - அத்திணையிடத்தன.

**வெட்சித் திணையின் கரந்தை முதலிய பிற பகுதிகள்**

1006. வெறியறி சிறப்பின் வெவ்வாய் வேலன்
வெறியாட் டயர்ந்த காந்தளும், உறுபகை
வேந்திடை தெரிதல் வேண்டி ஏந்துபுகழ்ப்
போந்தை வேம்பே ஆரென வரூஉம்
மாபெருந் தானையர் மலைந்த பூவும்
வாடா வள்ளி வயவர் ஏத்திய
ஓடாக் கழல்நிலை உளப்பட ஓடா
உடல்வேந் தடுக்கிய உன்ன நிலையும்,
மாயோன் மேய மன்பெருஞ் சிறப்பின்

---

**1006.** வெவ்வாய் - உயிர்க்கொலை கூறும் கொடுமைமிக்க வாயினையுடைய. காந்தன்-காந்தன் சூடி ஆடும் வெறியாட்டம். ஆர் - ஆத்தி. மலைந்த பூவும் - பூ மலைந்து ஆடிய கூத்தும். வாடா வள்ளி - வாடும் கொடியல்லாத வள்ளிக்கூத்தும். வயவர் - வீரர். கழல்நிலை - காலிற் கழல் கட்டியாடும் வீரநிலைக் கூத்து உடல் - உடன்ற; வெகுண்ட. அடுக்கிய - சார்த்திக் கூறிய. உன்ன நிலையும் - நிமித்தக் குறிப்பும். உன்னமென்பது ஒரு மரம். நல்லதாயின் தளிர்த்தும் தீயதாயின் உலறியும் அது நிமித்தங் காட்டு மெனலால், அதைக் கண்டு அதனோடு சார்த்தி நிமித்தம் பார்க்கும் குறிப்பு நுவலப்பட்டது. பூவை நிலை - பூவைப் பூவின் மலர்ச்சி கண்டு திருமாலின் நிறத்தை ஒத்ததெனப் புகழ்தல்; பூவை - காயாம்பூ; என்றது, அரசனது நிலையைத் திருமாலின் நிலையோடு சார்த்திப் புகழ்ந்து கூறுதல். ஆர் அமர் - அரிய போர். தலைத்தாள் நெடுமொழி - தன்னிடத் துள்ள முயற்சி காரணமாகச் சூளுரைத்துப் பேசுதல். அனை - அச்செயல்கட்கு. கரந்தை - ஆனிரை மீட்டலும். நிரை மீட் போர் கரந்தைப் பூவைச் சூடுதல் மரபாதலின், கரந்தை எனப் பட்டது. தார் - கொடி யேந்திய படை. கவிழ்தல் - தாறும்

தாவா விழுப்புகழ்ப் பூவை நிலையும்,
ஆரமர் ஓட்டலும், ஆபெயர்த்துத் தருதலும்,
சீர்சால் வேந்தன் சிறப்பெடுத் துரைத்தலும்,
தலைத்தாள் நெடுமொழி தன்னொடு புணர்த்தலும்,
அனைக்குரி மரபினது கரந்தை யன்றியும்,
வருதார் தாங்கல் வாள்வாய்த்துக் கவிழ்தல்என்று
இருவகைப் பட்ட பிள்ளை நிலையும்,
வாள்மலைந்து எழுந்தோனை மகிழ்ந்துபறை
நாடவற்கு அருளிய பிள்ளை யாட்டும், [தூங்க
காட்சி கால்கோள் நீர்ப்படை நடுகல்
சீர்த்தகு சிறப்பிற் பெரும்படை வாழ்த்தல்என்று
இருமூன்று வகையிற் கல்லொடு புணரச்
சொல்லப் பட்ட எழுமூன்று துறைத்தே. ரு

## உ. வஞ்சித் திணை

### வஞ்சியின் இயல்பு

1007. வஞ்சி தானே முல்லையது புறனே. ௬

---

**வீழ்தல். பிள்ளை நிலை - வீரத்தன்மையும். எழுந்தோனை - உயர்ந்தோனை. தூங்க - ஒலிக்க. பிள்ளையாட்டு - வீரனைக் கொண்டாடிய ஆட்டு. காட்சி - போர்க்களத்துப் பட்ட வீரரை நடுகல்லில் நிறுத்தி ஏத்துதற்பொருட்டு உரிய கல்லைக் காண்டல். கால்கோள் - கல்லைக் கொள்ளுதல். நீர்ப்படை - அதனை நீர்ப்படுத்தல். நடுகல் - நடுகல்லாக நாட்டுதல். படை - படைத்தல்; என்றது, வழிபாடு செய்தல். கல்லொடு புணர - நடுகல்லைப்பற்றிய செய்திகளாக. புறத்திணைப் பொது வியல் என வருவித்து ஈரேழ்துறைத்தே என முடிக்க. இங்கே கூறப்பட்டவை புறத்திணைகள் ஏழற்கும் பொது.**

### அதன் இலக்கணம்

1008. எஞ்சா மண்ணசை வேந்தனை வேந்தன்
அஞ்சுதகத் தலைச்சென்று அடல்குறித் தன்றே.

### அதன் துறை

1009. இயங்குபடை அரவம், எரிபரந் தெடுத்தல்,
வயங்கல் எய்திய பெருமை யானும்,
கொடுத்தல் எய்திய கொடைமை யானும்,
அடுத்தூர்ந்து அட்ட கொற்றத் தானும்,
மாராயம் பெற்ற நெடுமொழி யானும்,
பொருளின்று உய்த்த பேராண் பக்கமும்,
வருவிசைப் புனலைக் கற்சிறை போல
ஒருவன் தாங்கிய பெருமை யானும்,
பிண்டம் மேய பெருஞ்சோற்று நிலையும்,
வென்றோர் விளக்கமும், தோற்றோர் தேய்வும்,
குன்றாச் சிறப்பின் கொற்ற வள்ளையும்,
அழிபடை தட்டோர் தழிஞ்சியொடு தொகைஇக்
கழிபெருஞ் சிறப்பின் துறைபதின் மூன்றே. அ

---

**1008.** நசை - நசையுடைய தலைச் சென்று - மேற்போய். அடல் குறித்தன்று - வெல்லுதல் கருதியது.

**1009.** எரி பரந்து எடுத்தல் - பரந்து சென்று எரி எடுத்துச் சுடுதல். வயங்கல் - விளக்கம். கொடைமை - கொடுத்தல். அடுத்து ஊர்ந்து அட்ட என்றமையாற சிறுகச் சிறுக முனனேறிக் கொன்ற வெற்றி பெறப்பட்டது. மாராயம் எனபது வேந்தனற பெறுஞ் சிறபபுப் பெயர். நெடுமொழி என்றார், அது மீககூற்றுச் சொல்லாதலின். பொருளின்று உய்த்த - பகைவரைப் பொருள் செய்யாது படையினைச் செலுத்திய. கற் சிறை - கல்லணை. பிண்டம் மேய - படையாளர்க்கு உணவு கொடுக்க விரும்பிய. விளக்கமும் தேய்வும்

## ரு. உழிஞைத் திணை

### உழிஞையின் இயல்பு

1010. உழிஞை தானே மருதத்துப் புறனே. க

### அதன் இலக்கணம்

1011. முழுமுதல் அரணம் முற்றலும் கோடலும்
அனைநெறி மரபிற் றாகும் என்ப. க0

### அதன் துறை

1012. அதுவே தானும் இருநால் வகைத்தே. கக

1013. கொள்ளார் தேஎம் குறித்த கொற்றமும்,
உள்ளியது முடிக்கும் வேந்தனது சிறப்பும்,
தொல்லெயிற்கு இவர்தலும், தோலின்
பெருக்கமும்
அகத்தோன் செல்வமும், அன்றி முரணிய
புறத்தோன் அணங்கிய பக்கமும், திறப்பட
ஒருதான் மண்டிய குறுமையும், உடன்றோர்

---

என்றது, விளக்கங் கூறலும் தேய்வு கூறலு மென்க. சிறப்பின் - வெற்றிச் சிறப்பினால். கொற்ற வள்ளை - தோற்ற கொற்ற வள்ளை விளங்கப் பாடும் வள்ளைப்பாட்டும்; வள்ளைப் பாட்டென்பது உரற்பாட்டு என்பர் நச். அழிபடை தட்டோர் - படை தடுத்து ஊக்கம் அழிந்தோரை. தழிஞ்சியொடு - தழுவிக் கொள்ளுதலொடு.

**1010.** உழிஞை - மதில் முற்றுதலும் அதனைக் கொள்ளுதலும்.

**1011.** முற்றலும் - வளைத்துக்கொள்ளுதலும். கோடலும் - கொள்ளுதலும். அனைநெறி மரபிற்று - அவ்விரண்டு நெறியாகிய இலக்கணத்தினையுடையது.

வருபகை பேணார் ஆரெயில் உளப்படச்
சொல்லப் பட்ட நாலிரு வகைத்தே. கஉ

**உழிஞைத் திணையின் நொச்சி முதலிய பிற பகுதிகள்**

1014. குடையும் வாளும் நாள்கோள், அன்றி
மடையமை ஏணிமிசை மயக்கமுங் கடைஇச்
சுற்றுஅமர் ஒழிய வென்றுகைக் கொண்டு
முற்றிய முதிர்வும், அன்றி முற்றிய
அகத்தோன் வீழ்ந்த நொச்சியும் மற்றதன்
புறத்தோன் வீழ்ந்த புதுமை யானும்
நீர்ச்செரு வீழ்ந்த பாசியும், அதாஅன்று
ஊர்ச்செரு வீழ்ந்த மற்றதன் மறனும்,
மதின்மிசைக் கிவர்ந்தோன் பக்கமும்,
இகன்மதிற்
குடுமி கொண்ட மண்ணுமங் கலமும்,
வென்ற வாளின் மண்ணோடு ஒன்றத்

---

**1013.** கொள்ளார் - தன் ஆணையைக் கொள்ளாதவர்; பகைவர். தேஎம் - அவரது நாட்டினை. குறித்த - தான் ஆளுகைக்கு எடுத்துக்கொள்ளக் கருதிய. உள்ளியது - கருதியதை. எயிற்கு - மதிலைக் கைக்கொள்ளும் பொருட்டு. இவர்தலும் - விரும்புதலும். தோல் - தோலாலாகிய படை; பரிசை. அணங்கிய - இடையிடையே வருந்திய. ஒரு தான் மண்டிய குறுமையும் - தான் ஒருவனேயாய் எதிர்க்க நேரும் இடுக்கணுகிய சிறுமைக்குந் துணிதலும். உடன்றோர் வரு படை பேணார் ஆர் எயில் - சினந்து எதிர்த்து வருகின்ற படையைப் பொருள் செய்யாது அவ்வரிய மதிலை முற்றுதற்கு முனைதலும். இந் நூற்பா உழிஞை முன்னனின் உணர்ச்சி நுவன்றபடி; ஆதலால், அதற்கேற்பத் துறைகளைக், கருதும் முறையிற் பொருள்செய்துகொள்ள வேண்டும்.

தொகைநிலை என்னுந் துறையொடு தொடைஇ
வகைநான் மூன்றே துறையென மொழிப. க௫

## ௪. தும்பைத் திணை

### தும்பையின் இயல்பு

1015. தும்பை தானே நெய்தலது புறனே. க௪

---

1014. இந் நூற்பா உழிஞை மன்னனின் செயல்வகை உணர்த்துவது. குடை நாள்கோள், வாள் நாள்கோள் என இரு துறையாகக் கொள்க. நாள்கோள் - நல்ல நாளிற் கொள்ளுதல். அன்றி - அன்றியும். மடையமை ஏணிமிசை - மதிலிடத்து மடுத்தல் அமைந்த ஏணியின்மேல் நின்று. மடுத்தல் - சார்த்தல். மயக்கமும் - கலந்து போர்புரிதலும். கடைஇ - படையைச் செலுத்தி. நொச்சி - காவல்; மதிலின் அகத்திருந்து பொருகின்ற அரசனது மதிறகாவல். வீழ்ந்த நொச்சி என்றதனுல் அக் காவலின் தளர்வு பெறப்படும். வீழ்ந்த - மேல்வீழ்ந்த. புதுமையானும் - புதிய எதிர்ப்பும். நீர்ச் செரு - அகழியிற் செய்யும் போர். பாசி - பாசிபோல ஒதுங்கி மீண்டும் பரந்து செய்யும் போரியல்பு. இவர்ந்தோன் - ஏறிப் பரந்தோனது. பக்கமும் - கூறுபாடும். மதிற் குடுமி - மதிலுச்சி. மண்ணு மங்கலம் - முடிசூட்டு நீராட்டு. வாளின் மண் - வாள் கொள்ளும் நீராட்டு. மண் - மண்ணுமங்கலம். என்றது, வாளைக் கொற்றவையாகக் கருதி நீராட்டுதல். ஒன்ற - கூட. தொகைநிலை - சிதறிய படைகளைத் தொகுக்கும் நிலை.

1015. தும்பை - போர் செய்தல்.

### அதன் இலக்கணம்

1016. மைந்துபொரு ளாக வந்த வேந்தனைச்
சென்றுதலை யழிக்குஞ் சிறப்பிற் றென்ப. ௧௫

### அதன் சிறப்பியல்பு

1017. கணையும் வேலுந் துணையுற மொய்த்தலின்
சென்ற உயிரின் நின்ற யாக்கை
இருநிலந் தீண்டா அருநிலை வகையோடு
இருபாற் பட்ட ஒருசிறப் பின்றே. ௧௬

### அதன் துறை

1018. தானை யானை குதிரை என்ற
நோனார் உட்கும் மூவகை நிலையும்
*வேன்மிகு வேந்தனை மொய்த்தவழி ஒருவன்
தான்மீண்டு எறிந்த தார்நிலை, அன்றியும்
இருவர் தலைவர் தபுதிப் பக்கமும்
ஒருவன் ஒருவனை உடைபடை புக்குக்
கூழை தாங்கிய எருமையும் படையறுத்துப்

---

**1016.** மைந்து - புறவலிமை. மைந்து பொருளாக வந்த என்றதனால் அறத்தைப் பொருள் செய்யாது வந்தமையும் பெறப்படும். சென்று - எதிர்சென்று. தலையழிக்கும் - பொருது அவன் தலைமையைக் கெடுக்கும்.

**1017.** துணையுற மொய்த்தலின் - இணையச் செறிதலின். இரு பகுதியாரும் பொருதல் எனனும் ஒரு துறைப்பட்டுப் பொருதலின், 'இருபாற்பட்ட ஒரு சிறப்பின்று' எனப்பட்டது. சிறப்பின்று - சிறப்பினையுடையது. உயிர் சென்ற யாக்கையும், முன்னிருந்த உணர்ச்சி மிகுதியினுல், நிலம் வீழாது நின்று பொருமுகங் காட்டுதல் தோன்ற, 'இருநிலந் தீண்டா அருநிலை வகை' என்றார்,

பாழி கொள்ளும் ஏமத் தானும்
களிறெறிந் தெதிர்ந்தோர் பாடும் களிற்றொடு
பட்ட வேந்தனை அட்ட வேந்தன்
வாளோர் ஆடும் அமலையும், வாள்வாய்த்து
இருபெரு வேந்தர் தாமுஞ் சுற்றமும்
ஒருவரும் ஒழியாத் தொகைநிலைக் கண்ணும்
செருவகத்து இறைவன் வீழ்ந்தெனச் சினைஇ
ஒருவன் மண்டிய நல்லிசை நிலையும்
பல்படை ஒருவற்கு உடைதலின், மற்றவன்
ஒள்வாள் வீசிய நூழிலும் உளப்படப்
புல்லித் தோன்றும் பன்னிரு துறைத்தே. கஎ

## ரு. வாகைத் திணை

### வாகையின் இயல்பு

1019. வாகை தானே பாலையது புறனே. கஅ

---

**1018.** நோனார் - பகைவர். மூவகை நிலை - மூவகைப் போர் நிலை. இதனால், மூன்று துறைகள் பெறப்பட்டன. தானைநிலை, யானைநிலை, குதிரைநிலை என்பன. மொய்த்தவழி - சூழ்ந்தபோது. எறிந்த - எதிர்த்து வீசிய. தார் - முன்னணிப் படையின். தபுதி - கெடுதலையுடைய. கூழை - பின்னணிப் படை. எருமையும் - கடாப்போன்ற வலிமை நிலையும். பாழி - வலிமை; சண்டு, மல்; மற்போர். ஏமம் - போர்க்களிப்பு. பாடும் - அழிவும். அட்டவேந்தன் - கொன்ற வேந்தனது. அமலை - திரண்டு ஆடும் கூத்து. ஒழியா - எஞ்சாது களம் வீழ்ந்த. தொகைநிலை - ஒருங்கு வீழ்ந்த நிலை. நூழிலும் - கொன்று குவித்தலும். புல்லி - பொருந்தி.

**1019.** வாகை - வெற்றியுறுதல்.

### அதன் இலக்கணம்

1020. தாவில் கொள்கைத் தத்தங் கூற்றைப்
பாகுபட மிகுதிப் படுத்தல் என்ப. கக

### அதன் பாகுபாடு

1021. அறுவகைப் பட்ட பார்ப்பனப் பக்கமும்
ஐவகை மரபின் அரசர் பக்கமும்,
இருமூன்று மரபின் ஏனோர் பக்கமும்,
மறுவில் செய்தி மூவகைக் காலமும்
நெறியின் ஆற்றிய அறிவன் தேயமும்,
நாலிரு வழக்கின் தாபதப் பக்கமும்,
பாலறி மரபின் பொருநர் கண்ணும்,
அனைநிலை வகையோடு ஆங்கெழு வகையின்
தொகைநிலை பெற்றது என்மனார் புலவர். உ0

### அதன் துறை

1022. கூதிர் வேனில் என்றுஇரு பாசறைக்
காதலின் ஒன்றிக் கண்ணிய மரபினும்,
ஏரோர் களவழி அன்றிக் களவழித்

---

**1020.** தா இல்-முயற்சி வருத்த மில்லாத ; இயல்பாகிய என்றபடி. தததம் கூற்றை - தத்தமக்கே உரிய பிரிவாகிய இயறகைத் தகுதியினை. பாகுபட - தனியாக வேறுபட்டுத் தோன்ற.

**1021.** அறுவகைப்பட்ட சிறப்பியல்புகளுடைய. ஏனோர்-ஏனைமக்கள். மூவகைக் காலமும் ஆற்றிய அறிவன் தேயமும் எனக. அறிவன் தேயமும் - அறிவன் பக்கமும் ; அறிவன் - மெய்யுணர்வுடையோன். தாபதர் - தவம் புரிவோர். பால் - பொருதற்குரிய பகுதிகள். பொருநர் - நண்டு, வீரர். 'அனைநிலை வகை' என்றது, அத்தகைய பிறவும் என்னும் பொருட்டு. இஃதொரு வகையாகக் கூட்டி எழுவகை எனப்பட்டது.

தேரோர் தோற்றிய வென்றியும் தேரோர்
வென்ற கோமான் முன்தேர்க் குரவையும்,
பெரும்பகை தாங்கும் வேலி னானும்,
அரும்பகை தாங்கும் ஆற்ற லானும்,
புல்லா வாழ்க்கை வல்லாண் பக்கமும்,
ஒல்லார் நாணப் பெரியவர்க் கண்ணிச்
சொல்லிய வகையின் ஒன்றொடு புணர்ந்து
தொல்லுயிர் வழங்கிய அவிப்பலி யானும்,
ஒல்லார் இடவயின் புல்லிய பாங்கினும்,
பகட்டி னானும் ஆவி னானும்,
துகட்டபு சிறப்பின் சான்றோர் பக்கமும்,

---

**1022.** காதலின் - போர்மேற் காதலின். கண்ணிய - தன் போர் கருதிய. குரவை – குரவைக் கூத்து; முன்தேர்க் குரவை - தேர்முன குரவைக் கூத்து. வேலினானும் - வேற்றொழில் சிறத்தலும். புல்லா வாழ்ககை வல்லாண் பக்கமும் • உயிர் வாழ்க்கையை ஒரு பொருளாகப் புல்லாத வீரச் சிறப்பும். ஒல்லார் - பகைவர். பெரியவர்க் கண்ணி - உயர்ந்தோரான் நன்கு மதிததலை உட்கொண்டு. சொல்லிய - சூளுரைத்துக் கொண்ட. அவிப்பலி - அவியாகிய பலி; தீயில் வீரன தன்னைப் பலிகொடுத்தல். இடவயின் - நாட்டின்கண். பகடு - உழவுக்குரிய மாடு. ஆ - ஆன். துகள் தபு - குறறம் நீங்கிய. சான்றோர் - வேளாளரும் ஆயரும். பக்கமும் என்றது, அவர்கள் நிலைமையை நன்கு காத்துவருகின்ற மிகுதிப்பாடும் என்றற்கு. கட்டில் - அரசுகட்டில்; அரசவுரிமை யெனறபடி. எட்டுவகை நுதலிய - எண்வகைக் குணத்தினைக் கருதிய; அவை, குடிப்பிறப்பு, கல்வி முதலியன. அவையத்தான் - அவைக்கண் மேம்

*கட்டில் நீத்த பாலி னானும்,
எட்டுவகை நுதலிய அவையத் தானும்,
கட்டுஅமை ஒழுக்கத்துக் கண்ணுமை யானும்,
இடையில் வண்புகழ்க் கொடைமை யானும்,
பிழைத்தோர்த் தாங்குங் காவ லானும்,
பொருளொடு புணர்ந்த பக்கத் தானும்,
அருளொடு புணர்ந்த அகற்சி யானும்,
காமம் நீத்த பாலி னானுமென்று
இருபாற் பட்ட ஒன்பதின் துறைத்தே. உ௧

## ௬. காஞ்சி

### காஞ்சியின் இயல்பு

1023. காஞ்சி தானே பெருந்திணைப் புறனே. உ௨

---

படுதல். கட்டு அமை ஒழுககம் எனறது, இல்லறவொழுக்கம். உறவுத் தொடர்ப்பாடும் கடமைப் பிணிப்பும் அமைந்த ஒழுக்கம் என்பது. கணணுமை - கண்மை; அன்பு - அருட் பண்பு. இடை - இடையீடு. பிழைத்தோர் - தம்மிடம் பிழைசெய் தோரை. பொருளொடு - படை குடி கூழ் அமைச்சு அரண் நட்பு என்னும் பொருள்களோடு. அருளொடு - திருவருளோடு. அகறசி - உணர்வுவிரிவு. காமம் - அவா. பால் - பக்கம். இந்நூற்பாவில் அவாவறுதலாகிய வீடுபேற்று நிலைவரையில் மாநதர் தத்தங் கூற்றைப் பாகுபட மிகுத்துக் கொள்ளும் இயல்பு அரசனது நிலையினகண் வைத்துச் சார்த்தி நுவலப்பட் டுள்ளமை அறியற்பாலது.

1023. காஞ்சி என்பது நிலையாமை என்னும் பொருட்டு.

---

(பா - வே.) 1. 'கடிமனை நீத்த பாலின் கண்ணும்.' இளம்.

### அதன் இலக்கணம்

1024. பாங்கருஞ் சிறப்பின் பல்லாற் றானும்
நில்லா உலகம் புல்லிய நெறித்தே. ௨௩

### அதன் துறை

1025. மாற்றருங் கூற்றஞ் சாற்றிய பெருமையும்,
கழிந்தோர் ஒழிந்தோர்க்குக் காட்டிய முதுமை
பண்புற வரூஉம் பகுதி நோக்கிப் [யும்,
புண்கிழித்து முடியும் மறத்தி னானும்,
ஏமச் சுற்றம் இன்றிப் புண்ணோற்
பேஎய் ஓம்பிய பேஎய்ப் பக்கமும்,
இன்னனென் றிரங்கிய மன்னை யானும்,
இன்னது பிழைப்பின் இதுவா கியரெனத்
துன்னருஞ் சிறப்பின் வஞ்சினத் தானும்,
இன்னகை மனைவி பேஎய்ப் புண்ணோன்
துன்னுதல் கடிந்த தொடாஅக் காஞ்சியும்,

---

**1024. பாங்கருஞ் சிறப்பின் - இணையற்ற சிறப்பின் காரணமாக; சிறப்பென்றது, வீடுபேறு. நில்லா உலகம் - நிலைபேறில்லாத உலகத்தை; என்றது, உலக நிலையாமையை. புல்லிய நெறித்தே - பொருந்திய நெறியினையுடையது; அதாவது, நிலையாமையைப் பற்றி நுவல்வது என்பது கருத்து.**

**1025. கூற்றம் சாற்றிய - கூற்றத்தைப் பற்றிச் சான்றோர் கூறிய. பெருமை - பெருங்காஞ்சி; என்றது, பெரிய நிலையாமையும் என்க. கழிந்தோர் - இளமை கழிந்து அருமை முதிர்ந்தோர். முடியும் - உயிர் துறக்கும். ஏமச் சுற்றம் - காக்கும் சுற்றம். இன்றி - இன்மையால். புண்ணோன் - புண்பட்டுக் கிடந்தோனை. இன்னன் - இத்தகையோன். இரங்கிய - ஒருவன் இறந்தபோது இரங்கிய, மன்னை-**

நீத்த கணவற் றீர்த்த வேலிற்
பேஎத்த மனைவி ஆஞ்சி யானும்,
நிகர்த்து மேல்வந்த வேந்தனொடு முதுகுடி
மகட்பாடு அஞ்சிய மகட்பா லானும்,
முலையும் முகனும் சேர்த்திக் கொண்டோன்
தலையொடு முடிந்த நிலையொடு தொகைஇ
ஈரைந் தாகும் என்ப; பேரிசை
மாய்ந்த மகனைச் சுற்றிய சுற்றம்
ஆய்ந்த பூசல் மயக்கத் தானும்,
தாமே எய்திய தாங்கரும் பையுளும்,
கணவனொடு முடிந்த படர்ச்சி நோக்கிச்

---

மனைக் காஞ்சி. கழிந்தது கருதுவது. இதுவாகியர் - இது வாருக. துன்னரும் - அணுகுதலரிய; மேற்கொள்ளுதல் அருமையான என்றபடி. இனிய நகையாடுங் காதலுடையாள் என்றற்கு, 'இன் நகை மனைவி' எனப்பட்டது; புண்ணோனைப் பேய் துன்னுதலை மனைவி கடிந்த என்றபடி. நீத்த கணவற் றீர்த்த வேலின் - தன்னை நீத்த கணவனை உயிர்தீர்த்த வேற் புண் கண்டு அதனால். பேத்த - அஞ்சிய. ஆஞ்சியானும் - அச் சத்தானும்; அச்சத்தின காரணமான நிலையாமையானும் என்க. மகட் பாடு அஞ்சிய - தன்மகளை வாழ்க்கைப் படுத்துதல் அஞ்சிய. தனது தொல்குலச் சிறப்பிற்குரிய மகளை யென்றற்கு. 'முதுகுடி' என முன் வந்தது. கொண்டோன் - கணவனது. தலையொடு முடிந்த - தலையோடு மோதிக்கொண்டு மனைவி இறந்த. ஈரைந்தாகும் என்ப - இங்ஙனம் ஒருவகைத் துறை கள் ஈரைந்தாகும் என்ப.

பேரிசை - பெரும்புகழுடையனாய். சுற்றம் - பெண்டிரைச் சுற்றம் என்பர் நச். ஆய்ந்த பூசல் - உருகிய அழுகை யொலி. ஆய்ந்த - நுணுகிய; இங்கு அவ்வியல்பமைந்த உருக்கத்தை

செல்வோர் செப்பிய மூதா னந்தமும்,
நனிமிகு சுரத்திடைக் கணவனை இழந்து
தனிமகள் புலம்பிய முதுபா லையும்,
கழிந்தோர் தேஎத்து அழிபடர் உறீஇ
ஒழிந்தோர் புலம்பிய கையறு நிலையும்,
காதலி இழந்த தபுதார நிலையும்,
காதலன் இழந்த தாபத நிலையும்,
நல்லோள் கணவனொடு நளியழல் புகீஇச்
சொல்லிடை யிட்ட பாலை நிலையும்,
ஆய்பெருஞ் சிறப்பிற் சிறுவன் பெயரத்
தாய்தப வரூஉந் தலைப்பெயல் நிலையும்,

---

உணர்த்தும். சுற்றத்தாரின்றி மனைவியர் தாமே ஏங்கிய என்க. பையுள் - துன்பம். கணவனொடு என்னுங் குறிப்பால் அவனோடு உடன் முடிந்தவென்பது பெறப்படும். படர்ச்சி - போக்கு. செல்வோர் - அதனைக் கண்டு செல்வோர். நனிமிகு சுரம் என்றது, அதன் மிக்க கொடுமையை உணர்த்திற்று. பெரும் பிரிவாதலின் 'முது பாலை' எனப்பட்டது. கழிந்தோர் தேஎத்து - இறந்தோர் மாட்டு. அழிபடர் - மிக்க துன்பம். உறீஇ - உற்று. கையறு நிலை - செயலறுநிலை. காதலி - காதலியை. தபுதாரநிலை - தாரமிழந்து நோற்குநிலை. காதலன் - காதலனை. தாபத நிலை - பதியை இழந்த மனைவி நோற்குநிலை. நல்லோள் தன் கணவனொடு என்க. நளி அழல் - மிக்க அழல்; பெருந் தீ. சொல் இடையிட்ட - இடையே விலக்கினோர்க்கு மறுத்துரை கூறிப் பாய்ந்த. பாலை - ஈண்டுப் புறங்காடு. ஆய்பெருஞ் சிறப்பின் சிறுவன் பெயர - களத்தில் எதிர்த்திறத்தலாகிய அழகிய பெரிய சிறப்பிலிருந்து நீங்கிச் சிறுவன் புறங்கொடுத்தானாக; புறங்கொடுத்து இறந்தானாக. தப - இறந்துபட. தலைப்பெயல் - ஒன்று கூடுதல்; என்றது, மகனோடு

மலர்தலை யுலகத்து மரபுநன்கு அறியப்
பலர்செலச் செல்லாக் காடு வாழ்த்தொடு
நிறையருஞ் சிறப்பின் துறையிரண்டு
[உடைத்தே.

## எ. பாடாண் திணை

### பாடாண் இயல்பு

1026. பாடாண் பகுதி கைக்கிளைப் புறனே
நாடுங் காலை நாலிரண்டு உடைத்தே. உரு

### அதன் ஒரு பகுதி

1027. அமரர்கண் முடியும் அறுவகை யானும்
புரைதீர் காமம் புல்லிய வகையினும்
ஒன்றன் பகுதி ஒன்றும் என்ப. உசு

---

தானும் இறந்துபடுதலெனக. மலர்தலை - அகன்ற இடத்தை யுடைய. மரபு - தத்தம் இயல்பு. செல - பலர் அழிந்து போக. செல்லா - தான நெடுங்காலம் அழிதலில்லாத. காடு வாழ்த்து - புறங்காட்டின இயல்புரைத்தல். நிறையருஞ் சிறப்பின் - இணைநிறுத்துதறகரிய சிறபபினை யுடைய. துறை இரண்டு உடைதது - இங்ஙனம் இருவகைப்பட்ட துறைகளை யுடையதென்பது.

1026. பாடாண் - பாடுதலுடைமை. நாலிரண்டு - எண்வகைப் பொருள்கள். அவை, கடவுள் வாழ்த்து வகை, வாழ்த்தியல் வகை, மங்கல வகை, செவியறிவுறுதல், ஆற்றுப் படை வகை, பரிசிற்றுறை வகை, கைக்கிளை வகை, வசை வகை என்பர் இளம்.

1027. அமரர்கண் முடியும் - தேவர் நிலைமையில் வைத்து வாழ்த்துதற்குரிய. அறுவகை - அறுவகை வாழ்தது. சான் றோர், புலவர், வேந்தர், ஆன், மழை, உலகம் என ஆறுவகையில் வாழ்த்துதல். புரைதீர் காமம் புல்லிய வகையினும் - அவ்வறு வகையினிடத்துங் குற்ற நீங்கிய விருப்பம் பொருந்தியொழுகும்

### அதன் மற்றொரு பகுதி

1028. வழங்கியல் மருங்கின் வகைபட நிலைஇப்
பரவலும் புகழ்ச்சியுங் கருதிய பாங்கினும்
முன்னோர் கூறிய குறிப்பினுஞ் செந்துறை
வண்ணப் பகுதி வரைவின் றாங்கே. உஎ

### அதன் முடிபுகள் சில

1029. காமப் பகுதி கடவுளும் வரையார்
ஏனோர் பாங்கினும் என்மனார் புலவர். உஅ

1030. குழவி மருங்கினுங் கிழவ தாகும். உகூ

1031. ஊரொடு தோற்றமும் உரித்தென மொழிப.

1032. வழக்கொடு சிவணிய வகைமை யான. நூக

---

வகையானும். ஒன்றன் பகுதி - தேவபாடாண்டிணை, மக்கட் பாடாண்டிணை என்னும் இரண்டனுள் ஒன்றன் பகுதியாகிய தேவபாடாண்டிணைக்கண். ஒன்றும் - பொருந்தும்.

1028. பரவல் - வாழ்த்துதல். குறிப்பு - பாடுகின்ற முறையில் முன்னோர் கூறிய கருத்து. வரைவின்று - நீக்கு நிலைமையின்று.

1029. காமப் பகுதி - காமக்குறிப்பு வைத்துப் பாடுதலாகிய பகுதி. கடவுளும் - தேவரிடத்தும். ஏனோர் - மக்களிடத்தும். ஏனோர் பாங்கினும் வரையார் என்க.

1030. குழவிமருங்கினும் - குழந்தைகளிடத்தும். கிழவது - அங்ஙனம் பாடுதல் உரியது.

1031. ஊரொடு தோற்றமும் - பொதுவாக ஊரவர் பால் அக் குறிப்பினை ஏற்றிப் பாடுதலும். அது, உலாச் செய்யுள் போல்வன என்பர் நச்.

1032. கூறிய பகுதிகளெல்லாம், வழக்கோடு பொருந்திய வகையினால் அமைதற்குரியன என்றபடி.

அதன்கண், இயற்பெயர்

1033. மெய்ப்பெயர் மருங்கின் வைத்தனர் வழியே.

அதன்கண், கடவுள் வாழ்த்தொடு வருவன

1034. கொடிநிலை கந்தழி வள்ளி என்ற
வடுநீங்கு சிறப்பின் முதலன மூன்றுங்
கடவுள் வாழ்த்தொடு கண்ணிய வருமே. ௩௩

1035. கொற்ற வள்ளை ஓரிடத் தான. ௩௪

அதன் துறை

1036. கொடுப்போர் ஏத்திக் கொடாஅர்ப் பழித்தலும்,
அடுத்தூர்ந் தேத்திய இயன்மொழி வாழ்த்தும்,
சேய்வரல் வருத்தம் வீட வாயில்
காவலர்க் குரைத்த கடைநிலை யானும்,
கண்படை கண்ணிய கண்படை நிலையும்,
கபிலை கண்ணிய வேள்வி நிலையும்,
வேலின் நோக்கிய விளக்கு நிலையும்,

---

1033. மெய்ப்பெயர் என்றது, இங்கே இயற்பெயர். காமக்குறிப்பேபற்றி இங்ஙனம் பாடும பகுதி, புறத்திணையோடு சேர்ந்த அகப்பகுதியாதலால் இயற்பெயரின வாயிலாகவே வழக்கமாய் இயைத்தறகுரிய தென்பது. (அகத். ருரு-ம் நூற்பாவுங் கருதுக.)

1034. கொடிநிலை - கீழ்த்திசை; இங்கே, ஞாயிறு. கந்தழி - பற்றுக்கோட்டினை அழிப்பது; அது, தீ. வள்ளி - வழங்குவது; அது, தண்ணொளி வழங்குந் திங்கள். கண்ணிய - கருதப்படுவனவாய் வரும்.

1035. கொற்ற வள்ளை - தோற்ற கொற்றவனை விளங்கப்பாடுதல் என்றும் உரற்பாட்டு; 'ஓரிடத்தான்' என்றது, தேவர்கட்கன்றி மக்கட்குமட்டும் வைத்துரைத்தறகுரியது என்றற்கு.

வாயுறை வாழ்த்தும், செவியறி வுறூஉம்,
ஆவயின் வரூஉம் புறநிலை வாழ்த்தும்,
கைக்கிளை வகையோடு உளப்படத் தொகைஇத்
தொக்க நான்கும் உளவென மொழிப. ௩௫

**இதுவும் அது**

1037. தாவில் நல்லிசை கருதிய கிடந்தோர்க்குச்
சூதர் ஏத்திய துயிலெடை நிலையும்,
கூத்தரும் பாணரும் பொருநரும் விறலியும்
ஆற்றிடைக் காட்சி உறழத் தோன்றிப்
பெற்ற பெருவளம் பெறாஅர்க் கறிவுறீஇச்
சென்றுபயன் எதிரச் சொன்ன பக்கமும்,
சிறந்த நாளணி செற்றம் நீக்கிப்

---

**1036.** மேல் நூற்பாக்களிரண்டும் இத்திணைக்குரிய துறை வகைகள் நுவல்வன. கொடுப்போர்-கொடுப்போரை. அடுத்து-பாட்டுடைத் தலைவரை யடுத்து. ஊர்ந்து - நெருங்கி. இயல்மொழி வாழ்த்து - குடியினியல்பும் பிறவுங் கூறி வாழ்த்துதல். சேய்வரல் - தொலைவிலிருந்து வருதலாகிய. வீட - தீர. கடைநிலை - தலைவாயிலிற் கூறும் பாட்டுநிலை. 'கண்படை' யென்றது, துயில். கண்ணிய - அது கருதிய. கண்படை நிலை - துயிலும் பொருட்டுப் பாடும் பாட்டுநிலை. கபிலை - ஆன்; செந்நிறத்தையுடைய ஆன். கண்ணிய - அந்த ஆவினைக் கொடுக்கக் கருதிய. வேள்வி - கொடை. வேலின் நோக்கிய-வேல் வெற்றியைக் கருதிய. விளக்கு நிலையும் - விளக்கொளியை வணங்கிப் பாடும் பாட்டு நிலையும். வாயுறை வாழ்த்து முதலியன செய்யுளியலான் (கஙகூஅ, கசகஅ முதலிய நூற்பாக்களால்) விளங்கும். கைக்கிளை வகை - கைக்கிளைப் பாட்டு வகை. தொக்க நான்கு என்றது, வாயுறை வாழ்த்து முதலிய நான்கு.

பிறந்த நாள்வயிற் பெருமங் கலமும்,
சிறந்த சீர்த்தி மண்ணு மங்கலமும்,
நடைமிகுத் தேத்திய குடைநிழல் மரபும்,
மாணார்ச் சுட்டிய வாள்மங் கலமும்,
மன்எயில் அழித்த மண்ணு மங்கலமும்,
பரிசில் கடைஇய கடைக்கூட்டு நிலையும்,
பெற்ற பின்னரும் பெருவளன் ஏத்தி
நடைவயின் தோன்றும் இருவகை விடையும்,
அச்சமும் உவகையும் எச்சமின்றி
நாளும் புள்ளும் பிறவற்றின் நிமித்தமும்

---

**1037.** கிடந்தோர்க்குத் தாவில் நல்லிசை கருதிய சூதர் ஏத்திய துயிலெடை நிலையென்க. கிடந்தோர் - துயில்கொண் டிருந்த அரசர். துயிலெடை நிலை - துயிலெழுப்பும் பாட்டு நிலை. பொருநர் - ஒப்பக் கோலம் புனைவோர். ஆற்றிடைக் காட்சி - வழியிடைக் காண்டலில். உறழத் தோன்றி - ஒருவரோடொருவர் நலம் உசாவி அளவளாவுதலால் உதவுங் கருத்தெழுந்து. பயன் எதிர - பயன் பெறும்படி. நாளணி - வளர்ச்சி நாள்; என்றது, ஆண்டுதோறும் வரும் பிறந்த நாளில் என்க. 'பிறந்த நாள்வயின்' என்றது, அதனை உண்மையிற் பிறந்த நாளிடத்ததாகக் கருதிச் செய்யும் என்றபடி. மங்கலமென்றது - கொண்டாட்டமெலாவும் பொருட்டு. மண்ணு மங்கலம் - ஆண்டுதோறும் முடிபுனைந்து நீராடு நாளின் கொண்டாட்டம். நடை - ஒழுக்கம். ஒழுக்கத்தானாகிய காவல், 'குடைநிழல்' எனப்பட்டது. மாணார்ச் சுட்டிய - பகைவரைக் கருதி யெடுத்த. மன் - மாற்றரசனது. கடைஇய - கடாவின. கடைக்கூட்டும் - நிறைவேற்றும். நடைவயின் - உலகவழக்கில். 'இருவகை விடை' என்றது, தலைவனை விடுப்பப் போதலும்

காலங் கண்ணிய ஓம்படை உளப்பட
ஞாலத்து வரூஉம் நடக்கையது குறிப்பிற்
காலம் மூன்றொடு கண்ணிய வருமே. ௩௬



---

தானே விடைகொள்ளலும் என்பர் நச். எச்சமின்றி - ஒழிதலின்றி; ஞாலத்து வரூஉம் நடக்கையது குறிப்பின் - உலகத்து நடைபெறும் வழக்கினது கருத்தால், காலம் மூன்றொடு - முக்கால நிகழ்ச்சிகளோடு. கண்ணிய வரும் - கருதினவாய் இத் திணையின் துறைகள் வரும் என்பது.

# ரு. களவியல்

[காதற் களவொழுக்கத்தின் இயல்புணர்த்துவது.]

## க. களவொழுக்கம்

### களவொழுக்கத்தின் இயல்பு

1038. இன்பமும் பொருளும் அறனும் என்றாங்கு
அன்பொடு புணர்ந்த ஐந்திணை மருங்கின்
காமக் கூட்டம் காணுங் காலை
மறையோர் தேஎத்து மன்றல் எட்டனுள்
துறையமை நல்யாழ்த் துணைமையோர்
இயல்பே. க

### அதற்குரிய காரண முதலியன

1039. ஒன்றே வேறே என்றிரு பால்வயின்
ஒன்றி உயர்ந்த பால தாணையின்
ஒத்த கிழவனும் கிழத்தியும் காண்ப
மிக்கோன் ஆயினும் கடிவரை யின்றே. உ

---

1038. என்றாங்கு - என்று சொல்லப்பட்ட வகையில். காணுங்காலை - ஆராயுமிடத்து. மறையோர் தேஎத்து - வேத வழக்கினையுடையாரிடத்து நிகழும். மன்றல் - திருமண வகை. துறை - இசைப்பாட்டு வகை. யாழ்த் துணைமையோர் - தத்தம் மகளிரோடு பிரிவின்றி யிருக்கும் யாழோர்; கந்தருவர். இயல்பு - அவரது மணவியல்போடு ஒருவகை ஒப்புமை யுடையது. "கந்தருவர்க்குக் கற்பின்றி யமையவும் பெறும். ஈண்டுக் கற்பின்றிக் களவே அமையாது" என்றார் நச்

1039. ஒன்று - ஒன்றுவித்தல்; ஒன்றியிருக்கும்படி செய்தல். வேறு - வேறாகப் பிரித்துவைத்தல். என்று இரு பால்வயின் - என்று வரும் இருவகை ஊழ்களுள். ஒன்றி உயர்ந்த பாலது - பல பிறவிகளில் ஒன்றியிருக்கும்படி செய்து

## உ. இயற்கைப் புணர்ச்சி

### ஐயம்

1040. சிறந்துழி ஐயம் சிறந்த தென்ப
இழிந்துழி இழிபே சுட்டலான. ௩

### அதனை நீக்குங் கருவிகள்

1041. வண்டே இழையே வள்ளி பூவே
கண்ணே அலமரல் இமைப்பே அச்சமென்று
அன்னவை பிறவும் ஆங்கவண் நிகழ
நின்றவை களையுங் கருவி என்ப. ௪

### நோக்குதல்

1042. நாட்டம் இரண்டும் அறிவுடம் படுத்தற்குக்
கூட்டி உரைக்கும் குறிப்புரை ஆகும். ௫

---

அதனால் அன்பு உயர்தற்கு ஏதுவாகிய ஒருவகை கூறினது; ஒத்த - பொருள் கல்வி அன்பு முதலிய நிலைமைகளில் ஒத்த. மிக்கோனாயினும் - இந் நிலைமைகளில் தலைவியைவிடத் தலைவன் உயர்ந்தவனாயினும்.

1040. சிறந்துழி - செல்வம் வடிவு முதலிய நிலைகள் சிறந்தவிடத்து. இழிந்துழி - அந்நிலைகள் குறைந்துள்ள விடத்து. இழிபே சுட்டலான் - அக் குறைவு நிலைகளே கருதப்படுதலால் என்க.

1041. வள்ளி - தோளில் எழுதுந் தொய்யில். அலமரல் - தடுமாறல். நிகழ நின்றவை, ஐயங் களையுங்கருவி யென்றபடி.

1042. நாட்டம் - கண்ணின் பார்வை. இரண்டும் என்றது, தலைமகன் பார்வையும் தலைமகள் பார்வையும்.

### மெய்ப்பாடு நிகழ்தல்

1043. குறிப்பே குறித்தது கொள்ளு மாயின்
ஆங்கவை நிகழும் என்மனார் புலவர். ௬

### ஆடவர் இயல்பு

1044. பெருமையும் உரனும் ஆடூஉ மேன. ௭

### பெண்டிர் இயல்பு

1045. அச்சமும் நாணும் மடனுமுந் துறுத்த
நிச்சமும் பெண்பாற் குரிய என்ப. ௮

### இயற்கைப் புணர்ச்சியில் தலைமகள் இயல்பு

1046. வேட்கை, ஒருதலை உள்ளுதல், மெலிதல்,
ஆக்கம் செப்பல், நாணுவரை இறத்தல்,
நோக்குவ எல்லாம் அவையே போறல்,
மறத்தல், மயக்கம், சாக்காடு என்றுஅச்
சிறப்புடை மரபினவை களவென மொழிப. ௯

---

**1043.** அவை என்றது, முன் நூற்பாவிற் கூறிய பார்வையின் குறிப்புரைகள்.

**1044.** பெருமையும் - பெருந்தன்மையும். உரனும் - அறிவும். ஆடூஉ மேன - ஆண்மகனிடத்தன.

**1045.** முந்துறுத்த - முதலாயின. நிச்சமும் - எப்பொழுதும்.

**1046.** ஒருதலை உள்ளுதல் - உறுதியாக (இடைவிடாது) நினைத்தல். ஆக்கம் செப்பல் - நேரும் இடையூறுகளையும் ஆக்கமாகப் பேசுதல். நாணுவரை இறத்தல் - நாணத்தின் வரம்பு கடத்தல். அவையே போறல் - அவையே ஒத்தல். சாக்காடு- இறத்தற்கும் நினைவுகொள்ளுதல். களவு - களவொழுக்கத்து அன்பின் நிகழ்ச்சிகள்.

### தலைமகன் இயல்பு

1047. முன்னிலை யாக்கல், சொல்வழிப் படுத்தல்,
நன்னயம் உரைத்தல், நகைநனி யுறாஅது
அந்நிலை யறிதல், மெலிவுவிளக் குறுத்தல்,
தந்நிலை யுரைத்தல், தெளிவகப் படுத்தல் என்று
இன்னவை நிகழும் என்மனார் புலவர். ௧௦

## ௩. களவின்கண் தலைவன் நிலை

### தலைவனுக்கு நிகழுங் கூற்று

1048. மெய்தொட்டுப் பயிறல், பொய்பா ராட்டல்,
இடம்பெற்றுத் தழாஅல், இடையூறு கிளத்தல்,
நீடுநினைந் திரங்கல், கூடுதல் உறுதல்,
சொல்லிய நுகர்ச்சி வல்லே பெற்றுழித்
தீராத் தேற்றம் உளப்படத் தொகைஇப்
பேராச் சிறப்பின் இருநான்கு கிளவியும்;
பெற்றவழி மகிழ்ச்சியும், பிரிந்தவழிக்
[கலங்கலும்,

---

***1047.*** நயம் - நயப்பு. நகை - புனமுறுவல். விளக் குறுத்தல் - விளக்குதல். தெளிவகப்படுத்தல் - தெளிவினகண் நிலைப்பித்தல்.

***1048.*** பயிறல் - பழகல். இடம் என்றது, இங்கு வாயில். வல் - விரைவாக. தேறறம் - தெளிவு உரைத்தல். பேரா - குறையாத. நினைஇ - நினைந்து. பெட்பினும் - விரும்பினும். பெட்ட - தலைவியாற் பேணப்பட்ட. 'வாயில்' என்றது. இங்கே தோழியை. இரவு - அவள்பால் இரத்தலை. வலியுறப் பினும் - மிகச் செய்யினும். கெடுதியும் - இழந்த பொருளும். நீரின - இனிய நீர்மையினல். குறையுறும் - தனகுறை யறி விக்கும். தோழி மெய் உற - தோழி உண்மையறியும்படி. அவன் என்றது, இங்கே தலைவியின்கண் என்றபடி. தண்டாது -

நிற்பவை நினைஇ நிகழ்பவை உரைப்பினும்;
குற்றம் காட்டிய வாயில் பெட்பினும்;
பெட்ட வாயில்பெற்று இரவுவலி யுறுப்பினும்,
ஊரும் பேரும் கெடுதியும் பிறவும்
நீரிற் குறிப்பின் நிரம்பக் கூறித்
தோழியைக் குறையுறும் பகுதியும்; தோழி
குறையவட் சார்த்தி மெய்யுறக் கூறலும்,
தண்டாது இரப்பினும், மற்றைய வழியும்,
சொல்லவட் சார்த்தலின் புல்லிய வகையினும்
அறிந்தோள் அயர்ப்பின் அவ்வழி மருங்கில்
கேடும் பீடும் கூறலும், தோழி
நீக்கலி னாகிய நிலைமையும் நோக்கி
மடன்மா கூறும் இடனுமா ருண்டே. கக

1049. பண்பிற் பெயர்ப்பினும் பரிவுற்று மெலியினும்
அன்புற்று நகினும் அவட்பெற்று மலியினும்
ஆற்றிடை யுறுதலும் அவ்வினைக் கியல்பே. கஉ

---

அமையாமல்; உள்ளம் நிறைவடையாமல். புல்லிய - தலைவி தானே கூடிய. அறிந்தோள் அயர்ப்பின் - அறிந்து மதியுடம் பட்டவளான தோழியினது மறப்பின்கண். கேடும் - தலைவியின் இழப்பும். பீடும் - அவள் அதனை ஆற்றியிருந்த பெருமையும். மடன்மா - பனை மடலாலாகிய மா ஏறுதலை.

1049. பண்பின் - தோழி, தலைவியின் பண்பு கூறுதலால். பெயர்ப்பினும் - தலைவன் வேட்கையை மாற்றினும். மலியினும் - நிறைவடைந்து மகிழினும். ஆற்றிடை உறுதலும் - தலைவன் செல்லுநெறியில் இடையூறு உறுமிடத்தும். வினைக்கு - தோழி வாயிலாகக் கூடும் செயலின்கண். இயல்பு - தலைவனுக்குப் பேச்சு நிகழ்தல் இயல்பாகும்.

**பாங்கன் நிமித்தத்தின் வகை**

1050. பாங்கன் நிமித்தம் பன்னிரண் டென்ப. ௧௫

**அவற்றுள், கைக்கிளை, பெருந்திணைகட்குரியவை**

1051. முன்னைய மூன்றும் கைக்கிளைக் குறிப்பே
பின்னர் நான்கும் பெருந்திணை பெறுமே. ௧௬

**ஏனையவை**

1052. முதலொடு புணர்ந்த யாழோர் மேன
தவலருஞ் சிறப்பின் ஐந்நிலம் பெறுமே. ௧௭

## ௪. தலைவி நிலை

**தலைவிக்கு நிகழுங் கூற்று**

1053. இருவகைக் குறிபிழைப் பாகிய இடத்தும்,
காணா வகையிற் பொழுதுநனி இகப்பினும்,
தான்அகம் புகாஅன் பெயர்தல் இன்மையின்

---

1050. பாங்கன் நிமித்தம் - கூட்டத்துக்குப் பாங்கனால் உண்டாகும் வாயில்.

1051. முன்னைய மூன்றும் என்றது, முன் (௧0௫-அ) 'மன்றல் எட்டு' என்றவற்றுள் அசுரம், இராக்கதம், பைசாசம் என்ப. பின்னர் நான்கும் என்றது, பிரமம், பிரசாபத்தியம், ஆரிடம், தெய்வம் என்ப. எஞ்சிய காந்தருவம் ஐந்திணை வகைப தென்றபடி. கூறிய யாவும் ஒருவகை ஒப்புமை கருதியவை.

1052. முதலொடு - முதற்பொருளென்னும் நிலம் பொழுதுகளொடு. யாழோர் மேன - யாழோர் கூட்டத்தின்பால் (காந்தருவத்தின) வைத்து எண்ணப்படுவதான களவொழுக்கமானது. தவல் அரும் - கெடுதலில்லாத. முதலொடு புணர்ந்ததாகலின் குறிஞ்சிநிலம் பாலைநிலம் முதலிய ஐவகை நிலமும் பெறும் என்றபடி.

காட்சி ஆசையிற் களம்புக்குக் கலங்கி
வேட்கையின் மயங்கிய கையறு பொழுதினும்
புகாஅக் காலைப் புக்கெதிர்ப் பட்டுழிப்
பகாஅ விருந்தின் பகுதிக் கண்ணும்
வேளாண் எதிரும் விருப்பின் கண்ணும்
தாளாண் எதிரும் பிரிவி னானும்
நாணுநெஞ் சலைப்ப விடுத்தற் கண்ணும்
வரைதல் வேண்டித் தோழி செப்பிய
புரைதீர் கிளவி புல்லிய எதிரும்
வரைவுடன் படுதலும் ஆங்கதன் புறத்துப்
புரைபட வந்த மறுத்தலொடு தொகைஇக்
கிழவோள் மேன என்மனார் புலவர். கஅ

**கூற்று நிகழும் இயல்பு**

1051. காமத் திணையிற் கண்ணின்று வரூஉம்
நாணும் மடனும் பெண்மைய ஆதலின்,

---

**1050.** இருவகைக் குறி - பகற்குறி, இராக்குறி. பிழைப் பாகிய விடத்தும் - தவறிய விடத்தும். நனி இகப்பினும் - மிக நீட்டித்தவிடத்தும். அகம் - குறித்த இடம். புகாஅன் - புகானுய். களம் - அக்குறியிடத்தில். கையறு பொழுதினும் - செயலற்றவிடத்தும். புகா - உணவு. புகாஅக் காலை - உண்டி நேரத்தில். எதிர்ப்பட்டுழி - எதிர்ப்பட்ட விடத்து. வேளாண் எதிரும் - அன்னம் விருந்து செய்தலையன்றி வேறு உதவிகள் செய்தற்பொருட்டுந் தலைவி எதிர்கொள்ளும். தாளாண் எதிரும் - முயற்சியைத் தலைவன் மேற்கொள்ளும். விடுத்தற் கண்ணும் - தலைவனை நீக்கி நிறுத்துமிடத்தும். கிளவி புல்லிய எதிரும் - கிளவியோடு பொருந்திய எதிருரையும். புரைபட வந்த மறுத்தலோடு - உயர்பு தோன்ற எழுந்த மறுத்தலோடு. கிழவோள் மேன - பேச்சு தலைவியிடத்தன.

குறிப்பினும் இடத்தினும் அல்லது வேட்கை
நெறிப்பட வாரா அவள்வயி னான. கஎ

1055. காமஞ் சொல்லா நாட்டம் இன்மையின்,
ஏமுற இரண்டும் உளவென மொழிப. கஅ

1056. சொல்லெதிர் மொழிதல் அருமைத் தாகலின்
அல்ல கூற்றுமொழி அவள்வயி னான. கக

**மேலும், தலைவிக்கு நிகழுங் கூற்று**

1057. மறைந்தவற் காண்டல், தற்காட் டுறுதல்,
நிறைந்த காதலிற் சொல்லெதிர் மழுங்கல்,
வழிபாடு மறுத்தல், மறுத்தெதிர் கோடல்,
பழிதீர் முறுவல் சிறிதே தோற்றல்,
கைப்பட்டுக் கலங்கினும், நாணுமிக வரினும்,
இட்டுப்பிரி விரங்கினும், அருமைசெய் [தயர்ப்பினும்,
வந்தவழி எள்ளினும் விட்டுயிர்த் தழுங்கினும்,
நொந்து தெளிவு ஒழிப்பினும், அச்சம் நீடினும்,
பிரிந்தவழிக் கலங்கினும், பெற்றவழி மலியினும்,
வருந்தொழிற் கருமை வாயில் கூறினும்,
கூறிய வாயில் கொள்ளாக் காலையும்,
மனைப்பட்டுக் கலங்கிச் சிதைந்தவழித் தோழிக்கு

---

1054. காமத்திணையில் - காமவொழுக்கத்தில். கண்ணின்று - கண்களிலிருந்து.

1055. நாட்டம் - கண். ஏமுற - தலைவனுக்கு இன்பம் மிகும்பொருட்டு. இரண்டும் என்றது, முற்கூறிய நாணும் மடனும்.

1056. அல்ல கூற்றுமொழி - உடம்படினும், உடம்பாடல்லாத கூற்றாகிய மொழி. அவள்வயினான - தலைவியிடத்தன.

நினைத்தல் சான்ற அருமறை உயிர்த்தலும்,
உயிராக் காலத் துயிர்த்தலும், உயிர்செல
வேற்றுவரைவு வரினது மாற்றுதற் கண்ணும்,
நெறிபடு நாட்டத்து நிகழ்ந்தவை மறைப்பினும்,
பொறியின் யாத்த புணர்ச்சி நோக்கி
ஒருமைக் கேண்மையின் உறுகுறை தெளிந்
அருமை சான்ற நாலிரண்டு வகையின் [தோள்
பெருமை சான்ற இயல்பின் கண்ணும்,
பொய்தலை அடுத்த மடலின் கண்ணும்,
கையறு தோழி கண்ணீர் துடைப்பினும்,
வெறியாட் டிடத்து வெருவின் கண்ணும்,
குறியின் ஒப்புமை மருடற் கண்ணும்,
வரைவுதலை வரினும், களவு அறி வுறினும்,
தமர்தற் காத்த காரண மருங்கினும்,

---

**1057.** **தற்காட்டுறுதல்** - தன்னைத் தலைவன் காணுமாறு நிற்றல். **கைப்பட்டு** - தலைவன் கையகப்பட்டு. **இட்டு** - தன்னை நிறுத்தியிட்டு. **அயர்ப்பினும்** - மறப்பினும். **வந்தவழி** - தலைவன வந்தவிடத்து. **விட்டு உயிர்த்து அழுங்கினும்** - மறையாது சொல்லி இரங்கினும். **தெளிவு ஒழிப்பினும்** - சூளுறவினால தலைவனை விடுப்பினும். **மலியினும்** - மகிழ்ச்சி நிறையினும். வாயில் என்றது இங்கே தோழி; அருமையைத் தோழி கூறினும் என்க. **கூறிய வாயில்** - கூறிய தோழியின உரையை. **உயிர்த்தலும்** - வெளியிடுதலும். **உயிராக் காலத்து** - தலைவனிடம் தனைப்பற்றி எவரும் ஏதும் உரையாதபோது. **நெறிபடு நாட்டத்து** - தோழியும் செவிலியும் ஆராய்கின்ற காலத்து. **பொறியின்** - ஊழினால. **உறுகுறை** - தலைவனுக்காகத் தோழி தன்கண் வந்து குறையுறுதலை. **நாலிரண்டு** - மெய்தொட்டுப் பயிறல் முதலியன. **தலையடுத்த** - பொருந்திய. **வெருவின**

தன்குறி தள்ளிய தெருளாக் காலை
வந்தனன் பெயர்ந்த வறுங்களம் நோக்கித்
தன்பிழைப் பாகத் தழீஇத் தேறலும்,
வழுவின்று நிலைஇய இயற்படு பொருளினும்,
பொழுதும் ஆறும் புரைவ தன்மையின்
அழிவுதலை வந்த சிந்தைக் கண்ணும்,
காமஞ் சிறப்பினும், அவனளி சிறப்பினும்,
ஏமஞ் சான்ற உவகைக் கண்ணும்,
தன்வயின் உரிமையும் அவன்வயிற் பரத்தையும்
அன்னவும் உளவே ஓரிடத் தான. உ0

1058. வரைவிடை வைத்த காலத்து வருந்தினும்,
வரையா நாளிடை வந்தோன் முட்டினும்,
உரையெனத் தோழிக் குரைத்தற் கண்ணும்
தானே கூறுங் காலமும் உளவே. உக

**கூற்றினும், நாணுங் கற்புங் கடவாமை**

1059. உயிரினும் சிறந்தன்று நாணே; நாணினும்
செயிர்தீர் காட்சிக் கற்புச்சிறந் தன்றெனத்

---

**கண்ணும் - அச்சமுண்டாகுமிடத்தும். மருடற் கண்ணும் - மயங்குதலிடத்தும். தள்ளிய - இகழ்ந்த. வந்தனன் பெயர்ந்த - வந்து நீங்கிய. வழுவின்று - வழுவில்லையாய். இயல்படு - தலைவனது இயல்பு தோன்றக் கூறிய. ஆறும் - வழியும். புரைவ தன்மையின் - பொருந்துதலில்லாமையால். காமஞ் சிறப்பினும் - தலைவி காமஞ்சிறப்பினும் எனக. பரத்தையும் - அயன்மையும். அன்னவும் உள - அவை போல்வன நிகழுமிடத்துக் கூற்று உள என்றபடி. ஓரிடத்தான - எல்லாரிடத்துமின்றி ஒரோவோரிடத்தில் என்றபடி.**

**1058. வரைவு இடை வைத்த - வரைவு இடையீடு கொள்ள வைத்த. முட்டினும் - எதிர்ப்படினும்.**

தொல்லோர் கிளவி புல்லிய நெஞ்சமொடு,
காமக் கிழவன் உள்வழிப் படினும்,
தாவில் நன்மொழி கிழவி கிளப்பினும்,
ஆவகை பிறவும் தோன்றுமன் பொருளே. ௨௨

## ௫. தோழியின் நிலை

### தோழிக்கு நிகழுங் கூற்று

1060. நாற்றமும் தோற்றமும் ஒழுக்கமும் உண்டியும்
செய்வினை மறைப்பினும் செலவினும் [பயில்வினும்
புணர்ச்சி எதிர்ப்பா டுள்ளுறுத்து வருஉம்
உணர்ச்சி ஏழினும், உணர்ந்த பின்றை
மெய்யினும் பொய்யினும் வழிநிலை பிழையாது
பல்வேறு கவர்பொருள் நாட்டத் தானும்,
குறையுறற் கெதிரிய கிழவனை மறையுறப்
பெருமையிற் பெயர்ப்பினும் உலகுரைத் [தொழிப்பினும்
அருமையின் அகற்சியும் அவளறி வுறுத்துப்
பின்வர வென்றலும் பேதைமை யூட்டலும்
முன்னுறு புணர்ச்சி முறைநிறுத் துரைத்தலும்

---

1059. சிறந்தன்று - சிறந்தது. செயிர் தீர் - குற்றந் தீர்ந்த. புல்லிய - பொருந்திய. காமக் கிழவன் - தலைவன். படினும் - செலவினும்; சென்றாலும். தா இல் - வருத்தம் இல்லாத. கிழவி - தலைவி. ஆ வகை பிறவும் என்றது, அப் பேச்சு வகைகளிற் பிற உட்கருத்துடைய பேச்சுக்களும் என்றபடி. கருத்து வழுவாது பேசுதல் கற்பாலும், உட்கருத்துடைய வாய்ப் பேசுதல் நாணத்தாலும் என்று கொள்ளப்படும்.

1060. செலவினும் - புதுவகையான நடக்கையினும். பயில்வினும் - புதுவகையான பழக்கங்களினும். உள்ளுறுத்து -

அஞ்சியச் சுறத்தலும் உரைத்துழிக் கூட்டமோடு
எஞ்சாது கிளந்த இருநான்கு கிளவியும்,
வந்த கிழவனை மாயம் செப்பிப்
பொறுத்த காரணம் குறித்த காலையும்
புணர்ந்தபின் அவன்வயின் வணங்கற் கண்ணும்
குறைந்தவட் படரினும் மறைந்தவள் அருகத்
தன்னொடும் அவளொடும் முதல்மூன் றளை இப்
பின்னிலை நிகழும் பல்வேறு மருங்கினும்
நன்னயம் பெற்றுழி நயம்புரி இடத்தினும்
எண்ணரும் பன்னகை கண்ணிய வகையினும்
புணர்ச்சி வேண்டினும் வேண்டாப் பிரிவினும்
வேளாண் பெருநெறி வேண்டிய இடத்தும்
புணர்ந்துழி உணர்ந்த அறிமடச் சிறப்பினும்
ஓம்படைக் கிளவிப் பாங்கின் கண்ணும்
செங்கடு மொழியாற் சிதைவுடைத் தாயினும்
என்புநெகப் பிரிந்தோள் வழிச்சென்று கடைஇ
அன்புதலை யடுத்த வன்புறைக் கண்ணும்
ஆற்றது தீமை அறிவுறு கலக்கமும்
காப்பின் கடுமை கையற வரினும்

---

உட்கொண்டு. வழிநிலை - முறைமை. நாட்டத்தானும் - ஆராயச்சியானும். பெருமையின் - அவன் (தலைவன) பெருமையை மிகுத்துக கூறுதலால். உலகு - உலகியல்; எனறது, உலகத்தார் போல மணஞ்செய்து கொள்க வெனபது. அருமையின் - தலைவியின் அருமைகாட்டுதலால் மூன்றுறு புணர்ச்சி - முன் நிகழ்ந்த கூட்டம். முறை - முறையெனறு கூட்டமோடு - சேர்தலோடு. குறைந்து - தலைவன தன நிலையின் தாழ்ந்து இரந்து. அவட்படரினும் - தோழியைப் பினபற்றினும். முதல் மூன்று என்றது, முன் நிகழ்ந்த இயற்கைப் புணர்ச்சி, பாங்கற் கூட்டம், தோழியிற் கூட்டம் என்னும்

களனும் பொழுதும் வரைநிலை விலக்கிக்
காதல் மிகுதி உளப்படப் பிறவும்,
நாடும் ஊரும் இல்லும் குடியும்
பிறப்பும் சிறப்பும் இறப்ப நோக்கி
அவன்வயின் தோன்றிய கிளவியொடு
[தொகைஇ
அனைநிலை வகையான் வரைதல் வேண்டினும்,
ஐயச் செய்கை தாய்க்கெதிர் மறுத்துப்
பொய்யென மாற்றி மெய்வழிக் கொடுப்பினும்
அவன்விலங் குறினும் களபெறக் காட்டினும்
பிறன்வரைவு ஆயினும் அவன்வரைவு
[மறுப்பினும்
முன்னிலை அறனெனப் படுதல்என்று இரு
புரைதீர் கிளவி தாயிடைப் புகுப்பினும் [வகைப்

மூன்று கூட்டங்களையும். அளைஇ - கலந்து குறிப்பான உணர்த்தி. பின்னிலை - இரந்து பின் நிற்றல். நன்னயம் பெற்றுழி - தலைவியின் இசைவைத் தோழி பெற்றவுழி. பன்னகை - பல நகையாடலுரைகளை. கண்ணிய - கருதிய. வேளாண் பெருநெறி - இல்லறம்; அதனை வேண்டுதலாவது, தலைவியை மணஞ்செய்து கொள்கவென்பது. அறிமடச் சிறப்பு - அறிந்தும் அறியாதது போல் இருக்கும் மேன்மை. ஓம்படைக்கிளவி - பாதுகாத்தல் கூறுங் கிளவி. செங்கடு மொழியால் - தோழியின் நேர்மையான கடிய சொற்களால். சிதைவு, தலைவனின நெஞ்சின் கண்ணதாக் கொள்க. கடைஇ - மனத்தே பதியுமாறு கூறி. வரைநிலை - வரைந்து கூறும் நிலைமையை. இறப்ப நோக்கி - பெரிது கருதி. கொடுப்பினும் - அறிவுறுப்பினும். விலங்குறினும் - கூட்டத்துக்கு இடையூறு தோன்றினும். முன்னிலை - வேலன் முதலியோரை முன்னிலையாக வைத்துத் தலைவியின் நிலையைத் தாய் அறியச்செய்தல். அறன் - அறத்தொடு நிற்றல்;

வரைவுடன் பட்டோர்க் கடாவல் வேண்டினும்
ஆங்கதன் தன்மையின் வன்புறை உளப்படப்
பாங்குற வந்த நாலெட்டு வகையும்
தாங்கருஞ் சிறப்பின் தோழி மேன. உ௫

## ௬. செவிலி முதலியோர் நிலை

### செவிலிக்கு நிகழுங் கூற்று

1061. களவல ராயினும், காம [1]மெய்ப்படுப்பினும்,
அளவுமிகத் தோன்றினும், தலைப்பெய்து காணினும்,
கட்டினும் கழங்கினும் வெறியென இருவரும்
ஒட்டிய திறத்தாற் செய்திக் கண்ணும்,
ஆடிய சென்றுழி அழிவுதலை வரினும்,
காதல் கைம்மிகக் கனவின் அரற்றலும்,
தோழியை வினவலும், தெய்வம் வாழ்த்தலும்,
போக்குடன் அறிந்தபின் தோழியொடு கெழீஇக்
கற்பின் ஆக்கத்து நிற்றற் கண்ணும்,
பிரிவின் எச்சத்தும், மகள்நெஞ்சு வலிப்பினும்,
இருபாற் குடிப்பொருள் இயல்பின் கண்ணும்,

---

தலைவியின நிலை அறத்தோடு பொருந்துவதெனத் தாய்க்கு அறிவித்தல். இவ் விருவகைக் கிளவியானும் தாயிடைக் கருத்தைப் புகுப்பினும் எனக. வரைவு உடன்பட்டோர், தமர்; அவரை வரைவு கடாவும்படி தலைவனை வேண்டினும் என்க. கடாவல் - வரைவுக்கு மகட்கொடை கேட்டல். வன புறை - வறபுறுத்தல். தோழிமேன - இக் கூறறுகதன் தோழியின்பாலன.

1061. களவு அலராயினும் என்க. மெயப் படுப்பினும் - உடம்பினகண பறபல குறிகள்முகமாக வெளிப்படினும், தலைப்

---

(பா - வே.) 1. 'மேற் படுப்பினும்' இளம்.

இன்ன வகையிற் பதின்மூன்று கிளவியோடு
அன்னவை பிறவும் செவிலி மேன. உச

**நற்றாய்க்கும் இக் கூற்று நிகழ்தல்**

1062. தாய்க்கும் வரையார் உணர்வுடம் படினே. உரு

**நற்றாயும் செவிலியும் தலைவியின் இயல்பைத் துணிதல்**

1063. கிழவோன் அறியா அறிவினள் இவளென
மையறு சிறப்பின் உயர்ந்தோர் பாங்கின்
ஐயக் கிளவி அறிதலும் உரித்தே. உசு

**அது துணிதலின் அருமை**

1064. தன்னுறு வேட்கை கிழவன் முற் கிளத்தல்
எண்ணுங் காலைக் கிழத்திக் கில்லை;

---

பெய்து - தலைவனோடு தலைவியை ஒருங்கு சேர்ப்பித்து. செய்திக் கண்ணும் - செய்தவிடத்தும். ஆடிய - வெறியாடும் பொருட்டு. போக்குடன் - உடன்போக்கு. கெழீஇ - இசைந்து. மதியுடம் பட்டு எனக. எச்சத்தும் - தலைவியுடன் செவிலி தானும் உடன் செல்லாது பின் நிற்றற்கண்ணும். வலிப்பினும் - உடன் போக்கிற்குத் துணியினும். குடிப்பொருள் - குடிப் பெருமை யாகிய. அன்னவை பிறவுமாகிய இக்கூற்றுக்கள் செவிலியின் பாலன என்பது.

*1062.* தாய்க்கும் - நற்றாய்க்கும். வரையார் - முற் கூறிய செவிலிகுரிய கூற்றுக்களை நீக்கார்.

*1063.* கிழவோன் - கிழவோனை. அவன் தலைவி நிலை யினும் உயர்ந்தோனாயிருத்தல் கூடுமாகலின், அவனை அறியா அறிவினள் எனத் தாயர் ஐயுற்றன ரெனபது. அதனை உயர்ந் தோரிடத்துக் கூறித் துணிதலும் அவர்க்கு உரியதென்றபடி.

பிறநீர் மாக்கள் இன்றிய ஆயிடைப்
பெய்ந்நீர் போலும் உணர்விற்று என்ப. உஎ

**தலைவன் தலைவியரின் தனிமை யொழுக்கம்**

1065 காமக் கூட்டம் தனிமையிற் பொலிதலின்
தாமே தூதுவர் ஆதலும் உரித்தே. உஅ

**தலைவியே குறியிடமுங் கூறுதல்**

1066. அவன்வரம் பிறத்தல் அறம்தனக் கின்மையின்
களஞ்சுட்டுக் கிளவி கிழவிய தாகும்
தான்செலற் குரியவழி ஆக லான. உகூ

**தோழியுங் களஞ் சுட்டுதல்**

1067. தோழியின் முடியும் இடனுமா ருண்டே. ௩0

**களவுக்கு நாள் வரையறை**

1068. முந்நாள் அல்லது துணையின்று கழியாது
அந்நா ளகத்தும் அதுவரை வின்றே. ௩க

**அந்நிலையில் தலைவியின் இயல்பு**

1069. பன்னூறு வகையினும் தன்வயின் வருஉம்
நன்னய மருங்கின் நாட்டம் வேண்டலின்,

1064. பிறநீர் - பிற கருத்துடைய. பெய்ந்நீர்போலும் - புதுக் கலத்திற் பெய்த நீர் புறத்துப் பொசிந்து காட்டுவது போலும். உணர்விற்று - உணர்வினையுடையது அவள் இயல்பு என்றபடி.

1065. தனிமையின் - தனிமையால்.

1066. அறம் தனக்கு இன்மையின - தனக்கு அறம் இன்மையின. களம் - குறியிடம்.

1068. துணை என்றது, தோழி.

துணைச்சுட்டுக் கிளவி கிழவிய தாகும்
துணையோர் கருமம் ஆக லான. ௬௨

செவிலியின் இயல்பு

1070. ஆய்பெருஞ் சிறப்பின் அருமறை கிளத்தலின்,
தாயெனப் படுவோள் செவிலி யாகும். ௬௩

தோழியின் இயல்பு

1071. தோழி தானே செவிலி மகளே. ௬௪

1072. சூழ்தலும் உசாத்துணை நிலைமையிற் பொலிமே.

தோழியின் திறன்

1073. குறையுற உணர்தல், முன்னுற உணர்தல்,
இருவரும் உள்வழி அவன்வர வுணர்தலென
மதியுடம் படுத்தல் ஒருமூ வகைத்தே. ௬௫

1074. அன்ன வகையான் உணர்ந்தபின் அல்லது
பின்னிலை முயற்சி பெறாளென மொழிப. ௬௭

1069. நனையம் - அனபு. நாட்டம் - ஆராய்ச்சி. வேண்டலின் - தலைமகன் விரும்புதலால. துணைச் சுட்டுக் கிளவி - தன துணையாகிய தோழியை உதவிக்குக் கருதிக்கூறுங் கிளவி.

1072. சூழ்தலும் - தலைவியை ஆராய்தலும். உசாத் துணை நிலைமையின - உசாத் துணை என்றுங் காரணத்தால். பொலிமே - தோழிக்குச் சிறக்கும்.

1073. குறையுற - தலைவன் தன்னிடம் வந்து இரந்து குறையுற்றவழி. முன - முனனம்; குறிப்பு. அவன வர உணர்தல் - அவன் வருதலால இருவர் குறிப்பும் உணர்தல்.

1074. பின்னிலை முயறசி - தலைவனைத் தோழி வழிபாடு கொள்ளுஞ் செயல்; என்றது, அவன் கருத்தோடு தொடர்ந்து செல்லும் முயறசி,

1075. முயற்சிக் காலத்து அதற்பட நாடிப்
புணர்த்தல் ஆற்றலும் அவள்வயி னான. ௩௮

## ௭. குறியிடத்துப் புணர்ச்சி

### பகற்குறியும் இரவுக் குறியும்

1076. குறியெனப் படுவது இரவினும் பகலினும்
அறியத் தோன்றும் ஆற்ற தென்ப. ௩௯

### இரவுக்குறிக்கு உரிய இடம்

1077. இரவுக் குறியே இல்லகத் துள்ளும்
மனையோர் கிளவி கேட்கும்வழி யதுவே;
மனையகம் புகாஅக் காலை யான. ௪0

### பகற்குறிக்கு உரிய இடம்

1078. பகற்புணர் களனே புறனென மொழிப
அவளறி வுணர வருவழி யான. ௪௧

### இக்குறிகள் வகையில் தோழி

1079. அல்லகுறிப் படுதலும் அவள்வயின் உரித்தே
அவன்குறி மயங்கிய அமைவொடு வரினே.

---

1075. அதன்பட - தலைவன் தலைவியின் காதற் கற்போடு பொருந்த.

1076. ஆற்றது - நெறியையுடையது.

1077. கேட்கும் வழியது - கேட்கும் இடத்தது. மனையகம் புகாஅக் காலையான் - மனைக்குள் ஓரிடத்தே புகுந்து கூட்டம் நிகழ்த்தாத முதற்காலத்தில் என்றபடி.

1078. புறன் என - வீட்டுக்கு வெளியே என்று. அவன் அறிவு உணர வருவழியான - தலைமகன் அறிவுற்று வருதற்குரிய இடத்தில்.

1079. அல்ல குறிப்படுதலும் - அல்லாத குறியிடத்துச் சேர்தலும், வயின் - தலைவி வயின்,

### தலைவி

1080. ஆங்காங் கொழுகும் ஒழுக்கமும் உண்டே
ஓங்கிய சிறப்பின் ஒருசிறை யான. சரு

### தலைவன்

1081. மறைந்த ஒழுக்கத் தோரையும் நாளும்
துறந்த ஒழுக்கம் கிழவோற் கில்லை. சசு

1082. ஆற்றின தருமையும், அழிவும், அச்சமும்,
ஊறும் உளப்பட அதனோ ரன்ன. சஎ

### தந்தை முதலியோர்

1083. தந்தையும் தன்னையும் முன்னத்தின் உணர்ப.

### தாய்

1084. தாயறி வுறுதல் செவிலியோ டொக்கும். சஎ

---

1080. ஒரு சிறையான் - இடம் குறிக்காத காலத்து. அடக்கமான இடம் தானே வாய்த்துழி.

1081. மறைந்த ஒழுக்கத்து - களவொழுக்கத்தின்கண். ஓரை - நாழிகை; ஈண்டுத் தீய நாழிகையும் நாளும் என்க.

1082. அழிவும் - மனன் அழிவும். அதனோரன்ன - முன் நூற்பாவிற் கூறியதோ டொப்பத் தலைவற்கு இல்லை என்றபடி.

1083. தன் ஐயும் - தமையனும். முன்னத்தின் - குறிப்பினால். உணர்ப - தலைவியின நிலையை உணர்வர்.

1084. அறிவுறுதல் - அறியும் நிகழ்ச்சி. செவிலியோ டொக்கும் என்றது. செவிலி அறியும் முறையான் ஆராய்ந்தறி வள் என்றபடி.

### களவு வெளிப்படுதல்

1085. ஆம்பலும் அலரும் களவுவெளிப் படுத்தலின்
அங்கதன் முதல்வன் கிழவ னாகும். ௪௮

## அ. வரைதல்

### வரைதலின் வகை

1086. வெளிப்பட வரைதல், படாமை வரைதலென்று
ஆயிரண் டென்ப வரைத லாறே. ௪௯

### வரைந்தல்லது பிரியாமை

1087. வெளிப்படை தானே கற்பினொடு ஒப்பினும்
ஞாங்கர்க் கிளந்த மூன்று பொருளாக
வரையாது பிரிதல் கிழவோற்கு இல்லை. ௫௰

---

1085. அம்பல் என்றது, அலரின் முகிழ்த்த நிலை. அதனை முதல்வன - அவ் வெளிப்படைக்குக் காரணமானவன.

1087. ஞாங்கர்க் கிளந்த மூன்று பொருளாக - முன்னர்க் கூறிய ஓதல், பகை, தூது கருத்தாக. எனவே, பொருள் கருத்தாக வரையாது பிரிதல் உண்டென்பது பெறப்படும்,

# ௪. கற்பியல்

[கற்பொழுக்கத்தின் இயல்புணர்த்துவது.]

## ௧. கற்பு மணம்

1088. கற்பெனப் படுவது கரணமொடு புணரக்
கொளற்குரி மரபின் கிழவன் கிழத்தியைக்
கொடைக்குரி மரபினோர் கொடுப்பக்கொள்
[வதுவே. ௧

1089. கொடுப்போர் இன்றியும் கரணம் உண்டே
புணர்ந்துடன் போகிய காலை யான. ௨

1090. மேலோர் மூவர்க்கும் புணர்த்த கரணம்
கீழோர்க் காகிய காலமும் உண்டே. ௩

1091. பொய்யும் வழுவும் தோன்றிய பின்னர்,
ஐயர் யாத்தனர் கரணம் என்ப. ௪

## ௨. கற்பொழுக்கத்தில் மணமக்கள் கூற்று

### தலைமகன் கூற்று

1092. கரணத்தின் அமைந்து முடிந்த காலை
நெஞ்சுதளை அவிழ்ந்த புணர்ச்சிக் கண்ணும்,
எஞ்சா மகிழ்ச்சி இறந்துவரு பருவத்தும்,

---

**1088.** கரணமொடு புணர - திருமணச் சடங்கோடு பொருந்த.

**1089.** உடன்போகிய காலை என்றது, உடன்போக்கை நினைந்து.

**1091.** ஐயர் - தம் ஐயன்மார்; தலைவியின் தமையன்மார். அவரே முன் வந்து திருமணத்தை நிகழ்த்தினர் எனபது.

அஞ்ச வந்த உரிமைக் கண்ணும்,
நன்னெறிப் படரும் தொன்னலப் பொருளினும்
பெற்ற தேஎத்துப் பெருமையின் நிலைஇக்
குற்றஞ் சான்ற பொருளெடுத் துரைப்பினும்,
நாமக் காலத் துண்டெனத் தோழி
ஏமுறு கடவுள் ஏத்திய மருங்கினும்
அல்லல்தீர ஆர்வமொடு அளைஇச்
சொல்லுறு பொருளின் கண்ணும், சொல்லென
ஏனது சுவைப்பினும் நீகை தொட்டது
வானோர் அமுதம் புரையுமால் எமக்கென
அடிசிலும் பூவும் தொடுதற் கண்ணும்,
அந்தணர் திறத்தும் சான்றோர் தேஎத்தும்
அந்தமில் சிறப்பின் பிறர்பிறர் திறத்தினும்

---

1092. தளை யவிழ்ந்த - கட்டவிழ்ந்த; மலர்ந்த. எஞ்சா - குறையாத. இறந்து வரு - மிக்கு வருகின்ற. உரிமைக் கண்ணும் - கற்பொழுக்கத்தின்கண்ணும். நன்னெறி என்றது, இல்லற நெறி. விருந்தோம்பு நெறி; தலைவி தன் இயற்கை மாட்சிமையால் எவருங் கற்பியாமலே அறிந்து செய்தலின், அம் மாட்சிமையைத் 'தொல் நலப் பொருள்' என்றார். பெற்ற தேஎத்து - அங்ஙனம் வாழ்க்கை பெற்றவிடத்து. பெருமையின் நிலைஇ - தலைவியைப் பெருமையில் நிலைபெறச் செய்து எடுத்துரைப்பினும் - உயர்த்திக் கூறினும். தலைவியின மாட்டு யாதேனுங் குற்றங் காணினும் அதனை உயர்த்திப் பாராட்டுதலால் இனிது அறிவித்தற்கண்ணும் என்க. நாமக காலத்து - அச்சக் காலத்தில்; என்றது, கனவுக் காலத்தில். ஏம உறு - காவலாயிருந்து உதவிய. சொல் என - சோறு என்று. ஏனது - வேறொன்றாகிய நஞ்சை. புரையும் - ஒக்கும். அந்தம்

ஒழுக்கம் காட்டிய குறிப்பினும், ஒழுக்கத்துக்
களவினுள் நிகழ்ந்த அருமையைப் புலம்பி
அலமரல் உள்ளமொடு அளவிய இடத்தும்,
அந்தரத்து எழுதிய எழுத்தின் மான
வந்த குற்றம் வழிகெட ஒழுகலும்,
அழியல் அஞ்சல் என்று ஆயிரு பொருளினும்
தான்அவட் பிழைத்த பருவத் தானும்,
நோன்மையும் பெருமையும் மெய்கொள [1]அருளிப்
பன்னல் சான்ற வாயிலொடு பொருந்தித்
தன்னின் ஆகிய தகுதிக் கண்ணும்,
புதல்வற் பயந்த புனிறதீர் பொழுதின்
நெய்யணி மயக்கம் புரிந்தோள் நோக்கி
ஐயர் பாங்கினும் அமரர்ச் சுட்டியும்
செய்பெருஞ் சிறப்பொடு சேர்தற் கண்ணும்,
பயங்கெழு துணையணை புல்லிய புல்லாது
உயங்குவள் கிடந்த கிழத்தியைக் குறுகிப்
புல்கென முன்னிய நிறையழி பொழுதின்
மெல்லென் சீறடி புல்லிய இரவினும்,
உறலருங் [2]குரைமையின் ஊடல்மிகுத் தோளைப்

---

இல் - கேடில்லாத. அழியல் - மனம் அழியற்க. அவட் பிழைத்த - அவட்குப் பிழைசெய்த. நோன்மை - பொறுமை. மெய கொள அருளி - உடம்பிற் புலப்படும்படி அருள்கூர்ந்து. பனனல் சான்ற - சொல்லுதல் வல்ல, தன்னின ஆகிய - தனது தலைமைப்பாட்டிற் சிறந்த. புரிந்தோள் - புரிந்தோளை. அணை - மெத்தை. புலலிய கிடந்த கிழத்தியை என்க. உயங்

---

(பா - வே.) 1 அருளிய. 2, குன்மையின்.

பிறபிற பெண்டிரின் பெயர்த்தற் கண்ணும்,
பிரிவின் எச்சத்துப் புலம்பிய இருவரைப்
பிரிவின் நீக்கிய பகுதிக் கண்ணும்
நின்றுநனி பிரிவின் அஞ்சிய பையுளும்,
சென்றுகை இகந்துபெயர்த்து உள்ளிய வழியும்
காமத்தின் வலியும், கைவிடின் அச்சமும்,
தான்அவட் பிழைத்த நிலையின் கண்ணும்,
உடன்சேறல் செய்கையொடு அன்னவை பிற
மடம்பட வந்த தோழிக் கண்ணும், [வும்
வேற்றுநாட்டு அகல்வயின் விழுமத் தானும்,
மீட்டுவரவு ஆய்ந்த வகையின் கண்ணும்,
அவ்வழிப் பெருகிய சிறப்பின் கண்ணும்,
பேரிசை ஊர்திப் பாகர் பாங்கினும்,
காமக் கிழத்தி மனையோள் என்றுஇவர்

---

குவன் - வருந்தி. முன்னிய - தலைவன் கருதிய. உறலருமையின் என்பது. குரை, அசை. பெண்டிரின் - பெண்டிரைச் சுட்டி அக்காரணத்தால். பெயர்த்தற்கண்ணும் - ஊடல் நீக்குமிடத்தும். பிரிவின் எச்சத்து - பிரிவின் தனிமையில். இருவரை என்றது, தலைவியையும் காமக் கிழத்தியையும் என்பர் இளம். பிரிவின் நீக்கிய - அப் பிரிதலினின்று காத்த. நின்று - தனியே கருத்தாழ்ந்து. பையுளும் - வருத்தத்திடத்தும். பெயர்த்து - மீண்டும். அவட் பிழைத்த - தலைவிக்குப் பிழை செய்த. அகல்வயின் - நீங்கியவிடத்து உண்டான. விழுமத்தானும் - துன்பத்தின்கண்ணும். ஆய்ந்த - எண்ணிய. பேர் இசை ஊர்தி - மிக்க புகழினையுடைய தேர்.

ஏமுறு கிளவி சொல்லிய எதிரும்,
சென்ற தேஎத்து உழப்புநனி விளக்கி
இன்றிச் சென்ற தன்னிலை கிளப்பினும்,
அருந்தொழில் முடித்த செம்மற் காலை
விருந்தொடு நல்லவை வேண்டற் கண்ணும்,
மாலை ஏந்திய பெண்டிரும் மக்களும்
கேளிர் ஒழுக்கத்துப் புகற்சிக் கண்ணும்,
ஏனை வாயில் எதிரொடு தொகைஇப்
பண்ணமை பகுதிமுப் பதினொரு மூன்றும்
எண்ணருஞ் சிறப்பிற் கிழவோன் மேன. ௫

### தலைவி கூற்று

1093. அவன்அறி வாற்ற அறியு மாகலின்
ஏற்றற் கண்ணும், நிறுத்தற் கண்ணும்,
உரிமை கொடுத்த கிழவோன் பாங்கில்
பெருமையின் திரியா அன்பின் கண்ணும்,
கிழவனை மகடூஉப் புலம்புபெரி தாகலின்
அலமரல் பெருகிய காமத்து மிகுதியும்,
இன்பமும் இடும்பையும் ஆகிய இடத்தும்,
கயந்தலை தோன்றிய காமர் நெய்யணி

---

ஏம் உறு - பாதுகாவற் பொருளினையுடைய. இன்றிச் சென்ற - மனையினறிச் சென்ற. செம்மல் காலை - தலைமைக் காலத்தில். மாலை ஏந்துதல், வினைமுற்றி வருந் தலைமகனை எதிர் கொள்ளும்பொருட்டு. பெண்டிரும் மக்களுமாகிய கேளிரது என்க. புகற்சிக் கண்ணும் - விரும்புதற்கண்ணும். வாயில் எதிரொடு - வாயில்களின எதிரே கூறுங் கூற்றோடு. பண் - தகுதி. கிழவோன் மேன என்றார், இனைய இடங்களில் தலைமகற்குக் கூற்று நிகழும் என்றற்கு.

நயந்த கிழவனை நெஞ்சு புண்ணுறீஇ
நளியின் நீக்கிய இளிவரு நிலையும்,
புகன்ற உள்ளமொடு புதுவோர் சாயற்கு
அகன்ற கிழவனைப் புலம்புநனி காட்டி
இயன்ற நெஞ்சம் தலைப்பெயர்த் தருக்கி
எதிர்பெய்து மறுத்த ஈரத்து மருங்கினும்
தங்கிய ஒழுக்கத்துக் கிழவனை வணங்கி
எங்கையர்க்கு உரையென இரத்தற் கண்ணும்,
செல்லாக் காலைச் செல்கென விடுத்தலும்,
காமக் கிழத்தி தன்மகத் தழீஇ
ஏமுறு விளையாட்டு இறுதிக் கண்ணும்,
சிறந்த செய்கை அவ்வழித் தோன்றி
அறம்புரி நெஞ்சமொடு தன்வரவு அறியாமைப்

---

**1098.** அவன் என்றது, தலைவன். ஆற்ற - மிக. ஏற்றற் கண்ணும் - அவனை உயர்த்துப் பாராட்டுதலிடத்தும். நிறுத்தற்கண்ணும் - மதித்துரைக்குமிடத்தும். கிழவனைப் புலம்பு - தலைவனைப் பிரிந்திருக்குந் தனிமை. கயந் தலை - யானைக்கன்று போலும் புதல்வன் என்பர் நச். களியின் - தனனை அணுகுதலின்று. புகன்ற - விரும்பிய. புதுவோர் - தலைவியினும் இளையோர். புலம்பு - தனிமை. இயன்ற - அவன்மாட்டுச் செல்கின்ற. தலைப்பெயர்த்து - மீட்டு. அருக்கி - அருமையுடையதாக்கி. ஈரத்து என்றூர், முற்றும் மருமையின். தங்கிய - பரத்தையரிடந் தங்கிய. எங்கையர்க்கு - எம் தங்கையராகிய அப் பரத்தையர்க்கு. உரை - இப் பணிமொழிகளை உரை. செல்கென - வடலாற் செல்க என்று. மக - மகவு. செய்கை யவ்வழி - செய்கையையுடைய அவ்விடத்து. புறஞ்செய்து -

புறஞ்செய்து பெயர்த்தல் வேண்டிடத் தானும்
தந்தையர் ஒப்பர் மக்கள்என் பதனால்
அந்தமில் சிறப்பின் மகப்பழித்து நெருங்கலும்,
கொடியோர் கொடுமை சுடுமென ஒடியாது
நல்லிசை நயந்தோர் சொல்லொடு தொகைஇப்
பகுதியின் நீங்கிய தகுதிக் கண்ணும்,
கொடுமை ஒழுக்கம் கோடல் வேண்டி
அடிமேல் வீழ்ந்த கிழவனை நெருங்கிக்
காதல் எங்கையர் காணின் நன்றென
மாதர் சான்ற வகையின் கண்ணும்,
தாயர் கண்ணிய நல்லணிப் புதல்வனை
மாயப் பரத்தை உள்ளிய வழியும்,
தன்வயின் சிறைப்பினும், அவன்வயின்
[பிரிப்பினும்,
இன்னாத் தொல்சூள் எடுத்தற் கண்ணும்,

---

மறைவாயிருந்து. பெயர்த்தல் - தலைவியின் ஊடல் நீக்குதலை. நெருங்கலும் - கடிதறகணனும். கொடியோர் - கொடிய தலைவரது. ஒடியாது - கூட்டம் தவிராத வகையில். நல்லிசை நயந்தோர் எனறது, பாணர் முதலிய வாயிலோர். தொகைஇ- கூடி. பகுதியின நீங்கிய - வேறுபடுதலினின்றும் நீங்கிய. கோடல் வேண்டி - தலைவி பொறுத்துக்கோடல் வேண்டி. மாதர் சான்ற - தலைவன்பாற் காதலமைந்த. கருதிய - கருதிப் புனைந்த. பரத்தை - பரத்தைமை. உள்ளிய வழியும் - தலைவி நினைந்தவிடத்தும். சிறைப்பினும் - புதல்வனைச் சிறைப்படுத்தி நிறுத்தினும். அவன்வயின் - தலைவனிடம். எடுத்தற்கண்ணும் - எடுத்து நினையூட்டுமிடத்தும். காமக்கிழத்தியரின் நலம் என்க.

காமக் கிழத்தியர் நலம்பா ராட்டிய
தீமையின் முடிக்கும் பொருளின் கண்ணும்,
கொடுமை ஒழுக்கத்துத் தோழிக்கு உரியவை
வடுவறு சிறப்பிற் கற்பின் திரியாமைக்
காய்தலும் உவத்தலும் பிரித்தலும் பெட்டலும்
ஆவயின் வரூஉம் பல்வேறு நிலையினும்,
வாயிலின் வரூஉம் வகையொடு தொகைஇக்
கிழவோள் செப்பல் கிழவ தென்ப. சு

1094. புணர்ந்துடன் போகிய கிழவோள், [மனையிருந்து
இடைச்சுரத்து இறைச்சியும் வினையும் சுட்டி
அன்புறு தக்க கிளத்தல் தானே
கிழவோன் செய்வினைக்கு அச்சம் ஆகும். எ

---

தீமையின் - தீமைக் கருத்தோடு. கொடுமை ஒழுக்கத்து - தலைமகனது கொடுமையொழுக்கத்து. தோழிக்குரியவை - தலைமகள் தோழிககுக் கூறுதறகுரியவை. திரியாமை - திரியாதபடி. காய்தலும் - தலைமகனைச் சினத்தலும். பெட்டலும் - விரும்புதலும். வாயிலின் வரூஉம் வகையொடு - பாணன் முதலிய வாயில்களிடம் நேரும் கூற்று வகையோடு. கிழவோள் செப்பல் - தலைவிக்குக் கூற்று. கிழவது - உரியது.

1094. பின்னர்க் கற்புக் காலத்தில் மனையிருந்து என்க. இறைச்சியும் வினையும் - பறவை விலங்கு முதலிய கருப்பொருள்களும் அவற்றின் காதற் செயல்களும். அனபுறு தக்க - தலைவன் தன்மேல் அன்புறுதற்குத் தக்கவற்றை. செயவினைக்கு அச்சம்- செய்தொழில் பற்றித் தலைவிக்கு அச்சம். கருப்பொருள்களின் செயலைக்கண்டு தலைவன்தன் செயல்மேற் செல்லாது அன்பினுல் இல்லந் திரும்பி விடுவனே என்று தலைவிக்கு அச்சம் ஆகும் என்றபடி.

1095. தோழியுள் ளுறுத்த வாயில் புகுப்பினும்
ஆவயின் நிகழும் என்மனார் புலவர். அ

## ங. கற்பொழுக்கத்திற் பிறர் கூற்று

### தோழி கூற்று

1096. பெறற்கரும் பெரும்பொருள் முடிந்தபின் வந்த
தெறற்கரு மரபிற் சிறப்பின் கண்ணும்,
அற்றம்அழி வுரைப்பினும், அற்றம் இல்லாக்
கிழவோட் சுட்டிய தெய்வக் கடத்தினும்,
சீருடைப் பெரும்பொருள் வைத்தவழி
[மறப்பினும்,
அடங்கா ஒழுக்கத்து அவன்வயின் அழிந்தோளை
அடங்கக் காட்டுதற் பொருளின் கண்ணும்,
பிழைத்துவந் திருந்த கிழவனை நெருங்கி
இழைத்தாங்கு ஆக்கிக் கொடுத்தற் கண்ணும்,
வணங்கியல் மொழியான் வணங்கற் கண்ணும்,

---

**1095.** உள்ளுறுத்த - உள்ளிட்ட. புகுப்பினும் - செலவழுங்குவிக்கும் பொருட்டுத் தலைமகனிடம் தலைவி புகவிடினும். ஆவயின் - அவ்விடத்தும். நிகழும் - அவ்வச்சம் நிகழும்.

**1096.** பெரும்பொருள் என்றது, திருமணம். வந்த - உண்டான. தெறற்கரு மரபின் - தோழியினது கடிதற்கரிய மேன்மை காரணமாக. சிறப்பின்கண்ணும் - தோழியைத் தலைவன சிறப்பித்துப் பேசுமிடத்தும்; அற்றம் - இங்கே வருத்தம் என்னும் பொருட்டு; களவுக் காலத்தில் உண்டான வருத்தம். அழிவு - அது நீங்கினமை. அற்றம் இல்லா - வருத்தம் வெளிப்படுத்துதலில்லாத. கிழவோட் சுட்டிய-தலைவியைக் கருதி நேர்ந்துகொண்ட. தெய்வக் கடத்தினும் - தெய்வக் கடன் முடித்தலை வேண்டுமிடத்தும். சீருடைப் பெரும்பொருள்

புறம்படு விளையாட்டுப் புல்லிய புகற்சியும்,
சிறந்த புதல்வனை நேராது புலம்பினும்,
மாணலம் தாவென வகுத்தற் கண்ணும்,
பேணா ஒழுக்கம் நாணிய பொருளினும்,
சூள்நயத் திறத்தால் சோர்வுகண் டழியினும்,
பெரியோர் ஒழுக்கம் பெரிதெனக் கிளந்து
பெறுதகை இல்லாப் பிழைப்பினும், அவ்வயின்
உறுதகை இல்லாப் புலவியுள் மூழ்கிய
கிழவோள்பால் நின்று கெடுத்தற் கண்ணும்,
உணர்ப்புவயின் வாரா ஊடலுற் றோள்வயின்
உணர்த்தல் வேண்டிய கிழவோன்பால் நின்று
தான்வெகுண் டாக்கிய தகுதிக் கண்ணும்,

---

என்றது, இல்லறம். வைத்தவழி - தலைமகள்மாட்டு வைத்த விடத்து. மறப்பினும் - தலைவியைத் தலைவன் மறந்தொழுகி னும். அடங்கா ஒழுகத்து – அடங்காத புறத்தொழுக்கத்தை யுடைய. பிழைத்து - தவறு செய்து. நெருங்கி - சினந்துகூறி. இழைத்து - தலைமகள் இசைவுக்கு முயன்று. ஆங்கிக கொடுத்தற் கண்ணும் - அவளைக் கூடுதறகு வழியுண்டாக்கிக் கொடுக்கு மிடத்தும். வணங்கியல் மொழியான் - தாழும் இயல்பினை யுடைய சொற்களால். புறம்படு - புறம்பட்ட; ஊருக்குப் புறம்பே சென்று யாறுங்குளனுஞ் சோலையும் ஆடி நுகர்தலை யென்க. புகற்சியும் - மனமகிழ்ச்சி கொண்டவிடத்தும். புதல்வனை - புதல்வனாகிய வாயிலை. நேராது - தலைமகள் நேராமையால். புலம்பினும் - தலைமகன தனிமையுறினும். மாண் நலம் - தலைவியின சிறந்த அழகை. நாணிய - தலைவி நாணிய. சூள் நயத் திறத்தால் - நயமாகக் கூறும் சூள் மொழி யின் வகையினுல். சோர்வு - அதன் பொய்ம்மையை. கிளந்து - தோழி கூறி. பெறுதகை - தலைவியின் இணக்கத்தைப் பெறு

அருமைக் காலத்துப் பெருமை காட்டிய
எண்மைக் காலத்து இரக்கத் தானும்,
பாணர் கூத்தர் விறலியர் என்றிவர்
பேணிச் சொல்லிய குறைவினை எதிரும்,
நீத்த கிழவனை நிகழுமாறு படீஇயர்
காத்த தன்மையின் கண்இன்று பெயர்ப்பினும்,
பிரியுங் காலை எதிர்நின்று சாற்றிய
மரபுடை எதிரும் உளப்படப் பிறவும்
வகைபட வந்த கிளவி யெல்லாம்
தோழிக் குரிய என்மனார் புலவர். க

---

தற்குரிய தகைமை. பிழைப்பினும் இல்லா - இல்லாமைக்கு ஏதுவான தவறுடைமையாயின விடத்தும். கெடுத்தற் கண்ணும் - அப் புலவியைத் தீர்த்தறகண்ணும். உணர்ப்பு வயின் - தெளியு நிலைககண். உணர்த்தல் வேண்டிய - தெளி வித்தல் வேண்டிய. ஆக்கிய - நலமுண்டாக்கிய. அருமைக் காலதது - தாம் அரியராகிய களவுக் காலத்தில். பெருமை காட்டிய இரக்கத்தானும் என்க; அங்ஙனங் காட்டுதற்கு இரங்கும் இரககததானும் என்றபடி. எண்மைக் காலத்து என்றார், அங்ஙனம் இரங்குதல் தாம் எளியராகிய இக் கற்புக் காலத்தில் தோன்றுதலின். குறைவினை எதிரும் - குறையுறுஞ் செயலுக்கு எதிராகவும். நிகழுமாறு - இல்லறத்தில் ஒழுகும் வண்ணம். படீஇயர் - படிவித்தற்பொருட்டு. காத்த தன்மை யின - இதுகாறுங் காத்துவந்த தன்மையினால். கண் இன்று பெயர்ப்பினும் - கண்ணோட்டமினறி நீககுமிடத்தும். பிரியுங் காலை - தலைமகன தொலைவிடத்துககுப் பிரியும்பொழுது. 'மரபுடை எதிரும்' என்றார், கற்புக்கால மாதலின்; முறைமை யொடு பொருந்திய எதிர்மொழியும் என்றற்கு,

**காமக்கிழத்தியர் கூற்று**

1097. புல்லுதல் மயக்கும் புலவிக் கண்ணும்,
இல்லோர் செய்வினை இகழ்ச்சிக் கண்ணும்,
பல்வேறு புதல்வர்க் கண்டுநனி உவப்பினும்,
மறையின் வந்த மனையோள் செய்வினை
பொறையின்று பெருகிய பருவரற் கண்ணும்,
காதல் சோர்வில் கடப்பாட்டு ஆண்மையின்
தாய்போல் தழீஇக் கழறியம் மனைவியைக்
காய்வின்று அவன்வயின் பொருத்தற் கண்ணும்,
இன்நகைப் புதல்வனைத் தழீஇ இழைஅணிந்து
பின்னர் வந்த வாயிற் கண்ணும்,
மனையோள் ஒத்தலின் தன்னோ ரன்னோர்
மிகைபடக் குறித்த கொள்கைக் கண்ணும்,
எண்ணிய பண்ணையென்று இவற்றொடு பிறவும்
கண்ணிய காமக் கிழத்தியர் மேன. க0

1097. புல்லுதல் மயக்கும் - தன்னைப் புல்லுதலைத் தலைவன இடைவிட்டு நிகழச் செய்தலால் உண்டான. இல்லோர் செய்வினை - தலைவியும் தலைவனும் ஊடியும் உணர்த்தியுஞ் செய்யுஞ் செயலை. இகழ்ச்சிக்கண்ணும் - இகழ்தலிடத்தும். பொறையின்று - பொறுமையின்றி. பருவரற்கணணும் - துன்பத்திடத்தும். மனைவியை - இல்லக் கிழததியை. காய்வினறு - சினந்து வேறு படுத்தல இல்லையாம்படி. பினனர் வநத - கடைசியாக வந்த. மனையோள் ஒத்தலின - தான் மனையாளோடு ஒத்தலால். தனனோரனனோர் - தன் போல்வார். மிகைபடக குறித்த - தநதம்மை மிகைபடக் குறித்துக்கொண்ட. எண்ணிய பண்ணை - தனனோடு தலைவன் கருதிய விளையாட்டிடத்தும்; விளையாட்டென்றது, ஆறுங் குளனுஞ் சோலையும் விளையாடுதல். இவற்றொடு பிறவும் - இக்

### பிற வாயிலோர் கூற்று

1098. கற்பும் காமமும் நற்பால் ஒழுக்கமும்
மெல்லியற் பொறையும் நிறையும் வல்லிதின்
விருந்துபுறந் தருதலும் சுற்றம் ஓம்பலும்
பிறவும் அன்ன கிழவோள் மாண்புகள்
முகம்புகல் முறைமையின் கிழவோற்கு [உரைத்தல்
அகம்புகல் மரபின் வாயில்கட்கு உரிய. ௧௧

### செவிலி கூற்று

1099. கழிவினும் வரவினும் நிகழ்வினும் வழிகொள
நல்லவை உரைத்தலும் அல்லவை கடிதலும்
செவிலிக்கு உரிய வாகும் என்ப. ௧௨

### அறிவர் கூற்று

1100. சொல்லிய கிளவி அறிவர்க்கும் உரிய. ௧௩

---

கூற்றுக்களோடு பிற கூற்றுக்களும். கண்ணிய - உரிமையாகக் கருதப்பட்ட. காமக்கிழத்தியர் என்பவர், இல்லக்கிழத்திக்கு வேறாக விருப்பங் காரணமாக மணஞ்செய்து கொள்ளப்பட்டவர்கள்.

**1098.** காமமும் - அன்பும். நற்பால் ஒழுக்கமும் - நன்னடையும். நிறை - தீய துறையில் நெஞ்சஞ் செல்லவொட்டாது நிறுத்துந் திறமும். வல்லிதின - இடருறினும தானே விரும்பி இயைறவாறெல்லாம் மாண்புகளை உரைத்தல் வாயில்கட்கு உரிய எனபது. முகம் புகல் - தலைவன முகம் விரும்பும். அகம் புகல் மரபின - இல்லத்தினுட் புகுந்து பழகும் இயல்பினையுடைய.

**1099.** கழிவினும் வரவினும் நிகழ்வினும் என்றது, மூன்று காலத்தும் எனனும்பொருட்டு. வழிகொள - மரபின் முறைமைக்குப் பொருந்த.

**1100.** சொல்லிய கிளவி - செவிலிக்குச் சொல்லிய கிளவி.

1101. இடித்துவரை நிறுத்தலும் அவர தாகும்
கிழவனும் கிழத்தியும் அவர்வரை நிற்றலின்.

தலைமகன் ஊடல்

1102. உணர்ப்புவரை இறப்பினும் செய்குறி
[பிழைப்பினும்
புலத்தலும் ஊடலும் கிழவோற்கு உரிய. கரு

அந்நிலையில், தோழி கூற்று

1103. புலத்தலும் ஊடலும் ஆகிய இடத்தும்
சொலத்தகு கிளவி தோழிக்கு உரிய. கசு

1104. பரத்தை மறுத்தல் வேண்டியும், கிழத்தி
மடத்தகு கிழமை உடைமை யானும்
அன்பிலை கொடியை என்றலும் உரியள். கஎ

தலைமகள் ஊடல்

1105. அவன்குறிப் பறிதல் வேண்டியும், கிழவி
அகன்மலி ஊடல் அகற்சிக் கண்ணும்
வேற்றுமைக் கிளவி தோற்றவும் பெறுமே. க௮

---

1101. வரை - உரிய எல்லையில்.

1102. இறப்பினும் - கடப்பினும்.

1104. பரத்தை - பரத்தைமை; மறுத்தல் - நீக்குதல்; தலைவனுக்குப் பரத்தைமை நீக்குதல் என்க. மடத்தகுகிழமை- அறிந்தும் அறியாதாள்போன்றொழுகும் உரிமை. தலைவனை அன்பிலை கொடியை என்று தோழி கூறுதலும் உரியள் என்பது.

1105. கிழவி - தலைவி. அகன - உள்ளத்தில் அகற்சிக் கண்ணும் - நீங்குதலிடத்தும். வேற்றுமைக் கிளவி - அயலார் போன்ற நிலைமையைப் புலப்படுத்துஞ் சொல். தலைவி தன்னிடம் தோற்றவும் பெறும் என்றபடி.

### தலைவன் பணிமொழி

1106. காமக் கடப்பினுட் பணிந்த கிளவி
காணுங் காலைக் கிழவோற்கு உரித்தே;
வழிபடு கிழமை அவட்கிய லான. கக

### தலைவி அருள்மொழி

1107. அருள்முந் துறுத்த அன்புபொதி கிளவி
பொருள்பட மொழிதல் கிழவோட்கும்
[உரித்தே. உ0

## ச. அலர்

1108. களவும் கற்பும் அலர்வரைவு இன்றே. உக

### அதன் பயன்

1109. அலரின் தோன்றும் காமத்தின் சிறப்பே. உஉ
1110. கிழவோன் விளையாட் டாங்கும் அற்றே. உங

---

1106. காணுங்காலை - ஆராயுங் காலத்து. வழிபடு கிழமை - தலைமகனை வழி நிற்கும் உரிமை. அவட்கு இயல்பாதலால், தலைமகன் பணிமொழி கூறியேனும் அவளை அகப்படுத்திக் கொள்வன் என்க.

1107. பொதி - நிறைந்த. பொருள்பட - கருத்து வெளிப் படையாகத் தோன்ற.

1108. களவும் கற்பும் - களவிலும் கற்பிலும். அலர் வரைவு இன்று - அலர் நீக்கு நிலைமை இனறு; உண்டு என்றபடி.

1109. தோன்றும் - வெளிப்படும்.

1110. விளையாட்டாங்கும் - விளையாட்டு வகையினும். அற்று - காமம் அங்ஙனமே மாட்சிமைப்படும்.

## அந்நிலையில், வாயிலோர்

1111. மனைவி தலைத்தாட் கிழவோன் கொடுமை
தம்முள வாதல் வாயில்கட்கு இல்லை. ௨௪

1112. மனைவி முன்னர்க் கையறு கிளவி
மனைவிக்கு உறுதி உள்வழி யுண்டே. ௨௫

1113. முன்னிலைப் புறமொழி எல்லா வாயிற்கும்
பின்னிலைத் தோன்றும் என்மனார் புலவர். ௨௬

## கூத்தர் கூற்று

1114. தொல்லவை உரைத்தலும், நுகர்ச்சி ஏத்தலும்,
பல்லாற் றானும் ஊடலின் தணித்தலும்,
உறுதி காட்டலும், அறிவுமெய் நிறுத்தலும்,
ஏதுவின் உணர்த்தலும், துணிவு காட்டலும்,
அணிநிலை உரைத்தலும் கூத்தர் மேன. ௨௭

---

**1111.** தலைத்தாள் - புலத்தலாகிய முயற்சியிடத்து. கிழவோன் கொடுமை தம் உளவாதல் - கிழவோன் கொடுமையைத் தம்மிடத்தனபோலத் தாங்காராய் மிகுத்துப் பேசுதல்.

**1112.** கையறு கிளவி - செயலற்றார் போல இரங்கிக் கூறுதல். உறுதி - ஊடுதலில் உறுதி. உண்டு - வாயில்கட்கு உண்டு.

**1113.** முன்னிலைப் புறமொழி - முன்னின்றாரை நோக்கிப் பிறரைக் கூறுமாறுபோலக் கூறுஞ் சொல். பினனிலை - தம்மைப் பின்னின்று குறையிரக்குமிடத்து.

**1114** தொல்லவை - முன நிகழ்ந்தவை. நுகர்ச்சி ஏத்தலும் - நுகர்ந்த இனபத்தைப் புகழ்தலும். ஊடலின - ஊடலினின்று. உறுதி - பயன. அணிநிலை - அழகின சிறப்பியலபை. உரைத்தலும் - வருத்தத்தால் இழத்தலாகாதென்று உரைத்தலும். இவை தலைவிக்குக் கூறுவன.

1115. நிலம் பெயர்ந்து [1]உரைத்தல் [2]வரைநிலை [உரைத்தல்
கூத்தர்க்கும் பாணர்க்கும் யாத்தவை உரிய. ௨அ

இளையோர் கூற்று

1116. ஆற்றது பண்பும், கருமத்து விளைவும்,
ஏவல் முடிவும், வினவும், செப்பும்,
ஆற்றிடைக் கண்ட பொருளும், இறைச்சியும்,
தோற்றஞ் சான்ற அன்னவை பிறவும்
இளையோர்க் குரிய கிளவி என்ப. ௨௯

1117. உழைக்குறுந் தொழிலும் காப்பும் உயர்ந் [தோர்க்கு
நடக்கை எல்லாம் அவர்கட் படுமே. ௩0

---

1115. நிலம் பெயர்ந்து உரைத்தல் - தலைமகன் தங்கியிருக்கும் வேறுநாட்டுட் சென்று தலைவியின நிலையை உரைத்தல். வரைநிலை உரைத்தல் - தலைமகன் வருகின்ற காலத்தின எல்லைநிலையைத் தலைமகட்கு எடுத்துரைத்தல். யாத்தவை - உறுதியமைந்த கூற்றுககளாக.

1116. பொருள் - நிமித்தம் முதலிய பொருள்கள் என்பர் நச். தோற்றஞ் சான்ற-பேசுதற்கேற்ற தோற்றம் அமைந்த.

1117. உழை - அருகில். காப்பும் - மெய்காவலும். என உயர்ந்தோர்க்குச் செயயத் தக்க நடக்கையெல்லாம் என்பது. அவர்கட் படும் - இளையோர்க்கு உரிய தொழிலாகும்.

---

(பா - வே.) 1. உறைதல். 2. அவன் நிலை.

### தலைவன் கலங்கல்

1118. பின்முறை ஆக்கிய பெரும்பொருள் வதுவைத்
தொன்முறை மனைவி எதிர்ப்பா டாயினும்,
மின்னிழைப் புதல்வனை வாயில்கொண்டு
[புகினும்
இறந்தது நினைஇக் கிழவோன் ஆங்கட்
கலங்கலும் உரியன் என்மனார் புலவர். கூக

### தலைவி தழீஇக்கோடல்

1119. தாய்போற் கழறித் தழீஇக் கோடல்
ஆய்மனைக் கிழத்திக்கும் உரித்தென மொழிப
கவவொடு மயங்கிய காலை யான. கூஉ

---

1118. பின்முறை - முதன் மனைவிக்குப் பின்முறையாக. ஆக்கிய - உண்டாக்கிக் கொள்ளப்பட்ட. பெரும் பொருளென்றது, தலைமகன் கருதிய வதுவையை என்க. தொன்முறை மனைவி - முன மனைவி. எதிர்ப்பாடு ஆயினும் - எதிரேற்றுக் கொள்ளுஞ் சிறப்பைக் காணினும். இறந்தது நினைஇ - தான் அத்தகைய நற்குணமுடையவளான முன் மனைவியைக் கடந்து மற்றொரு மணஞ் செய்துகொண்ட சிறப்பில்லா நிலையினை நினைந்து.

1119. முன் நூற்பாவினுள் தலைவன் கலக்கங் கண்ட தலைவி, அவனைத் தாய்போல் இடித்துரைத்து இணங்கொழுகல் உரித்தென மொழிப என்றபடி. ஆய் - மெல்லியல்பினளான; உம்மை பின் முறையாய் வந்த மனைக்கிழத்திக்கும் உரித்தென்றபடி. கவவொடு மயங்கிய - முயக்கமின்மையால் வருந்திய.

1120. அவன்சோர்பு காத்தல் கடனெனப் படுதலின்
மகன்தாய் உயர்பும் தன்னுயர் பாகும்
செல்வன் பணிமொழி இயல்பாக லான. ௩௩

## ரு. பிரிவு

### பகைவயிற் பிரிவு

1121. எண்ணரும் பாசறைப் பெண்ணொடு புணரார்.

1122. புறத்தோ ராங்கட் புரைவ தென்ப. ௩௫

### அந்நிலையிற், பார்ப்பார் கூற்று

1123. காமநிலை உரைத்தலும், தேர்நிலை உரைத்தலும்
கிழவோன் குறிப்பினை எடுத்தனர் மொழிதலும்,
ஆவொடு பட்ட நிமித்தங் கூறலும்,
செலவுறு கிளவியும், செலவழுங்கு கிளவியும்,
அன்னவை பிறவும் பார்ப்பார்க்கு உரிய. ௩௬

---

1120. அவன் - தலைவன். கடன் - இல்லற மகளிர்க்குக் கடன். மகன் தாய் - முன்முறை பின்முறை மனைவியருள் பிள்ளைப்பேறுடைய தாயாகியவளது. தன் - பிள்ளைப்பேறில்லாத ஏனை மனைவியாகிய தனது. செல்வன் - தலைவனது. இயல்பாகலான் - அவன் பணிமொழிவழி நிற்றல் மனைவியராகிய தமக்கு இயல்பாகலானும் என்பது.

1121. எண்ணரும் பாசறை - நினைத்தற்கும் இராப் பகற் கடுமுயறசியுடையதான பாசறைக்கண். பெண்ணொடு புணரார் - தலைமக்கள் பெண்ணொடு செல்லார்.

1122. புறத்தோராங்கண் - தலைமக்களல்லாத ஏனை அடியோர் வினைவலரிடத்து. புரைவது - அந்நிலை ஒக்கும்.

1123. காமநிலை உரைப்பினும் - பிரிவின்கண் தலைவியின் காம நிலையைத் தலைவற்கு உரைத்தலும். தேர்நிலை - அதி

### வாயிலோர்

1124. எல்லா வாயிலும் இருவர் தேஎத்தும்
புல்லிய மகிழ்ச்சிப் பொருள என்ப. ௩௭

1125. அன்பு தலைப்பிரிந்த கிளவி தோன்றின்
சிறைப்புறங் குறித்தன்று என்மனார் புலவர்.

### தலைவி

1126. தற்புகழ் கிளவி கிழவன்முற் கிளத்தல்
எத்திறத் தானும் கிழத்திக் கில்லை
முற்பட வகுத்த இரண்டலங் கடையே. ௩௯

### தலைவன்

1127. கிழவி முன்னர்த் தற்புகழ் கிளவி
கிழவோன் வினைவயின் உரிய என்ப. ௪௦

---

விருந்து அவன் தேருதற்குரிய நிலையினை. எடுத்தனர் - அவ்வப் போதும் அறிந்தெடுத்து. செலவுறு - செல்லுதற்கேற்ற. செலவழுங்கு - செலவழுங்குதற் கேற்ற.

1124. இருவர் தேஎத்தும் - தலைவன் தலைவியாகிய இருவரிடத்தும். மகிழ்ச்சிப் பொருள - மகிழ்ச்சிக் கருத்துகள் நிகழ்த்துதலைத் தமக்குப் பொருளாக உடையன.

1125. தோன்றின் - வாயில்களிடத்துத் தோன்றின். சிறைப்புறங் குறித்தன்று - ஒருவர்க்கொருவர் சிறைப்புறமாக இருக்கக் குறித்தற்குரியது.

1126. இரண்டு அலங்கடையே - இரண்டு அல்லாத விடத்து. இரண்டென்றது, தொல். அகத். 41-ல் கூறிய இரத்தலும் தெளித்தலும்.

1127. வினைவயின் - வினைவயிற் பிரிவின்கண்.

**பாங்கன்**

1128. மொழியெதிர் மொழிதல் பாங்கற்கு உரித்தே.

1129. குறித்தெதிர் மொழிதல் அஃகித் தோன்றும்.

**வன்புறை**

1130. துன்புறு பொழுதினு மெல்லாம் கிழவன்
வன்புறுத் தல்லது சேறல் இல்லை. ௪௩

**செலவழுங்கல்**

1131. செலவிடை அழுங்கல் செல்லாமை யன்றே
வன்புறை குறித்தல் தவிர்ச்சி யாகும். ௪௪

**பாசறைப் புலம்பல்**

1132. கிழவி நிலையே வினையிடத் துரையார்;
வென்றிக் காலத்து விளங்கித் தோன்றும். ௪௫

---

*1128.* **மொழி எதிர் - தலைமகன் கூறும் மொழிக்கு எதிராக.**

*1129.* **அஃகித் தோன்றும் - அங்ஙனம் எதிர்மொழிதல் அருகித்தோன்றும் என்றபடி.**

*1130.* **துன்புறு பொழுதினுமெல்லாம் என்றமையின், தலைவி துன்புறுதபொழுதினுமெல்லாம் என்பதும் பெறப்பட்டது. வன்புறுத்து - வற்புறுத்து. சேறல் - பிரிந்து செல்லுதல்.**

*1131.* **வன்புறை குறித்தல் - தலைவியை வற்புறுத்துதல் கருதலாகிய.**

*1132.* **வினையிடத்து - தலைவன் வினைக்கண் முனைந்து நிற்குமிடத்து. உரையார் - எவருங் கூறார். வினையின் வெற்றிக் காலத்துத் தலைவியின்நிலை தானே அவனுக்குச் சிறந்து தோன்றும் என்றபடி.**

**பரத்தையிற் பிரிவு**

1133. பூப்பின் புறப்பாடு ஈராறு நாளும்
நீத்தகன்று உறையார் என்மனார் புலவர்;
பரத்தையிற் பிரிந்த காலை யான. ௪௬

**ஓதற் பிரிவு**

1134. வேண்டிய கல்வி யாண்டுமூன்று இறவாது. ௪௭

**காவற் பிரிவு**

1135. வேந்துறு தொழிலே யாண்டின தகமே. ௪௮

**பொருள்வயிற் பிரிவு**

1136. ஏனைப் பிரிவும் அவ்வயின் நிலையும். ௪௯

**விளையாடற் பிரிவு**

1137. யாறும் குளனும் காவும் ஆடிப்
பதியிகந்து நுகர்தலும் உரிய என்ப. ௫௦

## ௬. தவம்

**தலைவனுந் தலைவியும் ஒருங்கு தவம் பயிலல்**

1138. காமஞ் சான்ற கடைக்கோட் காலை
ஏமஞ் சான்ற மக்களொடு துவன்றி

---

*1133.* பரத்தையிற் பிரிந்த என்றமையால், ஏனைப் பிரிவின்கண் அகன்றுறைதலும் நேரும் என்றபடி.

*1134.* கல்வி - ஓதற் பிரிவு. இறவாது - கடவாது.

*1135.* வேந்துறு தொழில் - பகைவயிற் பிரிவுபோல்வன. யாண்டினது அகம் - ஓர் யாண்டிற்குட்பட்டகால வெல்லையினையுடையது.

*1136.* அவ்வயின் - அந்தக் கால வெல்லையில்; ஓர் யாண்டினுள்.

*1137.* பதியிகந்து - நகரைக் கடந்துபோய். உரிய - தலைவன், தலைவியர்க்கு உரியன.

அறம்புரி சுற்றமொடு கிழவனும் கிழத்தியும்
சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே. ௬௧

**வாயில்களும் அவருடன் தவம் பயிலல்**

1139. தோழி, தாயே, பார்ப்பான், பாங்கன்,
பாணன், பாடினி, இளையர், விருந்தினர்,
கூத்தர், விறலியர், அறிவர், கண்டோர்,
யாத்த சிறப்பின் வாயில்கள் என்ப. ௬௨

**இதனால், வினைவயிற் செல்லுந் தலைமகன் இடைவழியில் தவிராமை**

1140. வினைவயின் பிரிந்தோன் மீண்டுவரு காலை
இடைச்சுர மருங்கில் தவிர்த லில்லை;
உள்ளம் போல உற்றுழி உதவும்
புள்ளியற் கலிமா உடைமை யான. ௬௩

---

*1138.* சான்ற - அமைந்த. கடைக்கோட் காலை - காமம் நிறைவடைந்ததாக உட்கொண்ட முடிவெல்லையில். ஏமம் - தமக்குக் காவலாக. துவன்றி - செறிந்திருந்து. சிறந்தது - தவத்தை. இறந்ததன் - கடந்துபோன மனைவாழ்க்கையின்.

*1139.* விறலியர் - ஆடல்பாடல் நிகழ்த்தும் ஓரினத்துப் பெண்டிர். அறிவர் - சான்றோர். யாதத - உள்ளம் பிணித்த.

*1140.* தவிர்தல் - நிற்றல். உள்ளம் போல உற்றுழி - மனம்போல உற்றவிடத்தில். புள் இயல் - பறவைகளைப்போல் கால் நிலம் பாவாது பறந்து செல்லும் விசையியல்பினையுடைய. கலி மா - மனவெழுச்சி மிக்க குதிரையை. உடைமையான் - தலைமகன் உடையனுயவிடத்து என்க.

# ௫. பொருளியல்

[எஞ்சிய பொருளிலக்கணங்களின் பகுதிகளை உணர்த்துவது.]

## ௧. பொருளின் இயைபு

**தொடர்களிற் பொருளிலக்கணம் இயையுமாறு**

1141. இசைதிரிந் திசைப்பினும் இயையுமன் [பொருளே
அசைதிரிந் தியலா என்மனார் புலவர். ௧

## ௨. ஒருபாற் கூற்று

**தலைவன் தலைவியர்க்குரிய ஒருபாற் கூற்று**

1142. நோயும் இன்பமும் இருவகை நிலையிற்
காமங் கண்ணிய மரபிடை தெரிய,
எட்டன் பகுதியும் விளங்க, ஒட்டிய
உறுப்புடை யதுபோல் உணர்வுடை யதுபோல்
மறுத்துரைப் பதுபோல் நெஞ்சொடு புணர்த்தும்

---

**1141.** இசை - சொற்கள். இயையும் பொருள் - கருத்து இயைந்து வரும். அசை - அசைச் சொற்கள்.

**1142.** நோய் - துன்பம். நோயும் இன்பமுமாகிய இரு வகை நிலை யென்க. கண்ணிய - கருதிய. மரபு - இயல்பு. இடை தெரிய - இடையீடுபட்டுத் தோன்ற. எட்டன் பகுதி யென்றது, நகை முதலிய எண்வகை மெய்ப்பாடுகள். நெஞ்சு, உறுப்புடையது போலவும் உணர்வுடையதுபோலவும் மறுத்துரைப்பது போலவும் என்பது. மறுத்துரைப்பது போல - எதிர்விடை கூறுவதுபோல். புணர்த்தும் - கருதிச் சொல்லியும். மரபினவற்றொடு - இயல்புடையவற்றொடு; அவை புன்

சொல்லா மரபி னவற்றொடு கெழீஇச்
செய்யா மரபின் தொழிற்படுத் தடக்கியும்,
அவரவர் உறுபிணி தமபோற் சேர்த்தியும்,
அறிவும் புலனும் வேறுபட நிறீஇ
இருபெயர் மூன்றும் உரிய வாக
உவம வாயிற் படுத்தலும் உவமம்
ஒன்றிடத்து இருவர்க்கும் உரியபாற் கிளவி. உ

**அதன்கண், கனவு**

1143. கனவும் உரித்தால் அவ்விடத் தான. ௩

**அது தாய்க்கும் உரியது**

1144. தாய்க்கும் உரித்தாற் போக்குடன் கிளப்பின்.

**தோழி முதலியோர்க்குரிய ஒருபாற் கூற்று**

1145. பால்கெழு கிளவி நால்வர்க்கும் உரித்தே. ௫

1146. நட்பின் நடக்கை ஆங்கலங் கடையே. ௬

---

ளும் விலங்கும் முதலியன. கெழீஇ - இயைந்து. இருபெயர் என்றது, உவமைப் பெயரும் உவமிக்கும் பெயரும் எனவும்; மூன்றும் என்றது, அவ்வுவமைக்குரிய தொழிலும் பண்பும் பயனும் எனவுங் கூறுவர் இளம். உவமம் ஒன்றிடத்து உவம வாயிற படுததலும் என்றபடி. இருவர்க்கும் - தலைவி தலைவன் இருவர்க்கும். பாறகிளவி - ஒரு கூறறுக கிளவி - தனிக்கிளவி.

**1144.** தாய்க்கும் கனவு உரித்து என்பது. போக்குடன் - உடனபோககு.

**1145.** பால் கெழு கிளவி - ஒரு கூற்றுக் கிளவி; தனி மொழி நால்வரென்றது, தலைவன் தலைவியரல்லாத தோழியும் செவிலியும் நற்றாயும் பாங்கனும் எனபர் நச்.

**1146.** நட்பின் நடக்கை-நட்பின விளையாட்டொழுக்கம்.

**அதன்கண், தோழி முதலியோர்க்குரிய பண்புகள்**

1147. உயிரும் நாணும் மடனும் என்றிவை
செயிர்தீர் சிறப்பின் நால்வர்க்கு முரிய. எ

**அதன்கண், தலைவியின் இயல்பு**

1148. வண்ணம் பசந்து புலம்புறு காலை
உணர்ந்த போல உறுப்பினைக் கிழவி
புணர்ந்த வகையிற் புணர்க்கவும் பெறுமே. அ

1149. உடம்பும் உயிரும் வாடியக் காலும்
என்னுற் றனகொல் இவையெனி னல்லது
கிழவோற் சேர்தல் கிழத்திக் கில்லை. கூ

1150. ஒருசிறை நெஞ்சமொடு உசாவுங் காலை
உரிய தாகலும் உண்டென மொழிப. க0

1151. தன்வயின் கரத்தலும், அவன்வயின் வேட்ட
அன்ன இடங்கள் அல்வழி யெல்லாம் [லும்
மடனொடு நிற்றல் கடனென மொழிப. கக

---

*1147.* உயிரும் - உயிர்போன் றொழுகும் நேயமும். செயிர்தீர் சிறப்பின - குற்றந் தீர்ந்த தலைமையினையுடைய. நால்வர்க்கும் - முன் நூற்பாவிற் கூறிய நால்வர்க்கும்.

*1148.* வண்ணம் - நிறம். புலம்பு - தனிமை. உறுப்பினை - தன் உடம்பின உறுப்புக்களை. புணர்ந்த வகையின - பொருந்திய சொல்வகையினால். புணர்க்கவும் பெறும் - பொருந்திப் பேசவும் பெறுவள்.

*1150.* ஒரு சிறை - தனியே ஒரு பக்கத்தில் நின்று. உரியதாகலும் - தலைவனைச் சேரும் வேட்கையை வெளிப்படுத்திக் கொள்ளுதலும். உணடென - தலைவிகு உண்டென.

*1151.* தன்வயின் கரத்தலும் - தலைமகன் தனது போற்று வொழுக்கத்தைத் தன்னிடம் மறைத்துக் கொள்ளுதலும்.

## ௩. அறத்தொடு நிற்கு நிலை

**ஏனைக் காலங்களில் தோழியின் முறைமை**

1152. அறத்தொடு நிற்குங் காலத் தன்றி,
அறத்தியல் மரபிலள் தோழி என்ப. ௧௨

**அறத்தொடு நிற்றற்குரிய கருத்துக்களின் வகை**

1153. எளித்தல், ஏத்தல், வேட்கை யுரைத்தல்,
கூறுத லுசாஅதல், ஏதீடு, தலைப்பாடு,
உண்மை செப்புங் கிளவியொடு தொகைஇ
அவ்வெழு வகைய என்மனார் புலவர். ௧௩

---

அவன் வயின் வேட்டலும் - அந்தக் காலத்தில் அவனிடம் தலைமகள் வேட்கை கொள்ளுதலுமாகிய. அல்வழியெல்லாம் - அல்லாத விடத்தெல்லாம், மடனொடு நிற்றல - தலைவி வேட்கை புறம்படாது நிற்றல்.

**1152.** காலத்தன்றி - காலம் நேர்ந்தாலல்லது. அறத்தியல் மரபு இலள் என்றது, தலைவியின் களவொழுக்க நிகழ்ச்சியைச் செவிலிக்குத் தோழி நிகழ்ந்தவாறே பொதுவாகக் கூறி அறிவிப்பள் என்பது. அறத்தொடு நிற்க நேர்தலாவது, செவிலி மேலுமேலும் ஐயுற்று ஆராய்தல் மேற்கொண்ட காலத்து என்றபடி.

**1153.** எளித்தல் - தலைவனை எளியனாகக் கூறுதல். கூறுதலுசாதல் - கூறும் முறைமையிலேயே வினவியும் பேசுதல். ஏதீடு - காரணமிட்டுக் கூறுதல். தலைப்பாடு - தலைவியுந் தலைவனுந் தாமே தலைப்பட்டனரென்று கூறுதல். உண்மை செப்புங் கிளவியோடு இப் படைத்துமொழி கிளவிகளும் தொகைஇ என்க. எழு வகைய - அறத்தொடு நிற்றற்குரிய ஏழு வகையின.

**தலைவியின் நிலையால் உற்றது உணர்தல்**

1154. உற்றுழி யல்லது சொல்லல் இன்மையின்
அப்பொருள் வேட்கைக் கிளவியின் உணர்ப.

**உயரிய பெண்பால் இயல்புகள்**

1155. செறிவும் நிறைவும் செம்மையும் செப்பும்
அறிவும் அருமையும் பெண்பா லான. கஒ

## ச. வரைவு கடாதல்

**அதன் முறைமை**

1156. பொழுதும் ஆறும் காப்பும்என்று இவற்றின்
வழுவி னாகிய குற்றம் காட்டலும்,
தன்னை அழிதலும், அவண் ஊறு அஞ்சலும்,
இரவினும் பகலினும் நீவா என்றலும்,
கிழவோன் தன்னை வாரல் என்றலும்,

---

**1154.** உற்றுழியல்லது - வாய்ப்பு நேர்ந்தவிடத்தல்லது. சொல்லல் இன்மையின் - தோழி சொல்லுதலில்லாமையால். அப்பொருள் வேட்கை - அக் கருத்துடைய வேட்கையை. கிழவியின் - தலைவியின் நிலை கொண்டே. உணர்ப - செவிலி முதலியோர் உணர்வர்.

**1155.** செறிவும் - அடக்கமும். நிறைவும் - மனவமைதியும். செம்மையும் - நேர்மையும். செப்பும் - தகுவன கூறலும். அருமையும் - அருமைப்பாடும். பெண்பாலான - பெண்மக்களிடத்தன.

**1156.** ஆறும் - வழியும். காப்பும் - காவலும். வழுவின் ஆகிய - வழுவுதலாலாகிய. காட்டலும் - தலைவனுக்குத் தோழி எடுத்துக் கூறுதலும். தன்னை அழிதலும் - தனனை வருத்திக் கொண்டு பேசுதலும், வர - குறியிடத்து வருக. வாரல் -

நன்மையும் தீமையும் பிறிதினைக் கூறலும்,
புரைபட வந்த அன்னவை பிறவும்
வரைதல் வேட்கைப் பொருள என்ப. ௧௬

1157. வேட்கை மறுத்துக் கிளந்தாங்கு உரைத்தல்
மரீஇய மருங்கின் உரித்தென மொழிப. ௧௭

**அந்நிலையில், தலைவன் தலைவியரின் ஊர்திகள்**

1158. தேரும் யானையும் குதிரையும் பிறவும்
ஊர்ந்தனர் இயங்கலும் உரியர் என்ப. ௧௮

**பேசுவதோர் வகை**

1159. உண்டற் குரிய அல்லாப் பொருளை
உண்டன போலக் கூறலும் மரபே. ௧௯

---

வரவேண்டாம். நன்மையும் தீமையுமாகப் பிறிதொரு பொருண் மேல் வைத்துக் கூறுதலும் எனக. புரைபட - வழுப்பட; பிழை பொருந்த. வரைதல் வேட்கைப் பொருள - வரைதல் வேட்கைக் கருத்துடையன; கூட்ட விருப்பமில்லாமையாற் கூறப்பட்டன அலல என றபடி.

**1157.** வேட்கை மறுத்து - வரைதல் வேட்கையாகிய பயனை மாற்றி. கிளந்தாங்கு உரைத்தல் - முன நூற்பாவிற் கூறிய கூற்றுககளை அவற்றின கருத்தே தோன்றச் சொல்லுதல். மரீஇய மருங்கின் - அககைந்திணையின் வழீஇய பக்கமாகிய கைககிளை பெருந்திணைக்கண்.

**1158.** ஊர்ந்தனர் - ஊர்ந்து.

**1159.** பசலையால் உணப்பட்டு என்றுற்போல்வன இந் நூற்பாவின் கருத்து.

### பொருள் வேண்டுதல்

1160. பொருளென மொழிதலும் வரைநிலை யின்றே
காப்புக்கைம் மிகுதல் உண்மை யான. ௨௦

### அந்நிலையிற், கருதக்கூடாதன

1161. அன்பே அறனே இன்பம் நாணொடு
துறந்த ஒழுக்கம் பழித்தன் றாகலின்
ஒன்றும் வேண்டா காப்பி னுள்ளே. ௨௧

### கருதக் கூடியது

1162. சுரமென மொழிதலும் வரைநிலை யின்றே. ௨௨

## ௫. அகப்பொருட் புலனெறி வழக்குகள்

### உலக வழக்கைத் தழுவுதல்

1163. உயர்ந்தோர் கிளவியும் வழக்கொடு புணர்தலின்
வழக்குவழிப் படுத்தல் செய்யுட்குக் கடனே.

---

*1160.* பொருளென - பொருள் வேண்டுமெனத் தோழி தலைவனுக்குக் கூறுதலும். வரைநிலை யின்று - நீக்குநிலைமை யின்று. காப்புக் கைம்மிகுதல் - தலைவிக்குக் காவலால் வருத்தம் நிலைக்குமேல் மிகுந்து போதல். உண்மையான் - உண்டானவிடத்து.

*1161.* துறந்த ஒழுக்கம் - நீங்கிக் காரியத்தை முடிக்கும் ஒழுக்கம். வேண்டா - தோழிககு வேண்டா.

*1162.* சுரம் என மொழிதலும் - பொருள் தேடுதற்குப் போகும் நெறி கடுமையான பாலைவனம் என்று தலைவனுக்குத் தோழி கூறி விலக்குதலும்.

*1163.* வழக்கு - உலகவழக்கினை.

### அது முதன்மைகொள்ளும் வகை

1164. அறக்கழி வுடையன பொருட்பயம் படவரின்
வழக்கென வழங்கலும் பழித்தன் றென்ப. ௨௪

### அதனைப் பழுதுபடாமற் காக்கும் வகை

1165. மிக்க பொருளினுட் பொருள்வகை புணர்க்க
நாணுத்தலைப் பிரியா நல்வழிப் படுத்தே. ௨௫

### உரிமையோடு கூறுஞ் சொல்

1166. முறைப்பெயர் மருங்கின் கெழுதகைப்
[பொதுச்சொல்
நிலைக்குரி மரபின் இருவீற்றும் உரித்தே. ௨௬

### உரிமையால் தோன்றும் ஒருமை

1167. தாயத்தின் அடையா, ஈயச் செல்லா,
வினைவயின் தங்கா, வீற்றுக் கொளப்படா

---

1164. அறககழிவு உடையன - அற முறைமையின் நீங்குதலுடையன.

1165. மிகக பொருளினுள் - அங்ஙனங் கடந்த பொருளினுள். தலைப் பிரியா - கெடாத. பொருள் வகை புணர்க்க - ஏற்ற கருத்து வகைகளைச் சேர்த்துக் கூறுக.

1166. கெழுதகைப பொதுச்சொல் - அன்புரிமையோடு கூறும் பொதுவகை மொழி; 'எல்லா' என்பதுபோன்ற சொல். நிலைக்கு உரிய மரபின் - நிலைத்து வழங்குதற்குரிய இயல்பினால். இரு ஈற்றும் - ஆண்பால் பெண்பால் எனனும் இருபாறகும்.

1167. தாயத்தின் - தந்தையின் சொததாகக் கருதி. அடையா - உடன் பிறந்தாரால் எயத இயலாத. வினைவயின்- தொழில் முறைமையினால். வீற்று - வேறுபாடுடைய பகைவரால். எம் என - எம்முடையது எனத் தோழி கருதும்படி. ஒருமைத் தோற்றம் - உரிமையோடு கூடிய தலைவியின் உறுப்

எம்மென வரூஉம் கிழமைத் தோற்றம்
அல்லா வாயினும் புல்லுவ உளவே. ௨௭

**அகப்பொருட் கிளவிகளின் ஒருமை பன்மை**

1168. ஒருபாற் கிளவி எனைப்பாற் கண்ணும்,
வருவகை தானே வழக்கென மொழிப. ௨௮

**இயல்பாய் நெஞ்சமர்ந்து வரும் இன்பம்**

1169. எல்லா உயிர்க்கும் இன்பம் என்பது
தான் அமர்ந்து வரூஉம் மேவற் றாகும். ௨௯

**உலகியல் வழுவாகிய பரத்தைமை**

1170. பரத்தை வாயில் நால்வர்க்கும் உரித்தே
நிலத்திரி பின்றஃ தென்மனார் புலவர். ௩0

---

பழகுத் தோற்றங்கள். அல்லாவாயினும் - உண்மையில் தோழியினுடைய அல்லவாயினும். புலலுவ - அங்ஙனம் சொல்லுதறகுப் பொருந்தும் வழக்குகள். தலைவியின அழகு அவட்கே உரிமையுடையதாக இந்நூறபாவின முதலிரணடு வரிகளாற கூறப்பட்டது. அடையா, செல்லா, தங்கா, கொளப் படாத் தோறறம எனக.

*1168* ஒருபாற கிளவி - தலைவன் தலைவி என்னும் ஒருமைக் கிளவி. எனைப்பாற கணணும் - எனைப் பன்மைக் கிளவியாகவும்.

*1169.* தான் அமர்ந்து வரூஉம் மேவற்றாகும் - தான் நெஞ்சமர்ந்து வரும் விருப்பமுடைமையாகும்.

*1170.* பரத்தை வாயில் என்றது, புறத்தொழுக்குப் போக்கு என்றறகு. நால்வர்ககும் - நிலமக்கள், தலைமககள் அடியோர், வினைவலராகிய நாலவகையார்க்கும் அஃது - அவ் வாயில். நிலத் திரிபின்று - அவ்வ நிலத்தின்கண்ணேயே நிகழும் என்றபடி.

## ௬. தலைவியைப் பற்றிய சில குறிப்புக்கள்

### உடன்போக்கும் வரைவும்

1171. ஒருதலை உரிமை வேண்டியும், மகடூஉப்
பிரிதல் அச்சம் உண்மை யானும்,
அம்பலும் அலரும் களவுவெளிப் படுக்கும்
அஞ்ச வந்த ஆங்கிரு வகையினும், [என்று
நோக்கொடு வந்த இடையூறு பொருளினும்,
போக்கும் வரைவும் மனைவிக்கண் தோன்றும்.

### இரக்க உணர்வு

1172. வருத்த மிகுதி சுட்டுங் காலை
உரித்தென மொழிப வாழ்க்கையுள் இரக்கம்.

### உயர்வு

1173. மனைவி உயர்வும் கிழவோன் பணிவும்
நினையுங் காலைப் புலவியுள் உரிய. ௫௫

---

1171 ஒருதலை - உறுதியாக. உரிமை - இல்லறவுரிமை. மகடூஉப் பிரிதல் அச்சம் - பெண்களுக்கு இயற்கையே நிகழ்கின்ற ஆண்மக்கள் பிரிவரெனனும் அச்சமுடைமை. நோக்கொடு - தனது மாறுண்ட பார்வை இயற்கையினால். இடையூறு பொருளினும் - இடையூறாகிய காரணத்தினும். போக்கும் - உடன் போக்கேனும். வரைவும - வரைதல் முயற்சியேனும். மனைவிக்கண் - தலைவியினிடத்து.

1172. சுட்டுங்காலை - குறித்துப் பேசுமிடத்து. வாழ்க்கையுள் இரக்கவுணர்வாகிய பயன் உரியதாகும் என்பது.

1174. நிகழ்தகை மருங்கின் வேட்கை மிகுதியிற்
புகழ்தகை வரையார் கற்பி னுள்ளே. ௩௪

### இறைச்சியின் இயல்பு

1175. இறைச்சி தானே பொருட்புறத் ததுவே. ௩௫

### அதன் உட்பொருள்

1176. இறைச்சியிற் பிறக்கும் பொருளுமா ருளவே
திறத்தியல் மருங்கின் தெரியு மோர்க்கே. ௩௬

### அதனால் வன்புறை

1177. அன்புறு தகுந இறைச்சியுட் சுட்டலும்
வன்புறை யாகும் வருந்திய பொழுதே. ௩௭

---

1174. தகை மருங்கின் - தன்மை பாராட்டுமிடத்து; நலம் பாராட்டுமிடத்து என்க. மிகுதியின் - மிகுதியால். புகழ்தகை வரையார் - தம்முள் ஒருவரை யொருவர் புகழுந் தன்மையை நீக்கார்.

1175. இறைச்சி-கருப்பொருள்களின் இயைபு பொருட்புறத்தது - கூறவேண்டிய கருத்துக்கு வேறாய் அடைமொழி வடிவில் வந்து தங்கிப் பயனபடுவது.

1176. பொருளும் உள - வேறு உட்கருத்துக்களும் உள்ளன. திறத்தியல் மருங்கின் தெரியுமோர்க்கு - அதன் கூறுபாட்டியல்பினை அதன வகையில் ஆராய்ந்துணர வல்லார்க்கு.

1177. அன்புறு தகுந - அன்பு கொள்ளத் தக்க கருத்துக்களை. இறைச்சியுட் சுட்டலும் - கருப்பொருள்களின உட்கருதது வகையாற் குறித்தலும். வருந்தியபொழுது - பிரிவாற்றாது வருந்திய காலத்து. வன்புறையாகும் - அது வற்புறுத்தலாய் முடியும்.

### நலம் பாராட்டுதலால் அச்சம்

1178. செய்பொருள் அச்சமும், வினைவயின் பிரிவும்
மெய்பெற உணர்த்தும் கிழவிபா ராட்டே. ௩௮

### உள்ளத்து ஊடல்

1179. கற்புவழிப் பட்டவள் பரத்தை ஏத்தினும்
உள்ளத் தூடல் உண்டென மொழிப. ௩௯

### தலைவனது குறிப்புணர்தல்

1180. கிழவோள், பிறள்குணம் இவையெனக் கூறிக்
கிழவோன் குறிப்பினை உணர்தற்கும் உரியள்.

### தலைவனைக் கழறுதற்கு வாய்ப்பு

1081. தம்முறு விழுமம் பரத்தையர் கூறினும்
மெய்ம்மை யாக அவர்வயின் உணர்ந்தும்
தலைத்தாட் கழறுஅறம் எதிர்ப்பொழு தின்றே
மலிதலும் ஊடலும் அவையலங் கடையே. ௪௧

---

1178. செய்பொருள் அச்சமும் - பொருள்செய்தற்கண் தலைவி ஓர் இடையூறுவளோ எனத் தலைமகனுக்கு ஓர் அச்சத்தையும். வினைவயின் பிரிவும் - தலைவன் வினைவயிற பிரிவனோ எனத தலைமகட்கு ஓர் அச்சத்தையும் மெயபெற - உறுதியாக. கிழவி பாராட்டு - தலைவியைத் தலைமகன பாராட்டுதல். பாராட்டுதல் இவ் வசசங்களை உணர்ததும் என்பது.

1179. பரத்தை - பரத்தையை.

1180. குறிப்பினை - அப் பிறள்மாட்டுக் கிழவோன் கொள்ளுங் குறிப்பினை.

1181. அவர்வயின உணர்ந்தும் - அப் பரத்தையரிடத்து அதனை உணர்ந்தும். தலைத்தாள் - தலைமையான முயறசியோடே. கழறு அறம் - தலைவனைக்கழறுதலாகிய முறைமை. கழறுதல் - கடிந்து கூறுதல். தலைவிடாகிய தனனை தலைவன் எதிர்ப்பட்ட பொழுதிலேயே இல்லை என்க. மலிதலும் - மகிழ்தலும்.

### தலைவியின் மருட்கை

1182. பொழுதுதலை வைத்த கையறு காலை
இறந்த போலக் கிளக்கும் கிளவி
மடனே வருத்தம் மருட்கை மிகுதியொடு
அவைநாற் பொருட்கண் நிகழும் என்ப. ௪௨

## ௭. தோழியைப் பற்றிய சில குறிப்புக்கள்

### படைத்து மொழியுங் கிளவிகள்

1183. இரந்து குறையுற்ற கிழவனைத் தோழி
நிரம்ப நீக்கி நிறுத்த லன்றியும்,
வாய்மை கூறலும், பொய்தலைப் பெய்தலும்,
நல்வகை யுடைய நயத்திற் கூறியும்,
பல்வகை யானும் படைக்கவும் பெறுமே. ௪௩

### எதிருரை

1184. உயர்மொழிக் குரிய உறழுங் கிளவி;
ஐயக் கிளவி ஆடூஉவிற் குரித்தே. ௪௪

---

**1182. பொழுது தலைவைத்த - தலைமகன் வருகின்ற பொழுதின்மேற் கருத்து வைத்த. இறந்தபோல - அக்காலம் வாராமுன்னரே வந்ததுபோல. மிகுதியொடு - ஆற்றாமை மிகுதியொடு. நிகழும் - தலைவிக்கு நிகழும்.**

**1188. தலைப் பெய்தலும் - பெய்துரைத்தலும். படைக்கவும் - படைத்து மொழியவும்.**

**1184. உயர் மொழிக்கு - புகழ்மொழிக்கு. உறழுங் கிளவி - எதிருரைக்குங் கிளவி. ஆடூஉவிற்கு - ஆண்மகனுக்கு.**

### அறிவுரை

1185. உறுகண் ஓம்பல் தன்னியல் பாகலின்,
உரிய தாகும் தோழிகண் உரனே. ௪௬

### புகழுரை

1186. உயர்மொழிக் கிளவியும் உரியவால் அவட்கே.

### தோழி முதலிய வாயிலோர் உரைகள்

1187. வாயிற் கிளவி வெளிப்படக் கிளத்தல்
தாவின்று உரிய தத்தம் கூற்றே. ௪௭

### உள்ளுறை மொழியின் வகை

1188. உடனுறை, உவமம், சுட்டு நகை, சிறப்பெனக்
கெடலரும் மரபின் உள்ளுறை ஐந்தே. ௪௮

### அதன் மற்றோரியல்பு

1189. அந்தமில் சிறப்பின் ஆக்கிய இன்பம்
தன்வயின் வருதலும் வகுத்த பண்பே. ௪௯

---

1185. உறுகண் ஓம்பல் - உறுகின்ற இடையூறு நீக்கல். உரன் - அறிவுமொழி.

1187. வாயிற் கிளவி - வாயிலோர் கூறுஞ் சொல். தா இன்று - பழுதின்றி. தத்தம் என்றார், வாயிலோர் பலராதலின்.

1189. தன் வயின் வருதலும் - உள்ளுறையாகிய தன்னிடத்து விளங்க நிற்றலும். பண்பே - இயல்பாகும். கருத்துப் புலப்படுத்துதலே யன்றி இன்பம் விளைக்க வருதலும் உள்ளுறை வகுப்பின் கருத்தென்றபடி.

அதன்கண், அடங்குவன

1190. மங்கல மொழியும், வைஇய மொழியும்,
மாறில் ஆண்மையின் சொல்லிய மொழியும்,
கூறியல் மருங்கின் கொள்ளும் என்ப. ௩0

தோழி சிறப்பித்துக் கூறுதல்

1191. சினனே பேதைமை நிம்பிரி நல்குரவு
அனைநால் வகையும் சிறப்பொடு வருமே. ௩௧

'அன்னை' 'என்னை' என்றல்

1192. அன்னை என்னை என்றலும் உளவே
தொன்னெறி முறைமை சொல்லினும் [எழுத்தினும்
தோன்றா மரபின என்மனார் புலவர். ௩௨

## ௮. உள்ளத் துணர்ச்சிகள்

ஒருமைப்பாடு முதலியன

1193. ஒப்பும் உருவும் வெறுப்பும் என்றா,
கற்பும் ஏரும் எழிலும் என்றா,

---

1190. வைஇய - திட்டிய. ஆண்மையின் - ஆண்மைக் கருத்தில். கூறிய மருங்கில் என்றது, உள்ளுறையுவமையில் என்றற்கு. கொள்ளும் - அடங்கும்.

1191. நிம்பிரி - பொறாமைக் குறிப்பும். சிறப்பொடு - சிறப்பிக்குங் காரணத்தால்.

1192. அன்னை என்னை என்றலும் - தலைவியைத் தோழி அன்னை என்றலும் என்னை என்றலும். அன்னை என்றல், தலைவி தோழியையும் தோழி தலைவியையும் எனவும்; என்னை என்றல், இருவரும் தலைவனை எனவுங் கூறுப. இது தொன்னெறி முறைமையாய்ச் சொல்லிலக்கண எழுத்திலக்கணங்களாற் பொருள் தோன்றா மரபின என்றபடி.

சாயலும் நாணும் மடனும் என்றா,
நோயும் வேட்கையும் நுகர்வும் என்றாங்கு,
ஆவயின் வரூஉங் கிளவி யெல்லாம்
நாட்டிய மரபின் நெஞ்சுகொளின் அல்லது
காட்டலாகாப் பொருள என்ப. ௯௩

**அவை எங்கும் எஞ்ஞான்றும் உள்ளன**

1194. இமையோர் தேஎத்தும் எறிகடல் வரைப்பினும்
அவையில் காலம் இன்மை யான. ௯௪

---

*1193.* ஓப்பு - ஓப்புமைப்பட்ட இயல்பு. உரு - நன்கு மதிப்பாகிய அச்சம். வெறுப்பு - அடக்கம் என்ப. என்றா - என்றும். ஏர் - புதிது எழுந்து வரும் அழகு. எழில் - மேலும் வளர்ந்து நிலைபெறும் அழகு. சாயல்-மென்மை. நோய்-துன்பம். ஆவயின் - அம்முறைமையில். நாட்டிய மரபின்-இன்னது இன்ன கருத்துடையதென்று கூறி நிறுத்திவருகின்ற முறைமையினால். நெஞ்சு கொளின் அல்லது - நெஞ்சினால் உணர்ந்துகொள்ளி னன்றி. காட்டலாகாப் பொருள - வேறு வகையால் வெளிப் படையாக விளக்குதலாகாத கருத்துடையன.

*1194.* 'எறிகடல் வரைப்பு' என்றது, இவ்வுலகு என்னும் பொருட்டு. அவை இல் - முன் நூற்பாவிற் கூறிய ஓப்பு முதலிய கிளவிகள் இல்லாத. இன்மையான் - இல்லாமையால். இல்லாமையால் நெஞ்சினால் உணர்வனவேயாயினும், விளங்கக் காட்டலாகாதனவேயாயினும், யாண்டும் நிகழ்வனவாய் அவை உண்டென்றே கொள்ளப்படும் என்பது.

# சா. மெய்ப்பாட்டியல்

[பொருளிலக்கணத்துக்குரிய மெய்ப்பாடுகளின்
இயல்புணர்த்துவது.]

## க. மெய்ப்பாடுகளின் வகை

1195. பண்ணைத் தோன்றிய எண்ணான்கு பொருளும்
கண்ணிய புறனே நால்நான்கு என்ப. க

### அவற்றின் தொகை

1196. நாலிரண் டாகும் பாலுமா ருண்டே. உ

### அவற்றின் பெயர் முதலியன

1197. நகையே அழுகை இளிவரல் மருட்கை
அச்சம் பெருமிதம் வெகுளி உவகையென்று
அப்பால் எட்டே மெய்ப்பாடு என்ப. ங

---

*1195.* பண்ணை - மகளிர் விளையாட்டின்கண். எண்ணான்கு பொருளும் - முப்பத்திரண்டு கருத்துக்களும்; அவை. மேல், எள்ளல் இளமை முதலியவாக நுவலப்படுகின்றன, கண்ணிய புறன் - கருதிய வெளிப்பாடு. நால்நான்கு - பதினாறு வகைப்படும்; அவை, நகை முதலிய எண்வகைச் சுவைகளும் அவற்றின் எண்வகைக் குறிப்புக்களும்.

*1196.* நாலிரண்டாகும் பாலும் உண்டு-முன்நூற்பாவிற் கூறிய பதினாறு வகை வெளிப்பாடுகளும் சுவைகளுட் குறிப்புக்களை அடக்கி எண்வகை வெளிப்பாடுகளென்று கூறும் பக்கமும் உண்டு.

*1197.* நகை - சிரிப்பு. இளிவரல் - இழிப்பு. மருட்கை- வியப்பு. பெருமிதம் - வீரம். அப்பால் - அப் பகுதிப்பட்ட. ஒன்பது வகைச் சுவையுள், நடுவுநிலைச் சுவை தகுதியான வெளிப்பாட்டுக்கு உரியதன்று. பண்ணைக்கண் தோன்றுவது

## உ. எண்வகை மெய்ப்பாடுகள்

**அவற்றுள், நகை**

1198. எள்ளல், இளமை, பேதைமை, மடன்என்று
உள்ளப் பட்ட நகைநான்கு என்ப. ௪

**அழுகை**

1199. இளிவே இழவே அசைவே வறுமையென
விளிவில் கொள்கை அழுகை நான்கே. ௫

**இளிவரல்**

1200. மூப்பே பிணியே வருத்தம் மென்மையோடு
யாப்புற வந்த இளிவரல் நான்கே. ௬

---

மன்று. ஆதலின், அது விலக்கப்பட்டு ஏனை நகை முதலிய எண்வகைச் சுவைகளே மெய்ப்பாட்டுக் குரியனவாக இங்கே எடுத்துரைக்கப்பட்டன.

1198. எள்ளல் - இகழ்தல். பேதைமை - அறியாமை. மடன் - அறிந்தும் அறியாததுபோல இருத்தல். உள்ளப்பட்ட - கருதப்பட்ட, நகை நான்கு - நகைச்சுவைக்குரிய ஏதுக்களாகிய கருத்துக்கள் நான்கு வகைப்படும்.

1199. இளிவு - இழிவு. இழவு - இழப்பு. அசைவு - தளர்ச்சி. விளிவு இல் கொள்கை - கேடில்லாத கருத்துக்கள்; உலகில் இயல்பாக நேரக்கூடிய கருத்துக்கள் என்றபடி.

1200. மென்மை - எளிமை, யாப்பு உற - உணர்வு இட்பமுறும்படி.

### மருட்கை

1201. புதுமை பெருமை சிறுமை ஆக்கமொடு
மதிமை சாலா மருட்கை நான்கே. ௭

### அச்சம்

1202. அணங்கே விலங்கே கள்வர்தம் இறையெனப்
பிணங்கல் சாலா அச்சம் நான்கே. ௮

### பெருமிதம்

1203. கல்வி தறுகண் இசைமை கொடையெனச்
சொல்லப் பட்ட பெருமிதம் நான்கே. ௯

### வெகுளி

1204. உறுப்பறை குடிகோள் அலைகொலை என்ற
வெறுப்ப வந்த வெகுளி நான்கே. ௧௦

### உவகை

1205. செல்வம் புலனே புணர்வுவிளை யாட்டென்று
அல்லல் நீத்த உவகை நான்கே. ௧௧

---

1201. மதிமை சாலா - அறிவான் அமையாத.

1202. அணங்கு - பேய் முதலியன. தம் இறை - தம் தலைவன். பிணங்கல் சாலா - மாறுபட்டு எதிர்த்தல் அமையாத.

1203. தறுகண் - அஞ்சாமை. இசைமை - புகழ்.

1204. உறுப்பறை - உறுப்புக்களை அறுத்தல்; என்றது, கைகுறைத்தல், கண்குறைத்தல் முதலாயின. குடிகோள் - தங்கீழ் வாழ்வாரைத் துன்புறுத்தல். அலை - வைதலும் அடித்தலும்.

1205. செல்வம் - செல்வாக்கு. புலன் - கல்வியறிவு. புணர்வு - நட்பு.

### மெய்ப்பாட்டுக்குரிய பிறநிலைக்களன்கள்

1206. ஆங்கவை ஒருபால் ஆக, ஒருபால்
உடைமை இன்புறல் நடுவுநிலை அருளல்
தன்மை அடக்கம் வரைதல் அன்பெனாஅக்,
கைம்மிகல் நலிதல் சூழ்ச்சி வாழ்த்தல்
நாணுதல் துஞ்சல் அரற்றுக் கனவெனாஅ,
முனிதல் நினைதல் வெரூஉதல் மடிமை
கருதல் ஆராய்ச்சி விரைவுயிர்ப் பெனாஅக்,
கையா றிடுக்கண் பொச்சாப்புப் பொறாமை
வியர்த்தல் ஐயம் மிகைநடுக் கெனாஅ
இவையும் உளவே அவையலங் கடையே. ௧௨

## ௩. அகனைந்திணைக்குரிய மெய்ப்பாடுகள்

### முதற் பகுதி

1207. புகுமுகம் புரிதல், பொறிநுதல் வியர்த்தல்,

---

1206. உடைமை - உரிமை. நடுவுநிலை - ஒருபாற் கோடாமை. தன்மை - இயற்கைப்போக்கு. வரைதல் - செய்யத்தக்கனவும் தகாதனவும் வரம்புசெய்து ஒழுகுதல். எனாஅ - எனவும். கைம்மிகல் - நிலைகடந்துபோதல். நலிதல் - பிறரை நெருக்குதல். சூழ்ச்சி - கரவு. அரற்று - குறை கூறி இரங்குதல். வெரூஉதல் - துணுக்குறுதல். மடிமை - சோம்பல். கருதல் - மதித்தல். உயிர்ப்பு - மனக்கிளர்ச்சியால் நெட்டுயிர்ப்புக் கொள்ளுதல். கையாறு - வருத்தத்தால் செயல் தவிர்ந்து நிற்றல். பொச்சாப்பு - மறதி. வியர்தல் - மனம்புழுங்குதல். மிகை - உள்ள மிகுதி நடுக்கு - நடுக்கம். இவையும் உள - மற்றொருவகையான இம் முப்பத்திரண்டியல்புகளும் மெய்ப்பாடுகட்கு ஏதுவாக உள்ளன.

நகுநயம் மறைத்தல், சிதைவு பிறர்க்கு
[இன்மையொடு
தகுமுறை நான்கே ஒன்றென மொழிப. ௧௩

இரண்டாம் பகுதி

1208. கூழை விரித்தல், காதொன் றுகளைதல்,
ஊழணி தைவரல், உடைபெயர்த் துடுத்தலொடு
கெழீஇய நான்கே இரண்டென மொழிப. ௧௪

மூன்றாம் பகுதி

1209. அல்குல் தைவரல், அணிந்தவை திருத்தல்,
இல்வலி யுறுத்தல், இருகையும் எடுத்தலொடு
சொல்லிய நான்கே மூன்றென மொழிப. ௧௫

---

1207. இந் நூற்பாமுதல் ஆறு நூற்பாவரையில் தலை மகட்கு நிகழும் மெய்ப்பாட்டு வகைகள் நுவலப்படுகின்றன. புகுமுகம் புரிதல் - தலைமகன் விரும்பும் விருப்பத்துக்குத் தானும் விரும்புதல். பொறிநுதல் வியர்த்தல் - உள்ளத்தில் நாணமும் உட்கும் கொள்ளுதலால் ஒளியுடைய நெற்றி வியர்வை அரும்புதல். நகுநயம் மறைத்தல் - புன்னகை அரும்புதற்குரிய தனது நயப்புடைமையை மறைத்தல். சிதைவு பிறர்க்கின்மை - மிக்க விருப்பத்தினால் தன்னுள் உள்ளஞ் சிதைவு கொள்ளுமாயினும் அதனைப் பிறர்க்குப் புலனாகாத வகையில் நிறுத்துதல. ஒன்று - மெய்ப்பாட்டின் முதற்கூறு.

1208. கூழை - கூந்தல். காது ஒன்று - ஒரு காதிலுள்ள தோடு. ஊழ் அணி தைவரல - நிரலே அணிந்த வளையலாகிய அணியைத் தடவிச் செறித்தல். கெழீஇய - பொருந்திய. இரண்டு - மெய்ப்பாட்டின் இரண்டாம் கூறு.

1209. இல்வலியுறுத்தல் - இயல்பில் இல்லாத இணக்க மில்லாமை போல்வதோர் வன்மையைக் காட்டுதல். அதறகும் மீறி நிறையழிதலின் கூட்டத்துக்கு இருகையும் எடுத்தல் என்க,

### நான்காம் பகுதி

1210. பாராட் டெடுத்தல், மடந்தப உரைத்தல்,
ஈரமில் கூற்றம் ஏற்றுஅலர் நாணல்,
கொடுப்பவை கோடல் உளப்படத் தொகைஇ
எடுத்த நான்கே நான்கென மொழிப. கசு

### ஐந்தாம் பகுதி

1211. தெரிந்துடம் படுதல், திளைப்புவினை மறுத்தல்,
கரந்திடத் தொழிதல், கண்டவழி உவத்தலொடு
பொருந்திய நான்கே ஐந்தென மொழிப. கஎ

### ஆறாம் பகுதி

1212. புறஞ்செயச் சிதைதல், புலம்பித் தோன்றல்,
கலங்கி மொழிதல், கையறவு உரைத்தலொடு
புலம்பிய நான்கே ஆறென மொழிப. கஅ

---

1210. தப - கெட. சுற்றத்தாரது ஈரமில்லாத கொடு மொழிகட்குப் பணிந்து பிறர் அலர்க்கு நாணுதல். கொடுப்பவை கோடல் - தலைவன் கொடுக்கும் தழை மாலை முதலிய கையுறைகள் ஏற்றல.

1211. தெரிந்து - ஆராய்ந்து. திளைப்பு வினை - விளையாட்டுச் செயல். கரந்திடத்து ஒழிதல் - மறைந்து நின்று பார்த்தற்குரிய இடத்திற்கு நீங்குதல்.

1212. புறஞ் செய - புறத்தே தலைவியைக் கோலஞ் செய்ய. சிதைதல் - உள்ளம் சிதைந்து நிற்றல். புலம்பித் தோன்றல் - தனித்துப் பொலிவழிந்து தோன்றல். கையறவு - செயலற்ற நிலையினை,

அகத்திணைக்கு இவைபோல்வன நிமித்தமாதல்

1213. அன்ன பிறவும் அவற்றொடு சிவணி
மன்னிய வினைய நிமித்தம் என்ப. ௧௧

நிமித்தமாகா இடம்

1214. வினையுயிர் மெலிவிடத்து இன்மையும் உரித்தே.

## ௪. ஏனைத் திணைக்குரிய மெய்ப்பாடுகள்

கைக்கிளைக்குரிய மெய்ப்பாடு

1215. அவையும் உளவே அவையலங் கடையே. ௨௧

பெருந்திணைக்குரிய மெய்ப்பாடு

1216. இன்பத்தை வெறுத்தல், துன்பத்துப் புலம்பல்,
எதிர்பெய்து பரிதல், ஏதம் ஆய்தல்,
பசியட நிற்றல், பசலை பாய்தல்,

---

1213. 'அன்ன பிறவும்' என்றது, தனியிடை நகுதல் முதலியன என்பர், பேரா. மன்னிய வினைய நிமித்தம் - நிலை பெற்ற கற்பொழுக்கத்துக்குரிய நிமித்தங்கள். மன்னிய வினை என்றமையாற் கற்புச், செயலாயிற்று; திருமணச் சடங்கு என்றபடி.

1214. வினை - அத் திருமணச்செயல். உயிர் மெலி விடத்து - உயிர் நிறைகாக்கும் ஆற்றலின்றி மெலிவுடையதாய்ச் சிதைந்தவிடத்து.

1215. அவையும் - முன்னர்க் கூறிய புகுமுகம் புரிதல் முதலிய இருபத்து நான்கு மெய்ப்பாடுகளும். அவையலங்கடை - நற்காமம் என்னும் அகனைந்திணை யொழுக்கங்கள் அல்லாத விடத்து. என்றது, கைக்கிளையிடத்து என்க.

1216. எதிர் பெய்து பரிதல் - உருவு வெளிப்பாடுகண்டு வருந்துதல் போல்வன. அட - வருத்த. பாய்தல் - பரத்தல். நனி - மிக. அவன் தமர் - அவன்றன் சுற்றத்தாரை. அறன்

உண்டியிற் குறைதல், உடம்புநனி சுருங்கல்,
கண்துயில் மறுத்தல், கனவொடு மயங்கல்,
பொய்யாக் கோடல், மெய்யே என்றல்,
ஐயஞ் செய்தல், அவன்தமர் உவத்தல்,
[1]அறன் அழித்துரைத்தல், ஆங்குநெஞ் சழிதல்,
எம்மெய் யாயினும் ஒப்புமை கோடல்,
ஒப்புவழி உவத்தல், உறுபெயர் கேட்டல்,
நலத்தக நாடின் கலக்கமும் அதுவே.　　௨௨

## ௫. புறனடை

### மனனழியாத நிலையில் நிகழ்வன

1217. முட்டுவயின் கழறல், முனிவுமெய்ந் நிறுத்தல்,
அச்சத்தின் அகறல், அவன்புணர்வு மறுத்தல்,
தூதுமுனிவு இன்மை, துஞ்சிச் சேர்தல்,
காதல் கைம்மிகல், கட்டுரை இன்மைஎன்று
ஆயிரு நான்கே அழிவில் கூட்டம்.　　௨௩

---

அழித்துரைத்தல் - அறத்தைப் பழித்துப் பேசுதல். எம்மெய்யாயினும் - எந் நிகழ்ச்சியாயினும். உறுபெயர் கேட்டல்-தலைமகன்றன் பெரும்புகழைக்கேட்டு மகிழ்தல். அதுவே-மெய்ப்பாடாம், இவை பெருந்திணைக்குரியன.

1217. முட்டுவயின் - கூட்டத்துக்கு இடையூறுண்டான விடத்து. முனிவு மெய்ந் நிறுத்தல் - மாறுபட்ட செயல்களில், வெறுப்புணர்வு தனது உடம்பில் தோன்ற நிறுத்துதல். அச்சத்தின் - அச்சத்தினால். துஞ்சிச் சேர்தல் - உரிமை நினைவினால் உறக்கம் நிகழ்தல். அழிவில் கூட்டம் - மனம் அழிதலில்லாத கூட்டத்திற் குரியன.

---

(பா - வே.) 1. அறன் அளித்,

### இதுவும் அது

1218. தெய்வம் அஞ்சல், புரையறந் தெளிதல்,
இல்லது காய்தல், உள்ளது உவர்த்தல்,
புணர்ந்துழி உண்மை, பொழுதுமறுப் பாக்கம்,
அருள்மிக உடைமை, அன்புதொக நிற்றல்,
பிரிவாற் றாமை, மறைந்தவை உரைத்தல்
புறஞ்சொல் மாணாக் கிளவியொடு தொகைஇச்
சிறந்த பத்துஞ் செப்பிய பொருளே. ௨௪

### மெய்ப்பாட்டுக்குரிய ஒப்புமை

1219. பிறப்பே, குடிமை, ஆண்மை, ஆண்டோடு,
உருவு நிறுத்த காம வாயில்,

---

1218. புரையறம் - உயர்ந்த அறம். இல்லது காய்தல் - தலைவனிடம் இல்லாத குற்றத்தை உள்ளதுபோலக் கருதிக் கொண்டு ஊடுதல். உவர்த்தல் - வெறுத்தாற்போற் கூறுதல். புணர்ந்துழி உண்மை - கூடிய காலத்திலிருந்த உள்ள நிகழ்ச்சியைக் கூறுதல். பொழுது மறுப்பு ஆக்கம் - பகல் வேண்டாம் இரவு வருக எனவும், இரவு வேண்டாம் பகல் வருக எனவும் பொழுது மறுத்துக் கூறுதலால் உண்டாகும் மன மகிழ்ச்சி. தொக - உள்ளத்து மட்டும் மறைந்து நிகழுமாறு. புறஞ்சொல் - புறங்கூறும் மொழியாகிய அலர். மாணாக் கிளவி - அவ்வலர் மாட்சிமைப் படாமைக்கு ஏதுவாக நடந்துகொள்ளல் பற்றிய திறனுரை. செப்பிய பொருளே - முன் நூற்பாவிற் செப்பிய அழிவில் கூட்டத்திற்குரிய மெய்ப்பாட்டுப் பொருள்களே யாகும்.

1219. தலைவியும் ஆண்மையில் ஒத்து நிற்றலென்பது, இல்லறஞ் செயயும் ஆண்மையில் என்க. உருவு நிறுத்த காம வாயில் - உருவும், அதிலிருந்து தோன்றி நின்ற இன்பத்திற்கு

நிறையே, அருளே, உணர்வொடு, திருவென
முறையுறக் கிளந்த ஒப்பினது வகையே. உ௫

### காமக்குறிப்பு ஆகாதன

1220. நிம்பிரி, கொடுமை, வியப்பொடு, புறமொழி,
வன்சொற், பொச்சாப்பு, மடிமையொடு, குடிமை
இன்புறல், ஏழைமை, மறப்போ, டொப்புமை
என்றிவை இன்மை என்மனார் புலவர். உ௬

### மெய்ப்பாடுகளின் நுட்பம்

1221. கண்ணினும் செவியினும் திண்ணிதின் உணரும்
உணர்வுடை மாந்தர்க் கல்லது தெரியின்
நன்னயப் பொருள்கோள் எண்ணருங்
[குரைத்தே. உ௭

---

வாயிலான அன்பும் என்றபடி. உணர்வு - அறிவு. ஒப்பினது வகை - தலைமகனுக்குந் தலைமகளுக்கும் ஒப்புமை கருதக்கூடிய பண்புகளின் வகை என்பது.

1220. நிம்பிரி - பொறாமை. பொச்சாப்பு - சோர்வு. என்று இவை இன்மை - என்று சொல்லப்பட்ட இவை இல்லா திருத்தல் மெய்ப்பாட்டுக்குச் சிறப்பு என்றபடி.

1221. தெரியின் - ஆராயுமிடத்து. நல் நயப்பொருள் என்றது, மெய்ப்பாடு என்னும் பொருட்டு. கோள் - அறிந்து கொள்ளுதல். எண்ணருங்குரைத்து - எனையோர்க்கு எண்ணுதற் கரியது என்க; இயலாது என்பது கருத்து.

# ௭. உவமவியல்

[உவம இலக்கணங்கள் உணர்த்துவது.]

## ௧. உவமையின் இயல்பு

**பாகுபாடு**

1222. வினைபயன் மெய்உரு என்ற நான்கே
வகைபெற வந்த உவமத் தோற்றம். ௧

**அது விரவி வருதல்**

1223. விரவியும் வருஉம் மரபின என்ப. ௨

**உயர்ந்தது உவமையாதல்**

1224. உயர்ந்ததன் மேற்றே உள்ளுங் காலை. ௩

**அது தோன்றும் நிலைக்களன்**

1225. சிறப்பே நலனே காதல் வலியோடு
அந்நாற் பண்பும் நிலைக்களம் என்ப. ௪

**வேறு களன்**

1226. கிழக்கிடு பொருளோடு ஐந்தும் ஆகும். ௫

---

*1222.* **வினை** - தொழில். மெய் - வடிவம். **உரு** - நிறம். **நான்கே** - நான்கு கருத்துக்களே. **உவமத் தோற்றம்** - **உவமம் தோன்றுதற்குரியன.**

*1223.* **விரவியும்** வரும் மரபின - **அந் நான்கனுள் இரண்டு மூன்று சேர்ந்தும் வரும் இயல்பின.**

*1224.* **உவமை உயர்ந்ததன் மேலது என்க; உயர்ந்த பொருளையே உவமை கூறுதல் மரபென்றபடி.**

*1225.* சிறப்பு - **தலைமை.** நலன் - **நன்மை. வலி-வலிமை. நிலைக்களம் - உவமை தோன்றுதற்கு நிலைக்களமாவன.**

*1226.* **கிழக்கிடு பொருள்-கீழ்ப்படுத்தப்பட்ட பொருள்; தாழ்ந்த பொருள்.**

**முதலுஞ் சினையும் பற்றி வருதல்**

1227. முதலும் சினையும்என்று ஆயிரு பொருட்கும்
நுதலிய மரபின் உரியவை உரிய. ௬

**உருபின்றியும் வருதல்**

1228. சுட்டிக் கூறா உவம மாயின்
பொருளெதிர் புணர்த்துப் புணர்ந்தன கொளலே. ௭

**உவமையின் சிறப்பியல்புகள்**

1229. உவமையும் பொருளும் ஒத்தல் வேண்டும். ௮

1230. பொருளே உவமம் செய்தனர் மொழியினும்
மருளறு சிறப்பினஃது உவம மாகும். ௯

1231. பெருமையும் சிறுமையும் சிறப்பின் தீராக்
குறிப்பின் வரூஉம் நெறிப்பா டுடைய. ௧௦

---

*1227.* நுதலிய மரபின் - கருதி வழங்கி வருகின்ற முறைமையில். முதலுக்கு முதலும் சினைக்குச் சினையும் அவை மாறியும் உவமமாக வருபவற்றுள் அங்கங்கும் மரபின்படி உரியவை வழங்குதற்குரியன என்றபடி.

*1228.* பொருள் எதிர் புணர்த்து - உவமிக்கப்படும் பொருளை எதிர்நிறுத்திக் கூட்டி. புணர்ந்தன கொளல் - பொருந்துவனவாய்க் கொள்க.

*1230.* பொருள் - உவமிக்கப்படும் பொருளையே, செய்தனர் - செய்து. மருள் அறு சிறப்பின் - மயக்கமற்ற சிறப்பு நிலையால்.

*1231.* பெருமையும் சிறுமையும் - உவமமும் பொருளும் ஒத்தனவாகாது ஓரளவு பெருமையுஞ் சிறுமையுமாகக் கூறப்படினும். சிறப்பின தீராக் குறிப்பின் - உரிய சிறப்பினின்றும் நீங்கமாட்டாத குறிப்போடு.

## ௨. உவம வுருபு

### பாகுபாடு

1232. அவைதாம்,
அன்ன ஏய்ப்ப உறழ ஒப்ப
என்ன மான என்றவை எனாஅ,
ஒன்ற ஒடுங்க ஒட்ட ஆங்க
என்ற வியப்ப என்றவை எனாஅ,
எள்ள விழைய இறப்ப நிகர்ப்பக்
கள்ளக் கடுப்ப ஆங்கவை எனாஅக்,
காய்ப்ப மதிப்பத் தகைய மருள
மாற்ற மறுப்ப ஆங்கவை எனாஅப்,
புல்லப் பொருவப் பொற்பப் போல
வெல்ல வீழ ஆங்கவை எனாஅ,
நாட நளிய நடுங்க நந்த
ஓடப் புரைய என்றவை எனாஅ,
ஆறா றவையும், அன்ன பிறவும்
கூறுங் காலைப் பல்குறிப் பினவே. ௧௧

### அவற்றுள், வினையுவம உருபுகள்

1233. அன்ன ஆங்க மான இறப்ப
என்ன உறழத் தகைய நோக்கொடு
கண்ணிய எட்டும் வினைப்பால் உவமம் ௧௨

---

1232. அவைதாம் - உவமத்தின் வகைகள். எனாஅ - எனவும், ஆறுறவையும் - இம் முப்பத்தாறும். அன்னவை பிறவும் என்றது, நேர, ஆர முதலியன என்பர் இளம். பல் குறிப்பின் - பல வகைப்பட்ட கருத்துடையனவாய் வரும்,

1233. கண்ணிய - கருதிய. வினைப்பால் உவமம் - தொழி லின் வகைப்பட்ட உவமமாகும்.

### அவற்றுள், 'அன்ன' என்னும் உருபு

1234. அன்னவென் கிளவி பிறவொடுஞ் சிவணும்.

### பயனுவம உருபுகள்

1235. எள்ள விழையப் புல்லப் பொருவக்
கள்ள மதிப்ப வெல்ல வீழ
என்றாங்கு எட்டே பயனிலை உவமம். ௧௪

### மெய்யுவம உருபுகள்

1236. கடுப்ப ஏய்ப்ப மருளப் புரைய
ஒட்ட ஒடுங்க ஓட நிகர்ப்பஎன்று
அப்பால் எட்டே மெய்ப்பால் உவமம். ௧௫

### உருவுவம உருபுகள்

1237. போல மறுப்ப ஒப்பக் காய்த்த
நேர வியப்ப நளிய நந்தஎன்று
ஒத்துவரு கிளவி உருவின் உவமம். ௧௬

### இவற்றின் பொருள் மரபு

1238. தத்தம் மரபின் தோன்றுமன் பொருளே. ௧௭

## ௩. உவமையை உணருமுறை

### வேறு பாகுபாடு

1239. நாலிரண் டாகும் பாலுமா ருண்டே. ௧௮

1234. பிறவொடும் - ஏனைப் பயனுவமம் வடிவுவமம் வண்ணவுவமங்களோடும்.

1236. அப்பால் - அப் பகுதிப் பட்ட.

1238. மரபின - வரலாற்று முறைமையால். தோன்றும் பொருளே - இப் பொருள்கள் தோன்றும் எனக.

1239. நாலிரண்டாகும் பாலும் - எட்டாகும் பக்கமும்; முன்னே, வினை பயன் வடிவு வண்ணம் எனப்பட்ட நான்கு

### பிறிதொரு வகைப் பாகுபாடு

1240. பெருமையும் சிறுமையும் மெய்ப்பாடு எட்டன்
வழிமருங்கு அறியத் தோன்றும் என்ப. ௧௯

### உவமமும் பொருளும்

1241. உவமப் பொருளின் உற்றது உணரும்
தெளிமருங்கு உளவே திறத்திய லான. ௨0

### அவற்றை உணரும் வகை

1242. உவமப் பொருளை உணருங் காலை
மரீஇய மரபின் வழக்கொடு படுமே. ௨௧

---

உவமங்களும் எட்டாகும் பக்கமும் என்றபடி; வினையும் வினைக் குறிப்பும் என வினையுவமமும், நன்மையுந் தீமையுமெனப் பயனுவமமும், வடிவும் அளவும் என வடிவுவமமும், நிறமுங் குணமுமென வண்ணவுவமமும் எட்டாம் என்பர், இளம்.

*1240.* ஒத்தனவாக அல்லாமல் பெருமை பற்றியுஞ் சிறுமை பற்றியும் ஒப்புமை கொள்ளப்படும் உவமம் என்றற்குப் பெருமையும் சிறுமையும் என்றார். மெய்ப்பாடு எட்டன் வழி மருங்கு - நகை முதலிய எண்வகை மெய்ப்பாட்டுப் பொருள் வழியில்.

*1241.* உவமப்பொருளின் - உவமப்பொருள் கூறுதலால். உற்றது - கூறுவானது உள்ளத்திற் கருதிய கருத்தை.

*1242.* மரீஇய மரபின் வழக்கொடு படுமே - உலகில் மருவி வழங்குகின்ற இயல்பினையுடைய வழக்கோடு பொருந்தி அந்து அறியப்படும்.

அவற்றில், இரட்டைக் கிளவி

1243. இரட்டைக் கிளவி இரட்டை வழித்தே. ௨௨

## ௪. உள்ளுறை யுவமம்

அதன் இயல்பு

1244. பிறிதொடு படாது பிறப்பொடு நோக்கி
[1]முன்னை மரபின் கூறுங் காலைத்
துணிவொடு வருஉம் துணிவினோர் கொளினே.

அதன் தொகை

1245. உவமப் போலி ஐந்தென மொழிப. ௨௪

---

*1243.* இரண்டு கிளவியோடு வரும் உவமை அவ்வாறே இரண்டு கிளவியோடு வருகின்ற உவமிக்கப்படு பொருளின் இயைபுடையதாகும். என்றபடி. "விலங்கொடு மக்க ளனையர் இலங்கு நூல், கற்றாரோ டேனை யவர்" என்பதில் அவ்விரட்டை காணப்படுதல் கருதுக.

*1244.* பிறிதொடு படாது - உவமம் வேறு உவமிக்கப் படும் பொருள் வேறு என்று ஒன்றற்கொன்று வேறாகத் தோன்றாமல். பிறப்பொடு நோக்கி - உவமைத் தோற்றத்திலேயே உவமிக்கப்படும் பொருளுங் கண்டு. முன்னை மரபில் - உவமமும் பொருளுமென முற்கூறிய இயல்பினில். துணிவொடு வருஉம் - கூறுவோரது தெளிவோடு பொருந்தி அதன் உள்ளுறை விளங்கும். துணிவினோர் கொளின் - தெளிவுடையோர் நுணுகி உணர்வராயின் என்பது.

*1245.* உவமப் போலி என்றது, உள்ளுறையுவமம் என்பது, பேரா. கருத்து.

---

(பா - வே.) 1. முன்ன.

### அதன் வகை

1246\. தவலருஞ் சிறப்பின் அத் தன்மை நாடின்
வினையினும் பயத்தினும் உறுப்பினும் உருவினும்
பிறப்பினும் வரூஉம் திறத்தியல் என்ப. உரு

### இத் திறத்தில், தலைவியும் தோழியும்

1247\. கிழவி சொல்லின் அவளறி கிளவி;
தோழிக் காயின் நிலம்பெயர்ந் துரையாது. உசு

### தலைவனும் பிறரும்

1248\. கிழவோற் காயின் உரனொடு கிளக்கும்;
ஏனோர்க் கெல்லாம் இடம்வரை வின்றே. உஎ

---

*1246.* தவலரும் - கெடலரிய; அத்தன்மை - அவ்வுவமப் போலியின் தன்மையை. பயத்தினும் - பயனினும். உறுப்பினும் - மெய்யுவமத்தினும். பிறப்பினும் - பிறப்புவமத்தினும். திறத்தியல் - ஐந்து வகையான கூறுபாட்டியல்பினையுடையது. ஏனையுவமத்துக்கு வகை நான்காயின், உள்ளுறை யுவமத்துக்கு வகை இங்ஙனம் ஐந்தென்றபடி.

*1247.* சொல்லின் - உவமங் கூறினால். அவளறி கிளவி - அவள் அறிந்த பொருள்களைப் பற்றிய சொல்லாயிருக்கும். தோழிக்காயின் - தோழிக்கு அவ்வாறு உவமங் கூறுதல் நேருமானால்; தோழி உவமங் கூறினால் என்பது. நிலம் பெயர்ந்து உரையாது - அந் நிலத்துள்ள பொருள்கள்மேற் கூறுமல்லது அந் நிலங் கடந்து பிற நிலத்துள்ள பொருள்கள்மேல் உவமங் கூறாது.

*1248.* உரனொடு - தன் உடைமை தோன்ற என்பர், பேரா.

**இவ்வுவமைக்குரிய கூற்றுக்கள்**

1249. இனிதுறு கிளவியும் துனியுறு கிளவியும்
உவம மருங்கின் தோன்றும் என்ப. ௨௮

**தலைவி கூற்றிற்குரிய இடம்**

1250. கிழவோட்கு உவமம் ஈரிடத் துரித்தே. ௨௯

**தலைமகன் கூற்றிற்குரிய இடம்**

1251. கிழவோற் காயின் இடம்வரை வின்றே. ௩0

**தோழி முதலியோர் கூற்றிற்குரிய இடம்**

1252. தோழியும் செவிலியும் பொருந்துவழி நோக்கிக்
கூறுதற் குரியர் கொள்வழி யான. ௩௧

## ௫. புறனடை

**வேறு வகை உவமம்**

1253. வேறுபட வந்த உவமத் தோற்றம்
கூறிய மருங்கின் கொள்வழிக் கொளாஅல்.

---

*1249.* இனிதுறு கிளவி - மகிழ்ச்சி பொருந்திய சொல். துனி - புலவி. உவம மருங்கின் - உவமச்சார்பில்,

*1250.* ஈரிடம் என்றது, முன் நூற்பாவிற் கூறிய இரு வகை நேரம்.

*1252.* கொள்வழியான் - கேட்போர் கொள்ளும் நெறியால்.

*1253.* வேறுபட வந்த உவமத் தோற்றம் - இதுகாறுங் கூறிய ஏனை யுவமத்தினும் இவ்வுள்ளுறை யுவமத்தினும் வேறுபாடு தோன்ற வந்த உவம வகைகள். கூறிய மருங்கின - இதுகாறுங் கூறியதன் சார்பில் வைத்து. கொள்வழிக் கொளாஅல் - கொள்ளும் முறைமையிற் கொள்க என்பது.

### உவமைக்கு, மேலும் ஒரு முடிபு

1254. ஒரீஇக் கூறலும் மரீஇய பண்பே. ௩௩

### பின்னும் ஒரு முடிபு

1255. உவமத் தன்மையும் உரித்தென மொழிப
பயனிலை புரிந்த வழக்கத் தான. ௩௪

### உவமையில் வரும் ஐயம்

1256. தடுமா றுவமம் கடிவரை யின்றே. ௩௫

### அடுக்கிய உவமை

1257. அடுக்கிய தோற்றம் விடுத்தல் பண்பே. ௩௬

---

1254. ஒரீஇக் கூறலும் - உவமமும் பொருளும் ஒவ்வாவென நீக்கிக் கூறலும்; "யாங்கனம் ஒத்தியோ வீங்குசெலன் மண்டிலம்" என்பது காண்க. மரீஇய பண்பே - அடிப்பட்டு வந்த வழக்கே

1255. உவமத் தன்மையும் - உவமையை அதன் தன்மை விளக்கிக் கூறுதலும். பயனிலை புரிந்த - அதனாலாகும் பயனை யிருத்துக் காட்ட விரும்பிய.

1256. தடுமாறு உவமம் - ஐயநிலை யுவமமும். கடிவரை யின்று - நீக்குநிலைமை யின்று.

1257. அடுக்கிய தோற்றம் - உவமை பல அடுக்கி வரும் வகை; "மதியத் தன்ன வாண்முகம் போலும், பொதியவிழ் தாமரைப் புதுப்பூம் பொய்கை" என வருதல் போல்வன. விடுத்தல் பண்பு - அந்துணைச் சிறப்பில்லாமையின் மேற் கொள்ளாது விடுத்தற்குரிய இயல்பினது என்க.

அதன்கண், நிரனிறை முதலியன

1258. [1]நிரனிறுத் தமைத்தல், நிரனிறை, சுண்ணம்
வரைநிலை வைத்த மூன்றலங் கடையே. ௩௭

1258. நிரல் நிறுத்தமைத்தல் என்பது, ஒரு பொருளுக்குப் பல உவமைகள் முறையே நிறுத்தியமைத்தல்; 'நில நீர் வளி விசும் பென்ற நான்கின் அளப்பரியையே' என வருதல். 'நிரனிறை' என்பது உவமை பலவும் சேர நிறுத்தி அவற்றால் உவமிக்கப்படும் பொருள் பலவும் வேறே முறைப்படி சேர நிறுத்துதல். 'சுண்ணம்' என்பது, உவமமும் பொருளும் துணித்து ஓட்டும்படி சிதறிக்கிடப்ப நிறுத்துதல். வரைநிலை வைத்த - என வரம்பு செய்த நிலைமையோடு பொருந்திய. மூன்றலங் கடைய - இவை மூன்றல்லாத விடத்து. எனக் கொண்டு, முன் நூற்பாவோடு இயைத்துக் காண்க.

(பா - வே.) 1. நிரனிறுத்தமைத்த.

## ௮. செய்யுளியல்

[பொருள்பற்றி எழுஞ் செய்யுளிலக்கணங்கள் தொகுத்துணர்த்துவது.]

### ௧. செய்யுள் உறுப்புக்கள்

1259. மாத்திரை எழுத்தியல் அசைவகை எனாஅ,
யாத்த சீரே அடியாப்பு எனாஅ,
மரபே தூக்கே தொடைவகை எனாஅ,
நோக்கே பாவே அளவியல் எனாஅத்,
திணையே கைகோள் கூற்றுவகை எனாஅக்,
கேட்போர் களனே காலவகை எனாஅப்
பயனே மெய்ப்பாடு எச்சவகை எனாஅ,
முன்னம் பொருளே துறைவகை எனாஅ,
மாட்டே வண்ணமொடு யாப்பியல் வகையின்
ஆறுதலை யிட்ட அந்நா லைந்தும்,
அம்மை அழகு தொன்மை தோலே

---

**1259.** எழுத்தியல் - எழுத்துக்களின இயல்பு. எனாஅ - எனவும். யாத்த - பொருள்பெறப் பொருந்திய. யாப்பு - செய்யுள். அடிதோறும் பொருள்பெறச் செய்வதோர் செய்கை என்பர், பேரா. தூக்கு - செய்யுட்களின் ஓசையைத் துணித்து வகைப்படுத்துதல். தொடை - யாப்பில் எழுத்தொலிகள் ஒப்புமையுறத் தொகுக்கப்படுதல். நோக்கு - செய்யுளுறுப்புக் களின் ஒருமித்த போக்கு. பா - பரந்து செல்லும் உணர்வு ஒலி. அளவியல் - செய்யுளின் வரையறை. திணை - அகத்திணை புறத்திணை என்னும் பிரிவுகள். கைகோள - அவற்றிற், களவு கற்பு என்று மேற்கொள்ளப்படும் ஒழுக்கவகைகள். களன் - இடம். எச்சவகை - கருது எஞ்சியவற்றைக் குறிக்கொள்ளும்படி அமைவதோர் இயல்பு. முன்னம் - பொருத்த வியல்பு.

விருந்தே இயைபே புலனே இழைபெனாஅப்
பொருந்தக் கூறிய எட்டொடும் தொகைஇ
நல்லிசைப் புலவர் செய்யுள உறுப்பென
வல்லிதிற் கூறி வகுத்துரைத் தனரே. ௧

## ௨. அவற்றுள், மாத்திரையும் எழுத்தியலும்

1260. அவற்றுள்,
மாத்திரை அளவும், எழுத்தியல் வகையும்,
மேற்கிளந் தன்ன என்மனார் புலவர். ௨

## ௩. அசை

### நேரசை, நிரையசை

1261. குறிலே நெடிலே குறிலிணை குறிநெடில்

---

பொருள் - புலவன் மேற்கொள்ளும் பொருள். மாட்டு - அகன்று கிடக்குங் கருத்துக்களைத் தொடர்பு தோன்றப் பொருத்திக் கூறுதல். வண்ணம் - செய்யுளோசையின் அழகு. யாப்பியல் வகையின் - செய்யுளியற் பகுதியின. ஆறு தலையிட்ட அந் நாலைந்தும் - இருபத்தாறு உறுப்புக்களும். அம்மை அழகு தொன்மை முதலியன செய்யுட்களின் வனப்புக்கள். எட்டொடும் - எண்வகை வனப்புக்களோடும் என்க. எனவே, செய்யுளுறுப்புக்கள் முப்பத்து நான்கென்பது பெறப்படும். நல்லிசைப் புலவர் செய்யுள் - நல்லிசைப் புலவர் செய்யும் செய்யுளின். வல்லிதின் - நுட்பதிட்பந் தோன்ற. வகுத்துரைத்தனர் ஆசிரியர் என்பது.

1260. மேற்கிளந்தன்ன - முன் எழுத்ததிகாரத்திற் சொல்லப்பட்டவற்றோடு ஒக்கும்.

ஒற்றொடு வருதலொடு மெய்ப்பட நாடி
நேரும் நிரையும் என்றிசின் பெயரே. ௩

**அவை, நேர்பு நிரைபு எனவும் வருதல்**

1262. இருவகை உகரமொடு இயைந்து அவை வரினே
நேர்பும் நிரைபும் ஆகும் என்ப;
குறிலிணை உகரம் அல்வழி யான. ௪

**இயலசையும் உரியசையும்**

1263. இயலசை முதலிரண்டு; ஏனைய உரியசை. ௫

**தனிக்குறில் அசையாகாத இடம்**

1264. தனிக்குறில் முதலசை மொழிசிதைத் தாகாது.

---

**1261.** 'ஒற்றொடு வருதலொடு' எனவே தனியே வருதலோடு என்பதும் பெறப்படும். குறிலும் நெடிலும், குறிலிணையும் குறில்நெடிலும் என்னும் நான்கும் தனியே வருதலோடு ஒற்றடுத்தும் வரும் என்றபடி. நேரும் நிரையும் - நேரசையும் நிரையசையும். என்றிசின் பெயரே - என்று பெயராகும்.

**1262.** இருவகை உகரம், குற்றுகரமும் முற்றுகரமும். அவை என்றது, நேரசையும் நிரையசையும். நேர்பு நிரைபு மாகும் - நேர்பசையும் நிரைபசையுமாகும். அல்வழியான - அல்லாதவிடத்து.

**1263.** முதலிரண்டு என்றது, நேர் நிரை நேர்பு நிரைபு என்னும் நால்வகையுள் முதலிரண்டாகிய நேரசை நிரையசை யென்பன. இயலசை - இயற்கை யசை. உரியசை - செயற்கையின் உரிய அசை.

**1264.** தனிக்குறில் முதலசை - தனிக் குறிலாலாகிய முதலில் நின்ற நேரசை. மொழி சிதைத்து ஆகாது - விட்டிசையாத மொழியை விட்டிசைக்கும்படி செயற்கையிற் சிதைத்து அசையாகாது.

### குற்றியலிகரம் அலகு பெறுமை

1265. ஒற்றெழுத் தியற்றே குற்றிய லிகரம். ௭

### முற்றியலுகரம் அசையாகாத இடம்

1266. முற்றிய லுகரமும் மொழிசிதைத்துக் கொளாஅ;
நிற்றல் இன்றே ஈற்றடி மருங்கினும். ௮

### இருவகை உகரமும் அசையாகும் வகை

1267. குற்றிய லுகரமும் முற்றிய லுகரமும்
ஒற்றொடு தோன்றி நிற்கவும் பெறுமே. ௯

### முடிபு

1268. அசையும் சீரும் இசையொடு சேர்த்தி
வகுத்தனர் உணர்த்தலும் வல்லோர் ஆறே. ௧0

## ௪. சீர்

1269. ஈரசை கொண்டும் மூவசை புணர்ந்தும்
சீரியைந் திற்றது சீரெனப் படுமே. ௧௧

1265. இயற்று - இயல்பினையுடையது; அசைகளில் அசைத்து நிற்றற்குரிய எழுத்தாக எண்ணப்படாது எனறபடி.

1266. நிற்றல் இன்று - தனியசையாய் நிற்றல் இல்லை.

1267. நிற்கவும் - தனியசையாய் நிற்கவும்.

1268. இசையொடு சேர்த்தி - ஓசையோடு பொருத்தி. வகுத்தனர் உணர்த்தல் - வகுத்துத் தெரிவித்தல். வல்லோர் ஆறு - செய்யுளிலக்கணத்தில் துறை போயினோரது நெறியாகும். அசையும் சீரும் இன்னோசையோடு பொருந்தல் வேண்டுமென்பது கருத்து.

1269. இற்றது - ஓசை இடையற்று முடிந்து தோன்றுவது.

### இயற்சீரும் உரிச்சீரும்

1270. இயலசை மயக்கம் இயற்சீர்; ஏனை
உரியசை மயக்கம் ஆசிரிய உரிச்சீர். ௧௨

1271. முன்நிரை உறினும் அன்ன வாகும். ௧௩

### அவற்றுள், இயற்சீர்

1272. நேரவண் நிற்பின் இயற்சீர்ப் பால. ௧௪

1273. இயலசை ஈற்றுமுன் உரியசை வரினே
நிரையசை இயல வாகும் என்ப. ௧௫

### சீர்வகையில், உயிரளபெடையின் நிலை

1274. அளபெடை அசைநிலை ஆகலும் உரித்தே. ௧௬

### ஒற்றளபெடையின் நிலை

1275. ஒற்றள பெடுப்பினும் அற்றென மொழிப. ௧௭

### உரிச் சீர்

1276. இயற்சீர் இறுதிமுன் நேரவண் நிற்பின்
உரிச்சீர் வெண்பா ஆகும் என்ப. ௧௮

---

*1270.* **இயலசை - நேர் நிரை என்னும் அசைகள். மயக்கம் - அவை தம்முட் கலந்துவருதல். உரியசை - நேர்பு நிரைபு என்னும் அசைகள்.**

*1271.* **முன் - உரியசைகளுக்குப் பின். நிரை - நிரையசை. அன்ன - ஆசிரிய உரிச்சீர்களே.**

*1272.* **அவண் - உரியசைகளுக்குப் பின்னர். இயற்சீர்ப் பால - இயற்சீர்ப் பிரிவின; அப் பிரிவைச் சேர்ந்தன என்றபடி.**

*1275.* **ஒற்று அளபெடுப்பினும் என்க. அற்று - அசைநிலையாகலும்.**

### வஞ்சிச் சீர்

1277. வஞ்சிச் சீரென வகைபெற் றனவே
வெண்சீர் அல்லா மூவகை யான. ௧௯

### வஞ்சியுரிச்சீர் வஞ்சிப்பாவுக்காதல்

1278. தன்பா அல்வழித் தானடை வின்றே. ௨௦

### வஞ்சிப்பாவில், ஏனைச் சீர்களும் வருதல்

1279. வஞ்சி மருங்கின் எஞ்சிய உரிய. ௨௧

### வெண்பாவிற்கு, ஒருங்கு வராத சீர்கள்

1280. வெண்பா உரிச்சீர் ஆசிரிய உரிச்சீர்
இன்பா நேரடிக் கொருங்குநிலை இலவே. ௨௨

### கலிப்பாவில், அவை மயங்குதல்

1281. கலித்தளை மருங்கிற் கடியவும் படாஅ. ௨௩

---

1277. வகைபெற்றன - பாகுபாடு செய்யப்பெற்றவை. வெண்சீர் என்பது, முன்நூற்பாவிற் கூறியபடி இயற்சீர் இறுதிமுன் நேர் அவண் நிற்பது. மூவகை - மூவகைச் சீர்.

1278. தன் பா - வஞ்சியுரிச்சீர்க்கு உரியபா ; என்றது, வஞ்சிப் பா. அடைவு இன்று - வஞ்சியுரிச்சீர் வேறு பாக்களில் வந்து பொருந்துதல் இல்லை

1279. வஞ்சி மருங்கின் - வஞ்சிப் பாக்களில். எஞ்சிய - ஏனைச் சீர்களும்.

1280. இன் பா என்றது, வெண்பா. நேரடி என்றது, நாற்சீர் கொண்டது. நிலை - நிற்றல் ; வந்து பொருந்துதல்.

1281. கலிப்பாவில் வெண்பா உரிச்சீரும் ஆசிரிய உரிச்சீரும் ஒருங்கு நிற்றலும் உண்டு என்றபடி.

### கலிப்பாவில், நேரீற்று இயற்சீர் வாராமை

1282. கலித்தளை அடிவயின் நேரீற் றியற்சீர்
நிலைக்குரித் தன்றே தெரியு மோர்க்கே. உ௪

### அது, வஞ்சிப்பாவினும் இறுதியில் நில்லாமை

1283. வஞ்சி மருங்கினும் இறுதி நில்லா. உ௫

### ஓரசைச் சீர்

1284. இசைநிலை நிறைய நிற்குவ தாயின்
அசைநிலை வரையார் சீர்நிலை பெறவே. உ௬

### அது, செய்யுளிற் பயிலுதல்

1285. இயற்சீர்ப் பாற்படுத் தியற்றினர் கொளலே
தளைவகை சிதையாத் தன்மை யான. உ௭

### வெண்சீர் ஈற்றசையின் ஓரியல்பு

1286. வெண்சீர் ஈற்றசை நிரையசை இயற்றே. உ௮

---

1282. நிலைக்குரித்தன்று - நிற்றற்குரியதன்று. தெரியு மோர்க்கு என்றார், கலிப்பாவிற்குரிய துள்ளலோசையின் இயல்பை அறிந்து உணர்வு சிறப்பார்க்கு அஃது இயையா மையின்.

1283. நில்லா - அந் நேரீற் றியற்சீர் நில்லா.

1284. இசைநிலை - ஓசை நிலைமை. நிறைய - நிரம்ப. அசை நிலை வரையார் - தனித்த அசைநிலையி னுள்ள ஓரசையினை நீக்கார். சீர்நிலை பெறல் - சீரின் இயல்பைப் பெறுதற்கண். எனவே, ஓசை நிரம்புவதாயின் தனி அசையும் சீராம் என்பது.

1285. இயற்றினர் கொளல் - இயற்றிக்கொள்க.

1286. நிரையசை இயற்று - தளைகொள்ளும் வகையில், இயற்சீரின் நிரையசை யியல்பினை யுடையதாய், வருஞ்சீரின் முதலில் நேரசை ஏற்கும் என்றபடி.

### ஆசிரியப்பாவில் வெண்சீர்

1287. இன்சீர் இயைய வருகுவ தாயின்
வெண்சீர் வரையார் ஆசிரிய அடிக்கே. ௨௯

### ஆசிரியப்பாவில் வஞ்சிச்சீர்

1288. அந்நிலை மருங்கின் வஞ்சி உரிச்சீர்
ஒன்றுதல் உடைய ஓரொரு வழியே. ௩௦

## ௫. அடி

### அடியின் அளவு

1289. நாற்சீர் கொண்டது அடியெனப் படுமே. ௩௧

### அடியின்கண், தளையும் தொடையும்

1290. அடியுள் ளனவே தளையொடு தொடையே. ௩௨

### அவை, நாற்சீரடிக்கே உரித்தாதல்

1291. அடியிறந்து வருதல் இல்லென மொழிப. ௩௩

### பாட்டென்பதற்கு, அடியின் சிறப்பு முதன்மை

1292. அடியின் சிறப்பே பாட்டெனப் படுமே. ௩௪

### குறளடி

1293. நாலெழுத் தாதி யாக ஆறெழுத்து
ஏறிய நிலத்தே குறளடி என்ப. ௩௫

---

1287. இன்சீர் - இனிய ஓசை யொழுங்கு.

1288. அந்நிலை மருங்கின் - அவ்வாசிரிய வடிக்கண்.

1290. அடி உள்ளன - அடிக்கண் அமைந்து நிற்பன.

1291. அடி இறந்து வருதல் - தளையும் தொடையும் நாற்சீரடியினைக் கடந்து வருதல்.

1293. ஆறெழுத்து ஏறிய நிலத்து - ஆறெழுத்து ஈறாக ஏறிய நிலத்தினையுடையது; என்றது, நாலெழுத்து முதல் ஆறெழுத்து வரையிற் குறளடி இடங்கொண்டு வரும் என்றபடி.

### சிந்தடி

1294. ஏழெழுத் தென்ப சிந்தடிக் களவே;
ஈரெழுத் தேற்றம் அவ்வழி யான. ௩௬

### அளவடி

1295. பத்தெழுத் தென்ப நேரடிக் களவே;
ஒத்த நாலெழுத்து ஒற்றலங் கடையே. ௩௭

### நெடிலடி

1296. மூவைந் தெழுத்தே நெடிலடிக் களவே;
ஈரெழுத்து மிகுதலும் இயல்பென மொழிப.

### கழிநெடிலடி

1297. மூவா றெழுத்தே கழிநெடிற் களவே;
ஈரெழுத்து மிகுதலும் இயல்பென மொழிப.

### சீர்நிலை

1298. சீர்நிலை தானே ஐந்தெழுத் திறவாது. ௪0

---

***1294.*** **ஈரெழுத்தேற்றம் - அவ்வேழெழுத்துக்கு மேல் ஈரெழுத்து ஏற்றம். அவ்வழியான் - அவ்விடத்ததாகும்; எனவே, ஏழு முதல் ஒன்பதெழுத்து வரையிற் சிந்தடிக்கு அளவு என்பது.**

***1295.*** **ஒத்த நாலெழுத்து - அதற்குமேற் பொருந்திய நான்கெழுத்துக்களையுடையது. ஒற்றலங்கடை - ஒற்றெழுத்துக்கள் அல்லாதவிடத்து.**

***1296.*** **'ஈரெழுத்து மிகுதலும்' என்றமையால், நெடிலடிக்குப் பதினைந்து எழுத்து முதல் பதினேழு எழுத்துவரையிற் கொள்ளப்படும்.**

***1298.*** **சீர்நிலை - சீரினது நிலைமை. ஐந்தெழுத்து இறவாது - ஐந்தெழுத்தினும் மிகாது.**

வஞ்சிப்பாவில், சீர்நிலை

1299. [1]நேர்நிலை வஞ்சிக்கு ஆறும் ஆகும். ௪௯

சீரின் இயல்பு

1300. எழுத்தள வெஞ்சினும் சீர்நிலை தானே
குன்றலும் மிகுதலும் இல்லென மொழிப. ௫௦

செய்யுளில் எண்ணப்படாத எழுத்துக்கள்

1301. உயிரில் லெழுத்தும் எண்ணப் படாஅ
உயிர்த்திற மியக்கம் இன்மை யான. ௫௧

வஞ்சியடிக்கு இருசீர்

1302. வஞ்சி யடியே இருசீர்த் தாகும். ௫௨

வஞ்சியடிச் சீர்

1303. தன்சீர் எழுத்தின் சின்மை மூன்றே. ௫௩

1304. முச்சீ ரானும் வருமிடன் உடைத்தே. ௫௪

1299. நேர்நிலை வஞ்சி - சமநிலை வஞ்சியுள்; என்றது, இருசீரடி வஞ்சிப்பாவில் ஒரு வஞ்சிச் சீர்க்கு என்க. இது பேரா. கருத்து.

1301. உயிர்த்திற மியக்கம் இன்மையான் - உயிரின் திறமெனப்படும் இயக்கம் என்பது அவற்றிற்கு இல்லாமையான் என்பது.

1303. 'தன் சீர்' என்றது, இங்கே வஞ்சியடிக்குரிய வஞ்சிச்சீர் என்பது. சின்மை - சிறுமை நிலை. வஞ்சி யுரிச் சீரின் குறைந்த எழுத்து நிலை மூன்று என்றபடி.

1304. வஞ்சியடி முச்சீரானும் வருமிடன் உடையது என்க.

(பா - வே.) 1. நேர் நிரை.

**அசை கூன் ஆதல்**

1305. அசைகூன் ஆகும் அவ்வயி னான. ௪௭

**சீர் கூன் ஆதல்**

1306. சீர்கூன் ஆதல் நேரடிக் குரித்தே. ௪௮

**ஐவகையடியின் விரி**

1307. ஐவகை அடியும் விரிக்குங் காலை
மெய்வகை அமைந்த பதினேழ் நிலத்தும்
எழுபது வகையின் வழுவில வாகி
அறுநூற் றிருபத் தைந்தா கும்மே. ௪௯

---

**1305.** 'கூன்' உரிய சீருக்குமேல் வரும் தனிச் சொல். அவ்வயினான் - இருசீர் வஞ்சியடியுள்ளும் முச்சீர் வஞ்சியடியுள்ளும்.

**1306.** சீர் கூனாகும் என்றமையின், தளைவகைக்கும் இது பொருந்தி நிற்றல் வேண்டும் என்க. நேரடிக்கு உரித்து என்றமையால், நேரடி வருதற்குரிய வெண்பாவிலும் ஆசிரியத்திலும் கலியிலும் இது கொள்ளப்படும் என்பது. நேரடி எனினும் அளவடி எனினும் ஒக்கும்.

**1307.** ஐவகையடி என்றது; குறளடி, சிந்தடி, அளவடி, நெடிலடி, கழிநெடிலடி என்பன. பதினேழ் நிலத்தும் என்றது, நான்கெழுத்து முதல் இருபதெழுத்து வரையிற் பதினேழெழுத்தின் நிலைக்களமென்று முன்னர்க் கூறப்பட்டவை. எழுபது வகையாவது, இரண்டுசீர் தம்முட் புணரும் புணர்ச்சி எழுபது வகையாம் என்பர் உரையாசிரியர். அசைச்சீர், இயற்சீர், ஆசிரியவுரிச்சீர், வெண்சீர், வஞ்சி யுரிச்சீர் என ஐவகைச் சீரும் தம்முள் இரண்டுசீர் நின்று புணரவேண்டுதலின் பத்தாகி, தளைவகை ஏழான் உறழ்ந்து எழுபதாகும். தளைவகை ஏழாவன: நேரொன்றாசிரியத் தளை, நிரையொன்றாசிரியத் தளை, இயற்சீர் வெண்டளை, வெண்சீர் வெண்டளை, கலித்தளை, ஒன்றிய

1308. ஆங்ஙனம் விரிப்பின் அளவிறந் தனவே;
பாங்குற உணர்ந்தோர் பன்னுங் காலை. ௬0

**ஐவகையடியின் பயில்வு**

1309. ஐவகை யடியும் ஆசிரியக்கு உரிய. ௬௧

1310. விராஅய் வரினும் ஒரூஉநிலை இலவே. ௬௨

**அவற்றில், தளை**

1311. தன்சீர் வகையினும் தளைநிலை வகையினும்
இன்சீர் வகையின் ஐந்தடிக்கும் உரிய. ௬௩

---

வஞ்சித் தளை, ஒன்றாத வஞ்சித் தளை என்பன. இனி, அறுநூற்றிருபத்தைந் தென்றது, சீர் ஐந்திணையும் நிறுத்தி அவற்றை வருஞ் சீராக உறழும்வழி இருபத்தைந்தாகி, அவற்றை மூன்றாஞ் சீராக உறழும் வழி நூற்றிருபத்தைந்தாகி, அவற்றை நான்காஞ் சீராக உறழும் வழி அறுநூற்றிருபத்தைந்தாம் என்பர். அறுநூற்றிருபத்தைந் தென்னும் வகை, அளவடி வரையிற் கூறியபடி.

1308. ஆங்ஙனம் விரிப்பின் - அங்ஙனம் எனைநெடிலடி, கழிநெடிலடி என்பவற்றிற்கும் விரி கூறின். பன்னுங்காலை அளவிறந்தனவாம் என்க. பன்னுங் காலை - விரித்துக் கூறுங் காலை.

1309. ஆசிரியக்கு - ஆசிரியப் பாவிற்கு.

1310. அவை தனித்தனி வருதலேயன்றி விரவி வரினும் நீக்கு நிலைமை இல்லை என்பது.

1311. தன்சீர் வகையினும் - பாக்கள் தத்தஞ் சீர்நிலை வகையானும். இன்சீர் வகையின் - இனிய ஓசையொழுங்கின் சிறப்பினுல். சீரும் தளையும் இனிய ஓசை யொழுங்கின் நோக்குடையன என்பது இதனாற் பெறப்படும்.

1312. தன்சீர் உள்வழித் தளைவகை வேண்டா. ௫௪

**ஆசிரியத் தளையின் வகை**

1313. சீர்இயை மருங்கின் ஓரசை ஒப்பின்
ஆசிரியத் தளையென்று அறியல் வேண்டும். ௫௫

**வஞ்சித் தளைபற்றி ஒரு முடிபு**

1314. குறளடி முதலா அளவடி காறும்
உறழ்நிலை இலவே வஞ்சிக்கு என்ப. ௫௬

**வெண்பாவின் அடியும் தளையும்**

1315. அளவும் சிந்தும் வெள்ளைக்கு உரிய;
தளைவகை ஒன்றாத் தன்மை யான. ௫௭

**கலிப்பாவிற்குரிய அடி**

1316. அளவடி மிகுதி உளப்படத் தோன்றி
இருநெடில் அடியும் கலியிற்கு உரிய. ௫௮

---

*1312.* தளைவகை வேண்டா - இன்னோசைக்காக வேறு தளைவகை வேண்டுவதில்லை. 'சீர் தானே ஓசையைத் தரும்' என்பர், இளம்.

*1313.* ஒப்பின் - ஒத்துவரின்.

*1314.* உறழ்நிலை - வந்து பொருந்தும் நிலைமை. வஞ்சிக்கு - வஞ்சிச் சீர்க்கு.

*1315.* அளவும் சிந்தும் - அளவடியும் சிந்தடியும். வெள்ளைக்கு - வெண்பாவுக்கு. தளைவகை ஒன்றாத் தன்மை யான - வேற்றுத் தளைவகை வந்து கூடாத தன்மைகண்.

*1316.* அளவடியின மிகுதி உளப்படத் தோன்றி என்பது. மிகுதி என்றது, அளவடிக்கு உரிய பதனெழுத்திற்கு மேற்பட்ட நானெகெழுத்துக்களுன் மிகுன வெனப்படும் பதின் மூன்றெழுத்தும் பதினுன்கெழுத்தும் என்ப. இரு நெடிலடி என்றது, நெடிலடியும் கழிநெடிலடியும்.

**அதற்குத், தளை**

1317. நிரைமுதல் வெண்சீர் வந்துநிரை தட்பினும்
ஙரைநிலை யின்றே அவ்வடிக் கென்ப. ௫௯

1318. விராஅய தளையும் ஒரூஉநிலை இன்றே ௬0

**வெண்பா அடியும், ஆசிரிய அடியும்**

1319. இயற்சீர் வெள்ளடி ஆசிரிய மருங்கின்
நிலைக்குரி மரபின் நிற்கவும் பெறுமே. ௬௧

**ஐஞ்சீர் அடி**

1320. வெண்டளை விரவியும் ஆசிரியம் விரவியும்
ஐஞ்சீர் அடியும் உளவென மொழிப. ௬௨

**அறுசீர் அடி**

1321. அறுசீர் அடியே ஆசிரியத் தளையொடு
நெறிபெற்று வரூஉம் நேரடி முன்னே. ௬௩

**எழுசீர் அடி**

1322. எழுசீர் அடியே முடுகியல் நடக்கும். ௬௪

---

**1317.** நிரை தட்பினும் - நிரையொடு நிரை தளை கொள்ளினும். அவ்வடிக்கு என்றமையாற் கலிச்செய்யுளுக்கு என்பது பெறப்படும்.

**1319.** நிலைக்குரி மரபின் - பொருந்தி நிற்றற்குரிய மரபினால்.

**1321.** நேரடி முன் - நேரடிக்குப் பின்,

**1322.** முடுகியல் - முடுகியலில்,

### முடுகியல்

1323. முடுகியல் வரையார் முதல்ஈ ரடிக்கும். ௬௫

1324. ஆசிரிய மருங்கினும் வெண்பா மருங்கினும்
மூவகை அடியும் முன்னுதல் இலவே. ௬௬

### ஆசிரியப்பாவில், அடிபற்றிய முடிபுகள்

1325. ஈற்றயல் அடியே ஆசிரிய மருங்கின்
தோற்றம் முச்சீர்த் தாகும் என்ப. ௬௭

1326. இடையும் வரையார் தொடைஉணர் வோரே.

### கலிப்பாவிற்குச் சிந்தடி

1327. முச்சீர் முரற்கையுள் நிறையவும் நிற்கும். ௬௯

### வஞ்சிப்பாவின் ஈற்றடி

1328. வஞ்சித் தூக்கே செந்தூக்கு இயற்றே. ௭௰

---

**1323.** முதல் ஈரடிக்கும் என்றது, இதற்குமுன் எடுத்தோதிய ஐஞ்சீரடி அறுசீரடியாகிய இருவகை யடிக்கும்.

**1324.** மூவகையடியும் - முடுகியலடி என்ற முற்கூறிய மூவகை அடிகளும். முன்னுதல் இல — பொருந்துதல் இல. எனவே, கலிப்பாவினுள் நிற்கப்பெறும் என்பது.

**1325.** ஈற்றயல் அடி - ஈற்றடிக்கு அயலடி. தோற்றம்_ தோன்றுமிடத்து.

**1326.** இடையும் - செய்யுளிடையிலும். வரையார் - முச்சீரடியினை நீக்கார். தொடை - செய்யுளியல்பினை.

**1327.** முரற்கை என்றது, கலிச்செய்யுள்.

**1328.** வஞ்சி - வஞ்சிப் பாவின். தூக்கு - இறுதி. செந் தூக்கு இயற்று - முற்கூறிய ஆசிரியப்பாவின் இறுதியை ஒத்த இயல்புடையது.

### வெண்பாவின் ஈற்றடி

1329. வெண்பாட்டு ஈற்றடி முச்சீர்த் தாகும். ௭௧

1330. அசைச்சீர்த் தாகும் அவ்வயி னான. ௭௨

### அதன்கண், நேரசைச் சீர்

1331. நேரீற்று இயற்சீர் நிரையும் நிரைபும்
சேரற்று இறாஉம் இயற்கைய என்ப. ௭௩

### நிரையசைச் சீர்

1332. நிரையவண் நிற்பின் நேரும் நேர்பும்
வரைவின்று என்ப வாய்மொழிப் புலவர். ௭௪

### கலிப்பாவின் ஈற்றடி

1333. எழுசீர் இறுதி ஆசிரியம் கலியே. ௭௫

1334. வெண்பா இயலினும் பண்புற முடியும். ௭௬

---

1330. அசைச் சீர்த்து ஆகும் - அசைச் சீரினையுடைய தாகும். அவ்வயினான - அவ்வீற்றடியின் இறுதி.

1331. நேர் ஈற்று இயற்சீர் - வெண்பாவின் இறுதியடிக் கண் ஈற்றயற்சீராய் வந்த நேரீற்று இயற்சீர் என்க. இறாஉம் - தனைகொண்டு முடியும்.

1332. அவண் - அவ் வீற்றயலில்.

1333. எழுசீர் இறுதி ஆசிரியம் - ஈற்றடி நாற்சீரும் அதன் அயலடி முச்சீருமென எழுசீர் இறுதியினையுடைய ஆசிரியப்பாவின் முடிபு. கலி - கலிப்பாவின் இறுதியுமாகும்.

1334. வெண்பா இயலினும் - இறுதியடி முச்சீராய் வரும் வெண்பாவின் இயல்பினும். முடியும் - கலிப்பாவின் இறுதி முடியும்.

## ௬. யாப்பு

1335. எழுத்து முதலா ஈண்டிய அடியிற்
குறித்த பொருளை முடிய நாட்டல்
யாப்பென மொழிப யாப்பறி புலவர். ௭௭

### அதன் ஏழு பகுதிகள்

1336. பாட்டு,உரை, நூலே, வாய்மொழி, பிசியே,
அங்கதம், முதுசொல்லோடு அவ்வேழ் நிலத்தும்
வண்புகழ் மூவர் தண்பொழில் வரைப்பின்
நாற்பெயர் எல்லை யகத்தவர் வழங்கும்
யாப்பின் வழியது என்மனார் புலவர். ௭௮

---

**1335.** எழுத்து முதலா ஈண்டிய அடியின் - எழுத்து முதலாக அசை சீர் அடி என ஈண்டுத்தொடர்ந்து முடிந்த அடியினால். நாட்டல் - நிறுத்தி விளங்கவைத்தல்.

**1336.** வாய்மொழி - மந்திரம். பிசி - உவமையை அடிப் படையாகக் கொண்டு தோன்றும் விடுகதைப் பாட்டு வகை. அங்கதம் - வசைப்பாட்டு வகை. முதுசொல் - பழமொழி வகை. ஏழ் நிலத்தும் - ஏழு வகை அடிப்படையினாலும். மூவ ரென்றது, சேர சோழ பாண்டியர். 'தண்பொழில் வரைப்பின் நாற்பெயர் எல்லையகத்தவர்' என்றது, தமிழ்நாட்டவர் என்றற்கு. இனிய தமிழ் நாட்டின் இடமாகிய வடவேங்கடம் தென்குமரியாறு குண குடகடல் என்னும் நாற்பெயர் எல்லையுட் பட்ட தமிழ்நாட்டிலுள்ளார் என்பது அதன் பொருள். யாப் பின் வழியது - முற்கூறிய யாப்பென்பது என்க. எனவே யாப்பு என்பது, பாட்டுயாப்பு, உரையாப்பு, நூல்யாப்பு, மொழியாப்பு, பிசியாப்பு, அங்கதயாப்பு, பழமொழியாப்பு எனத் தமிழர் வழங்கும் எழுவகை யாப்புக்களாய் வரும் என்பது கருத்து.

## எ. மரபும் தூக்கும்

### சொன் மரபு

1337. மரபே தானும்,
நாற்சொல் இயலான் யாப்புவழிப் பட்டன்று.

### அகவ லோசை

1338. அகவல் என்பது ஆசிரி யம்மே. ௮0

### செப்ப லோசை

1339. அஃதான் றென்ப வெண்பா யாப்பே. ௮௧

### துள்ள லோசை

1340. துள்ளல் ஓசை கலியென மொழிப. ௮௨

### தூங்க லோசை

1341. தூங்கல் ஓசை வஞ்சி யாகும். ௮௩

---

**1337.** மரபு - அங்ஙனம் வழங்கும் மரபு. நாற்சொல் இயலான் - இயற்சொல், திரிசொல், திசைச்சொல், வடசொல் என்னும் நால்வகைச் சொற்களின் வழக்குக்களால். யாப்பு வழிப்பட்டன்று - யாப்பின் வழிப்பட்டது.

**1338.** அகவல் - அகவலோசை. ஆசிரியம்மே - ஆசிரிப் பாவிற்கு உரியது.

**1339,** அஃதான்று - அஃதன்று ; அவ்வகவலோசை யன்று. வெண்பா யாப்பு - வெண்பாவாக யாக்கப்படுவது. எனவே, செப்பலோசை வெண்பாவுக்குரியது என்றபடி. அகவலும் செப்பலும் இனமுடைமையால், அஃதன்றென்பதனுல் உணர்த்தினர், பேரா. உரை கருதுக.

**1340.** கலி என - கலிப்பாவிற்குரியதென. துள்ள லோசையும் மேல் நூற்பாவில் வருந் தூங்கலோசையும் செய்யுள் வழக்குமட்டும் உடையதென்பர், பேரா,

### மருட்பாவிற்குரிய ஓசை முடிபு

1342. மருட்பா ஏனை இருசா ரல்லது
தான்இது என்னுந் தனிநிலை இன்றே. ௮௪

1343. அவ்வியல் அல்லது பாட்டாங்குக் கிளவார்.

### தூக்கின் இயல்பு

1344. தூக்கியல் வகையே ஆங்கென மொழிப. ௮௬

## ௮. தொடை

### அதன் வகை

1345. மோனை எதுகை முரணே இயைபென
நால்நெறி மரபின தொடைவகை என்ப. ௮௭

1346. அளபெடை தலைப்பெய ஐந்து மாகும். ௮௮

1347. பொழிப்பும் ஒரூஉம் செந்தொடை மரபும்
அமைத்தனர் தெரியின் அவையுமா ருளவே.

---

1342. மருட்பா - மருட்பா என்னும் பா வகை. ஏனை இருசார் அல்லது - ஓசை வகையில் ஆசிரியம் வெண்பா என்னும் ஏனை இருவகைப் பாவின் அகவலோசை செப்பலோசை என்னும் வகையினவல்லது.

1343. பாட்டு - வேறு பாட்டோசை வகை.

1344. ஆங்கென - அந்நான்கு வகையென.

1345. மோனைத் தொடை, எதுகைத் தொடை, முரண் தொடை, இயைபுத் தொடையென எனபது.

1346. அளபெடை - அளபெடைத் தொடை. தலைப் பெய - கூட.

1347. பொழிப்பும், ஒரூஉவும், செந்தொடை மரபும் - பொழிப்புத் தொடை, ஒரூஉத் தொடை, செந்தொடை என்னும் இலக்கணமும். தெரியின் அவையுமாருளவே - ஆராயுங்கால் அவையும் தொடை மரபின் அடங்கும்.

1348. நிரனிறுத்து அமைத்தலும், இரட்டை யாப்பும்
மொழிந்தவற்று இயலான் முற்றும் என்ப. ௯௦

**மோனைத் தொடை**

1349. அடிதொறுந் தலையெழுத்து ஒப்பது மோனை.

**எதுகைத் தொடை**

1350. அஃதொழித்து ஒன்றின் எதுகை யாகும். ௯௨

**அவற்றிற்குக், கிளையெழுத்து இயைபு**

1351. ஆயிரு தொடைக்கும் கிளையெழுத்து உரிய.

**முரண் தொடை**

1352. மொழியினும் பொருளினும் முரணுதல்
[முரணே. ௯௪

**இயைபுத் தொடை**

1353. இறுவாய் ஒன்றல் இயைபின் யாப்பே. ௯௫

---

1348. நிரனிறுத்தமைத்தல் என்றது நிரனிறைத் தொடை. இரட்டையாப்பு என்றது, இரட்டைத்தொடை. மொழிந்தவற்றியலான் முற்றும் எனப - முன்னர் மொழிந்த தொடைகளின இயல்போடமைந்து தொடைகளின் வகை முற்றும் என்ப.

1349. தலை எழுத்து - முதலெழுத்து.

1350 அஃதொழித்து ஒன்றின் - அடிதோறும் அம் முதலெழுத்து நீங்கலாக இரண்டாம் எழுத்து ஒத்துவரின்.

1351. கிளையெழுத்து உரிய - இனவெழுத்து முதலி யனவும் ஒத்துவருதற்குரியன.

1352. மொழியினும் பொருளினும் - சொல்லானும் பொருளானும்.

1353. இறுவாய் ஒன்றல் - அடிகளின் ஈறு ஒத்துநிற்றல்.

**அளபெடைத் தொடை**

1354. அளபெழின் அவையே அளபெடைத்
[தொடையே. ௧௬

**பொழிப்புத் தொடை**

1355. ஒருசீர் இடையிட் டெதுகை யாயின்,
பொழிப்பென மொழிதல் புலவ ராறே. ௧௭

**ஒரூஉத் தொடை**

1356. இருசீர் இடையிடின் ஒரூஉவென மொழிப.

**செந்தொடை**

1357. சொல்லிய தொடையொடு வேறுபட் டியலின்
சொல்லியல் புலவரது செந்தொடை என்ப. ௧௯

**தொடைகளின் விரி**

1358. மெய்பெறு மரபின் தொடைவகை தாமே
ஐயீ ராயிரத் தாறைஞ் ஞூற்றொடு
தொண்டுதலை யிட்ட பத்துக்குறை எழுநூற்
றொன்பஃ தென்ப உணர்ந்திசி னோரே. ௨00

---

1354. அளபெழின் - எழுத்துக்களின் மாத்திரை நீளின்.
1355. இடையிட்டு - இடைவிட்டு. புலவர் ஆறு - புலவரது நெறி.

1357. சொல்லிய தொடையொடு - மேற் சொல்லிய எல்லாத் தொடைவகையோடும். இயலின் - இயற்கை நெறியாய்ச் செல்லின. சொலலிபல - சொல்லியல்பு மாட்சிமைப் பட்ட.

1358. ஐயீராயிரம் - பத்தாயிரம். ஆறைஞ்ஞூறு - மூவாயிரம். தொண்டுதலை யிட்ட - ஒன்பது கூட்டிய, பத்துக் குறை எழுநூறறொருனபஃது - அறுநூறறுத் தொண்ணூற றொன்பது. ஆகப் பதின்மூவாயிரத்து எழுநூற்றெட்டு. இது தொடை இலககணத்தின விரிவு கூறியபடி. இதன் விளக்கம் விரிந்த உரைகளிற் காணப்படும்.

### புறனடை

1359. தெரிந்தனர் விரிப்பின் வரம்பில பல்கும். ௧௦௧

1360. தொடைவகை நிலையே ஆங்கென மொழிப.

## ௯. நோக்கு

1361. மாத்திரை முதலா அடிநிலை காறும்
நோக்குதற் காரணம் நோக்கெனப் படுமே.

## ௧௦. பா

### அதன் வகை

1362. ஆசிரியம் வஞ்சி வெண்பாக் கலியென
நால்இயற் றென்ப பாவகை விரியே. ௧௦௪

### அதன்கண் உரைக்கப்படும் பொருள்

1363. அந்நிலை மருங்கின் அறமுத லாகிய
மும்முதற் பொருட்கும் உரிய என்ப. ௧௦௫

### நால்வகைப் பாவும் இருவகையில் அடங்குதல்

1364. பாவிரி மருங்கினைப் பண்புறத் தொகுப்பின்
ஆசிரி யப்பா வெண்பா என்றாங்கு
ஆயிரு பாவினுள் அடங்கும் என்ப. ௧௦௬

---

**1359.** இன்னும் இவற்றை ஆராய்ந்து விரிவுசெய்யின் வரம்பில்லாதனவாய்ப் பலவாகும் என்பது.

**1361.** நோக்குதற் காரணம் நோக்கு எனப்படும்-கற்பார் கண்டு மகிழ்தற்குரிய காரணமாகிய இனிமைத் திறம் அமைந்திருப்பது 'நோக்கு' எனப்படும்.

**1363.** அற முதலாகிய மும்முதற் பொருள் என்றது, அறம் பொருள் இன்பம்.

**1364.** என்றாங்கு - என்று.

**அவை அடங்கும் வகை**

1365. ஆசிரிய நடைத்தே வஞ்சி; ஏனை
வெண்பா நடைத்தே கலியென மொழிப. ௧0௭

**வாழ்த்துக்கு நான்கு பாக்களும் உரியன**

1366. வாழ்த்தியல் வகைநாற் பாவிற்கும் உரித்தே.

**புறநிலை வாழ்த்து**

1367. வழிபடு தெய்வம் நிற்புறங் காப்பப்
பழிதீர் செல்வமொடு வழிவழி சிறந்து
பொலிமின் என்னும் புறநிலை வாழ்த்தே
கலிநிலை வகையும் வஞ்சியும் பெறாஅ. ௧0௯

**வாயுறை வாழ்த்து முதலியன**

1368. வாயுறை வாழ்த்தே, அவையடக் கியலே,
செவியறி வுறூஉவென அவையும் அன்ன.

**அவற்றுள், வாயுறை வாழ்த்து**

1369. வாயுறை வாழ்த்தே, வயங்க நாடின்
வேம்புங் கடுவும் போல வெஞ்சொல்

---

**1365.** ஆசிரிய நடைத்து - ஆசிரியப்பாவின் நடையினை யுடையது.

**1366.** வாழ்த்தியல் வகை என்றது, வாழ்த்துவகை.

**1367.** நிற புறங்காப்ப - நின்னைப் பாதுகாக்க. பொலி மின் - விளங்குமின். கலிநிலை வகையும் - கலிப்பாவினும். பெறாஅ - வருதற்கு இடம் பெறா. எனவே, ஆசிரியத்தினும் வெண்பாவினும் இவையிரண்டும் புணர்ந்த மருட்பாவினும் அவை வரும் என்பது.

**1368.** அன்ன - கலியினும் வஞ்சியினும் வரப்பெறா; ஏனையவற்றின் வரும்.

தாங்குதல் இன்றி வழிநனி பயக்கும்என்று
ஓம்படைக் கிளவியின் வாயுறுத் தற்றே. ௧௧௧

**அவையடக் கியல்**

1370. அவையடக் கியலே, அரில்தபத் தெரியின்
வல்லா கூறினும் வகுத்தனர் கொண்மின்என்று
எல்லா மாந்தர்க்கும் வழிமொழிந் தன்றே. ௧௧௨

**செவியுறை**

1371. செவியுறை தானே,
பொங்குதல் இன்றிப் புரையோர் நாப்பண்
அவிதல் கடன்எனச் செவியுறுத் தன்றே. ௧௧௩

---

**1369.** வயங்க நாடின் - விளங்க ஆராய்ந்தால். வேம்பும் கடுவும்போல என்றது, கைப்புகசும் காரத்துக்கும். தாங்குதலின்றி - பொறுத்தலின்றும்படி. வழி நனி பயக்கும் என்று - பின்னால் நன்மை மிகப் பயக்கும் என்னுங் கருத்தோடு. ஓம்படைக் கிளவியின் - பாதுகாத்தற்குரிய கூற்றால். வாய் உறுத்தற்று - உண்மையை அறிவுறுத்துதல் ஆகும்.

**1370.** அரில் தபத் தெரியின் - குற்றம் அற ஆராயின். வல்லா கூறினும் - திறனல்லாதன கூறினும். வகுத்தனர் கொண்மின - பாகுபடுத்தி ஆராய்ந்து கொள்ளுமின். வழிமொழிந்தன்று - வழிபாடு மொழிந்த வகையினையுடையது.

**1371.** பொங்குதலின்றி - சினத்தலின்றி. புரையோர் நாப்பண் - உயர்ந்தார் நடுவில். அவிதல் - அடங்கி யொழுகுதல். செவியுறுத்தன்று - செவியறிவுறுத்த வகையினையுடையது.

### பாக்களிற், சிலவற்றின் இயல்பு

1372. ஒத்தா ழிசையும், மண்டில யாப்பும்,
குட்டமும் நேரடிக்கு ஒட்டின என்ப. ௧௧௪

1373. குட்டம் எருத்தடி உடைத்து மாகும். ௧௧௫

1374. மண்டிலம் குட்டம் என்றிவை யிரண்டும்
செந்தூக்கு இயல என்மனார் புலவர். ௧௧௬

### வெண்பாவின் வகைகள்

1375. நெடுவெண் பாட்டே, குறுவெண் பாட்டே,
கைக்கிளை பரிபாட்டு அங்கதச் செய்யுளோடு,
ஒத்தவை யெல்லாம் வெண்பா யாப்பின. ௧௧௭

---

1372. ஒத்தாழிசையும் - ஒத்தாழிசை என்னும் கலியுறுப்பும்; மண்டிலயாப்பு என்றது, நாற்சீருடைய அடி. குட்டம் என்றது, நாற்சீரிற் குறைந்து பாவின் இடைக்கண் வரும் அடி. நேரடிக்கு ஒட்டின - பாக்களில் இவை அளவடிக்கண் இசைந்து நின்றன.

1373. எருத்தடி - ஈற்றயலடிக்கண். உடைத்துமாகும் - வருதலுடையதுமாகும்.

1374. செந்தூக்கு இயல - ஆசிரியப்பாவின் இயல்பின.

1375. நெடுவெண் பாட்டு - அளவடியின் நெடிய பாட்டு. குறுவெண் பாட்டு - அளவடியின் குறிய பாட்டு. கைக்கிளை - கைக்கிளைப் பொருளுடைய பாட்டு. பரிபாட்டு - தனி வெண்பாவாக வருதலின்றிப் பல உறுப்புக்களோடுந் தொடர்ந்த நடையினையுடைய பாட்டு. அங்கதம் - வசைப்பொருளுடைய பாட்டு. 'ஒத்தவை' என்பது, அளவானும் பொருளானும் இனத்தானும் வேறுபடுக்கப்படாத சமனிலை வெண்பாக்கள் என்பர், இளம்.

### அவற்றுட், கைக்கிளைப் பாட்டு

1376. கைக்கிளை தானே வெண்பா வாகி
ஆசிரிய இயலான் முடியவும் பெறுமே. ௧௧௮

### பரிபாட்டு

1377. பரிபா டல்லே தொகைநிலை வகையின்
இதுபா என்னும் இயல்நெறி யின்றிப்
பொதுவாய்நிற் றற்கும் உரித்தென மொழிப.

### பரிபாடலின் உறுப்புக்கள்

1378. கொச்சகம், அராகம், சுரிதகம், எருத்தொடு
செப்பிய நான்குந் தனக்குஉறுப் பாகக்
காமங் கண்ணிய நிலைமைத் தாகும். ௧௨௦

### அதன்கண் பயிலும் அடிகள் சில

1379. சொற்சீர் அடியும், முடுகியல் அடியும்
அப் பா நிலைமைக்கு உரிய வாகும். ௧௨௧

### அவற்றுட், சொற்சீரடி

1380. கட்டுரை வகையான் எண்ணொடு புணர்ந்தும்,
முட்டுஅடி இன்றிக் குறைவுசீர்த் தாகியும்,

---

1377. பரிபாடல்லே - பரிபாடல். தொகைநிலை வகையின் - ஒருங்கு தொகக தன்மை வகையால். இதுபா என்னும் இயல்நெறி இன்றி - இஃது இனன பா எனனும் இலக்கண நெறியின்றி.

1378. இந்நூற்பா பரிபாடற்குரிய உறுப்பும் பொருளும் உணர்த்திறறு.

1379. அப் பா என்றது, பரிபாடல். அடுத்த நூற்பாவால் சொறசீரடியின் இயலபு விளங்கும்.

1380. கட்டுரை வகையான் - கட்டுரைத்துக் கூறும் வகையினுல். சீர் குறைந்ததாயினும் ஓசை முட்டுதலில்லாதது என்றற்கு, 'முட்டடியின்றி' எனப்பட்டது. ஒழியசை - செய

ஒழியசை யாகியும், வழியசை புணர்ந்தும்
சொற்சீர்த்து இறுதல் சொற்சீர்க்கு இயல்பே.

**அங்கதப் பாட்டு**

1381. அங்கதந் தானே அரில்தபத் தெரியின்
செம்பொருள் கரந்தது எனஇரு வகைத்தே.

**அதன் செம்பொரு ளங்கதம்**

1382. செம்பொரு ளாயின் வசையெனப் படுமே.

**பழிகரப் பங்கதம்**

1383. மொழிகரந்து சொல்லின்அது பழிகரப் பாகும்.

**பொதுவாகச், செய்யுளின் வகை**

1384. செய்யுள் தாமே இரண்டுஎன மொழிப. ௧௨௬

---

யுள் நீங்கலாக அதன் இறுதிக்கண் எஞ்சித் தோன்றும் அசை. வழியசை - தனிச்சொல்லாய் நிற்கும் அசை. சொற்சீர்த்து இறுதல் - சொல்லே சீராந்தன்மை பெற்று முடிதல். சொற சீர்க்கு - சொற்சீரடிக்கு.

*1381.* செம்பொருள் - செம்பொருள் அங்கதம். கரந்தது - பழிகரப்பு அங்கதம்.

*1382.* செம்பொருளாயின் - செம்பொருளங்கதமாயின். வசையையும் மறையாது கூறுதலால் செம்பொருள் எனப் பட்டது.

*1383.* மொழி கரந்து சொல்லின் - வசையை அதற்குரிய மொழி கரந்து சொல்லின்.

*1384.* இரண்டென்றது, மேல் நூற்பாக்களில் வரும் செவியுறைச் செய்யுள், அங்கதச் செய்யுள் என்பவற்றை,

அவற்றுள், செவியுறைச் செய்யுள்

1385. புகழொடும் பொருளொடும் புணர்ந்தன் றாயின்,
செவியுறைச் செய்யுள் அதுஎன மொழிப. ௧௨௭

அங்கதச் செய்யுள்

1386. வசையொடும் நசையொடும் புணர்ந்தன் றாயின்,
அங்கதச் செய்யுள் என்மனார் புலவர். ௧௨௮

கலிப்பாவின் வகை

1387. ஒத்தா ழிசைக்கலி, கலிவெண் பாட்டே,
கொச்சகம், உறழொடு கலிநால் வகைத்தே.

அவற்றுள், ஒத்தாழிசைக் கலி

1388. அவற்றுள்,
ஒத்தா ழிசைக்கலி இருவகைத் தாகும். ௧௩௦

அவற்றுள், நான்குறுப்புடன் வரும் ஒத்தாழிசை

1389. இடைநிலைப் பாட்டுத், தரவு, போக்கு
[அடையென
நடைபயின் றொழுகும் ஒன்றென மொழிப.

---

1385. புணர்ந்தன்றாயின் - புணர்ந்ததாயின்.

1386. நசை - அன்பு.

1387. ஒத்தாழிசைக் கலி எனவும், கலிவெண்பாட்டு எனவும், கொச்சகக் கலி எனவும், உறழ்கலி எனவும் கலிச் செய்யுள் நான்கு வகைப்படும் என்பது.

1389. 'இடைநிலைப் பாட்டு' என்பது, தாழிசை. 'போக்கு' என்பது சுரிதகம். 'அடை' என்பது, அடைநிலைக் கிளவி; அது தனிச்சொல். நடை பயின்று ஒழுகும் - தொடர்பு கொண்டு நடக்கும், ஒன்று - இருவகை ஒத்தாழிசைக் கலியுள் ஒன்று,

**அவ் வுறுப்புக்களுள், தரவு**

1390. தரவே தானும் நாலடி இழிபாய்
ஆறி ரண்டுயர்பு எறவும் பெறுமே. ௧௩௨

**இடைநிலைப் பாட்டு என்னும் தாழிசை**

1391. இடைநிலைப் பாட்டே,
தரவகப் பட்ட மரபின என்ப. ௧௩௩

**அடைநிலைக் கிளவி என்னும் தனிச்சொல்**

1392. அடைநிலைக் கிளவி, தாழிசைப் பின்னர்
நடைநவின் றொழுகும் ஆங்கென மொழிப.

**போக்கியல் என்னும் சுரிதகம்**

1393. போக்கியல் வகையே வைப்புஎனப் படுமே.

1394. தரவியல் ஒத்தும், அதனகப் படுமே
புரைதீர் இறுதி நிலையுரைத் தன்றே. ௧௩௬

---

1390. இழிபாய் - சிறுமையாய்.

1391. தரவு அகப்பட்ட மரபின - தரவினுஞ் சுருங்கிய இயல்புடையன.

1393. போக்கியல் வகை - 'போக்கு' என்னும் சுரிதக இலக்கண வகை. வைப்பு எனப்படும் - வைப்பு என்னும் வேறொரு பெயரானுங் கூறப்படும்.

1394. தரவியல் ஒத்தும் - அது தரவோடொத்த அளவினையுடையதாகியும். அதனகப்படும் - தரவினுஞ் சுருங்கிய அளவினையுடையதாகியும். புரைதீர் இறுதி நிலை உரைத்தன்று - குற்றந் தீர்ந்த கலிச்செய்யுளின இறுதி நிலையை உரைத்ததாகும்.

**இருவகை ஒத்தாழிசைக் கலியுள் மற்றொன்று**

1395. ஏனை ஒன்றே,
தேவர்ப் பராஅய முன்னிலைக் கண்ணே. ௧௩௭

**அம் மற்றொன்றின் வகை**

1396. அதுவே,
வண்ணகம் ஒருபோகு எனஇரு வகைத்தே.

**அவற்றுள், வண்ணக ஒத்தாழிசை**

1397. வண்ணகந் தானே,
தரவே தாழிசை எண்ணே வாரம்என்று
அந்நால் வகையின் தோன்றும் என்ப. ௧௩௯

**அதன் உறுப்புக்களுள், தரவு**

1398. தரவே தானும்,
நான்கும் ஆறும் எட்டும் என்ற
நேரடி பற்றிய நிலைமைத் தாகும். ௧௪0

**தாழிசை**

1399. ஒத்தழூன் றாகும் ஒத்தா ழிசையே. ௧௪௧

---

**1395.** ஏனை ஒன்று என்றது, இருவகை ஒத்தாழிசைக் கலியுள் மற்றொன்று. தேவர்ப் பராஅய முன்னிலைக் கண்ணே - முன்னிலை யிடமாகத் தேவரைப் பரவும் பொருளையுடையது.

**1396.** வண்ணகம் - வண்ணகவொத்தாழிசைக் கலி. ஒருபோகு - கொச்சக ஒருபோகு முதலியன.

**1397.** அந் நால்வகையின் - அந் நான்கு உறுப்புக்களோடு.

**1399.** ஒத்து - தம்முட் பொருள் ஒத்து. ஒத்தாழிசை - தம்முள் அளவு ஒத்த தாழிசையாகிய ஒத்தாழிசை என்பது.

1400. தரவின் சுருங்கித் தோன்றும் என்ப. கசஉ

சுரிதகம்

1401. அடக்கியல் வாரம் தரவொடு ஒக்கும். கசங

எண்

1402. முதல்தொடை பெருகிச் சுருங்குமன் எண்ணே.

அதற்கு, ஒரு முடிபு

1403. எண்இடை ஒழிதல் ஏதம் இன்றே
சின்னம் அல்லாக் காலை யான. கசரு

இனி, அம் மற்றொன்றின் பிறிதொன்றாகிய ஒருபோகின் வகை

1404. ஒருபோகு இயற்கையும் இருவகைத் தாகும்.

அவற்றின் பெயர்

1405. கொச்சக வொருபோகு, அம்போ தரங்கம் [என்று
ஒப்ப நாடி உணர்தல் வேண்டும். கசஎ

---

*1400.* தோன்றும் - ஒத்தாழிசை யுறுப்புத் தோன்றும்.

*1401.* அடக்கியல் வாரம் - அடக்கியலாகிய பகுதி; என்றது, சுரிதகம்.

*1402.* எண் என்னும் உறுப்பு, முதலில் தொடுக்கப்படும் பகுதி பெருகிப் பின் சுருங்கிவரும் எனறபடி. தொடை - தொடுக்கப்படும் பகுதி.

*1403.* எண் இடை ஒழிதல் - எண் என்னும் உறுப்பு இடையில் வருதலின்றி நிற்றல். ஏதம் இன்று - குற்றமில்லை. சின்னம் என்பதைத் தனிச்சொல் என்பர், இளம்.

### அவற்றுட், கொச்சக ஒருபோகு

1406. தரவின் றாகித் தாழிசை பெற்றும்,
தாழிசை இன்றித் தரவுடைத் தாகியும்,
எண்ணிடை யிட்டுச் சின்னங் குன்றியும்,
அடக்கியல் இன்றி அடிநிமிர்ந் தொழுகியும்,
யாப்பினும் பொருளினும் வேற்றுமை யுடையது
கொச்சக வொருபோகு ஆகும் என்ப. கசஅ

### அதன் அடி வரையறை

1407. ஒருபான் சிறுமை இரட்டியதன் உயர்பே. கசக

### அம்போதரங்க ஒருபோகின் அடி வரையறை

1408. அம்போ தரங்கம் அறுபதிற் றடித்தே;
செம்பால் வாரம் சிறுமைக் கல்லை. கடுO

1406. அடக்கியலின்றி அடிநிமிர்ந்து ஒழுகியும் - சுரிதக மின்றித் தரவு தானே தொடர்ந்து சென்று முடியினும். பொருளினும் வேறுமையுடையது என்றார், கடவுள் வாழ்த்துப் பொருண்மையின்றிக் காமப்பொருளாக வரினும் என்றற்கு.

1407. ஒருபான் என்றது, பத்து என்னும் எண். ஒருபான் சிறுமை - பத்து அடிச் சிறுமையும். இரட்டியதன் உயர்பு - அதனை இரட்டியதனால் வரும் இருபதடிப் பெருமையும்; இன்னனம் உடையது, முற்கூறிய கொச்சக ஒருபோகு என்பது.

1408. அறுபதிற் றடித்து - அறுபதடிப் பெருமை யுடையது. செம்பால் வாரம் - அதன சமபாதிப் பகுதி; என்றது, முப்பதடி.

### அதன் உறுப்புக்கள்

1409. எருத்தே கொச்சகம் அராகம் சிற்றெண்
அடக்கியல் வாரமொடு அந்நிலைக்கு உரித்தே.

### கலிவெண்பா

1410. ஒருபொருள் நுதலிய வெள்ளடி இயலால்
திரிபின்றி வருவது கலிவெண் பாட்டே. ௧௫௨

### கொச்சகக் கலி

1411. தரவும் போக்கும் பாட்டிடை மிடைந்தும்,
ஐஞ்சீர் அடுக்கியும் ஆறுமெய் பெற்றும்,
வெண்பா இயலான் வெளிப்படத் தோன்றும்
பாநிலை வகையே கொச்சகக் கலியென
நூல்நவில் புலவர் நுவன்றறைந் தனரே. ௧௫௩

---

**1409.** எருத்து என்றது இங்கே தரவு. அந்நிலைக்கு - அம்போதரங்கம் என்னும் கலிப்பாவிற்கு.

**1410.** ஒருபொருள் நுதலிய - பாட்டு முழுமையும் ஒரு கருத்துப் பற்றித் தொடர்ந்து கூறப்பட்ட. வெள்ளடியியலால் - வெண்பாவடியின் இயல்பினால். திரிபின்றி - அவ்வியல்பு திரிபின்றி.

**1411.** இடை மிடைந்தும் - இடையிற் பொருந்தி நின்றும. ஆறுமெய் என்றது, தரவு, தாழிசை, தனிச்சொல், சுரிதகம், சொற்சீரடி, முடுகியலடி என்னும ஆறு உறுப்புக்கள் என்பர், இளம். நூல் நவில் - செய்யுளிலக்கணம பயின்ற. நுவன்று அறைந்தனர் - சுட்டிக் கூறி வரையறைப்படுத்தினர்.

### உறழ் கலி

1412. கூற்றும் மாற்றமும் இடையிடை மிடைந்தும்
போக்கின் றாகல் உறழ்கலிக்கு இயல்பே. ௧௫௪

## ௧௧. அளவியல்

### ஆசிரியப்பாவின் அடியளவு

1413. ஆசிரியப் பாட்டின் அளவிற்கு எல்லை
ஆயிரம் ஆகும்; இழிபுமூன் றடியே. ௧௫௫

### வெண்பாவின் அடியளவு

1414. நெடுவெண் பாட்டே முந்நால் அடித்தே;
குறுவெண் பாட்டின் அளவெழு சீரே. ௧௫௬

### அங்கதப்பாட்டின் அடியளவு

1415. அங்கதப் பாட்டுஅவற் றளவோ டொக்கும்.

### அளவு வரையறை யில்லாதன

1416. கலிவெண் பாட்டே, கைக்கிளைச் செய்யுள்,
புறநிலை, வாயுறை, செவியறிவு என்றிவை
தொகுநிலை மரபின் அடியில என்ப. ௧௫௮

---

**1412.** கூற்றும் அதற்கு மாற்றமும் எனக. போக்கு இன்றாகல் - கரிதகமின்றி முடிதல.

**1413.** எல்லை - பெருமையாகிய எல்லை. இழிபு - சிறுமை யாகிய எல்லை.

**1414.** இந் நூற்பா வெண்பாவிற்கு அடிவரையறை கூறிற்று.

**1415.** அவற்று - முன் நூற்பாவிற் கூறிய வெண்பாக் களின்.

**1416.** கைக்கிளைச் செய்யுள் - கைக்கிளைப் பொருளுடைய பாட்டு. தொகுநிலை மரபின - தொகுத்துக் கூறுந் தன்மை முறையில். அடி இல - வரையறைப்பட்ட அடியில்லாதன.

**புறநிலைவாழ்த்து முதலியவற்றிற்கு முடிபு**

1417. புறநிலை வாயுறை செவியறி வுறூஉஎனத்
திறநிலை மூன்றுந் திண்ணிதின் தெரியின்
வெண்பா இயலினும் ஆசிரிய இயலினும்
பண்புற முடியும் பாவின என்ப. கஙகூ

**பரிபாடலின் அளவு**

1418. பரிபாட் டெல்லை
நாலீ ரைம்பது உயர்புஅடி யாக,
ஐயைந் தாகும் இழிபுஅடிக் கெல்லை. கசO

1419. அளவியல் வகையே அனைவகைப் படுமே. கசக

**அடி வரையறை யில்லாதன**

1420. எழுநிலத் தெழுந்த செய்யுள் தெரியின்,
அடிவரை இல்லன ஆறென மொழிப. கசஉ

**அவற்றின் வகை**

1421. அவைதாம்,
நூலி னான, உரையி னான,
நொடியொடு புணர்ந்த பிசியி னான,
ஏது நுதலிய முதுமொழி யான,

---

1418. நால் ஈரைம்பது - நானூறு.

1419. அனைவகைப்படும் - அவ்வகைப்படும்.

1420. எழுநிலத் தெழுந்த செய்யுள் என்றது, பாட்டு, உரை, நூல், வாய்மொழி, பிசி, அங்கதம், முதுசொல் என முன்பு (செய். எஅ) கூறியவற்றை. அவற்றுள் பாட்டு ஒரு வகையான் அடிவரையறையுடையன. ஏனை அடிவரையறை யில்லன ஆறு என்பது.

1421. அவைதாம் என்றது, முன் நூற்பாவில் அடிவரை யறையில்லாதன எனப்பட்ட ஆறு வகையினையும். நொடி யொடு - மறைத்தற் குறிப்போடு. விடுகதையை நொடிக்கதை

மறைமொழி கிளந்த மந்திரத் தான,
கூற்றிடை வைத்த குறிப்பி னான. ௧௪௫

**அவற்றுள், நூல்**

1422. அவற்றுள்,
நூலெனப் படுவது நுவலுங் காலை,
முதலும் முடிவும் மாறுகோ ளின்றித்
தொகையினும் வகையினும் பொருண்மை
[காட்டி
உண்ணின் றகன்ற உரையொடு பொருந்தி
நுண்ணிதின் விளக்கல் அதுவதன் பண்பே.

**அதன் வகை**

1423. அதுவே தானும் ஈரிரு வகைத்தே. ௧௪௬

**அவற்றின் பெயரும் இயல்பும்**

1424. ஒருபொருள் நுதலிய சூத்திரத் தானும்,
இனமொழி கிளந்த ஓத்தி னானும்,

---

எனவுங் கூறுப. ஏது நுதலிய - காரணம் புலப்படக் கூறிய. மறைமொழி - கருத்து நுணுககத்தால். பருப்பொருளறிவினார்க்கு மறைவு உடையதாய்த் தோன்றும் மொழி. கூற்று இடைவைத்த குறிப்பு - பேச்சின் கருத்தினை உள்நிறுத்திக் கூறிய குறிப்பு; என்றது. அங்கதச் செய்யுள் வகையினை.

**1422.** விளக்கல் அது - விளக்கலாகிய அம்முறைமை.

**1423.** அதுவே தானும் - அந் நூல் எனப்படுவது. ஈரிரு வகைத்து - நான்கு வகையினையுடையது.

**1424.** ஒரு பொருள் நுதலிய - ஒரு கருத்தின் மேற் கூறிய. இனமொழி கிளந்த - இனமாகிய கருத்துக்களை இயைத்துக் கூறிய. பொதுமொழி கிளந்த - அவ் இனங்கள் பலவற்றையும் பொதுமொழியாகிய ஒரு தலைப்பினுற் கூறிய.

பொதுமொழி கிளந்த படலத் தானும்,
மூன்றுறுப்பு அடக்கிய பிண்டத் தானும்என்று
ஆங்குஅனை மரபின் இயலும் என்ப. ௧௬௬

**அவற்றுட், சூத்திரம்**

1425. அவற்றுள்,
சூத்திரந் தானே,
ஆடி நிழலின் அறியத் தோன்றி
நாடுத லின்றிப் பொருள்நனி விளங்க
யாப்பினுள் தோன்ற யாத்தமைப் பதுவே. ௧௬௭

**இயல் என்னும் ஓத்து**

1426. நேரின மணியை நிரல்பட வைத்தாங்கு
ஓரினப் பொருளை ஒருவழி வைப்பது
ஓத்தென மொழிப உயர்மொழிப் புலவர். ௧௬௮

---

மூன்றுறுப்பு என்றது, இங்கே கூறப்பட்ட சூத்திரம், ஓத்து, படலம் என்பன. ஆங்கு அனை மரபின - அங்ஙனம் அவ்வியல்பினால்.

1425. ஆடி நிழலின் - கண்ணாடியின் ஒளியிற்போல. தோன்றி - ஒருங்கு தோன்றி. நாடுதலின்றி - சொல்லுக்குப் பொருள் ஆராய்தலின்றி. எளிய பொருந்திய சொற்களால் என்பது. யாப்பினுள் தோன்ற - செய்யுளியல்பில் அமைந்து தோன்ற.

1426. நேர் இன மணியை-ஒத்த இனத்தவான மணிகளை. நிரல்பட - கோவைப்பட. பொருளை - கருத்துக்களை.

**படலம்**

1427. ஒருநெறி இன்றி விரவிய பொருளால்
பொதுமொழி தொடரின் அதுபடல மாகும்.

**பிண்டம்**

1428. மூன்றுறுப் படக்கிய தன்மைத் தாயின்
தோன்றுமொழிப் புலவர்அது பிண்டம் என்ப.

**இனி, உரையின் வகை**

1429. பாட்டிடை வைத்த குறிப்பி னானும்,
பாவின்று எழுந்த கிளவி யானும்,
பொருளொடு புணராப் பொய்ம்மொழி யானும்,
பொருளொடு புணர்ந்த நகைமொழி
[யானும்என்று
உரைவகை நடையே நான்கென மொழிப.

---

*1427. பொதுமொழி - பொதுமொழியாகிய ஒருதலைப் பில். 'கிளவியாக்கம் முதலாக எச்சவியல் ஈறாகக் கிடந்த ஒன்பது ஓத்தினும் வேறுபாடு உடையவாயினும் சொல்லிலக்கணம் உணர்த்தினமையான் சொல்லதிகாரம் எனப் பெயர் பெறுதல்' என்பர், இளம். எனறது, ஒரு பொதுமொழியாற் பெயர் பெறுதல்.*

*1428. அது - அதனை. பிண்டம் என்பது, இவ்வெல்லா வற்றின் தொகுதி; அது நூல். சில நூல்கள் சூத்திரமட்டுங் கொண்டும், சில நூல்கள் சூத்திரமும் ஓத்துமட்டுங் கொண்டும், சில நூல்கள் அவற்றொடு படலமுங் கொண்டும் சிறுநூல் இடை நூல் பெருநூல் என வருதலின் 'அடக்கிய தன்மைத்தாயின' எனப்பட்டது.*

*1429. குறிப்பினானும் - கருத்தினாலும். பா இன்று - பாட்டு இன்றி. பொய்ம்மொழியானும் - உறுதியற்ற மொழியினும்,*

### உரை இரண்டுவகைப் படுதல்

1430. அதுவே தானும் இருவகைத் தாகும். ௧௭௨

### அவற்றின் இயல்பு

1431. ஒன்றே மற்றுஞ் செவிலிக்கு உரித்தே;
ஒன்றே யார்க்கும் வரைநிலை யின்றே. ௧௭௩

### பிசி

1432. ஒப்பொடு புணர்ந்த உவமத் தானும்,
தோன்றுவது கிளந்த துணிவி னானும்,
என்றுஇரு வகைத்தே பிசிவகை நிலையே. ௧௭௪

### முதுமொழி

1433. நுண்மையும் சுருக்கமும் ஒளியுடை மையும்
மென்மையும் என்று இவைவிளங்கத் தோன்றிக்,
குறித்த பொருளை முடித்தற்கு வரூஉம்
ஏது நுதலிய முதுமொழி என்ப. ௧௭௫

### மந்திரம்

1434. நிறைமொழி மாந்தர் ஆணையின் கிளந்த
மறைமொழி தானே மந்திரம் என்ப. ௧௭௬

---

**1431.** உரையில் ஒருவகை செவிலிக்கு உரியது; மற்றொரு வகை யார்க்கும் உரியது என்றபடி. மற்றும் ஒன்றே என்க.

**1432.** தோன்றுவது - உள்ளத்தில் இயல்பாகத் தோன்றுவதனை.

**1433.** ஒளி என்றது, இங்கு மெய்ம்மை. நுதலிய-நுதலிய மொழிகளை,

**1434.** நிறைமொழி - தகுதி நிறைந்த மொழியினையுடைய. ஆணையின் - தலைமைப்பாட்டினால்,

### குறிப்பு மொழி

1435. எழுத்தொடும் சொல்லொடும் புணரா தாகிப்
பொருட்புறத் ததுவே குறிப்புமொழி என்ப.

### பண்ணத்தி

1436. பாட்டிடைக் கலந்த பொருள வாகிப்
பாட்டின் இயல பண்ணத்தி இயல்பே. கஎஅ

1437. அதுவே தானும் பிசியொடு மானும். கஎகூ

### அதற்கு, அடியளவு

1438. அடிநிமிர் கிளவி ஈராறு ஆகும். கஅ0

1439. அடியிகந்து வரினுங் கடிவரை யின்றே. கஅக

---

1435. குறிப்புமொழி என்றது, ஈண்டு அங்கதச் சொல்.

1436. பாட்டிடைக் கலந்த - பாட்டின்கட் கலந்த, பொருளவாகி - கருத்தினைத் தன்கண் உடையவாகி, பாட்டின் இயல - இலக்கண வகையினாற் பாட்டல்லவாயினும் ஓராற்றாற் பாட்டின் நடையினையுடையன. பண்ணத்தி இயல்பு - அது 'பண்ணத்தி'யின் இயல்பு. பண்ணத்தி என்பது இலக்கண முறைமையான் அமையாத செய்யுள். 'மெய்வழக் கல்லாத புறவழக்கினைப் பண்ணத்தியென்ப' எனவும், 'அவை யாவன, நாடகச் செய்யுளாகிய பாட்டும் மடையும் வஞ்சிப் பாட்டும் மோதிரப்பாட்டும் கடகண்டும் முதலாயின' என்பர் பேரா.

1437. மானும் - ஒக்கும்.

1438. அடிநிமிர் கிளவி - பண்ணத்தியின் அடிப் பெருக்கங் கூறுங் கூற்று. ஈராறு ஆகும் - பன்னிரண்டு அடி என்னும் எல்லைப்பொருளுடையது.

1439. இகந்து - கடந்து.

**அவ்வியலின் முடிபு**

1440. கிளரிய வகையிற் கிளந்தன தெரியின்
அளவியல் வகையே அனைவகைப் படுமே. ௧௮௨

## ௧௨. திணை

1441. கைக்கிளை முதலா எழுபெருந் திணையும்
முற்கிளந் தனவே முறைநெறி வகையின. ௧௮௩

## ௧௩. கைகோள்

**களவு**

1442. காமப் புணர்ச்சியும், இடந்தலைப் படலும்,
பாங்கொடு தழாலும், தோழியிற் புணர்வும் [என்று
ஆங்கநால் வகையினும் அடைந்த சார்பொடு
மறையென மொழிதல் மறையோர் ஆறே. ௧௮௪

**கற்பு**

1443. மறைவெளிப் படுதலும், தமரின் பெறுதலும்,
இவைமுத லாகிய இயல்நெறி திரியாது

---

**1440.** கிளரிய வகையின - செய்யுளிலக்கணத்தை மேலும் மிகுத்தோதும் வகையில். கிளந்தன தெரியின - இதுகாறுங் கூறியவற்றை வைத்து எண்ணிப்பார்ப்பின. அளவியல் வகை - அளவியல் எனனுஞ் செய்யுளுறுப்பின வகை. அனைவகைப் படும் - கூறிய அவ்வளவினதேயாம் எனபது.

**1441.** முறைநெறி வகையின என்பது, அவற்றிற்கு முறைமையாற் புறமெனப்பட்ட வெட்சி முதறபாடாண் பகுதி யிறுகிய எழுபகுதியோடும் எனபர், பேரா.

**1442.** காமப் புணர்ச்சியும் - முதற் கூட்டமாகிய இயற்கைப் புணர்ச்சியும். பாங்கு - பாங்கன். தழாலும் - கூட்டமும். மறை என - களவொழுக்கமென,

மலிவும் புலவியும் ஊடலும் உணர்வும்
பிரிவொடு புணர்ந்தது கற்புஎனப் படுமே. ௧௮௫

**கைகோள் முடிபு**

1444. மெய்பெறும் அவையே கைகோள் வகையே.

### ௧௪. கூற்று

**களவிற், கூற்று நிகழ்த்துதற்குரியோர்**

1445. பார்ப்பான், பாங்கன், தோழி, செவிலி,
சீர்த்தகு சிறப்பின் கிழவன், கிழத்தியோடு
அளவியல் மரபின் அறுவகை யோரும்
களவினிற் கிளவிக்கு உரியர் என்ப. ௧௮௭

**கற்பிற், கூற்று நிகழ்த்துதற் குரியோர்**

1446. பாணன், கூத்தன், விறலி, பரத்தை,
யாணம் சான்ற அறிவர், கண்டோர்,
பேணுதகு சிறப்பின் பார்ப்பான் முதலா
முன்னுறக் கிளந்த அறுவரொடு தொகைஇத்
தொன்னெறி மரபின் கற்பிற் குரியர். ௧௮௮

---

**1443.** மலிவும் - கூடி மகிழ்தலும். புலவி - சிறிய ஊடல். உணர்வும் - ஊடல் தீர்தலும். கற்பு - கற்பொழுக்கம்.

**1444.** மெய்பெறும் - பொருண்மை பெற்ற.

**1445.** அளவியல் மரபின் - ஒருவரோடொருவர் அளவளாவியொழுகும் இயல்பினையுடைய.

**1446.** யாணம் - உள்ளத் தெளிவாகிய அழகு. முன்னுற - முன் நூற்பாவிற் புலப்பட. கற்பிற்கு உரியர் - கற்பொழுக்கத்திற் கூற்று நிகழ்த்துதற்குரியர்.

### கூற்று நிகழ்த்தியதாக எடுத்துமொழிதற் குரியோர்

1447. ஊரும், அயலும், சேரி யோரும்,
நோய்மருங்கு அறிநரும், தந்தையும், தன்னையும்
கொண்டெடுத்து மொழியப் படுதல் அல்லது
கூற்றுஅவண் இன்மை யாப்புறத் தோன்றும்.

### நற்றாய் கூற்றின் இயல்பு

1448. கிழவன் தன்னொடும் கிழத்தி தன்னொடும்
நற்றாய் கூறல் முற்றத் தோன்றாது. ௧௯0

### கண்டோர் மொழிதல்

1449. ஒண்டொடி மாதர், கிழவன், கிழத்தியொடு
கண்டோர் மொழிதல் கண்ட தென்ப. ௧௯௧

---

1447. அயலும் - அயல்மனை யுள்ளாரும். சேரியோரும் - அத் தெருவினகண் உள்ளோரும். நோய்மருங்கு அறிநரும் - நோயின குறிப்பினால் நிகழ்ந்ததனை அறிகின்ற ஏனையோரும். தனை ஐயும் - தமையனும். 'கொண்டெடுத்து மொழியப்படுதல் அலலது' எனபது, 'இவர் கூறுகப் பிறர் சொல்லினல்லது இவர்தாங் கூறார்' என்றவாறு. அவண் - களவு கற்பு என்னும் இருவகைக் கைகோளினும். யாப்புறத் தோன்றும் - வலிவு பெறத் தோன்றும்.

1448. முற்றத் தோன்றாது - ஓரளவு தோன்றும் என்றபடி.

1449. மாதர் என்றது, நற்றாயும் தோழியும் செவிலியும் என்பர், இளம். செவிலி எனபர், நச். கண்டது - வழக்கிற் கண்டதாகும்.

### தலைவன் கூற்றுப்பற்றி ஒரு கருத்து

1450. இடைச்சுர மருங்கில் கிழவன் கிழத்தியொடு
வழக்கியல் ஆணையின் கிளத்தற்கும் உரியன்.

### தலைமக்களல்லாதார் கூற்றுப்பற்றி ஒரு கருத்து

1451. ஒழிந்தோர் கிளவி கிழவன் கிழத்தியொடு
மொழிந்தாங் குரியர் முன்னத்தின் எடுத்தே.

## ௧௫. கேட்போர்

### தலைமக்கள் கூற்றினைக் கேட்போர்

1452. மனையோள் கிளவியும், கிழவன் கிளவியும்
நினையுங் காலைக் கேட்குநர் அவரே. ௧௧௪

### பார்ப்பார் அறிவர் கூற்றினைக் கேட்போர்

1453. பார்ப்பார், அறிவர் என்றிவர் கிளவி
யார்க்கும் வரையார் யாப்பொடு புணர்ந்தே. ௧௧௫

---

*1450.* வழக்கியல் ஆணையின - உலக வழக்கோடு பொருந்திய அறநூல் விதியினால். கிழவன் கிளத்தற்கும் உரியன் என்பது. இடைச்சுரத்தில் தமர் தடுக்குங்கால தலைவனுக்கு இங்ஙனங் கூற்று நிகழ்தல் உண்டு; இதுபோல்வன பிறவுங் கொள்க.

*1451.* ஒழிந்தோர் என்றது, கூற்று நிகழ்த்துவோருள் தலைவனும் தலைவியும் நீங்கலாக உள்ள ஏனைப் பதின்மரை. மொழிந்தாங்கு - முன் நூற்பாவிற் காட்டியபடி வழக்கியலாணையின. உரியர் - கூற்று நிகழ்த்துதற்குரியர். முன்னத்தின் எடுத்து - இடம் காலம் முதலியவற்றிற்கேற்பக் குறிப்பினால் தொடுத்து; தொடுத்து நிகழ்த்துதற்குரியர் எனக.

*1452.* அவரே என்றது, முற்கூறிய பதின்மரும்.

*1453.* என்றிவர் கிளவி - என்று இவ்விருவரது கிளவியை. யார்க்கும் வரையார் என்றது, ஏனை எல்லாருங் கேட்டற்குரியர் என்றற்கு.

தலைவி கேட்பவளாகக் கூறுங் கூற்றுக்கள்

1454. பரத்தை, வாயில் எனஇரு வீற்றும்
கிழத்தியைச் சுட்டாக் கிளப்புப்பயன் இலவே.

வாயில்கள் கூற்றினைக் கேட்போர்

1455. வாயில் உசாவே தம்முளும் உரிய. ௧௬௭

மக்களல்லாதார் கேட்பனவாகக் கூறும் முறைமை

1456. ஞாயிறு, திங்கள், அறிவே, நாணே,
கடலே, கானல், விலங்கே, மரனே,
புலம்புறு பொழுதே, புள்ளே, நெஞ்சே,
அவையல பிறவும் நுவலிய நெறியால்
சொல்லுந போலவும் கேட்குந போலவும்
சொல்லியாங்கு அமையும் என்மனார் புலவர்.

## ௧௬. களன் முதலிய உறுப்புக்கள்

களன்

1457. ஒருநெறிப் பட்டாங்கு ஓரியல் முடியும்
கருமநிகழ்ச்சி இடமென மொழிப. ௧௬௯

1454. கிழத்தியைச் சுட்டாக் கிளப்பு - தலைவி கேட்பவளாகக் கருதிச் சொல்லாத பேச்சு. எனவே, இவர் கூற்றினைத் தலைவி கேட்டற்குரியள் எனபது.

1455. உசா - வினவிப் பேசும் பேச்சு. தம்முளும் உரிய - அவர் தம்முள்ளும் கேட்டுக் கொள்ளுதற்குரியன என்பது பெறப்படும்.

1456. கானல் - கடற்கரை. நுவலிய நெறியால் - முற் சொன்ன முறைமையால். சொல்லியாங்கு அமையும் - சொல்லி யமையும்; கேட்பன போலச் சொல்லப்பட்டு அமையும் என்றபடி.

1457. கருமநிகழ்ச்சி - வினை நிகழும் இடத்தை. இடம் என - அதற்கு உரிய களன் என்று.

காலம்

1458. இறப்பே நிகழ்வே எதிரது என்னும்
திறத்தியல் மருங்கில் தெரிந்தனர் உள்ளப்
பொருள் நிகழ்வு உரைப்பது காலம் ஆகும்.

பயன்

1459. இதுநனி பயக்கும் இதனான் என்னும்
தொகைநிலைக் கிளவி பயன்எனப் படுமே. உ0க

மெய்ப்பாடு

1460. உய்த்துணர்வு இன்றித் தலைவரும் பொருளான்
மெய்ப்பட முடிப்பது மெய்ப்பா டாகும். உ0உ

அதன் முடிபு

1461. எண்வகை இயல்நெறி பிழையா தாகி
முன்னுறக் கிளந்த முடிவினது அதுவே. உ0௩

---

1458. திறத்தியல் மருங்கில் - பாகுபாட்டியல்பில். தெரிந்தனர் உள்ள - அறிந்து உள்ளங் கொள்ளும்படி. பொருள் நிகழ்வு - பொருள்களின் செயல் நிகழுங் காலத்தை.

1459. நனி பயக்கும் - பெரிது பயன்தரும். தொகை நிலைக் கிளவி - விரித்துக் கூறாது தொகையளவாய் உணர நிற்குங் கிளவி.

1460. தலை வரும் - உரிய இடத்தில் வெளிப்படையாக வரும். மெய்ப்பட - கண்ணீரரும்பல், மெய்ம்மயிர் சிலிர்த்தல் முதலிய மெய்ப்பாடு தோன்ற.

1461. எண்வகை இயல் நெறி - நகை முதலிய எட்டுவகையான மெய்ப்பாட்டு இலக்கண நெறி. முன் உற - முன் மெய்ப்பாட்டியலுட் பெறும்படி,

**எச்சம்**

1462. சொல்லொடும் குறிப்பொடும் முடிவுகொள் [இயற்கை
புல்லிய கிளவி எச்சம் ஆகும். உ௦௪

**முன்னம்**

1463. இவ்விடத்து இம்மொழி இவர்இவர்க்கு உரிய [என்று
அவ்விடத்து அவரவர்க்கு உரைப்பதை [முன்னம். உ௦௫

**பொருள்**

1464. இன்பமும் இடும்பையும் புணர்வும் பிரிவும்
ஒழுக்கமும் என்றுஇவை இழுக்குநெறி இன்றி
இதுவா கித்திணைக்கு உரிப்பொருள் என்னாது
பொதுவாய் நிற்றல் பொருள்வகை என்ப. உ௦௬

**துறை**

1465. அவ்வவ மாக்களும் விலங்கும் அன்றிப்
பிறஅவண் வரினும் திறவதின் நாடித்,
தத்தம் இயலான் மரபொடு முடியின்,
அத்திறந் தானே துறையெனப் படுமே. உ௦௭

---

1462. இயற்கை - இயல்பினை.

1463. முன்னம் - குறிப்பு.

1464. இத் திணைக்கு உரிப்பொருள் இதுவாக என்னாது என்க. பொதுவாய் நிற்றல் - புலவனாற் கூறப்பட்டுப் பொது வாய் நிற்றல்.

1465. மாக்களும் - மக்களும். பிற என்றது, புள் முதலிய வற்றை. திறவதின் - கூறுபாடு தோன்ற. தத்தம் இயலின் - அவை, தத்தம் இயல்பினால்.

### மாட்டு

1466. அகன்றுபொருள் கிடப்பினும், அணுகிய [நிலையினும்
இயன்றுபொருள் முடியத் தந்தனர் உணர்த்தல்
மாட்டுஎன மொழிப பாட்டியல் வழக்கின்.

### இவற்றிற், சிலவற்றிற்கு முடிபு

1467. மாட்டும் எச்சமும் நாட்டல் இன்றி
உடனிலை மொழியினுந் தொடர்நிலை பெறுமே.

## ௧௭. வண்ணம்

### அதன் தொகை

1468. வண்ணந் தாமே நாலைந்து என்ப. ௨௫௦

### பெயர்

1469. அவைதாம்,
பாஅ வண்ணம் தாஅ வண்ணம்
வல்லிசை வண்ணம் மெல்லிசை வண்ணம்
இயைபு வண்ணம் அளபெடை வண்ணம்
நெடுஞ்சீர் வண்ணம் குறுஞ்சீர் வண்ணம்
சித்திர வண்ணம் நலிபு வண்ணம்

---

**1466.** பொருள் - கருத்து. அணுகிய நிலையினும் - அணுகிய நிலையிற் கிடப்பினும். இயன்று - ஏற்றபடி தொடர்ந்து சென்று. தந்தனர் உணர்த்தல் - இயைபு புலப்படுத்தி அறிவித்தல். பாட்டியல் வழக்கின மொழிப என்பது.

**1467.** நாட்டல் இன்றி - தந்து நிறுத்துதலின்றி. உடனிலை - கிடந்தவாறே தொடர்ந்து செல்லும் நிலையில தொடர்நிலை பெறும் - செய்யுள் நிலை, வழக்கினைப் பெறும் என்பது.

**1468.** வண்ணம் என்பது சந்தவேறுபாடு என்பர். பேரா, அஃது இருபது வகைப்படும் என்றபடி.

அகப்பாட்டு வண்ணம் புறப்பாட்டு வண்ணம்
ஒழுகு வண்ணம் ஒரூஉ வண்ணம்
எண்ணு வண்ணம் அகைப்பு வண்ணம்
தூங்கல் வண்ணம் ஏந்தல் வண்ணம்
உருட்டு வண்ணம் முடுகு வண்ணமென்று
ஆங்கனம் அறிப அறிந்திசி னோரே. ௨௧௧

### பாஅ வண்ணம்

1470 அவற்றுள்,
பாஅ வண்ணம்
சொற்சீர்த் தாகி நூற்பாற் பயிலும். ௨௧௨

### தாஅ வண்ணம்

1471. தாஅ வண்ணம்,
இடையிட்டு வந்த எதுகைத் தாகும். ௨௧௩

### வல்லிசை வண்ணம்

1472. வல்லிசை வண்ணம் வல்லெழுத்துப் பயிலும்.

### மெல்லிசை வண்ணம்

1473. மெல்லிசை வண்ணம் மெல்லெழுத்து மிகுமே.

---

**1469.** இந் நூற்பாவில் அவற்றின பெயர்கள் நுவலப்பட்டன. இவற்றின விளக்கம் மேல் நூற்பாக்களில் முறையே உரைக்கப்படுகின்றன.

**1470.** நூற்பால் - நூலின்கண். நூல் என்பது சிறப்பாக நூற்பாவினுல் இயன்றதனை பெயராதலின், பா வண்ணம் நூற்பாவின்கண் பெருவரவின என்பது. பா வண்ணம் என்புது நூற்பா வண்ணம் என்றே உரைப்பர், பேரா,

**இயைபு வண்ணம்**

1474. இயைபு வண்ணம் இடையெழுத்து மிகுமே.

**அளபெடை வண்ணம்**

1475. அளபெடை வண்ணம் அளபெடை பயிலும்.

**நெடுஞ்சீர் வண்ணம்**

1476. நெடுஞ்சீர் வண்ணம் நெட்டெழுத்துப் பயிலும்.

**குறுஞ்சீர் வண்ணம்**

1477. குறுஞ்சீர் வண்ணம் குற்றெழுத்துப் பயிலும்.

**சித்திர வண்ணம்**

1478. சித்திர வண்ணம்,
நெடியவும் குறியவும் நேர்ந்துடன் வருமே.

**நலிபு வண்ணம்**

1479. நலிபு வண்ணம் ஆய்தம் பயிலும். ௨௨௪

**அகப்பாட்டு வண்ணம்**

1480. அகப்பாட்டு வண்ணம்,
முடியாத் தன்மையின் முடித்தன மேற்றே.

**புறப்பாட்டு வண்ணம்**

1481. புறப்பாட்டு வண்ணம்,
முடிந்தது போன்று முடியா தாகும். ௨௨௫

---

*1478.* நெடியவும் - நெட்டெழுத்தும் குற்றெழுத்தும்.

*1480.* முடியாத் தன்மையின் முடித்தன மேற்று-முற்றுப் பெறாத தன்மையையுடைய, செய்யுளிறுதிச் சொற்களின் மேலது. 'இறுதியடி போன்று நிற்பன' என்பர், பேரா,

ஒழுகு வண்ணம்

1482. ஒழுகு வண்ணம் ஓசையின் ஒழுகும். ௨௨௪

ஒரூஉ வண்ணம்

1483. ஒரூஉ வண்ணம் ஒரீஇத் தொடுக்கும். ௨௨௫

எண்ணு வண்ணம்

1484. எண்ணு வண்ணம் எண்ணுப் பயிலும். ௨௨௬

அகைப்பு வண்ணம்

1485. அகைப்பு வண்ணம் அறுத்தறுத் தொழுகும்.

தூங்கல் வண்ணம்

1486. தூங்கல் வண்ணம் வஞ்சி பயிலும். ௨௨௮

ஏந்தல் வண்ணம்

1487. ஏந்தல் வண்ணம்,
சொல்லிய சொல்லிற் சொல்லியது சிறக்கும்.

---

*1482.* ஓசையின் ஒழுகும் - இனிேயாசை கொண்டு இயலும்.

*1483.* ஒரீஇத் தொடுக்கும் - அடிகள் தனித்தனிேய பொருள் கொள்ளும்படி இயைபு அறுத்துத் தொடுக்கப்படும்.

*1484.* எண் - எண்ணுப் பொருள்.

*1485.* அறுத்தறுத்து - இடைவிட்டு விட்டு.

*1486.* வஞ்சி - தூங்கலோசை யுடைய வஞ்சிச் சீருடைய தாய்.

*1487.* சொல்லிய சொல்லின் சொல்லியது - சொல்லிய சொற்களால் மேலுமேலுஞ் சொல்லப்பட்டதாய். ஏந்தல் - சந்தம் உயர்ந்து செல்லுதல். 'ஏந்தலென்பது மிகுதல்; ஒரு சொல்லே மிக்கு வருதலின் ஏந்தல் வண்ணம்' என்பர், பேரா.

### உருட்டு வண்ணம்

1488. உருட்டு வண்ணம் அராகம் தொடுக்கும். ௨௩௦

### முடுகு வண்ணம்

1489. முடுகு வண்ணம்,
அடியிறந் தோடி அதனோ ரற்றே. ௨௩௧

### இவற்றின் முடிபு

1490. வண்ணந் தாமே இவையென மொழிப. ௨௩௨

## ௧௯. வனப்பு

### அம்மை

1491. வனப்பியல் தானே வகுக்குங் காலைச்
சின்மென் மொழியால் [1]தாய பனுவலோடு
அம்மை தானே அடிநிமிர்பு இன்றே. ௨௩௩

**1488.** அராகம் - உருண்ட ஓசையினையுடைய அடிகளால். தொடுக்கும் - தொடுக்கப்பட்டு இயலும்.

**1489.** அடி இறந்து - நாற்சீரடியின் மிகுந்து. அதனோரற்று - அதனையொப்பது; எனறது, முன் நூற்பாவிற் கூறிய அராகத்தோடு ஒப்ப உருட்டிச்செல்லும் ஓசையினையுடையது.

**1491.** வனப்பு - செய்யுள் அழகு. சில் மெல் மொழியால் - சிலவாய மெல்லிய மொழிகளால். தாய - தாவிய: தொடுக்கப்பட்ட. பனுவலோடு - நூன முறைமையோடு. அடிநிமிர்பு இனறு - அடிகள மிகுதியாய்ச் செல்லுதல இல்லாத தாகும். மெல்லிய மொழிகளால் குறைந்த அடிகளில் சுருங்கத் தொடுக்கப்படும் செய்யுட்களையுடைய நூல் அம்மை என்னும் வனப்புடையது என்றபடி.

(பா - வே.) 1. சீர்புனைந் தியாப்பின்.

### அழகு

1492. செய்யுள் மொழியால் சீர்புனைந்து யாப்பின்
அவ்வகை தானே அழகெனப் படுமே. ௨௩௪

### தொன்மை

1493. தொன்மை தானே,
உரையொடு புணர்ந்த பழைமை மேற்றே.

### தோல்

1494. இழுமென் மொழியான் விழுமியது நுவலினும்
பரந்த மொழியான் அடிநிமிர்ந்து ஒழுகினும்
தோல்என மொழிப தொன்மொழிப் புலவர்.

### விருந்து

1495. விருந்தே தானும்,
புதுவது கிளந்த யாப்பின் மேற்றே. ௨௩௭

---

**1492.** செயயுள் மொழி - செய்யுட்குரிய மொழி; திரிசொற பயிலாது செய்யுட் பயின்றுவரும் மொழி என்பர், பேரா.

**1493.** உரையொடு - இடையிடையே உரை நடையோடு. பழைமைமேற்று - பழைமையாய் வழங்கிவரும் பொருள் மேலது.

**1494.** இழுமென - மெல்லென்ற இனிய. விழுமியது - அறம் பொருள் இன்பம் வீடெனனும் உறுதிப் பொருள். பரந்த - பொருட் பெருக்கமுடைய. அடிநிமிர்ந்து - ஆசிரியம் போல் அடிகள் மிகுந்து.

**1495.** புதுவது - புதிய கருத்து,

## இயைபு

1496 ஞகார முதலா னகார ஈற்றுப்
புள்ளி யிறுதி இயைபெனப் படுமே. ௨௫௮

## புலன்

1497. [1]தெரிந்த மொழியாற் செவ்விதின் கிளந்து
தேர்தல் வேண்டாது குறித்தது தோன்றின்
புலனென மொழிப புலனுணர்ந் தோரே.

## இழைபு

1498. ஒற்றொடு புணர்ந்த வல்லெழுத்து அடக்காது
குறளடி முதலா ஐந்தடி ஒப்பித்து
ஓங்கிய மொழியான் ஆங்ஙனம் ஒழுகின்
இழைபின் இலக்கணம் இயைந்த தாகும். ௨௬௦

**1496.** புள்ளியிறுதி - புள்ளியெழுத்துக்களை இறுதியாக உடையது.

**1497.** தெரிந்த மொழியால் என்றார், அவ்வந் நிலத்து வழங்கும் மொழிகளால் என்றற்கு.

**1498** வல்லெழுத்துப் பயிலாது வருதல் என்றற்கு, ஒற்றொடு புணர்ந்த வல்லெழுத்து அடக்காது என்றார். அடக்காது - அடங்கத் தொடுக்காது. குறளடி முதலா ஐந்தடி என்றது, குறளடி, சிந்தடி, அளவடி, நெடிலடி, கழிநெடிலடி என்றவற்றை. ஒப்பித்து - ஒன்றிவரச் செய்து. ஓங்கிய - ஓசை நிறைந்த. வல்லெழுத்துப் பயிலாது ஐவகையடிகளினும் ஓசை குன்றாமல் வருவது, 'இழைபு' என்னும் வனப்பென்றபடி.

(பா - வே.) 1. சேரி.

## ௧௮. புறனடை

1499. செய்யுள் மருங்கின் மெய்பெற நாடி
இழைத்த இலக்கணம் பிழைத்தன போல
வருவ உள வெனினும் வந்தவற் றியலான்
திரிபின்றி முடித்தல் தெள்ளியோர் கடனே.



1499. மெய் - பொருள். வருவ - பிற வருவன. வந்த வற்றியலான் - கூறப்பட்ட இயல்நெறி கொண்டு. திரிபின்றி முடித்தல் - வழங்குதற்குரிய முறைமையின் மாறுபாடின்றி அமைத்துச் செய்தல்.

## ௯. மரபியல்

[இருவகை மரபுகளின் இலக்கணம் உணர்த்துவது.]

### க. பொதுவாக, மரபிற் குரியவை

**இளமைப் பெயர்கள்**

1500. மாற்றருஞ் சிறப்பின் மரபியல் கிளப்பின்
பார்ப்பும் பறழும் குட்டியும் குருளையும்
கன்றும் பிள்ளையும் மகவும் மறியும் என்று
ஒன்பதும் குழவியோடு இளமைப் பெயரே. க

**ஆண்பாற் பெயர்கள்**

1501. ஏறும் ஏற்றையும் ஒருத்தலும் களிறும்
சேவும் சேவலும் இரலையும் கலையும்
மோத்தையும் தகரும் உதளும் அப்பரும்
போத்தும் கண்டியும் கடுவனும் பிறவும்
யாத்த ஆண்பாற் பெயரென மொழிப. உ

**பெண்மைப் பெயர்கள்**

1502. பேடையும் பெடையும் பெட்டையும் பெண்ணும்
மூடும் நாகும் கடமையும் அளகும்

---

**1500.** குழவியோடு ஒன்பதும் என்றபடி. இளமைப் பெயர் - இளமைப் பொருளுணர்த்தும் பெயர்கள்.

**1501.** பிறவும் என்றதனால் 'விடை' முதலியன கொள்ளுப. இவற்றிற்கு விளக்கம் இவ்வியலின் ௩௪-ம் நூற்பா முதல் விரித்தோதப்பட்டுள்ளது. யாத்த - செய்யுளில் யாக்கப் பட்ட.

**1502.** அந்தம் சான்ற - முடிபமைந்த. பிணவும் பிடி யொடு பெண்ணே என்க. பெண் - பெண்பாற் பெயர்களாகும்.

மந்தியும் பாட்டியும் பிணையும் பிணாவும்
அந்தஞ் சான்ற பிடியொடு பெண்ணே. ௩

## உ. இளமைப் பெயர்கள்

**'பார்ப்பு' 'பிள்ளை'**

1503. அவற்றுள்,
பார்ப்பும் பிள்ளையும் பறப்பவற் றிளமை. ௪
1504. தவழ்பவை தாமும் அவற்றோ ரன்ன. ௫

**'குட்டி'**

1505. மூங்கா வெருகுஎலி மூவரி அணிலோடு
ஆங்குஅவை நான்கும் குட்டிக் குரிய. ௬

**'பறழ்'**

1506. பறழ்எனப் படினும் உறழ்ஆண் டில்லை. ௭

---

*1503.* பறப்பவற்று - பறக்கும் பறவைகளுடைய. இளமை - இளமைப் பெயர்கள்; என்றது, அவற்றின் குஞ்சுகட்குப் பெயர் என்றபடி.

*1504.* தவழ்பவைதாமும் - ஊர்வனவற்றிற்கும்; அவை, ஆமை உடும்பு முதலியன. மூவரி அணில் - முதுகில் மூன்று வரிகளையுடைய அணில். மூங்கா, வெருகு, எலி எனனும் ஏனை மூன்றும் தம்முள் ஒரு பிறப்பின என்று கருதுவர், பேரா., எலி வகைகள் எனறபடி. குட்டிக்கு - குட்டி எனனும் பெயர்கட்கு.

*1506.* உறழ் என்பது இங்கு மாறுபாடு என்னும் பொருட்டு. ஆண்டு - மூங்கா முதலியவற்றிறகு. மூங்காப் பறழ், வெருகுப் பறழ் முதலியவாக அவற்றின் இளமைப் பெயரைக் கூறலாம் என்பது.

'குருளை'

1507. நாயே பன்றி புலிமுயல் நான்கும்
ஆயுங் காலைக் குருளை என்ப. ௮

1508. நரியும் அற்றே நாடினர் கொளினே. ௯

'குட்டி' 'பறழ்'

1509. குட்டியும் பறழும் கூற்றுஅவண் வரையார். ௧0

'பிள்ளை'

1510. பிள்ளைப் பெயரும் பிழைப்புஆண் டில்லை
கொள்ளுங் காலை நாய்அலங் கடையே. ௧௧

'மறி'

1511. யாடுங் குதிரையும் நவ்வியும் உழையும்
ஓடும் புல்வாய் உளப்பட மறியே. ௧௨

---

1508. நரியும் அற்று - நரியின இளமையும் அங்ஙனம் கூறப்படும். நாடினர் கொளின - ஆய்ந்துணருமிடத்து.

1509. கூற்று அவண் வரையார் - கூறுதல் அவற்றிற்கு நீக்கார்.

1510. பிழைப்பு ஆண்டு - சொல்லுமிடத்துத் தவறு அவற்றிற்கு. நாய் அலங்கடை - நாய அல்லாதவிடத்து; நாயின இளமைக்குப் பிள்ளைப் பெயர் பொருந்தாது என்பது: 'நாயப் பிள்ளை' எனக் கூறலாகாது என்றபடி.

1511. ஓடும - விரைந்தோடும் இயல்பின யுடைய. புல்வாய் - மான. மறி - மறி என்னும் பெயர்க்கு உரிய. மான என்பது மா என்பதுபோலப் பொதுப் பெயராகலின, நவ்வி உழை புல்வாய் என மானினங்கள் வகுத்துக் கூறப்பட்டன.

1512. கோடுவாழ் குரங்கும் குட்டி கூறுப. ௧௩

'மகவு' முதலியன

1513. மகவும் பிள்ளையும் பறழும் பார்ப்பும்
அவையும் அன்ன அப்பா லான. ௧௪

'கன்று'

1514. யானையும் குதிரையும் கழுதையும் கடமையும்
ஆவொடு ஐந்தும் கன்றெனற் குரிய. ௧௫

1515. எருமையும் மரையும் வரையார் ஆண்டே. ௧௬

1516. கவரியும் [1]கராமும் நிகர்அவற் றுள்ளே. ௧௭

1517. ஒட்டகம் அவற்றொடு ஒருவழி நிலையும். ௧௮

'குழவி'

1518. குஞ்சரம் பெறுமே குழவிப் பெயர்க்கொடை.

---

1512. கோடு - மரக் கிளைகளில்.

1513. அவையும் அன்ன - என்னும் அப் பெயர்களும் கூறப்படும். அப்பாலான - அக் குரங்கு வகைக்கு.

1514. கடமை - மானின இனம்.

1515. ஆண்டு - கன்று எனனும் அப் பெயர்க்கு.

1516. நிகர் அவற்றுள் - முன் நூற்பாக்களிற் கூறிய யானை முதலியவற்றுட் சார்ந்து கன்று எனப் பெயர் பெறுதற்கு ஒப்புமையுடையது.

1517. ஒருவழி நிலையும் - கன்று என்று பெயர் பெறுதற்கு ஒரு சார்புடையதாய்ப் பொருந்தி நிற்கும்.

1518. குழவி எனப் பெயர் கொடுத்தலைக் குஞ்சரம் பெறும் என்றபடி. குஞ்சரம் - யானை.

---

(பா - வே.) 1. 'கராகமும்' இளம். அதற்குக் கரடி என்று அவர் உரைப்பர்.

1519. ஆவும் எருமையும் அவைசொலப் படுமே. உ0

1520. கடமையும் மரையும் முதலின் ஒன்றும். உக

1521. குரங்கும் முசுவும் ஊகமும் மூன்றும்
நிரம்ப நாடின் அப்பெயர்க் குரிய. உஉ

'குழவி'யும், 'மக'வும்

1522. குழவியும் மகவும் ஆயிரண் டல்லவை,
கிழவ அல்ல மக்கட் கண்ணே. உ௩

'பிள்ளை' முதலியன

1523. பிள்ளை குழவி கன்றே போத்தெனக்
கொள்ளவும் அமையும் ஓரறிவு உயிர்க்கே. உச

இளமைப் பெயர் பெறுதன

1524. நெல்லும் புல்லும் நேரார் ஆண்டே. உ௫

---

1519. அவை - அக குஞ்சரங்கள் போல. சொலப் படும் - குழவிப் பெயர் சொல்லப்படும்.

1520. முதல் நிலை - முதலிற கூறிய குஞ்சரத்தைப்போல மிகவும் பொருததமாய. ஒனறும - குழவிப் பெயர் பொருந்தும்.

1521. மூன்றும் எனறது, மூனறு வகைப்பட்ட குரங்கின் இனங்களை.

1522. ஆயிரண் டல்லவை கிழவ அல்ல மக்கட்கண் - எனறும் அவ்விரண்டு பெயருமல்லாத வேறு பெயர்கள் மககளின் இளமைககு உரியன அல்ல.

1524. ஆண்டு - அங்ஙனம் இளமைப் பெயர் கூறுதற்கு. நேரார் - இசையார ஆசிரியர், அவற்றிறகு இளமைப் பெயர் இல்லை என்றபடி.

### முடிபு

1525. சொல்லிய மரபின் இளமை தானே
சொல்லுங் காலை அவையலது இலவே. ௨௬

## ௩. உயிர்களின் பாகுபாடும், சிறப்பு மரபும்

### பாகுபாடு

1526. ஒன்றறி வதுவே உற்றறி வதுவே
இரண்டறி வதுவே அதனொடு நாவே
மூன்றறி வதுவே அவற்றொடு மூக்கே
நான்கறி வதுவே அவற்றொடு கண்ணே
ஐந்தறி வதுவே அவற்றொடு செவியே
ஆறறி வதுவே அவற்றொடு மனனே
நேரிதின் உணர்ந்தோர் நெறிப்படுத் தினரே.

---

1525. சொல்லிய மரபின் - நூலுட் பயின்ற மரபுப்படி. இளமை - இளமைப் பெயர்கள். சொல்லுங்காலை - முடித்துச் சொல்லுமிடத்து. அவையலது - முற்கூறப்பட்ட அவையல்லாது.

1526. ஒன்றறிவதுவே உற்றறிவதுவே - ஓரறிவு எனப்படுவது உற்றறிவாகும்; உற்றறிவு - உடம்பினாற் பொருந்தி அறியும் அறிவு; தொட்டறிவு. நா - நாவினாற் சுவைத்து அறியும் அறிவு: சுவையறிவு. மூக்கு என்றது, மணத்தை முகரும் அறிவு. கண் என்றது, ஒளியைக் காணும் காட்சியறிவு. செவி என்றது, ஓசையைக் கேட்கும் கேள்வியறிவு. மனன் என்றது, முறகூறிய புலனறிவுகளை ஆராயும் பகுத்தறிவு. நேரிதின் உணர்ந்தோர் - பொருந்த ஆராய்ந்து அறிந்த ஆசிரியர். நெறிப்படுத்தினர் - உயிர்களின் அறிவு நிலையை முறைப்படுத்தினர்.

அவற்றுள், ஓரறிவுடையன

1527. புல்லும் மரனும் ஓரறி வினவே
பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே. ௨௯

ஈரறிவுடையன

1528. நந்தும் முரளும் ஈரறி வினவே
பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே. ௨௧

மூவறிவுடையன

1529. சிதலும் எறும்பும் மூவறி வினவே
பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே. ௩0

நாலறிவுடையன

1530. நண்டும் தும்பியும் நான்கறி வினவே
பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே. ௩௧

ஐயறிவுடையன

1531. மாவும் [1]மாக்களும் ஐயறி வினவே
பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே. ௩௨

1527. புல் - வெளிப்பக்கம் வயிரம் உடையன. மரன் - உட்பக்கம் வயிரம உடையன. பிற என்றது, கொடியும் செடியும் போல்வன. அககிளைப் பிறப்பு - அப் பிரிவுப் பிறவிகள.

1528. நந்து - நத்தை. முரள் - இப்பி. பிறவும் என்றது, முறையே சங்கு கிளிஞ்சில் முதலியன.

1529. சிதல் - கறையான். பிறவும் என்றது, செல், ஈசல் முதலியன.

1530, பிறவும் என்றது, வண்டு, ஈ முதலியன.

1531. மா - பறவைகள். மாக்கள் - விலங்குகள். பிறவும் என்றது, வெளவால் ஆமை முதலியன.

(பா - வே.) 1. புள்ளும்.

**ஆறறிவுடையோர்**

1532. மக்கள் தாமே ஆறறி வுயிரே
பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே. ௩௩

## ௪. ஆண்பாற் பெயர்கள்

**'களிறு'**

1533. வேழக் குரித்தே விதந்துகளி றென்றல். ௩௪

1534. கேழற் கண்ணும் கடிவரை யின்றே. ௩௫

**'ஒருத்தல்'**

1535 புல்வாய் புலிஉழை மரையே கவரி
சொல்லிய கராமொடு ஒருத்தல் ஒன்றும். ௩௬

1536. வார்கோட் டியானையும் பன்றியும் அன்ன. ௩௭

1537. ஏற்புடைத் தென்ப எருமைக் கண்ணும். ௩௮

**'ஏறு'**

1538. பன்றி புல்வாய் உழையே கவரி
என்றிவை நான்கும் ஏறெனற் குரிய. ௩௯

1539. எருமையும் மரையும் பெற்றமும் அன்ன. ௪௦

1540. கடல்வாழ் சுறவும் ஏறெனப் படுமே. ௪௧

---

1532. 'கிளையெனப்படுவார் தேவரும் தானவரும் முதலாயினோர்' என்பர், பேரா.

1533. வேழக்கு - யானைக்கு; விதந்து என்றல் எனக. சிறந்தெடுத்துக் கூறுதல் என்றபடி.

1534. கேழற்கண்ணும - பன்றியைப்பற்றிக் கூறுமிடத்தும்.

1535. கவரி என்பது ஒருவகை மான். ஒருத்தல் ஒன்றும்- ஒருத்தல் எனவும் பெயர் பொருந்தும்.

1536. வார் கோட்டு - நீண்ட கொம்பினையுடைய.

1539. பெற்றமும் - மாடும்;

'போத்து'

1541. பெற்றமும் எருமை புலிமரை புல்வாய்
மற்றிவை யெல்லாம் போத்தெனப் படுமே.

1542. நீர்வாழ் சாதியுள் அறுபிறப்பு உரிய. ௪௫

1543. மயிலும் எழாலும் பயிலத் தோன்றும். ௪௪

'இரலை' 'கலை'

1544. இரலையும் கலையும் புல்வாய்க் குரிய. ௪௬

1545. கலையென் காட்சி உழைக்கும் உரித்தே. ௪௬

1546. நிலையிற்று அப்பெயர் முசுவின் கண்ணும். ௪௭

'மோத்தை' 'தகர்' 'உதள்' 'அப்பர்'

1547. மோத்தையும் தகரும் உதளும் அப்பரும்
யாத்த என்ப யாட்டின் கண்ணே. ௪௮

---

1542. 'அறு பிறப்பு எனபன சுறவும் முதலையும் இடங்கரும் கராமும் வராலும் வாளையுமென இவை' எனபர், பேரா. இவற்றுள் இடங்கரும் கராமும முதலையின் இனம் எனப. உரிய - இவ் வறுவகையின ஆண், 'போத்து' எனனும் பெயர் பெறுதற்கு உரியன.

1543. எழால் - புல்லூறு என்றும் பறவை. பயிலத் தோன்றும் - போத்து எனனும் பெயரொடு பெரு வரவின வாய்த் தோன்றும்.

1545. காட்சி - பெயர்த் தோற்றம்.

1546. நிலையிற்று - பொருந்தி நின்றது.

1547. மோத்தை முதலிய நானகு பெயர்களும் யாட்டின் ஆண்பாற் பெயர்கள் என்றபடி. யாத்த - வலிவுறப் பொருந்தின. யாடு - ஆடு.

'சேவல்'

1548. சேவற் பெயர்க்கொடை சிறகொடு சிவணும்;
மாயிருந் தூவி மயில்அலங் கடையே. ௪௯

'ஏற்றை'

1549. ஆற்றலொடு புணர்ந்த ஆண்பாற் கெல்லாம்
ஏற்றைக் கிளவி உரித்தென மொழிப. ௫0

முடிபு

1550. ஆண்பா லெல்லாம் ஆணெனற் குரிய;
பெண்பா லெல்லாம் பெண்ணெனற் குரிய;
காண்ப அவையவை அப்பா லான. ௫௧

## ௫. பெண்பாற் பெயர்கள்

'பிடி'

1551. பிடிஎன் பெண்பெயர் யானை மேற்றே. ௫௨

'பெட்டை'

1552. ஒட்டகம் குதிரை கழுதை மரைஇவை
பெட்டை என்னும் பெயர்க்கொடைக் குரிய.

---

**1548.** சேவற் பெயர்க்கொடை - சேவல் என்னும் பெயரை வழங்குதல். சிறகொடு - சிறகினையுடைய பறவைகளுக்கு. மா இரு தூவி - அழகிய நீல நிறம் பொருந்திய இறகையையுடைய.

**1549.** ஏற்றைக் கிளவி - ஏறு எனனும் ஆண் பெயர்.

**1550.** ஆண் எனற்கு - ஆண் என்று பெயர் வழங்குதற்கு; என்றது, ஆண் குரங்கு, ஆண் குருவி எனப் பெயர் வழங்குதற்கு. காண்ப அவையவை அப் பாலான - அவையவை அவ்வப் பாலிடத்துக் காணப்படுவன.

1553. புள்ளும் உரிய அப்பெயர்க் கென்ப. ௫௪

'பேடை' 'பெடை'

1554. பேடையும் பெடையும் நாடின் ஒன்றும். ௫௫

'அளகு'

1555. கோழி கூகை ஆயிரண் டல்லவை
சூழுங் காலை அளகெனல் அமையா. ௫௬
1556. அப்பெயர்க் கிழமை மயிற்கும் உரித்தே. ௫௭

'பிணை'

1557. புல்வாய் நவ்வி உழையே கவரி
சொல்வாய் நாடின் பிணையெனப் படுமே. ௫௮

'பிணவு'

1558. பன்றி புல்வாய் நாயென மூன்றும்
ஒன்றிய என்ப பிணவின் பெயர்க்கொடை.

'பிணவல்'

1559. பிணவல் எனினும் அவற்றின் மேற்றே. ௬௦

'ஆ'

1560. பெற்றமும் எருமையும் மரையும் ஆவே. ௬௧

---

**1554.** ஒன்றும் - முன் நூற்பாவிற் கூறிய புட்களுக்குப் பொருந்தும்.

**1555.** சூழுங்காலை - ஆராயுமிடத்து. அளகு எனல் - அளகு எனப் பெயர் வழங்கப்படுதல்.

**1556.** அப் பெயர்க் கிழமை - அப் பெயருரிமை.

**1557.** சொல் வாய் - பெயர் கூறும் மெய் வழியை.

**1558.** பிணவின் பெயர்க்கொடை - பிணவு என்னும் பெயர் வழங்குதற்கு.

**1560.** ஆவே - ஆ என்னும் பெண்பாற் பெயர் வழங்குதற் குரியன.

**'பெண்' 'பிணா'**

1561. பெண்ணும் பிணாவும் மக்கட் குரிய. ௬௨

**'நாகு'**

1562. எருமையும் மரையும் பெற்றமும் நாகே. ௬௩
1563. நீர்வாழ் சாதியுள் நந்தும் நாகே. ௬௪

**'மூடு' 'கடமை'**

1564. மூடும் கடமையும் யாடுஅல பெறா. ௬௫

**'பாட்டி'**

1565. பாட்டி என்பது பன்றியும் நாயும். ௬௬
1566. நரியும் அற்றே நாடினர் கொளினே. ௬௭

**'மந்தி'**

1567. குரங்கும் முசுவும் ஊகமும் மந்தி. ௬௮

**மருவி முடிந்த சில வழக்குகள்**

1568. குரங்கின் ஏற்றினைக் கடுவன் என்றலும்
மரம்பயில் கூகையைக் கோட்டான் என்றலும்
செவ்வாய்க் கிளியைத் தத்தை என்றலும்
வெவ்வாய் வெருகினைப் பூசை என்றலும்
குதிரையுள் ஆணினைச் சேவல் என்றலும்
இருள்நிறப் பன்றியை ஏனம் என்றலும்

---

1564. மூடும் கடமையும் - 'மூடு' 'கடமை' என்னும் பெண்பாற் பெயர்களை. யாடு அல - யாடு அல்லாதன.

1566. நாடினர் கொளின் - நாடியறியின்.

1567. மந்தி - மந்தி எனனும் பெண்பாற் பெயர் பெறுதற் குரியன.

1568. செவ் வாய் - சிவந்த வாயினையுடைய. ஊன் தின்னும் வாயினையுடைமையின் 'வெவ்வாய்' எனப்பட்டது என்ப. வெருகு - பூனை.

எருமையுள் ஆணினைக் கண்டி என்றலும்
முடிய வந்த அவ்வழக்கு உண்மையின்
கடிய லாகா கடனறிந் தோர்க்கே. ௬௯

முடிபு

1569. பெண்ணும் ஆணும் பிள்ளையும் அவையே. ௭௦

அந்தணர்க்கு உரியவை

1570. நூலே கரகம் முக்கோல் மணையே
ஆயுங் காலை அந்தணர்க் குரிய. ௭௧

அரசர்க்கு உரியவை

1571. படையுங் கொடியுங் குடையும் முரசும்
நடைநவில் புரவியுங் களிறுந் தேரும்
தாரும் முடியும் நேர்வன பிறவுந்
தெரிவுகொள் செங்கோல் அரசர்க் குரிய. ௭௨

அந்தணர்க்குரியனவும் அரசர்க்குரியன

1572. அந்த ணாளர்க் குரியவும் அரசர்க்கு
ஒன்றிய வரூஉம் பொருளுமா ருளவே. ௭௩

---

1569. பெண்பாற பெயரும், ஆண்பாற பெயரும், பிள்ளைமைப் பெயரும் இதுகாறும் எடுததோதிட்வையே எனறபடி.

1570. நூல் - அறிவுநூல் கரகம் - கமண்டலம். உரிய - கருவிகளாக உள்ளன.

1571. நடை நவில் - நடை பயினற. தார் - மலர் மாலை. நேர்வன பிறவும் - இசைவன பிறவும். 'பிறவும் என்றதனுல் கவரியும் அரியணையும் அரண் முதலாயினவுங் கொள்க' என்பர், பேரா. ஆரமும் கழலுமெல்லாம் உரிய என்பர், இளம்.

1572. அநதணர்ககு உரியவும - நூலே கரகம் என்னும் நூற்பாவில் அந்தணர்க்கு உரியனவாக முற்கூறப்பட்டனவும்.

**ஆனால், அரசர்க்குரியன சில அந்தணர்க் கில்லை**

1573. பரிசில் பாடாண் டிணைத் துறைக்கிழமைப்பெயர்,
நெடுந்தகை, செம்மல் என்றிவை பிறவும்
பொருந்தச் சொல்லுதல் அவர்க்குரித் தன்றே.

**ஓரோவொருகால் அந்தணர் அரசுரிமைக்கு உரியராதல்**

1574. அந்த ணாளர்க் கரசுவரை வின்றே. ௭௫

**ஊர், பெயர், கருவிகள், யார்க்கும் உரிய**

1575. ஊரும் பெயரும் உடைத்தொழிற் கருவியும்
யாரும் சார்த்தி அவையவை பெறுமே. ௭௬

---

ஒன்றிய வரும் பொருளும் உள - பொருந்தி வருதற்குரிய கருத்தினையும் உண்டு.

1573. பரிசில் துறைக் கிழமைப்பெயர், பாடாண் டிணைத் துறைக் கிழமைப்பெயர் என்பது. பரிசில் கேட்கும் துறைக்கு உரிய பெயர்; புகழ்ந்து பாடும் துறைக்கு உரிய பெயர் என்க. பெயராகிய 'நெடுந்தகை' 'செம்மல்' எனறபடி. இவை பிறவும் என்றது, முதலியன என்றும் பொருட்டு. அவை 'வள்ளல்' 'காளை' என்றாற் போல்வன. அவர்க்கு - அந்தணர்க்கு. அரசர்க்கு மட்டும் உரித்தெனறபடி. பெயருரிமை இல்லையென்றமையின், அவற்றிற்குரிய துறையுரிமையும் அந்தணர்க்கு இல்லை என்பது பெறப்படும்.

1575. ஊரும் - உரிய ஊரும். பெயரும் - சிறப்புப் பெயரும். உடைத்தொழிற் கருவியும் - தாம் உடைய தொழிற்குரிய கருவிகளும். யாரும் சார்த்தி - எல்லா வகையார்க்கும் அவரவர் பெயருடன் சார்த்தப்பட்டு, அவையவை பெறும் - அவையவை உரிய இடங்களிற் செய்யுளில் வழங்கப்பெறும்.

தலைமை கொள்ளலும் அவரவர்க்குரிய

1576. தலைமைக் குணச்சொல்லும் தத்தமக் குரிய
நிலைமைக் கேற்ப நிகழ்த்துப என்ப. ௭௭

அரசரும் வணிகரும் மட்டும் படைக்கலனுக்குரியர்

1577. இடைஇரு வகையோர் அல்லது நாடின்
படைவகை பெறூஅர் என்மனார் புலவர். ௭௮

வாணிகர் இயல்பு

1578. வைசிகன் பெறுமே வாணிக வாழ்க்கை. ௭௯

அவர்க்குக் கூலவாணிகமும் உரியது

1579. மெய்தெரி வகையின் எண்வகை உணவின்
செய்தியும் வரையார் அப்பா லான. ௮0

அவர்க்குக் கண்ணியும் தாரும் உரிய

1580. கண்ணியும் தாரும் எண்ணினர் ஆண்டே. ௮௧

---

1576. தத்தமக்குரிய தலைமைக் குணச்சொல்லும் என்க. தலைமைக் குணமுடையராகச் சொல்லும் பாராட்டுரை. நிலைமைக் கேற்ப - அவரவர் தொழில்வகை நிலைக்கு ஏற்ப.

1577. இடை இருவகையோர் என்றது, அரசரும் வணிகரும். பெறூஅர் - தமக்கே உரிய இயல்பான செல்வச் செழிப்பினைப் பெறார்.

1579. மெய் தெரி வகையின் - வழக்கின் மெய்ம்மையினை அறிந்த வகையினால். செய்தியும் - வாணிகத் தொழிலும். வரையார் - நீக்கார். அப் பாலான் - அவ் வாணிகப் பகுதியினர்க்கு. எண் வகை உணவாவன: நெல், வரகு முதலிய தானிய வகைகளென்பர், இளம்.

1580. எண்ணினர் - உரிய எனக் கருதினர், ஆண்டு - அவ் வாணிகரிடத்து.

### வேளாளர் இயல்பு

1581. வேளாண் மாந்தர்க்கு உழுதூண் அல்லது
இல்லென மொழிப பிறவகை நிகழ்ச்சி. ௮௨

### அவர் அரசரிடத்திற் பெறுவன சில

1582. வேந்துவிடு தொழிலின் படையும் கண்ணியும்
வாய்ந்தனர் என்ப அவர்பெறும் பொருளே.

1583. வில்லும் வேலும் கழலும் கண்ணியும்
தாரும் ஆரமும் தேரும் வாளும்
மன்பெறு மரபின் ஏனோர்க்கும் உரிய. ௮௪

### ஆயினும், அவை அவருள் எளிய நிலையினர்க் கில்லை

1584. அன்ன ராயினும் இழிந்தோர்க்கு இல்லை. ௮௫

### ஓரறிவுயிரின் சில சிறப்பு மரபுகள்

1585. புறக்கா ழனவே புல்லென மொழிப
அகக்கா ழனவே மரமென மொழிப. ௮௬

### புல்வகையின் உறுப்புக்கள்

1586. தோடே மடலே ஓலை என்றா
ஏடே இதழே பாளை என்றா

---

1581. உழுதூண் - உழுதுண்ணுதல். நிகழ்ச்சி - செயல்.

1582. வேந்து விடு தொழிலின - வேந்தன் ஏவுகின்ற தொழில் காரணமாக. பெறும்பொருள் - தம் முயற்சிச் சிறப்பினால் பெறுகின்ற பொருள்கள்.

1583. மன் பெறு மரபின ஏனோர்க்கும் - மன்னனது ஏவலைப் பெறுகின்ற இயல்பினையுடைய ஏனோர்க்கும் என்பது. அவர் வேளாளரல்லாத பிறர்.

1585. காழ் - வயிரம்.

ஈர்க்கே குலையென நேர்ந்தன பிறவும்
புல்லொடும் வருமெனச் சொல்லினர் புலவர்.

**மரவகையின் உறுப்புக்கள்**

1587. இலையே முறியே தளிரே கோடே
சினையே குழையே பூவே அரும்பே
நனைஉள் ளுறுத்த அனையவை யெல்லாம்
மரனொடு வரூஉங் கிளவி என்ப. அஅ

**இரண்டிற்கும் பொது**

1588. காயே பழமே தோலே செதிளே
வீழொடு என்றாங்கு அவையும் அன்ன. அகூ

**முடிபு**

1589. நிலந்தீ நீர்வளி விசும்போடு ஐந்துங்
கலந்த மயக்கம் உலகம் ஆதலின்,
இருதிணை ஐம்பால் இயல்நெறி வழாஅமைத்
திரிவில் சொல்லொடு தழாஅல் வேண்டும். கூ0

---

1586. என்று - எனறும், புல்லொடும் வரும் - முன் நூறபாவிற புல் எனப்பட்ட ஓரறிவுயிரின் உறுப்புக்களாகப் பொருநதிவரும்.

1587. முறி - முற்றாத இலை. சினை - கிளை. குழை - கொழுந்து. நனை - மொக்கு. நனை உள்ளுறுத்த அனையவை - மொக்கு உட்பட்ட அவைபோல்வன.

1588. வீழ் - விழுது. அன்ன - அவ்விருவகைக்கும் உரியன எனப.

1589. மயக்கம் - சேர்க்கை. தழால் வேண்டும் - தழுவிக் கொள்ளுதல வேண்டும். கலந்த மயகக மாதலின் ஓரோவொரு கால் உணர்வு வழுவுறினும் வழாமைத் தழுவிச்செல்லல் வேண்டும் என்பது.

## ௯. நூலின் மரபு

**மரபின் முதன்மை**

1590. *மரபுநிலை திரிதல் செய்யுட் கில்லை*
*மரபுவழிப் பட்ட சொல்லி னான.* ௧௧

1591. *மரபுநிலை திரியின் பிறிதுபிறி தாகும்.* ௧௨

**மரபு தோன்றும் முறைமை**

1592. *வழக்கெனப் படுவது உயர்ந்தோர் மேற்றே;*
*நிகழ்ச்சி அவர்கட் டாக லான.* ௧௩

**நூல் இருவகைப்படுதல்**

1593. *மரபுநிலை திரியா மாட்சிய வாகி*
*உரைபடு நூல்தாம் இருவகை இயல;*
*முதலும் வழியுமென நுதலிய நெறியின.* ௧௪

**அவற்றுள், முதனூல் இயல்பு**

1594. *வினையின் நீங்கி விளங்கிய அறிவின்*
*முனைவன் கண்டது முதனூ லாகும்.* ௧௫

**வழிநூல் இயல்பு**

1595. *வழியெனப் படுவது அதன்வழித் தாகும்.* ௧௬

---

1590. சொல்லினான் - சொற்களுண்மையினால்.

1591. பிறிது பிறிதாகும் - பொருள் வேறு வேறாகும்.

1592. அவர்கட் டாகலான் - அவரிடத்தினின்று தோன்றி நிகழ்தலான்.

1593. உரைபடு - உரைக்கப்படுகின்ற; வழக்கிற்படுகின்ற. நுதலிய - முன்னோரால் கருதிச் சுட்டப்பட்ட.

1594. வினையின - வினையிலிருந்து. கண்டது - இயல்பாகத் தானே அறிந்தியற்றியது.

1595. வழி - வழிநூல். அதன்வழித்து - இம்முதல் நூலின் வழியாகத் தோன்றுவது.

**வழிநூலின் வகை**

1596. வழியின் நெறியே நால்வகைத் தாகும். கூஎ

**அவ்வகை யாவன**

1597. தொகுத்தல், விரித்தல், தொகைவிரி, மொழி
[பெயர்த்து
அதர்ப்பட யாத்தலோடு அனைமர பினவே. கூஅ

**பொதுவாக, நூலின் இயல்பு**

1598. ஒத்த சூத்திரம் உரைப்பின் காண்டிகை
மெய்ப்படக் கிளந்த வகைய தாகி
ஈரைங் குற்றமும் இன்றி நேரிதின்
முப்பத் திருவகை உத்தியொடு புணரின்
நூல்என மொழிப நுணங்குமொழிப் புலவர்.

1599. உரையெடுத்து அதன்முன் யாப்பினும், சூத்திரம்
புரைதப உடன்படக் காண்டிகை புணர்ப்பினும்

---

*1596. வழியின் நெறி* - வழிநூல் இயற்றப்படும் முறைமை.

*1597. அதர்ப் பட* - வழக்குண்டாக. *அனை மரபின* - அவ்வியல்பின.

*1598. ஒத்த சூத்திரம்* - முற்கூறப்பட்ட இருவகை நூலுக்கும் பொருந்திய நூற்பாவும். *உரைப்பின்* - அதனை உரைப்படுத்தின. *காண்டிகை* - காண்டிகையுரையும். *மெய்ப் படக் கிளந்த வகையதாகி* - பொருள்பெற விரித்துக்கூறிய வேறு உரைவகையதுமாகி. *நேரிதின்* - நுண்பொருளனவாகிய. 'சூத்திரமும் காண்டிகையும் உரையுமென மூன்றும் அவற்றோடு குற்றமின்மையும் உத்திவகையும் கூட்ட நூலிலக்கணம் ஐந்தாயின' என்பர், பேரா.

*1599.* இந் நூற்பாவும் நூலின் இலக்கணம் கூறிற்று. *அதன்முன்* - சூத்திரத்தின் முன. *புரைதப உடன்பட* - பழுதின்றிப் பொருள் நேர்வு தோன்ற. விடுத்தலும் விலக்கலு

விடுத்தலும் விலக்கலும் உடையோர் வகையொடு
புரைதப நாடிப் புணர்க்கவும் படுமே. கOO

நூலின் சூத்திரம்

1600. மேற்கிளந் தெடுத்த யாப்பின் உட் பொருளொடு
சில்வகை எழுத்தின் செய்யுட் டாகிச்
சொல்லுங் காலை உரைஅகத்து அடக்கி
நுண்மையொடு புணர்ந்த ஒண்மைத் தாகித்
துளக்கல் ஆகாத் துணைமை எய்தி
அளக்கல் ஆகா அரும்பொருட் டாகிப்
பல்வகை யானும் பயன்தெரி வுடையது
சூத்திரத்து இயல்பென யாத்தனர் புலவர். கOக

காண்டிகை

1601. பழிப்பில் சூத்திரம் பட்ட பண்பின்
கரப்பின்றி முடிவது காண்டிகை யாகும். கOஉ

---

முடையோர் வகையொடு - விடைகூறுதலும் மறுத்தலு முடையோர் தம் இயல்பறிந்து அமைக்கும் முறைமைகளோடு. புணர்க்கவும் படும். நூல் அமைக்கவும் படும்.

1600. எழுத்தின் - எழுத்துக்களால். செய்யுட்டாகி - செய்யுளுடையதாகி. உரை அகத்து - உரையைத் தன்னகத்து. துளக்கல் - நிலைபெயர்த்தல். துணைமை - அளவினை.

1601. பட்ட பண்பின் - அமைந்த வகை தோன்ற. கரப்பு இன்றி - கருத்து மறைவின்றி. முடிவது - அமைவது. காண்டிகை - காண்டிகையுரை.

1602. விட்டு அகல் வின்றி, விரிவொடு பொருந்திச்,
சுட்டிய சூத்திரம் முடித்தற் பொருட்டா,
ஏது நடையினும், எடுத்துக் காட்டினும்,
மேவாங்கு அமைந்த மெய்ந்நெறித் ததுவே.

உரை

1603. சூத்திரத் துட்பொருள் அன்றியும், யாப்புற
இன்றி யமையாது இயைபவை யெல்லாம்
ஒன்ற உரைப்பது உரை எனப் படுமே. க0சு

1604. மறுதலைக் கடாஅ மாற்றமும் உடைத்தாய்த்,
தன்னூ லானும் முடிந்தநூ லானும்
ஐயமும் மருட்கையும் செவ்விதின் நீக்கித்,
தெற்றென ஒருபொருள் ஒற்றுமை கொளீஇத்
துணிவொடு நிற்றல் என்மனார் புலவர். க0ரு

1602. விட்டு அகல்வு இன்றி - சூத்திரத்தின் சொற் பொருளை விட்டு நீங்குதலின்றி. விரிவொடு - கருத்து விரிவுக ளொடு. சூத்திரம் - சூத்திரக் கருத்தை. முடித்தற் பொருட்டா - நிறுவிப் பயனுண்டாக்குதற் பொருட்டாக. ஏது நடையினும் - காரண காரிய முறைகளோடும். மேவாங்கு - ஆசிரியன் கருத்தமைந்த முறையே. 'மெய்ந்நெறித்து அது' என்பது. அதுவென்றது, காண்டிகையுரை என்னும் பொருட்டு.

1603. அன்றியும் - அல்லாமலும். யாப்புற - வலிவுற; ஒருதலையாக எனக. ஒன்ற - பொருந்த.

1604. மறுதலைக் கடாஅ - மறுதலைப் பொருளுடைய வினவும். மாற்றமும் - அதற்கு விடையும். மருட்கையும் - திரிபும். தெற்றென - தெளிவாக. கொளீஇ - கொள்வித்து. துணிவொடு - ஒருதலைப்பட்ட கருத்தோடு. என்மனார் - முன் னூற்பாவிற் கூறிய உரையினது இயல்பென்று கூறுவர்.

### வழிநூலிற் குறை நேர்தல்

1605. சொல்லப் பட்டன எல்லா மாண்பும்
மறுதலை யாயினும் மற்றது சிதைவே. ௧0௬

### முதனூலின் சிறப்பு

1606. சிதைவில என்ப முதல்வன் கண்ணே. ௧0௭

### வழிநூலிற் குறை நேரும் வகை

1607. முதல்வழி யாயினும் யாப்பினும் சிதையும்
வல்லோன் புணரா வாரம் போன்றே. ௧0௮

### நூலின் குற்றங்கள்

1608. சிதைவெனப் படுபவை வசையற நாடின்,
கூறியது கூறல், மாறுகொளக் கூறல்,
குன்றக் கூறல், மிகைபடக் கூறல்,
பொருளில மொழிதல், மயங்கக் கூறல்,
கேட்போர்க்கு இன்னா யாப்பிற் றாதல்,
பழித்த மொழியான் இழுக்கங் கூறல்,

---

**1605.** இதுகாறும் சொல்லப்பட்டனவாகிய எல்லா மாண்பும் எனக. எல்லா மாண்பும் எனறது, முன் நூறபாக்களிற் கூறிய சூத்திரம், காண்டிகை, உரை எனனும் மாண்புகள்; வழிநூல் அவறறை உடையதாயினும் என்றபடி. மறுதலையாயினும் - முதனூலின் கருத்தோடு சிறிது மாறுடையதாயினும். அது - அவ் வழிநூல். சிதைவே - குற்றமுடையதேயாகும.

**1606.** சிதைவு இல - கருத்து வேற்றுமையாற் குற்றமுண்டாதலில்லை. முதல்வனகண் - முதனூல் ஆசிரியனிடமாயின் என்பது.

**1607.** முதல்வழி யாயினும் - வழிநூல் முதனூலின் வழியதாயினும. யாப்பினுட் சிதையும் - யாப்பின் போகிற் கருத்துச சிதையும். வாரம் - பின்பாட்டு என்ப.

தன்னான் ஒருபொருள் கருதிக் கூறல்,
என்ன வகையினும் மனங்கோள் இன்மை
அன்ன பிறவும் அவற்றுவிரி யாகும். ௧0௯

1609. எதிர்மறுத்து உணரின் அத்திறத்தவும்
[அவையே. ௧௧0

### நூலின் உத்திகள்

1610. ஒத்த காட்சி உத்திவகை விரிப்பின்,
நுதலியது அறிதல், அதிகார முறையே,
தொகுத்துக் கூறல், வகுத்துமெய்ந் நிறுத்தல்,
மொழிந்த பொருளோ டொன்ற அவ்வயின்
மொழியா ததனை முட்டின்று முடித்தல்,
வாரா ததனான் வந்தது முடித்தல்,
வந்தது கொண்டு வாராத துணர்த்தல்,
முந்து மொழிந்ததன் தலைதடு மாற்றே,
ஒப்பக் கூறல், ஒருதலை மொழியே,
தன்கோள் கூறல், முறைபிற ழாமை,

---

1608. சிதைவு - குற்றம். வசையற - குறைவற. தன்னான் - தானே. என்ன வகையினும் - எவ்வகையாலும். மனங்கோள் இன்மை - பொருள் மனங்கொள்ளும்படி இல்லாமை. அவற்று - முன் (௧௫௯௮) ஈரைங்குற்றம் எனப் பட்டவற்றின்.

1609. எதிர்மறுத்து உணரின் அத் திறத்தவும் - கற்போர் எதிர்மறுத்துணருமாறு அமைந்த அக கூறுபாடுடையனவும். அவை - அக குற்றங்களின்பாற்படும். முன் நூற்பாவில் 'அன்ன பிறவும்' என்றமையால் ஆசிரியர் இதுவுங் கூறினரென்பது.

1610. ஒத்த காட்சி - நூற்குப் பொருந்திய அறிவுத் திறன் அமைந்த. அறிதல் - அறியும்படி வைத்தல். மெய்ந் நிறுத்தல் - உரிய கூறுபாட்டில் நிறுத்துதல். ஒன்ற - பொருந்

பிறன்உடம் பட்டது தான்உடம் படுதல்,
இறந்தது காத்தல், எதிரது போற்றல்,
மொழிவாம் என்றல், கூறிற் றென்றல்,
தான்குறி யிடுதல், ஒருதலை யன்மை,
முடிந்தது காட்டல், ஆணை கூறல்,
பல்பொருட்கு ஏற்பின் நல்லது கோடல்,
தொகுத்த மொழியான் வகுத்தனர் கோடல்,
மறுதலை சிதைத்துத் தன்துணிபு உரைத்தல்,
பிறன்கோட் கூறல், அறியாது உடம்படல்,
பொருள் இடை யிடுதல், எதிர்பொருள்
[உணர்த்தல்,
சொல்லின் எச்சம் சொல்லியாங்கு உணர்த்தல்,
தந்துபுணர்த்து உரைத்தல், ஞாபகம் கூறல்,
உய்த்துக்கொண்டு உணர்த்தலொடு மெய்ப்பட
[நாடிச்

---

தும்படி. அவ்வயின் - அவ்விடத்தில். மொழிந்ததன் - மொழிந்த முறையின். தன் கோள் - தன் கொள்கை. பிறன் - பிற ஆசிரியன். தான் குறி இடுதல் - தான் ஒரு பெயர் இட்டு ஆளுதல். ஆணை கூறல் - தனது கட்டளையாகக் கூறுதல். ஏறபின் அவறறுள் நல்லது கொள்ளுதல் என்க. தொகுத்த மொழியான் வகுத்தனர் கோடல் - இறுதியில் தொகுத்துக் காட்டும் மொழியினுல் பிறிதொரு முறைமையும் வகுத்துக் கொள்ளுதல். மறுதலை - தனக்கு மறுப்புரையை. அறியாது உடம்படல் - தான் அறியாது நின்றே பிறவற்றிற்கும் உடம்படல்; இது புறனடைக் கூறறுப் போல்வதற்கு இடனுயிருத்தல். இடையிடுதல் - இடைவிட்டுக் கூறுதல். எதிர் - எதிர் காலத்திற்கு ஏற்றதாகிய. சொல்லின் எச்சம் - சொல்லின் ஆற்றலாற் பெறப்படும் பொருளினையும். சொல்லியாங்கு

சொல்லிய அல்ல பிறஅவண் வரினும்
சொல்லிய வகையாற் சுருங்க நாடி
மனத்தின் எண்ணி மாசறத் தெரிந்துகொண்டு
இனத்திற் சேர்த்தி உணர்த்தல் வேண்டும்;
நுனித்தகு புலவர் கூறிய நூலே.　　ககக

## பொருளதிகாரம் முற்றும்.

---

# தொல்காப்பியம்

## முற்றும்.

---

உணர்த்தல் - தான் கூறிய முறையிலிருந்தே உணரும்படி வைத்தல். தந்து புணர்த்து - சொற்களையும் பொருள்களையும் தொடர்புபடுத்திக் கூட்டி. ஞாபகம் கூறல் - வேறொரு பொருள் நினைவுதோன்றக் கூறுதல்: இதனை இரட்டுற மொழிதலாகக் கருதுவர், இளம். உய்த்துக்கொண்டு உணர்த்தல் - எண்ணி புணருமாறு வைத்தல். நுனித்தகு - நுட்பஞ் சிறந்த. கூறிய நூல் - கூறிய நூலின் உத்திஇலக்கணம் இவை என்பது.

# தொல்காப்பியச் சூத்திர
## முதற்குறிப் பகராதி



